# அபிராமியும் - லலிதாவும்

உரை ஆசிரியர்

*அபிராமிதாஸன்*

**மீனாட்சிசுந்தரம் மோகன்**

வெளியீடு

ஸ்ரீ அபிநவ பாஸ்கர டிரஸ்ட்

# குருவே சரணம்

"குரு அருள் இல்லையேல் திருஅருள் இல்லை". ஸ்ரீ குரு சர்வ காரண பூதா சக்திஹி.

"அவளை அறியா அமரரும் இல்லை
அவளன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை
அவளன்றி ஐவரால் ஆவதொன்றில்லை
அவளன்றி ஊர்புகுமாறு அறியேனே" - திருமந்திரம் - 1053

"அபிராமியும் லலிதாவும்" என்று இந்நூலிற்கு பெயர் சூட்டி இருப்பதே ஆதியும் அந்தமும் அற்ற சிவையே அபிராமி என்பது தெள்ளத் தெளிவாகிறது.

காப்புச் செய்யுளின் விளக்கவுரையே மிகவும் ஆழ்ந்த பொருள் செறிவைக் கொண்டுள்ளது. உலகமே ஓங்காரத்தில் அடக்கம் என்று கூறியுள்ளதும், "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்ற ஔவையின் வாக்கும் முதல் பாடலின் விளக்கத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலுக்கும் அதனுள் சூட்சுமமாக பொதிந்த பொருள் செறிவை, ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம், விஷ்ணு ஸஹஸ்ரநாமம், ஸ்ரீலலிதா த்ரிசதீ, ஸௌந்தர்யலஹரீ, பகவத்கீதை, திருமூலர், வள்ளலாரின் கருத்துக்கள், மற்றும் பல தர்மசாஸ்திரங்கள் ஆகியவற்றின் கருத்துக்களோடு ஒப்பிட்டு கூறியிருப்பது இந்நூல் ஆசிரியரின் ஆழ்ந்த சிந்தனையும், நுண்மான் நுழைபுலமும் அவரின் கடின உழைப்பை பிரதிபலிக்கிறது.

"தேறும்படி சில ஏதுவும் ............... குறிக்கும் சமயம் ஆறும் தலைவி ............." என்ற பாடலின் பொருளில் ஷண்மதங்களுக்கும் தலைவி அபிராமியே என்று கூறியுள்ளார். திருமூலரும் "ஆறெழுத்தாகுவ ஆறுசமயங்கள்" என்று கூறுவர்.

மனிதர்கள் குறையுள்ளவர்கள். நாயைப் போன்ற இழிநிலையில் இருந்தாலும் அம்பாளை அடைகின்ற மெய்ஞ்ஞானத்தை அவளே கொடுத்து அருளுவாள் - என்று கூறியிருப்பது மிகவும் அருமை.

திரு. மீனாட்சிசுந்தரம் மோகன் அவர்கள் எழுதிய விளக்கவுரை மற்றும் ஒரு அபிராமிபட்டரே நேரில் வந்து கூறியது

போல் உள்ளது. ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்திற்கு பாஷ்யம் எழுதிய பாஸ்கரராயர் போல் அபிராமி அந்தாதிக்கு - ஒரு பாஷ்யத்தை இந்நூல் ஆசிரியர் எழுதியுள்ளார்.

ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் போல் எல்லோரையும் அபிராமியாக பாவிக்கிறார் இந்நூல் ஆசிரியர். ஸ்ரீதர் ஐயாவாள் எப்படி எல்லாப் பொருள்களிலும் ராமரைப் பார்த்தாரோ அதுபோல் இந்த அபிராமிதாஸரும் எல்லாப் பொருளையும் அபிராமி, அபிராமி என்றே எண்ணுகிறார். இவர் - தன்னலமற்றவர், தர்ம சிந்தனையாளர், இவ்வுலகப் பொருளின் மேல் பற்றற்று இருக்கிறார் - என்பதை ஒரு சில வருடங்களிலேயே நான் அறிந்து கொண்டேன்.

"ஈன்றபொழுதின் பெரிதுவக்கும் தன் மகனைச் சான்றோன் எனக்கேட்ட தாய்" போல இப்படி ஒரு அபிராமி தாஸரை நானும் மகனாகப் பெற்ற பாக்கியத்தை அடைகிறேன்.

ஒவ்வொரு பாடலின் விளக்கமும் உன்மத்த நிலைக்கு உயர்த்துகிறது. "இழைக்கும் வினைவழியே ... உன்னையே அன்னையே என்பன்" என்ற பாடலின் விளக்கவுரையில், 'அம்மா, மாதா' என்ற சொற்களின் விளக்கம் மிகவும் அருமை. "வெளிநின்ற நின் திருமேனியைப் பார்த்தென் விழியும் நெஞ்சும்" என்ற பாடலுக்கு ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம், 12, 'நிஜாருண - ப்ரபா - பூர - மஜ்ஜத் - ப்ரஹ்மாண்டல - மண்டலா' என்று ஒப்பிட்டு தன்னுடைய சிகப்பான காந்தியின் ப்ரவாஹத்தினால் ப்ரஹ்மாண்டங்கள் அனைத்தையும் மூழ்கச் செய்தவள் என்று குறிப்பிட்டுள்ளார்.

ஜாக்கிரத்தில் சொப்பனம் போல் அம்பிகையின் வடிவ தரிசனம் கிடைக்கிறது. அப்போது இன்பம் உண்டாகிறது. மனம் விரிந்து அம்பிகையின் அகண்ட வடிவத்தைக் காண்கிறது. ஒரே பரவொளியில் ஒளியே ஆனந்தமாய் எல்லாவற்றையும் தனக்குள் கரைத்துக் கொள்ளும் நிலையாக, நிர்விகல்ப சமாதி நிலையை அருமையாக எடுத்துக் கூறியுள்ளார்.

அன்னை லலிதாவாகிய அபிராமியின் கண்கள், தன் பக்தர்களின் இன்னலைப் போக்கி இன்பம் தர, தன் கனிவான பார்வை எல்லா பக்தர்கள் மீதும் விழட்டும் என்பதற்காக, அவள் கண்கள் அலைந்துகொண்டே இருப்பது போல், இந்நூல் எல்லா

பக்தர்களின் கைகளிலும் தவழ்ந்து, அவளின் திருவடியே முக்திக்கு வழி என்பதை உணர்ந்து, அந்த பரபிரம்ம சொரூபத்துடன் ஐக்கியமாக வேண்டும் என்பதே அபிராமிதாஸரான திரு. மீனாட்சிசுந்தரம் மோகன் அவரின் லட்சியமாகும்.

நமக்கு, அந்த பூர்ணசந்திர மண்டலத்தையே தன் தாடங்கத்தில் காட்டியவள். நம் ஒவ்வொருவரின் வாழ்க்கைக்கும் துணையும் தெய்வமுமாக இருந்து வழிகாட்டுவாளாக !

தாயிடம் செல்லத் தவிக்கும் சேயைப் போல, அவள் திருவடிகளுக்கு திரும்பிச்சென்று விடவேண்டும். இந்தப் பிறவிலேயே சரணாகதி அடைய வேண்டும். காலனுக்கு பயத்தையும், அடியாருக்கு அபயத்தையும் தருவது அன்னை அபிராமியின் கடைக்கண்களே.

அப்பார்வையை பெற்றுக் கொள்ளாமல் தவிப்பது நம் குறையே ! "அவள் திருவருட் குறை அன்று" !! என்பதை எளிய நடையில் பாமர மக்களும் கற்று உணரும் வகையில் இந்நூல் அமைந்துள்ளது.

அண்டத்தினுள்ளே அளப்பரிதானவள்
பிண்டத்தினுள்ளே பெருவெளி கண்டவள்
குண்டத்தினுள்ளே குணம்பல காணினும்
கண்டத்தினுள்ளே கலப்பறியார்களே. - திருமந்திரம் - 1362

அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி !
அருள்வாமி அபிராமி உமையே !
அபிராமி ! அபிராமி ! அபிராமி !

**ஸ்ரீஸ்ரீஸ்ரீ சிதானந்தநாத பாதரேணு**

# ஆசிரியர் உரை

நம் பாரத நாடு பழம் பெருமை வாய்ந்த புண்ய பூமி. பாரத நாட்டில் பிறப்பதற்கு புண்யமும், பாக்யமும் முன்பிறவியில் செய்திருக்க வேண்டும். நம் நாட்டின் தெய்வமாகவும், அன்னையாகவும் விளங்குபவள் "பாரதமாதா". கன்யாகுமரியிலிருந்து காஷ்மீர் வரையிலும், கல்கத்தாவிலிருந்து மும்பை வரையிலும், அன்னை பல்வேறு வடிவங்கள், திருநாமக்கள் கொண்டு பக்தர்களை பக்திப்பரவசத்தில் ஆழ்த்துகிறாள்.

சக்தி வழிபாடென்பது அன்னையை எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளாகக் கொண்டு வழிபடுவதேயாகும். சக்தி வழிபாட்டில் தலைசிறந்து விளங்கியவர், "அன்னை அபிராமி ஆட்கொண்ட அபிராமிபட்டர்".

தமிழ்நாட்டில் (அன்றைய சோழ நாட்டில்) நெற்களஞ்சியம், கலைக்களஞ்சியம் என்று பலவாறாக புகழப்படும் பெருமைவாய்ந்த புண்யஸ்தலம் "திருக்கடவூர்" ஆகும். இங்குதான் கள்ளவாரணப் பிள்ளையார் அமிர்தகலசத்தை மறைத்தது. (தேவர்கள் விநாயகரை வணங்கத் தவறியதால்). சிவபெருமான் யமனை சம்ஹாரம் செய்து, மார்க்கண்டேயரை என்றும் பதினாறு வயது சிரஞ்சீவியாக்கியது. இவை எல்லாவற்றிற்கும் மேலாக, அன்னை அபிராமி தன் அடியார் அபிராமிபட்டர் சொன்ன சொல்லை மெய்யாக்க, அமாவாசையை -பௌர்ணமியாகச் செய்து, புவனங்கள் பதினான்கையும் தன் அருள் ஒளியால் மூழ்கச் செய்தது.

இந்த புண்யஸ்தலத்தில், சுமார் 300 ஆண்டுகளுக்கு முன் அந்தணர் பரம்பரையில் அவதரித்தவர் அபிராமிபட்டர். தனது இளம் பிராயத்திலேயே வேதங்கள், இசை, ஜோதிடம், பல மொழிகள், மற்றும் பல கலைகளிலும் தேர்ச்சி பெற்று யாரும் தனக்கு நிகரில்லா சிறப்புடன் விளங்கினார். இவர் தன் குல தெய்வமாகிய அன்னை அபிராமியிடம் அளவிலா அன்பு கொண்டு, தன்னை சேயாகப் பாவித்து, அன்னையின் பாதாரவிந்தங்களில் தன்னை அர்ப்பணித்து வாழ்ந்தவர். இவர் ஒரு சிறந்த ஸ்ரீவித்யா உபாசகர். தினமும் தவறாது ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் பாராயணம் செய்து வந்தவர்.

ஒரு தை அமாவாசையன்று, அக்காலத்தில் தஞ்சையை ஆண்ட சரபோஜீ மன்னன் அன்னை அபிராமியை தரிசிக்க வந்தபோது, அபிராமிபட்டர் ஆழ்ந்த த்யானத்தில் இருந்தார். அன்னை அபிராமியை ஸஹஸ்ரார கமலத்தில் இருக்கும் பூர்ண சந்திரமண்டலத்தில், "அர்த்தநாரீஸ்வரர்" கோலத்தில் கண்டு தன்னை மறந்த நிலையில், இவ்வுலகறிவே அற்று, சமாதி நிலையில் இருந்தார். தெய்வ வடிவுடன் திருமேனி தேஜோமயமான ப்ரகாசத்துடன் விளங்கும் அபிராமிபட்டரை கண்ட மன்னன், அவரிடம் பேச்சு கொடுக்க விரும்பி, "இன்று என்ன திதி ?" என்று கேட்க, அபிராமிபட்டர், "இன்று சுத்த பூர்ணிமையாயிற்றே" என்று பதில் கூற, மன்னன் குழப்பமடைந்து தன் முகாமிற்கு சென்றான். சிறிது நேரம் கழித்து, சமாதி நிலையிலிருந்து தன் நிலைக்கு வந்த அபிராமிபட்டர் நடந்ததை உணர்ந்து தன் தவறிற்காக வருந்தினார்.

எல்லாவற்றையும் அன்னைக்கே அர்ப்பணித்துவிட்ட அபிராமிபட்டர் அன்னையின் மேல் அந்தாதி பாடத் தொடங்கினார். "விழிக்கே அருளுண்டு" என்ற பாடலைப் பாடியதும், தன் அடியாரை மேலும் சோதிக்க எண்ணாது, அன்னை அபிராமி தன் தாடங்கம் (தோடு) ஒன்றை வானில் வீசியெறிய, அது பூர்ணசந்திரனாக புவனங்கள் பதினான்கிலும் ஆனந்த ஒளியாகப் பிரகாசித்தது. மன்னன் சரபோஜீயும் அன்னையின் அடியாரை சோதித்து விட்டோமே என்று தன் மதியீனத்திற்கு வருந்தி, அபிராமிபட்டரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி மன்னிப்பு கேட்டான். அபிராமிபட்டர் மறுத்தும், அவர் சந்ததியினருக்கு மான்யங்களை (சூரிய, சந்திரர் உள்ளவரை) எல்லோரும் கொடுத்து வர ஆணை தந்து தஞ்சை சென்றான். இதற்குரிய உரிமைச் செப்பு பட்டயம் ஒன்று, அபிராமிபட்டர் சந்ததியாரிடம் இன்றும் இருக்கிறது என்று சொல்லப்படுகிறது.

அன்னை அபிராமி, தன் கருணை உள்ளத்தால், மண்ணுலகில் வாழும் மக்கள் அனைவரின் நலம் கருதி, அபிராமிபட்டர் - சரபோஜீ மன்னன் என்ற இருவரையும் கதாபாத்திரங்களாகக் கொண்டு ஒரு நாடகம் படைத்து, அபிராமி பட்டரின் வாயிலாக அருளிய அரும் பொக்கிஷம் - "அபிராமி அந்தாதி".

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் அன்னையின் ஆணையின் பேரில் அவள் அங்க தேவதைகளான வசினீ, காமேச்வரீ,

மோதினீ, விமலா, அருணா, ஜயினீ, ஸர்வேச்வரீ, கௌலினீ என்ற எட்டு வாக்தேவதைகளால் இயற்றப்பட்டு, அவள் தர்பாரில் எண்ணிறைந்த ப்ரம்மாக்கள், நாராயணர்கள், ருத்ரர்கள், தேவர்கள், புண்ய புருஷர்கள், தேவதைகள் முன்னிலையில் அரங்கேற்றப்பட்டது. பல ஸஹஸ்ரநாமங்கள் இருந்தாலும், "ஸ்ரீ" என்ற சிறப்பு அடைமொழி கொண்டது - ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் மட்டுமே. இதில் சரியாக 1000 நாமாக்கள் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

எவ்வாறு ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் தினமும் தவறாது பாராயணம் செய்பவர்களுக்கு, "மறுபிறவியில்லையோ", அதே பலன் - "அபிராமி அந்தாதிக்கும்" உண்டு என்பதில் இம்மியளவும் சந்தேகம் இல்லை.

இவ்விரண்டு தேவியின் நூல்களையும் கற்றவர்கள் - இவ்விரண்டும் ஒரே கருத்தையுடையது என்பதை உணர்வர்.

தமிழ்மொழியில், அபிராமி அந்தாதி ஈடு, இணையற்ற நூல் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

"அவளின்றி அணுவும் அசையாது" என்பது அறிந்தோர் வாக்கு. பல சான்றோர்கள் அபிராமி அந்தாதிக்கு விளக்கவுரை எழுதியிருந்த போதிலும் நாயிற் கடையேனான என்னையும் கூட எழுதச் செய்தது அன்னை அபிராமியின் கருணைதான் என்று எண்ணிப் பார்க்கும் போது என் மெய் சிலிர்க்கிறது.

இந்நூலை அடியேன் எழுதத் தொடங்கிய தருணத்திலிருந்து பூர்ணமாகி வெளியே வரும் வரை பல சான்றோர்கள் தானாக முன் வந்து முழு ஒத்துழைப்பும் தந்து, தங்கள் பெயரை வெளியிடவேண்டாம் என்று அன்புக் கட்டளை விடுத்தார்கள். அவர்களுக்கு நன்றி சொல்ல வார்த்தைகளால் முடியாது. அவர்களை அன்னை அபிராமி என்பால் அனுப்பிய குருமார்களாக எண்ணி அவர்களுக்கு சிரம் பணிகின்றேன்.

இந்நூலை எழுதுவதற்கும், அதை புத்தக வடிவில் வெளியிடுவதற்கும் மூல காரண கர்த்தா - என் குருநாதர் காவசேரி ஸ்ரீஸ்ரீஸ்ரீ கிருஷ்ணன் ஸார் அவர்கள். முப்பது வருடங்களாக எனக்கு குருவாக இருந்து எனக்கு வழிகாட்டியவர். சாமான்யனான என்னையும் கூட இறைப்பணியில் ஈடுபடுத்தி என் வாழ்க்கையின் விளக்காக அமைந்தவர். அடியேன் அவரை குருவாகப் பெற்றது அன்னை அபிராமியின் அளவற்ற கருணையால் தான் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அவர் பாதங்களில் சரண் அடைகிறேன்.

மேலும் தாயார் ஸ்தானத்தில் இருந்து அவ்வப்போது நல்ல அறிவுரைகள் கூறி அடியேனையும் சத்சங்கத்தில் அமர்த்தி, நல்வழி காட்டும், ஸ்ரீஸ்ரீஸ்ரீ சிதாநந்தநாதரின் ஆத்ம புத்ரியான ஸ்ரீமதி. ராஜம்மாள் அவர்களின் அன்பும், கருணையும் அடியேன் பெற்ற பாக்யம்.

ஸ்ரீ குஹானந்த மண்டலியின் ஜீவநாடியாக விளங்கும் இவர், தன் குருநாதரின் வாக்குப்படி, அவர் சென்ற ஒற்றையடிப் பாதையில் சென்று, ஸ்ரீவித்யா உபாசனையை இன்றும் நடத்திக்கொண்டு வருகிறார். இந்நூலுக்கு தானாகவே வலிய வந்து முன்னுரை தந்தருளிய இவர் கருணை உள்ளத்தை காணும்போது "அன்னை அபிராமியே" என் முன் நிற்பது போல் பரவசமடைகிறேன். அவர்களின் பாதங்களுக்கு சிரம் பணிகிறேன்.

எனது தாயார் (காலஞ்சென்ற) ஸ்ரீமதி கமலம்மா அவர்கள் ஒரு ஸ்ரீவித்யா உபாசகர், ஸ்ரீஸ்ரீஸ்ரீ சிதாநந்தநாதரின் சிஷ்யை. தேவியிடம் அபார பக்தி கொண்டு எப்போதும் இறைப் பணியிலேயே தன்னை அர்ப்பணித்துக் கொண்டவர். அன்னையை அன்றலர்ந்த மலர்களால் அர்சிப்பதில் அலாதிப் பிரியம் கொண்டவர். அன்னதானம் செய்வதில் அலுக்காதவர். மிகவும் எளிய வாழ்க்கை வாழ்ந்தவர்.

இந்நூலை குறித்த நேரத்தில் அச்சிட்டு வழங்கிய பதஞ்சலி அண்ட் கோ அச்சக உரிமையாளர் செல்வி ராமலக்ஷ்மி அவர்களுக்கும் ஒளிஅச்சு வடிவமைப்பு பணி செய்து வழங்கிய ரிஷி எண்டர்பிரைசஸ் உரிமையாளர் திரு. டி.ஆர். கமலமூர்த்தி அவர்களுக்கும், இந்நூலின் மேல் அட்டையை 'அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி' என்பதற்கேற்ப, அபிராமிபட்டர் தன் அகத்திலும் புறத்திலும் கண்டவண்ணம், 'அன்னை அபிராமியை' ஓவியமாகத் தீட்டிய திருவருள் பெற்ற திரு. கேஸவ் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை இயற்றும்படி என் சித்தத்தில் தூண்டிய சித்ரூபிணீக்கும், என் அன்னைக்கும் இந்நூலை சமர்ப்பிக் கின்றேன். குற்றம், குறை இருப்பின் சான்றோர்கள் அடியேனை மன்னித்தருள வேண்டும்.

**அபிராமிதாஸன்**

**மீனாட்சிசுந்தரம் மோகன்**



நூல் ஆசிரியர் தாயார் - தந்தை ***ஸ்ரீமதி கமலம் ஸ்ரீ* Dr. E.V. *மீனாட்சி சுந்தரம்***

# அபிராமியும் – லலிதாவும்

## காப்பு

*தார் அமர் கொன்றையும் சண்பகமாலையும் சாத்தும் தில்லை*
*ஊரர் தம் பாகத்து உமை மைந்தனே உலகு ஏழும் பெற்ற*
*சீர் அபிராமி அந்தாதி எப்போதும் என் சிந்தையுள்ளே*
*கார் அமர் மேனிக் கணபதியே நிற்கக் கட்டுரையே.*

| | |
|---|---|
| தார் அமர் கொன்றையும் | மாலையாக அமைந்த கொன்றையையும் |
| சண்பக மாலையும் | சண்பக மலர் மாலையையும் |
| சாத்தும் | (முறையே) அணிந்த, |
| தில்லை ஊரர் தம் பாகத்து | தில்லை (சிதம்பரம்) நடராசருக்கும், அவர் இடப் பாகத்தில் எழுந்தருளிய |
| உமை மைந்தனே | உமாதேவிக்கும் உரிய மைந்தனே |
| கார் அமர் மேனி கணபதியே | மேகம் போன்ற கரிய திருமேனியை உடைய கணபதியே ! |
| உலகு ஏழும் பெற்ற | உலகங்கள் ஏழும் பெற்ற |
| சீர் அபிராமி அந்தாதி | சிறப்பையுடைய அபிராமியம்மைக்கு அணியும் அந்தாதி |
| எப்போதும் என் சிந்தையுள்ளே | எப்போதும் என் உள்ளத்துள்ளே |
| நிற்கக் கட்டுரையே | நிற்கும் படியாக உரைத்தருள்வாயாக, (உறுதி அளிப்பாயாக) |

(தார் - ஆண்கள் அணியும் மாலை, மாலை - பெண்கள் அணியும் மாலை).

ஓங்கார வடிவாகப் பொருந்தும் கொன்றை மலர் மாலையை அணிந்த தில்லையம்பதியில் எழுந்தருளியுள்ள நடராஜருக்கும், சண்பக மலர் மாலையை அணிந்து அவர்தம் இடப்பாகத்தில் வீற்றிருக்கும் உமாதேவிக்கும் தோன்றிய மைந்தனே !

மேகம் போன்ற கரிய திருமேனியை உடைய கணபதியே ! உலகங்கள் ஏழும் பெற்ற சிறப்பையுடைய அபிராமியம்மைக்கு அணியும் அந்தாதி எப்போதும் உள்ளத்துள்ளே நிற்கும்படியாக உரைத்தருள்வாயாக !

ஒரு நூலை இயற்று முன் விநாயகரை வணங்கி, அவர் மீது ஒரு பாடல் இயற்றுவது காலங்காலமாக வரும் மரபு. இதை காப்புச்

செய்யுள் என்பர். விநாயகர் முழுமுதற் கடவுளாதலின், அவரை எந்தக் காரியம் செய்யப் போகும் முன்னும் துதிப்பது நம் நாட்டின் சம்பிரதாயம் அல்லவா !

இந்த மரபினையொட்டி அபிராமி பட்டரும் கணபதியிடம் தம்மைக் காத்து அருள வேண்டும் என்று வேண்டுகிறார்.

காப்புச் செய்யுளிலேயே அபிராமி பட்டரின் தனித்தன்மை நம்மைக் கவருகிறது. கவிநயம், கற்பனைப்பொலிவு, பொருள் நயம், சொல் நயம், உவமை நயம் எல்லாம் சேர்ந்து பேரானந்தத்தில் ஆழ்த்துகிறது. அபிராமி பட்டர் அன்னை அபிராமியின் அரிய சேய் அல்லவா !

காப்புச் செய்யுளின் ஆரம்பமே ப்ரவணத்தில் உதிக்கிறது. கொன்றை மலரை - ப்ரணவ வடிவம் என்பார் ஞானியர். (அதாவது சிவத்தின் ப்ரணவம்). அகாரம் + உகாரம் + மகாரம்.

உமா என்ற சொல் - உகாரம், மகாரம், அகாரம் - என்ற மூன்று எழுத்துக்களின் சேர்க்கை. இதனை சக்திப் ப்ரணவம் என்று சொல்வர். சிவனின் ப்ரணவத்திற்கும், சக்தியின் ப்ரணவத்திற்கும் தோன்றிய ப்ரணவ சொரூபமாக விநாயகரை வர்ணிப்பது நம் உள்ளத்திற்கு எல்லையில்லா இன்பம் தருகிறது.

கணபதியை கார் அமர் மேனியாக வர்ணிப்பது - ஔவைப் பாட்டியின் விநாயகர் அகவலில் வரும் 'நெஞ்சில் குடிகொண்ட நீலமேனியும்' - என்பதை நினைவூட்டுகிறது.

கார் என்றால் மேகம். இங்கு இது நீலமாகிய பழுப்பு கலந்த கறுப்பு நிறத்தைக் குறிக்கும். இதை 'தூம்ர வர்ணம்' என்பர். மேக வர்ண தூம்ர கணபதி அபிராமி பட்டரின் உள்ளத்தில் கவி மழை பொழிந்தவாறு உள்ளார். மேகங்கள் கலையாமல், எப்போதும் மழை பொழிவது நிற்காமல் இருக்க, சிந்தையுள்ளே (மூலாதாரத்தில்) நிலை நிறுத்தி, அபிராமி அந்தாதி பாடுமுன் அது வெளி வருவதற்கு ஏற்ற சிந்தனையும், பூர்ணம் அடைந்ததும், அது என்றும் பூர்ணமாக உள்ளத்தில் நிற்கும் நிலையும் அருளுமாறு அபிராமி பட்டர் 'உமை மைந்தனிடம்' வேண்டுகிறார்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் ஸ்ரீமாதா என்று தானே

தொடங்குகிறது ! ஸ்ரீ மாதா என்றால் சிறப்பு மிக்க அன்னை. அகிலாண்டத்தையும் படைத்த அன்னை ஆயிற்றே. மேலும் அதிலேயே 848 உதார கீர்த்தி - பெரும் புகழ் உடையவள். 849 உத்தாம வைபவா - கட்டுக்கடங்காத பெருமை யுடையவள். 734 நடேஸ்வரீ - நடராஜர் மனைவி. சிதம்பரத்தில் (தில்லையில்) நடேசருக்கு அனுஸரணையாக அன்னையும் நடனம் ஆடுகிறாள்.

இந்தக் கருத்தினை ஆதி சங்கர பகவத்பாதாள் ஸௌந்தர்ய லஹரீ ஸ்லோகம் 41-ல் அழகாகச் சொல்லுகிறார். (தவாதாரே மூலே ...)

633. உமா என்ற சிறந்த பெயரை உடையவள். (சக்திப் ப்ரணவம்) 435. சாம்பேய குஸும ப்ரியா - சண்பகப் பூவில் ப்ரியம் உள்ளவள்.

## கணபதியை அறிமுகப்படுத்தும் பாணி

அபிராமி பட்டர், உலக வழக்கத்திற்கு ஏற்ப, தந்தையார், தாயார் பெயர்களையும், அவர்களின் இருப்பிடத்தையும் சொல்லி பின் மைந்தனின் பெயரைக் கூறுவது தனிச்சிறப்பு.

அபிராமி பட்டர் திருக்கடவூரில் வாழ்ந்தாலும், உலக மக்களுக்கு எளிதில் புரியும் வகையில் 'தில்லை ஊரர்' என்று எம்பிரானை அழைப்பது, அவர் தான் ஒரு ஸ்ரீவித்யா உபாசகராக இருந்து எப்போதும் 'காமகாமேச்வரீ' சொரூபத்தை தன் சிதாகாசத்தில் (சிதம்பரத்தில்) வணங்கி வந்தவர் என்பது தெள்ளத் தெளிவாக அறிய முடிகிறது.

தன்னுடைய சிதாகாசத்தில் இருக்கும் சித்சொரூபிணியை (அபிராமியை) வணங்கி, அவள் பால் இயற்றும் அந்தாதி தங்கு தடையின்றி அவளாலேயே இயற்றப்பட, உமா மகேச்வரனின் மைந்தன் ஆன ப்ரணவ சொரூப மகா கணபதியை தன் மூலாதாரத்தில் நிலை நிறுத்தி, வணங்கி அருள் பெறுகிறார்.

முத்துஸ்வாமி தீட்சிதரும், 'ப்ரணவஸ்வரூப வக்ர துண்டம்' என்று சொல்லுகிறார்.

திருமூலரும், சிதாகாசமே சிற்றம்பலம், அதுவே சிதம்பரம் என்பதை (திருமந்திரம் – 2770)

*நெற்றிக்கு நேரே புருவத்து இடைவெளி*
*உற்று உற்றுப் பார்க்க ஒளிவிடும் மந்திரம்*
*பற்றுக்குப் பற்றாய் பரமன் இருந்திடம்*
*சிற்றம்பலம் என்று சேர்ந்து கொண்டேனே' – என்கிறார்.*

அபிராமிபட்டர் எப்போதும் சிவனையும், சக்தியையும் ஸஹஸ்ரார கமலத்தில் ஆனந்த நடனம் புரியும் அர்த்த நாரீஸ்வரர் கோலத்தில் காண்பவர் ! அதனால் தானே மன்னன் சரபோஜியிடம் பௌர்ணமி என்றார். அவர் சந்திர மண்டலமே - ஸ்ரீசக்ரம், சந்திர மண்டலமே - அன்னை அபிராமி என்று உணர்ந்த, அன்னை அபிராமியின் தவப்புதல்வர் அல்லவா !

அபிராமி அந்தாதி என்னும் பாமாலையை அன்னைக்கு சூட்டுவதற்கு முன், அப்பனையும், அம்மையையும் பூ மாலை களால் சாத்துவது "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்ற ஔவைப் பாட்டியின் தெய்வ வாக்கினை நினைவூட்டுகிறது !

தந்தையையும், தாயையும் அபின்னமாக பாவித்து உபாஸிக்க வேண்டும் என்று உலகோர்க்கு உணர்த்துவது போல அமைந்துள்ளது இந்தக் காப்புச் செய்யுளின் ஆரம்பம்.

ஸௌந்தர்ய லஹரியின் முதல்பாடலிலேயே ஆதிசங்கரர் சிவன் இன்றி சக்தியில்லை, சக்தியின்றி சிவன் இல்லை என்று சொல்லி, சிவசக்தியா என்று முதலில் சிவன் பெயரைச் சொல்லி, பின் சக்தியைச் சொல்வது, அவர் உலக வழக்கோடு, தர்மசாஸ்திரம் உணர்ந்தவர் என்று எடுத்துக்காட்டுகிறது அல்லவா ! பத்தினிக்கு பதியால் தானே பெருமை; அதனால் தானே அவள் பதிவ்ரதை என்று அழைக்கப்படுகிறாள்.

அபிராமி அந்தாதி மண்ணுலகில் பிறந்த தமிழர்களுக்கு அன்னை அபிராமி அருளிய அரிய ஆரம் அல்லவா !

## 1. அன்னையின் திருமேனியின் நிறம்.

*உதிக்கின்ற செங்கதிர் உச்சித்திலகம் உணர்வுடையோர்*
*மதிக்கின்ற மாணிக்கம் மாதுளம் போது மலர்க்கமலை*
*துதிக்கின்ற மின்கொடி மென் கடிக்குங்குமத் தோயம் என்ன*
*விதிக்கின்ற மேனி அபிராமி என்றன் விழுத்துணையே.*

**(நல்வித்தையும், ஞானமும் பெற)**

| | |
|---|---|
| உதிக்கின்ற செங்கதிர் | உதயமாகின்ற சிவந்த இளம் சூரியன் |
| உச்சித் திலகம் | ஸுமங்கலிகள் நெற்றி வகிட்டில் அணியும் சிந்தூரம் |
| உணர்வுடையோர் | ஆத்மஞான உணர்வு பெற்றவர்கள் |
| மதிக்கின்ற மாணிக்கம் | சிறப்பாக எண்ணும் சிவப்புக் கல்லான மாணிக்கம் |
| மாதுளம் போது | மலரும் தறுவாயில் உள்ள மாதுளம் பூ |
| மலர்க்கமலை | தாமரை மலரில் உறையும் திருமகள் |
| துதிக்கின்ற மின்கொடி | வணங்குகின்ற மின்னல் கொடி |
| மென்கடி | மென்மையான வாசனை உடைய |
| குங்குமத் தோயம் என்ன | குங்கும கலவை என்று |
| விதிக்கின்ற மேனி | சாஸ்திரங்களும், சான்றோர்களும் வர்ணிக்கின்ற (சிவந்த) திருமேனியை உடைய |
| அபிராமி | (ஒப்பு, உயர்வு அற்ற) அபரிதமான அழகுடைய அபிராமி தேவி |
| என்றன் விழுத்துணையே | என்னுடைய சிறந்த துணையாவாள். |

உதயம் ஆகின்ற சிவந்த இளம் சூரியன், உச்சியிலே மங்கையர் வைத்துக் கொள்ளும் குங்குமத்திலகம், ஆத்ம ஞான உணர்வு பெற்றவர்கள் சிறப்பாக எண்ணுகின்ற நவரத்தினங்களில் ஒன்றான மாணிக்கம், மாதுளம் பூ, தாமரை மலரில் வாசம் செய்யும் திருமகளான லட்சுமி துதித்துப் போற்றுகின்ற மின்னல் கொடி, மென்மையான வாசனையுடைய (நறுமணம் கமழும்) குங்குமக் கலவை என்று அன்பர்கள், சாஸ்திரங்கள் உவமையாக எடுத்துச் சொல்கின்ற திருமேனியை உடைய அபிராமி அன்னை எனக்கு சிறந்த (மேலான) துணையானவள்.

1. உதயசூரியன் உலகின் இருளை ஓட்டுவது போல, (கதிர்களின் வரிசை) அம்பிகை அஞ்ஞானம் என்ற இருளை நம்மிடமிருந்து ஓட்டுபவள். ''அவன் அருளாலே அவன் தாள்

வணங்கி'', என்பதுபோல அம்பிகையின் அருளினால் தான் அவளை உணரமுடியும். சூரியனையும் அவன் ஒளியினால் தான் காண முடியும். விஞ்ஞானமும் பூமி, சூரியனிடமிருந்து வந்த பாகம் என்கிறது. உதயசூரியனாகத் தோன்றுவது, சாட்க்ஷாத் அபிராமியே.

இதையே லலிதா ஸஹஸ்ரநாமம் பானுமண்டல மத்யஸ்த்தா (275) என்கிறது. – சூரிய மண்டலத்தின் நடுவில் இருப்பவள்.

6 : உத்யத்பானு ஸஹஸ்ராபா : ஆயிரம் சூரியர்கள் உதித்தாற் போன்ற பிரகாசம் பொருந்தியவள்.

361 : தமோ பஹா : (அஞ்ஞானம் என்ற) இருளைப் போக்குபவள்.

404. : பக்த - ஹார்த - தமோ - பேதபானுமத் - பானுஸந்ததி : பக்தர்களுடைய அகஇருளை நீக்கும் சூரிய கிரணம் போன்றவள்.

மேலும் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தின் தியான ஸ்லோகம் 'அருணாம் கருணாதரங்கி தாக்ஷீம்...' அன்னையின் திருமேனியை உதயகால சூரியனைப் போல சிவந்ததாக வர்ணிக்கிறது.

ஆதி சங்கரரும் ஸௌந்தர்ய லஹரியில் (18-வது ஸ்லோகம்) 'தனுச்சாயாபிஸ் - தே தருண - தரணி...' என்று அம்பாளை உதய சூரியனது போன்ற அழகிய திருமேனியுடையவளாகத் தியானிக்க வேண்டும் என்கிறார். மீனாக்ஷி பஞ்சரத்னத்திலும், ''உத்யத்பானு...'' என்பர்.

திருமூலர் தனது திருமந்திரத்தில் (1316) - அன்னையின் திருமேனியை ''செய்ய திருமேனி...'' என்று வர்ணிக்கிறார்.

2. உச்சித்திலகம் - மங்கையர் தம் நெற்றியின் உச்சியிலே அணிவது. அது போல இந்த செம்மையுருவமைந்த பிராட்டியை அன்பர்கள் முடியணியாக்குகிறார்கள்.

289. ச்ருதிஸீமந்தஸிந்தூரிக்ருத பாதாப்ஜ தூளிகா

வேதங்களாகிற ஸ்தீரிகளின் முன் வகிட்டில் சிவந்த ஸிந்தூரமாக விளங்கும் தன்னுடைய பாத கமலங்களில் தூளிகளைக் கொண்டவள். (சிறந்த உருவகம் இது) வேதங்களாகிற ஸ்தீரிகள் தேவியின் பாதங்களை வணங்கும்போது அவற்றின் உச்சி (தலை) பாதசரணங்களில் படுவதனால் அந்த சரண

கமலங்களிலுள்ள தூளியானது தலையில் படுகிறது. அம்பாளின் பாதங்கள் செம்பஞ்சுக் குழம்பினால் அலங்கரிக்கப் பட்டிருப்பதால் பாத தூளிகள் சிவப்பு நிறமாய் உள்ளன. இந்தச் சிவப்பு, வேதமாகிற ஸ்திரீகளின் முன் வகிட்டில் படுவதனால் அந்த முன்னுச்சி சிவப்பாக ஆகிவிடுகிறது !

ஸுமங்கலிகள் நெற்றி வகிட்டில் ஸிந்தூரம் தரிப்பது அவசியம். (ஸீமந்தினீ - என்ற பெயர்). ச்ருதி என்ற சொல்லும் பெண்பாலே ஆகும். (வேதத்தின் சிரஸ் - உபநிஷத்பாகம் - ப்ரஹ்மத்தை போதிக்கும் ஞானகாண்டம்).

உச்சித்திலகம் - உச்சி வேளையில் மலர்கின்ற மஞ்சாடிப்பூ என்பர். மஞ்சாடி மலரிலே சிவப்பு நிறத்தோடு மென்மை சிறப்பாகத் திகழ்கிறது.

49. ஸர்வாருணா - சரீரம், வஸ்த்ரம், ஆபரணம், புஷ்பம், காந்தி எல்லாமே சிவப்பு. அம்பிகையின் விஷயத்தில் எல்லாமே சிவப்பு தான் ''லௌஹித்ய மேதஸ்ய ஸர்வஸ்ய விமர்ச'' - பாவனோபநிஷத்.

ஸ்ரீ சிதாநந்த நாதர், ஸ்ரீ லலிதா த்ரிசதீயில் வரும் 155-வது நாமாவான, ''காந்தி தூத - ஜபாவல்யை''-க்கு தரும் விளக்கம் :-

''பரதேவதையின் செம்மை நிறம் ஆத்ம கோசர அகண்டாகார வ்ருத்தியை ஸுசிப்பிக்கின்றது'' - என்னே அவர் கவிதா விலாஸம் !

குறிப்பு : கருணையின் நிறம் சிவப்பு (த்ரிபுரஸுந்தரீ அஷ்டகம் - ஆதிசங்கரர்)

உணர்வுடையோர் மதிக்கின்ற மாணிக்கம்

தூய உணர்வுகள் இல்லாதவர்களால் இறைவன் அல்லது இறைவி என்ற அந்த மாணிக்கத்தை உணர முடியாது. இது தூசி படிந்த கண்ணாடியில் முகம் பார்க்க முடியாது என்பது போன்றது. காளிதாஸனும், ஸ்ரீசியாமளா தண்டகம் என்ற பாடலில் மாணிக்ய வீணை முபலாலயந்தீம் என்றே பாராட்டியுள்ளனர். வள்ளலாரும் திருவொற்றியூர் வடிவுடையம்மனை 'மாணிக்கம்' என்று போற்றியுள்ளார்.

மாணிக்கம் பகல் இரவு என்று இல்லாமல் எப்போதும் சிவப்பு

நிறத்தோடு ஒளி தருகிறது. மணிகள் ஒன்பது ஆனாலும் அவற்றுள் நாயகமாக நிற்பது மாணிக்கம். ஒன்பது கிரகங்களுள் சூரியன் சிறந்து நிற்பது போல, மணிகளுள் சிறப்பானது மாணிக்கம்.

அம்பிகை செக்கச் செவேலென்ற வண்ணம் உடையவள். அந்த வண்ணத்தூடே ஒளியும் இணைந்து நிற்கும். மேலும் மணியும் ஒளியும் போல என்பது பழமொழி. இங்கு மணியாக சிவனையும், ஒளியாக சக்தியையும் சொல்வது மிக அழகு அல்லவா ! அபிராமிபட்டர் எப்போதும் தன்னை, சந்திர மண்டலத்தில் ஆனந்த நடனம் புரியும் அர்த்த நாரீஸ்வரர் கோலத்தில் ஐக்கியப்படுத்திக் கொண்டவர் அல்லவா !

இங்கு உணர்வுடையோர் என்று அபிராமி பட்டர் சொல்லியிருப்பது ரொம்பப் பொருத்தம். வெறும் அறிவினால் அல்லாமல், தன்னை முழுவதும் உணர்வது அடியார்களின் சிறப்பு.

ராஜாஜி சொன்னார் :

Knowledge, when it becomes fully matured becomes "Bhakthi". If knowledge does not get transformed into "Bhakthi" then it is useless. To believe that knowledge and Bhakthi are different is ignorance.

மாதுளம்போது - மாதுளப் பூவின் காந்தியைப் போன்ற காந்தி உடையவள். மாதுளை வகையில் பூத்துக் காய்க்கும் வகை ஒன்று. பூக்கும் ஆனால் காய்க்காது என்று இன்னொரு வகை. இந்த வகை மரத்தின் பூக்கள் மிகவும் சிவப்பாக இருக்கும்.

560 :- தாடிமீ குஸுமப்ரபா.

அதாவது மென்மையாகவும், எல்லோருக்கும் எளிதில் செவ்வண்ணம் உடையதாயும், கண்ணுக்குக் குளிர்ச்சி தருவதாயும் இருப்பது மாதுளம் பூ. (மாணிக்கம் கடினமானதல்லவா !)

248. பத்மராகஸமப்ரபா - தாமரையின் சிகப்பு நிறத்திற்கு ஸமமான காந்தியுடன் விளங்குபவள்.

766. ஜபாபுஷ்பநிபாக்ருதி - செம்பருத்திப் பூவின் நிறத்தை ஒத்த ரூபமுள்ளவள். (சிகப்பு நிறம்)

மலர்க்கமலை துதிக்கின்ற மின்கொடி : 614. ஸசாமரரமா

வாணீ ஸவ்யதக்ஷிண ஸேவிதா - (லக்ஷ்மீ வாணீ நிஷேவிதா) எப்போதும் அன்னைக்கு சாமரம் வீசிக் கொண்டிருப்பவர்கள் - திருமகளும், கலைமகளும். ஆனாலும் அன்னையின் திருமேனிப் பேரழகு முற்றும் கண்டு மனநிறைவடைந்தார்களா ? அது தான் இல்லை.

மனம் அமைதியாக இருந்தபோது, அகந்தையகன்று நின்றபோது, திருமகள் திரிபுர சுந்தரியைக் கண் கொண்டு பார்த்தாள். மின்னல் மின்னியது போன்று தோன்றியது. மின்னல் ஒரு கணம் தானே தோன்றும் ? மின்னல் அடித்தாற் போல ஒரு கணம் உன் உருவத்தை தரிசிக்கச் செய்தாயே ! அதனை என்றும் காணத் திருவருள் செய்ய மாட்டாயா ? என்று திருமகள் ஏங்கி நிற்கிறாள். தான் கண்ட மின்னற்கொடியைத் துதித்துக் கொண்டே இருக்கிறாள்.

அதாவது, அன்னை அபிராமியை துதிப்போர்க்கு லட்சுமி கடாக்ஷம் ஏற்படும் என்று முதல் பாடலிலே சொல்வது அபிராமி பட்டரின் கவி நயத்தைக் காட்டுகிறது அல்லவா ! 107. தடில்லதாஸமருசி - மின்னல் போல் பேரொளியுடன் தேவி விளங்குகிறாள்.

மென்கடிக் குங்கும தோயம் :- அன்னையின் திருமேனியை காச்மீரத்து குங்குமப் பூவிற்கு உவமையாகச் சொல்வது வழக்கம். மூக கவி ஆர்யாசதகத்தில் ''காச்மீரஸ்தபக கோமலாங்கலதா'' என்கிறார். அதாவது குங்குமப் பூவைக் கடாரத்தில் பூரித்த தீர்த்தத்தில் நிறையக்கொட்டி அம்பிகைக்கு அபிஷேகம் செய்வார்கள். அந்த நீர் சிவப்பாக இருக்கும். அதாவது மென்மையான மணமுள்ள குங்குமப் பூ கரைத்த குழம்பு போல் அன்னையின் திருமேனி விளங்குகிறது. காளிதாஸனும், ''குங்கும ராகசோணே'' – என்பார்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் (த்யான ஸ்லோகத்தில்) அன்னையின் திருமேனியை 'குங்குமப் பூவினை அரைத்த விழுதைப் பூசியவளாக' - சொல்லப்படுகிறது.

*ஸ குங்கும விலேபனாமளிகசும்பி கஸ்தூரிகாம்*
*ஸமந்த ஹஸிதேக்ஷணாம் ஸசரசாப பாசாங்குசாம்*

*அசேஷ ஜனமோஹினீம் அருணமால்ய பூஷாம் பராம்*
*ஜபாகுஸுமபாஸுராம் ஜபவிதௌ ஸ்மரே தம்பிகாம்*

அம்பிகையை பூஜித்து தன் கையாலே அபிஷேகம் செய்யும் தேவி உபாசகர்கள் இதனை அறிவர். எல்லோருக்கும் மேலாக விளங்கும் அன்னையாகிய ஸ்ரீ ராஜ ராஜேசுவரி செய்ய நிறம் உடையவள். செவ்வண்ணம் மங்கலத்தின் அடையாளம்.

அபிராமி, அதாவது, அபி+ராமி. அபரிமிதமான அழகுடையவள் என்று பொருள்.

பின்னும், "அழகுக்கு ஒருவரும் ஒவ்வாதவல்லி" – என்பார். ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் (48) அன்னையை,

"மஹாலாவண்ய சேவதீ – அழகுக்கெல்லாம் ஒரு களஞ்சியம் அல்லது பெட்டகமாய் இருப்பவள்" என்று சொல்லுகிறது. ஸௌந்தர்ய லஹரீ (12) - "த்வதீயம் ஸௌந்தர்யம்..." என்கிறது. இதன் பொருள் : "ஸரஸ்வதீ வல்லபரான பிரம்மா போன்றவர்கள் கூட உன்னுடைய அழகுக்கு உவமை கூறுவதற்கு எப்படி எப்படியோ கற்பனை செய்து பார்க்கிறார்கள் - அவர்களால் முடியவில்லை !

அபிராமியின் அழகினை அத்தனே அறிவான் !

அபிராமியின் பித்தன் இதனை அறியானோ ?

அறிவான் ! ஆனாலும், தன் உள்ள உவகையினால் சான்றோர்கள் சொல்லிய சில உவமைகளை எடுத்துக்காட்டி, அன்னையின் எழில்மிகு திருமேனியின் செவ்வண்ண அழகில் சிறிது நேரம் லயிக்கிறார் அபிராமிபட்டர்.

முக்கரணங்களாலும் வழிபட்ட அன்னை அபிராமி தான் முக்காலத்திற்கும் தனக்கு சிறந்த (மேலான) துணை என்பதையுணர்ந்த ஞானியாதலால் "அபிராமி என்றன் விழுத்துணையே" என்று முதல்பாடலை நிறைவு பெறச் செய்கிறார் அபிராமிபட்டர். என்னே அவரது பக்தி !

## 2. அன்னை அபிராமியே திரிபுரசுந்தரி.

*துணையும் தொழும் தெய்வமும் பெற்ற தாயும் சுருதிகளின்*
*பணையும் கொழுந்தும் பதிகொண்டவேரும் பனிமலர்ப் பூங்*
*கணையும் கருப்புச்சிலையும் மென் பாசாங்குசமும் கையில்*
*அணையும் திரிபுர சுந்தரி ஆவது அறிந்தனமே.*

**(பிரிந்தவர் ஒன்று சேர)**

| | |
|---|---|
| துணையும் | எல்லா ஜீவராசிகளுக்கும் உற்ற உயிர்த் துணையும் |
| தொழும் தெய்வமும் | (உயிர்கள் உய்வதற்காக) வழிபட வேண்டிய உபாஸனா மூர்த்தியும் |
| பெற்ற தாயும் | அகிலாண்டங்களையும் பெற்ற தாயும் |
| சுருதிகளின் | வேதங்களின் |
| பணையும் | கிளைகளும் |
| கொழுந்தும் | வேதங்களின் உச்சிப்பகுதியான (சிரஸ்) உபநிடதங்களும் |
| பதி கொண்ட வேரும் | வேதங்களைத் தாங்கி அதற்கு மூலவேராக விளங்கும் பிரணவமும் |
| பனிமலர் பூங்கணையும் | குளிர்ச்சி பொருந்திய புஷ்ப பாணங் களையும் |
| கருப்புச் சிலையும் | கரும்பு வில்லையும் |
| மென் பாசம் | பாசத்தையும் (ஆசை) |
| அங்குசம் | அங்குசத்தையும் (தொரட்டி) |
| அணையும் | தனது நான்கு திருக்கரங்களில் தாங்கி விளங்கும் |
| திரிபுரசுந்தரி | மூவுலகிலும் ஈடு, இணையில்லா அழகுடையவளான திரிபுரசுந்தரி என்னும் சிறப்புடைய பராசக்தியே |
| ஆவது அறிந்தனமே. | என்று அறிந்தேன் |

ஆன்ம கோடிகளுக்கு உற்ற துணையாயும், அவர்கள் வழிபட-வேண்டிய ஒரே தெய்வமாயும், எல்லா உயிர்களையும் பெற்ற தாயாகவும், வேதங்களின் சாகைகளாகவும், தளிர்களாயும், வேராயும் இருப்பது யாரெனின் தனது நான்கு திருக்கரங்களில் குளிர்ச்சி பொருந்திய புஷ்ப பாணங்களும், கரும்பு வில்லும், பாசம் என்ற கயிற்றையும், அங்குசத்தையும் ஏந்திய திரிபுரசுந்தரி ஆகிய அபிராமி அம்மையேயாகும்.

அதாவது, அபிராமி அன்னைதான் திரிபுரசுந்தரி என்ற

உண்மையை அறிந்து கொண்டேன்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் 234. மஹா த்ரிபுரஸுந்தரி - மஹாத்ரிபுரையாகவும் மஹா அழகியாகவும் உள்ளவள்.

7. சதுர்பாஹு ஸமன் விதா : நான்கு கைகளுடன் கூடியவள். இரு தோள்களிலிருந்தும் முன்னும் பின்னுமாக பக்கத்திற்கு இரு கைகள். த்யானத்தில் பொதுவாகச் சொல்லப்படும் உருவங்களில் நான்கு கைகளே குறிப்பிடப்படுகின்றன.

8. ராகஸ்வரூப பாசாட்யா : ஆசை வடிவான பாசம் என்னும் ஆயுதத்துடன் கூடியவள். பாசம் என்பது ஒரு பொருளைப் பிடித்து இழுப்பதற்காகப் போடப்படும் கயிறு. தேவியின் கையிலுள்ள பாசத்தின் இரு முனைகளும் அவள் கையிலேயே அடங்கியுள்ளதால் நமது ஆசை அவளருளால் தான் நிறைவேறும் என்று குறிக்கிறது. தேவியின் இடது பின் கையில் பாசம் - கயிறு - ஸ்தூலரூபம். இதற்கு அதிஷ்டான தேவதை - அச்வாருடா.

9. க்ரோதாகாராங்கு ஶோஜ்வலா : குரோதத்தின் உருவமான அங்குசத்தைத் தரிப்பதால் ஒளியுடன் விளங்குபவள். (தேவதை = ஸம்பத்கரீ)

அங்குசம் என்பது யானையை அடக்க அதன் பாகன் பயன்படுத்தும் தொரட்டி. கூரிய முனையோடு கூடியது. யானை விலங்குகளில் மிகப் பெரியது அல்லவா ! அதற்கு மதம் பிடித்தால் அதனை அடக்க முடியாது. அதை அடக்கப் பயன்படுத்தும் ஆயுதம் தொரட்டி. இது இந்த ஆயுதத்தின் ஸ்தூல வடிவு. மனம் தான் நாடிச் செல்லும் பொருள் எதிர்பார்த்த சுகத்தை தராவிட்டாலோ அல்லது அப்பொருளை அடைய முடியாவிட்டாலோ ஏற்படுவது க்ரோதம். இந்த க்ரோதத்தை அடக்கும் அங்குசத்தை உடையவள். இதை வலது பின் கையில் கொண்டுள்ளாள்.

10. மனோ ரூபேக்ஷு கோதண்டா :- மனமாகிற கரும்பு வில்லை உடையவள் (இடது முன் கையில்) அதிஷ்டான தேவதை மந்த்ரிணீ.

வில் காய்ந்த மூங்கில் பட்டைகளால் செய்யப்படுவதால் வளைந்து, நிமிரும். கரும்போ ஈரமானது. ஆயுதமாயினும்

இனியதாக, இனியதாயினும் ஆயுதமாக நிற்கிறது. இது தேவியின் மனம் கருணைமயமானது என்று காட்டுகிறது. அவள் மனதில் ஈரமும், இனிமையும் எப்போதும் உள்ளவை அன்றோ ? 326. கருணாரஸ ஸாகரா - கருணைக் கடல்.

மனதின் செயல், ஐம்புலன்களின் மூலமாக, ஒரு பொருளை உணர்ந்து, இது எனக்கு சுகம் தர வல்லது (இதை தவிர்க்க வேண்டும்) என்று எண்ணுவது ஸங்கல்பம் என்று பெயர்.

அதே நேரத்தில் இந்தப் பொருள் எனக்கு உவந்தது தானா ? இதை நான் அடைய முயற்சி செய்வதா ? வேண்டாமா ? என்ற சிந்தனைகளுக்குப் பெயர் விகல்பம். மனதின் செயல் இவ்விருவகையானது. இம்மனமே தேவியின் கையில் கரும்பு வில்லாகிறது.

11. பஞ்சதன்மாத்ர ஸாயகா : ஐந்து தன் மாத்ரைகளைப் பாணங்களாக உடையவள். (தனது வலது மேல் கையில் - தேவதை தண்டநாதா என்கிற வாராஹி)

தாமரை, செங்கழுநீர், செவ்வல்லி, செவ்வாம்பல், மாம்பூ என்ற மலர்களினால் ஆன அம்புகளை உடையவள். இதன் குணங்கள் முறையே மகிழ்விப்பது, சுவையூட்டுவது, மயக்குவது, வற்ற வைப்பது, மாய்ப்பது.

இந்த அம்புகளின் ஸூக்ஷ்ம உருவம் ஐந்து தன்மாத்ரைகள் எனப்படும் ஐந்து குணங்கள். இவை இந்த ஜடமான உலகத்திற்கு மூலப்பொருளாக அமைந்த

| பூதம் | தன்மாத்ரை |
|---|---|
| ஆகாசம் | சப்தம், ஒலி |
| வாயு | ஸ்பர்சம், தொடும் உணர்ச்சி |
| நெருப்பு | ரூபம், நிறம் |
| நீர் | ரஸம், சுவை |
| பூமி | கந்தம், மணம் |

அம்புகள் எய்துபவனது கருத்தின்படியே இலக்கை அடைந்து பயன் தருவன. எனவே ஒரு ஜீவன் பக்தனானால் தேவியின்

அம்புகளுக்கு நல்ல இலக்காவான். அதனால் விரும்பத்தக்க சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்த குணங்களின் சுகமயமான அனுபவத்தைப் பெறுவான். பக்தனின் கருத்தில் தோஷம் இருந்தால் விரும்பத்தகாத பலன்களைப் பெறுவான்.

இந்த அம்புகளுக்கு மூன்று வகை உருவங்கள் உள்ளன. (ஸ்தூல, ஸூக்ஷ்ம, வாஸனா) அவை முறையே மலர்கள், மந்த்ரங்கள், பராரூபம். அம்பாளுக்கு மன்மதனைப் போலவே கரும்பு வில்லும், மலர்க்கணைகளும், தேவி லலிதா என்றும் காமேச்வரீ என்றும் அழைக்கப்படும் ச்ருங்கார ரஸப்ரதானை யாகையால் அழகான வஸ்துக்கள் அவளுக்கு ஆயுதங்களாக அமைந்தன.

கரும்பு வில்லிற்கு அதிஷ்டான தேவதை - மந்திரிணீ (புத்தி சக்தி) பாணங்களுக்கு அதிஷ்டான தேவதை தண்டநாதா (சேனைத்தலைவி - பலம்) அதாவது, புத்தியுடன பலம் இயங்க வேண்டும் என்பது வாக்தேவிகள் நமக்கு குறிப்பாக உணர்த்துவது.

உலகத்தைக் காமத்தின் கண் வசப்படுத்தும் மாயா சொரூபி யும், அதனின்றும் நீக்கும் ஞானசொரூபியுமாக விளங்குகிறவள் அன்னை. காமனுக்கு, வில்லும் அம்பும் தந்து முதல் வேலையை நடத்துகிறாள். ஞானக் கொழுந்தாகிய கணபதியினால் உலகம் ஞானம் பெற தன் பாசங்குசத்தை வழங்கியிருக்கிறாள்.

துணை :- மனிதர்களுக்கு வாழ்க்கையில் பல வகையான துணைகள் இருக்கின்றன. ஜடமான கருவிகள், உயிர் உள்ள ஜீவராசி களும், மனிதர்களும் பல வகையில் உதவுகின்றன. காலுக்கு செருப்பு, வெய்யில் - மழைக்கு குடை, ஆற்றைக் கடக்க ஓடம். (ஜடம்) பாலுக்கு பசு மாடு, காவலுக்கு நாய், சவாரிக்கு குதிரை, (உயிர் ஜீவராசிகள்) குழந்தைக்கு தாய்-தகப்பன், மனைவிக்கு-கணவன், குடிமக்கள்-மன்னன். ஆனால் காலன் உயிரைக் கொண்டு போகும் போது யாராலேயும் காப்பாற்ற முடியாது.

ஆனால் உயிர் எங்கே சென்றாலும் எந்தப்பிறவி எடுத்தாலும் அங்கும் வந்து துணையாக நிற்பவள் அன்னை அபிராமி

"திக்கற்றவருக்குத் தெய்வமே துணை" - என்பது பழமொழி.

தொழும் தெய்வம் :- அண்ணன், தமக்கை, தந்தை, தாய், மாமன், அத்தை, வயதால் பெரியோர்கள், ஆசிரியன், துறவி முதலியவர்கள் எல்லாம் தொழுதற்கு உரியவர்கள்.

ஆனால் இவ்வுலகில் எல்லோரும் தொழுதற்கு உரிய தெய்வம் அன்னை அபிராமி ஆவாள்.

285. ஆப்ரஹ்மகீடஜனனீ : ப்ரஹ்மா முதல் புழு பூச்சி வரை உள்ள எல்லா ஜீவன்களையும் ஈன்றவள்.

பெற்ற தாயும் :- தாயின் உருவம் தயை. தயையின் பிழம்பு தாய். 992. அவ்யாஜ கருணாமூர்த்தி : தாய் என்பவள் எதையும் எதிர்பாராது செய்யும் இயல்பை உடையவள். அவள் கருணை அவ்யாஜமானது. (அதாவது, பார, பட்சம் இல்லாதது.) சேய்க்கு, தாயினிடம் பால் கேட்கத் தெரியாது. ஆனால் தாய்க்குத் தெரியும், சேய்க்கு என்ன வேண்டும் என்று.

பிள்ளை தன்னை புறக்கணித்தாலும் எந்தத் தாயும் அவன் நன்றாக வாழவேண்டும் என்றே நினைப்பாள்.

'பெற்ற மனம் பித்து ; பிள்ளை மனம் கல்லு' - என்பது பழமொழி. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம், அன்னை அபிராமியை, "ஸ்ரீமாதா" என்று எடுத்த எடுப்பிலேயே துதிசெய்யத் தொடங்குகிறது. கஷ்டம் வரும் போது நம்மையும் அறியாமல் முதலில் வாயிலிருந்து தானே வரும் சொல் 'அம்மா'.

"தாயிற் சிறந்த தயாவான தத்துவனே" - மணிவாசகர்

சுருதிகளின் பணையும், கொழுந்தும், பதிகொண்ட வேரும் :-

338. வேத ஜனனீ - வேதங்களை உண்டு பண்ணினவள். தேவீ குண்டலினீ ரூபமாக இருப்பதாலும் குண்டலினியிலிருந்தே உயிரெழுத்துகளும் மெய்யெழுத்துக்களும் உண்டாவதாலும், எல்லா மந்திரங்களும் வேதங்களும் இவைகளின் ஒலிகளால் ஏற்படுவதாலும், வேத ஜனனீ எனப்படுகிறாள்.

539. ஶ்ருதி : வேதங்களின் ரூபமாக இருப்பவள்.

"யாதேவீ ஸர்வ பூதேஷு ஶ்ருதி ரூபேண ஸம்ஸ்திதா ।

நமஸ்தஸ்யை । நமஸ்தஸ்யை । நமஸ்தஸ்யை । நமோ நம: ॥"

(ஸப்தசதீ)

540. ஸ்ம்ருதி : ஸ்ம்ருதிகளின் ரூபமாக இருப்பவள். ஸ்ருதி என்றால் கேட்பது. ஸ்ம்ருதி என்றால் நினைவு, ஞாபகம் என்று அர்த்தம். இந்த இரண்டு விதங்களாலும் ஏற்படும் ஞான ரூபமாக அம்பாள் இருக்கிறாள்.

தற்காலம், கடந்த காலம், எதிர்காலம் - இவைகளில் கார்யங்களை நினைப்பதால் ஸ்ம்ருதி எனப் பெயர்.

யா தேவீ ஸர்வபூதேஷு ஸ்ம்ருதி ரூபேண ஸம்ஸ்திதா ।

நமஸ்தஸ்யை । நமஸ்தஸ்யை । நமஸ்தஸ்யை । நமோ நம : ॥
(ஸப்த சதீ)

அன்னையே வேதம் என்று சொல்ல வந்த அபிராமிபட்டர், நடு கிளைகள் (பணை), முடி (கொழுந்து), வேர் (அடி) என்று சொல்லும் விதம் சிந்திக்கத் தக்கது. மரத்தை பார்க்கும் போது முதலில் கண்ணில் படுவது அதன் கிளைகளே. நெருங்கி வந்து அண்ணாந்து பார்த்தால் அதன் உச்சி தெரியும். (அதாவது கொழுந்து). பின், முயன்று தோண்டிப் பார்த்தால் அறிவது வேர்.

வேதத்தின் திறத்திலும் இந்த முறையே பயனைத் தருவது. முதலில் அதன் சாகைகளை (பணை) தெரிந்து கொள்ள வேண்டும். பிறகு பயன் தரும் உபநிடதங்களை (கொழுந்து) உணர வேண்டும். சிரவண மனன நிதித்தியாசங்களுக்குப் பிறகு நிஷ்டையில் இருக்க வேதத்தின் வேராகிய பிரணவம் உதவுகிறது. பாட்டில் உள்ள முறையின் பொருத்தம் வெகு அழகு !

அன்னையே வேதமென்றும் மரத்தின் இடையில் உள்ள கிளைகளாகவும், மேலே உள்ள கொழுந்தாகவும், அதன் வேராகவும் நின்று தாங்குகிறாள்.

திரிபுர சுந்தரி :- திரிபுரங்களின் தலைசிறந்த பேரழகி.

மூன்று என்ற எண்ணிக்கையின் தொகுதிகள் யாவுமே திரிபுரம் எனப்படும்.

ப்ரும்மா, விஷ்ணு, சிவன் - மும்மூர்த்திகள். சரஸ்வதீ, லக்ஷ்மீ, துர்கா மூன்று தேவியர்.

ஆக்கல், அளித்தல், அழித்தல் - என்ற மூன்று தொழில்கள், சத்துவம், ரஜஸ், தமஸ் - என்ற மூன்று குணங்கள். சந்திரன், சூரியன், அக்கினி - என்ற மூன்று சுடர்கள். ஸ்ரீ சக்கரத்தில் உள்ள கோணங்கள் மூன்று. ரேகைகள் - மூன்று. பூபுரம் - மூன்று அந்தர்மத்ய பாதாளமாகிய அடுக்கு மூன்று. மனம், புத்தி, சித்தம் - மூன்று. பீடங்கள் மூன்று. இடைகலை, பிங்கலை,சுழுமுனை என்னும் நாடி மூன்று.

இவ்வாறு மும் மூன்றாக உள்ளவற்றின் உருவமாகவும், அவற்றின் தலைவியாகவும் இருப்பவள் - ஆதலின் திரிபுரசுந்தரி !

தனது நான்கு திருக்கரங்களிலும் அங்குசம், பாசம், மலர்க்கணைகள், கரும்பு வில் படைத்த, வேதசொரூபியாகிய அபிராமி என்னும் திரிபுரசுந்தரியே எனக்கு எப்போதும் துணையாகவும், எல்லோரும் வணங்கும் தெய்வமாகவும், அகிலாண்டத்தைப் பெற்ற தாயாகவும் விளங்குகிறாள்.

ஸ்ரீ லலிதா சஹஸ்ர நாமத்தில் வரும் நாமாக்கள் :-

588, த்ரிகூடா - மும்முன்றான கூடங்களை உடையவள். 630. த்ரயக்ஷரீ மூன்றெழுத்துக்களின் வடிவினள். 453 த்ரிநயனா - மூன்று கண்கள் உடையவள். 762. த்ர்யம்பகா - முக்கண்ணி - த்ரிமூர்த்திகளின் தாயார். 626 த்ரிபுரா - மும்மூர்த்திகளுக்கும் முந்தியிருப்பவள். 637. த்ரிஜகத்வந்த்யா- மூன்று லோகங்களாலும், மூன்று லோகங்களிலும் வணங்கப்படுபவள். 477. த்ரிலோசனா 628. த்ரிமூர்த்தி : ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன்-வடிவானவள். 3 வயது கன்யா. 629. த்ரிதசேச்வரீ : தேவர்களின் ஈச்வரீ. 630. த்ர்யக்ஷரீ - மூன்று அக்ஷர ரூபமானவள். 874. த்ரிஸ்தா - மும்மூன்றுகளில் இருப்பவள். 983. த்ரிகண்டேசீ - த்ரிகண்டா முத்திரையின் தலைவி. 984. த்ரிகுணா - மூன்று குணங்கள். 986 த்ரிகோணகா - முக்கோண வடிவமான யோனி சக்கரத்தில் இருப்பவள். ஸ்ரீசக்ரத்தின் மத்தியில் இருக்கும் யோனி சக்ரமாகிய த்ரிகோணமே அம்பாளின் ரூபம். பிந்து ஸ்ரீஸிவ ஸ்வரூபம். (த்ரிசதீ)

## 3. அறிந்தேன் ஸ்ரீ வித்தையே.

*அறிந்தேன் எவரும் அறியா மறையை அறிந்து கொண்டு*
*செறிந்தேன் உனது திருவடிக்கே திருவே வெருவிப்*
*பிறிந்தேன் நின் அன்பர் பெருமை எண்ணாத கரும நெஞ்சால்*
*மறிந்தே விழும் நரகுக்கு உறவாய மனிதரையே.*

**(ஸம்ஸார பந்தம் நீங்க)**

| | |
|---|---|
| எவரும் அறியா மறையை | சாமன்யர் எவராலும் அறிய முடியாத 'ஸ்ரீவித்யா' எனும் திருமந்திரத்தை |
| அறிந்தேன். | தெரிந்து கொண்டேன் (அன்னையின் அருளால்) |
| அறிந்து கொண்டு | அவ்வாறு அறிந்து கொண்டு |
| உனது திருவடிக்கே | உனது அழகிய பாதங்களுக்கே |
| செறிந்தேன் | சரண் புகுந்தேன் |
| நின் அன்பர் பெருமை | உன்னை உபாஸிப்பவர்களுடைய பெருமையை (மாட்சியை) |
| எண்ணாத | சிறிதும் சிந்திக்காத |
| கரும நெஞ்சால் | கர்மபடர்களாய் |
| மறிந்தே விழும் | தலைகீழாக விழுகின்ற |
| நரகுக்கு உறவாய | நரகத்துக்கு உடன்பாடான |
| மனிதரையே வெருவிப் | கயவர்களை அஞ்சி |
| பிறிந்தேன் | அவர்களோடு சேராமல் விலகினேன். |
| திருவே ! | உனது திருவடி தான் எல்லாவற்றிற்கும் மேலான நிலையான செல்வம். |

உலகத்தின் செல்வத்திற்கு எல்லாம் அதிபதியாக இருக்கும் அன்னையே ! ஸாமான்யர் எவராலும் அறிய முடியாத இரகசியத்தை (மந்த்ரத்தை - ஸ்ரீ வித்யா மந்த்ரம்) அடியேன் அறிந்து கொண்டேன். அவ்வாறு அறிந்து கொண்டு, உன் திருவடிகளையே தஞ்சமெனக் கொண்டு புகலாகப் புகுந்து சேர்ந்தேன். உன்னுடைய அடியோர்களின் பெருமையை எண்ணாத பாவம் மிக்க மனம் காரணமாகக் குப்புற விழும் நரகலோகத்தின் தொடர்புடைய மனிதர்களை அஞ்சி விலகினேன்.

கருத்து : கொள்ள வேண்டியது தேவியின் திருவடி.

தள்ள வேண்டியது கசடர்களின் நேசம்.

இவ்வாழ்வில் நாம் அறிய வேண்டிய முக்கியமான விஷயம்

என்ன ? சத்ஸங்கம் ஒன்றே நம்மை நல்வழியில் ஈடுபடச் செய்யும். ஒருக்கால், சத்ஸங்கம் அமையாவிட்டாலும், கசடர்களின் நேசம் நம்மை நரகம் என்னும் படுகுழியில் தள்ளிவிடும். (துஷ்ட சகவாசம்)

193 துஷ்டதூரா : துஷ்டர்களால் அடைய முடியாதவள். 885. மஹாலக்ஷ்மி - செல்வத்தின் அதிபதி. குபேரன் அன்னையின் உபாஸகர்.

பின்னும், விழிக்கே அருளுண்டு அபிராம வல்லிக்கு வேதஞ்சொன்ன வழிக்கே வழிபட நெஞ்சுண்டு எமக்கு..... என்று சொல்வர்.

அறிய வேண்டியதை அறிந்ததற்குப் பயன் அம்பிகையின் அடியைச் சார்தல். இந்தப்பாட்டில், அபிராமிபட்டர் கூறும் அநுபவம் - என்ன ?

அபிராமி அன்னையே நுட்பமான செல்வமாக இருப்பவள். அவள் திருவடிகளைப் பற்றினவருக்குக் கிடைக்காத அருஞ்செல்வம் ஏதும் இல்லை. அதாவது முக்தி.

ஸகுணத்தில் ஸகல தேவதாஸ்வரூபிணீயான மஹாதிரிபுர சுந்தரியாயும், நிர்க்குணத்தில் பரப்ரஹ்ம சொரூபிணீயாயும் அவள் இருக்கின்றாள். நாம் அவளை ஒன்றும் கேட்க வேண்டியதில்லை. ''பால் நினைந்தூட்டும் தாய் போல'' நமது தேவைகளை அறிந்து அவள் கொடுப்பாள். 989. வாஞ்சிதார்த்த ப்ரதாயினீ - கேட்க வேண்டாம். எல்லாம் அவளே தருவாள். நாம் செய்ய வேண்டியது ஒன்றே ஒன்று தான்.

''செறிந்தேன் உன் திருவடிக்கே'' என்று அபிராமிபட்டர் கூறுவது போல, அம்பாளே சரணமென்று அவள் திருவடிகளை, த்ருடபாவனையோடும், அநந்ய சித்தத்தோடும், நிஷ்காம்யமாயும் ஆராதிக்க வேண்டும்.

இதற்குத் தடைகளாய் இருப்பவற்றை விலக்க வேண்டும் என்று சொல்ல வந்தவர், நின் அன்பர் பெருமை எண்ணாத கரும நெஞ்சால் மறிந்தே விழும் நரகுக்குறவாய மனிதரையே என்று அடித்துச் சொல்கிறார்.

துஷ்ட சகவாசத்தை அடியோடு விட்டு விட வேண்டும். துஷ்ட சகவாசம் எல்லா பாவங்களையும் கொண்டு வந்து சேர்க்கும். சத்ஸங்கத்தாலேயே தான் முக்தி கிட்டும் என்பதை ஆதிசங்கரர் 'ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்' (9) பஜகோவிந்தத்தில் சோபான முறையில் கூறியுள்ளார். மேலும் அதிலேயே (14) ஆத்ம ஞானமில்லாதவர்கள் மூடர்கள். அவர்கள் நரகத்தீயில் ஆழ்ந்து வேகவைக்கப்படுகின்றனர். " ஆத்மஜ்ஞான - விஹீநா மூடாஸ்தே பச்யந்தே நரக - நிகூடா :"

சிவன், தன்னை திட்டினாலும் சகித்துக் கொள்வான். ஆனால் தன் அடியாருக்கு இம்மியளவு தீங்கு செய்வோரை மன்னிக்கவே மாட்டான்.

அருணகிரி நாதர் கந்தரலங்காரப் பாடலில் (88)

வணங்கித்துதிக்க அறியா மனிதருடன் இணங்கி

குணங்கெட்ட துட்டனை யீடேற்றுவாய் என்று பிரார்த்திக்கிறார்.

அம்பாள் மீதும், அவள் அடியார்கள் மீதும் துவேஷம் கொண்டவர்கள் துஷ்டர்கள். இந்தப் பாடல் அபிராமிபட்டரின் சொந்த அனுபவத்தை மறைமுகமாகக் குறிப்பிடுகிறது.

585. ஸ்ரீ வித்யா :- பஞ்சதசீ மந்த்ரமாக (ஸ்ரீவித்யையாக) இருப்பவள். பஞ்சதசீ மந்த்ரத்தின் ஒவ்வொரு கூடமும் காயத்ரீ மந்த்ரத்தின் அர்த்தத்தையே கொண்டது. மோக்ஷத்திற்கு காரணமாவது ஸ்ரீவித்யையே என்று த்ரிசதியின் பலச்ருதி கூறுகிறது.

மறுபிறவியில்லாத மாபெரும் மகானாக மண்ணுலகில் அவதரித்த அபிராமிபட்டர் ஒரு சிறந்த ஸ்ரீ வித்யா உபாஸகர்.

## 4. சிவனும், சக்தியும் என்றும் என் உள்ளத்தில் நிற்க.

*மனிதரும் தேவரும் மாயா முனிவரும் வந்து சென்னி*
*குனிதரும் சேவடிக் கோமளமே கொன்றைவார் சடைமேல்*
*பனிதரும் திங்களும் பாம்பும் பகீரதியும் படைத்த*
*புனிதரும் நீயும் என் புந்தி எந்நாளும் பொருந்துகவே.*

**(உயர்பதவிகள் அடைய)**

| | |
|---|---|
| மனிதரும் | பூலோகவாசிகளும் |
| தேவரும் | சொர்க்கலோகவாசிகளும் |
| மாயா முனிவரும் | இறவாத முனிவர்களும் (மார்க்கண்டேயர் போன்று) |
| வந்து | உன் சன்னதியை அடைந்து |
| சென்னி குனி தரும் | தலை வணங்கும் |
| சேவடி | சிவந்த திருவடிகளையுடைய |
| கோமளமே | அகமும், புறமும் மென்மையான அம்மையே ! |
| கொன்றைவார் சடைமேல் | கொன்றை மலரை அணிந்த நீண்ட சடையின் மேல் |
| பனிதரும் திங்களும் | குளிர்ந்த சந்திரனையும் |
| பாம்பும் | பாம்பையும் |
| பகீரதியும் | கங்கையையும் |
| படைத்த | வைத்துள்ள |
| புனிதரும் | தூயவராகிய சிவபெருமானும் |
| நீயும் | (அவரோடு அபின்னமான) நீயும் |
| எந்நாளும் | எப்போதும் |
| என் புந்தி | என் உள்ளத்தில் |
| பொருந்துகவே | நிலவுவீர்களாக. |

மனிதர்களும் (பூலோக வாசிகளும்), தேவர்களும் (சொர்க்க லோகவாசிகளும்) இறவாத முனிவர்களும் (இரு வினையும் அற்றும் ஜீவன் முக்தர்களாக வாழ்பவர்கள்) அணுகி வந்து தம் தலையால் வணங்கி வழிபடும் மென்மையான திருவடிகளை யுடைய, அகமும் புறமும் மென்மையான என்றும் இளமை வாய்ந்த அம்மையே !

கொன்றை மலரை அணிந்த நீண்ட சடையின் மேல் குளிர்ச்சி பொருந்திய சந்திரனையும், பாம்பையும், கங்கையையும் வைத்த தூயவராகிய சிவபெருமானும் நீயும் என் உள்ளத்தில் வந்து எந்த

நாளிலும் இணைந்து எழுந்தருளியிருக்க வேண்டும்

இங்கு அபிராமிபட்டர், மிக உயர்ந்த இடத்துக்கு செல்ல விரும்புபவன், கீழ்படியிலிருந்து மெல்ல, மெல்ல ஏற வேண்டும் என்பதை மனதில் கொண்டு மனிதர் - தேவர் - முனிவர் என்று அழகாக வரிசைப்படுத்தியுள்ளார்.

அன்னை - அகமும், புறமும் மென்மையானவள். (உருவம், உள்ளம்) 437 - கோமலாகாரா - மென்மையான வடிவமுடையவள். 721. கோமலாங்கீ - மென்மையான அங்கங்கள் உடையவள். 463. ஸுரநாயிகா - தேவர்களுக்குத் தலைவி, ஈஸ்வரி. ஸுரர் - தேவர். 793. கபர்தினீ - கபர்தீ என்ற பெயருடைய சிவனின் மனைவி, க-ஜலம், பூரம் = ப்ரவாஹம், தை = பரிசுத்தம் செய்வது, புனிதமான கங்கையைக் கூட தன் ஜடைகளில் தாங்கி, அதை பரிசுத்தம் செய்பவர். கங்கையை விட பரிசுத்தமானவர். கங்கையையே பரிசுத்தம் செய்யும் மகிமையை உடையவர் கபர்தீ. பகீரதனுடைய தவத்துக்கு இரங்காமல் கங்கை அகங்காரத்தால் கோபம் அடைந்தது. அதனால் தூய்மை கெட்டது. அது தெளிவு பெற்றுப் புனிதத்தை அடையும் வண்ணம் தன் சடாபாரத்திலே தேக்கி வைத்துப் பிறகே உலகில் பாய விட்டான் சிவபெருமான். பிறருக்குப் புனிதம் உண்டாக்கும் கங்கையின் மாசைத் தீர்த்த புனிதன் பரமசிவன். அப்பர் சுவாமிகளும், "புரிசடை மேல் புனலேற்ற புனிதன் தான் காண்" என்கிறார்.

கொன்றையாகிய தூய மலர் விளங்கும் சடையின் மேல் மாசுடைய திங்களையும் பாம்பையும் கங்கையையும் வைத்துப் புனிதமாக்கியருளிய கருணையாளன் சிவபிரான். அந்தப் பெருமானுடன் அம்பிகை உள்ளத்தே (புந்தி) தங்கினால் அது தூய்மை பெறும்.

(சந்திரனும் இறைவனுடைய திருமுடியின் மேல் தங்கியதால் பாவம் நீங்கிப் புனிதம் அடைந்தான். தேயாமல், வளராமல் எப்போதும் பிறையாகவே இருக்கின்றான்.)

புனிதரும் நீயும் என் புந்தி எந்நாளும் பொருந்துக :- எந்தக்காலத்தும் சிவத்தினின்றும் பிரிவின்றி நிற்கும் உன்னை (அமுதீசர் ஒரு பாகம் அகலாத சுகபாணி) தனியே அழைத்தல்

தகுதியன்று. அப்படி நீ தனியே வந்தாலும், பிரிவு பொறாமல் எச்சமயத்திலும் சென்று விடக் கூடும். ஆகையால் நின் துணைவருடனே வந்து என் நெஞ்சத்தையே திருக்கட்டிலாகக் கொண்டு வீற்றிருந்தருள வேண்டும் என்று இரந்து வேண்டுகிறார் அபிராமிபட்டர்.

இறைவனும், இறைவியும் சேர்ந்தே இருப்பது தான் - பூர்ணத்வம் என்பதை நமக்கு தெள்ளத் தெளிவாய் காட்டுகிறார் அபிராமிபட்டர். உபாஸகனின் உள்ளத்தில் அவர்கள் இணைந்து விடுவதால் உபாஸகனும் தாதாம்யம் அடைந்து சிவம், சக்தி, ஜீவன் மூன்றும் ஒன்றாகிவிடும் என்பதைக் குறிக்கின்றது.

திருமூலரும்,

*அம்மையும் அத்தனும் அன்பு உற்றது அல்லது*
*அம்மையும் அத்தனும் யாரறி வாரென்னை*
*அம்மையோ டத்தனும் யானும் உடனிருந்து*
*அம்மையொ டத்தனை யான் புரிந்தேனே. (1254)*

இப்பாட்டின் உட்கருத்து சிவனும் சக்தியும் சீவனும் ஒன்றே

இந்தப் பாட்டலில் மனிதர், தேவர், மாயாமுனிவர் அன்னையை (அவளின் திருவடிகளை) தலையால் வணங்குவர் என்கிறார்.

அடுத்த பாடலில், அதற்கும் மேலே ஒரு படி சென்று, "அந்தரி பாதம் என் சென்னியதே" என்று உரிமை கொண்டாடுவது அற்புதம் ! அன்னையின் திருவடிகளில் அவர் சேயைப் போல் விளையாடும் திருக்காட்சியே நமது கண்களின் முன் நிற்கிறது.

## 5. அன்னையின் பாதம் என் சென்னியதே.

*பொருந்திய முப்புரை, செப்புரை செய்யும் புணர்முலையால்*
*வருந்திய வஞ்சி மருங்குல் மனோன்மணி வார் சடையோன்*
*அருந்திய நஞ்சு அமுதாக்கிய அம்பிகை அம்புயமேல்*
*திருந்திய சுந்தரி அந்தரி பாதம் என் சென்னியதே.*

**(கனவில் தேவியின் தரிசனம் பெற)**

| | |
|---|---|
| பொருந்திய முப்புரை | மூன்று புரங்களிலும் பொருந்தி இருப்பவளாயும் |
| செப்புரை செய்யும் | செப்பு கிண்ணங்களை உவமையாக உரைக்கத்தக்க |
| புணர் முலையால் | ஒன்றோடொன்று இணைந்த முலைகளால் |
| வருந்திய | வருத்தத்தை அடைந்த |
| வஞ்சி | (துவண்ட) வஞ்சிக் கொடி போன்று |
| மருங்குல் | இடையை உடையவளும் |
| வார்சடையோன் | நீண்ட சடையை உடைய பரமசிவன் |
| அருந்திய | உண்ட |
| நஞ்சு அமுதாக்கிய | விஷத்தை அம்ருதம் ஆக்கியவளும் |
| அம்பிகை | உமாதேவியும் |
| அம்புயமேல் திருந்திய | தாமரை மீது விளங்குகின்ற |
| சுந்தரி | அழகியும் |
| அந்தரி | பரவெளியில் இருப்பவளுமான |
| மனோன்மணி | மனோன்மணி சக்தியானவளின் |
| பாதம் | திருவடிகள் |
| என் சென்னியதே | என் தலையின் மேல் உள்ளது. |

மூன்று புரங்களிலும் பொருந்தியிருக்கும் தலைவி. செப்பை உவமையாகச் சொல்லும் இரண்டு தனங்களின் பாரத்தால் வருந்திய வஞ்சிக் கொடியைப் போன்ற இடையுடைய மனோன் மணி, நீண்ட சடையை உடைய சிவபெருமான் அருந்திய ஆலகால நஞ்சைத் தன் கையால் கழுத்தளவில் நிற்கச் செய்து அமுதம் போல் ஆக்கிய தாய், தாமரையின் மேல் அழகு பெற வீற்றிருந்தருளும் பேரழகி. பராகாச வடிவான அபிராமியின் திருவடி என் தலையின் மேல் உள்ளது.

(திருவடிகள் இரண்டாயினும் ஒன்றாக வைத்துச் சென்னியது என்றார்.)

அம்புயமேல் திருந்திய சுந்தரி - ஸஹஸ்ரார பத்மத்தில் இருக்கும் மனோன்மணி. இங்கு தான் ஸதாசிவ மனோன்மணி அபின்னமாய் அர்த்த நாரீயாய் இருப்பார்கள். இந்த மனோன்மணி சக்தியே மஹாதிரிபுர சுந்தரி - அவளே திரிபுரை (முப்புரை) அவளே அம்பிகை, அவளே சுந்தரி, அவளே அந்தரி ஆகிய எல்லாம்.

(பின்னும் சுந்தரி எந்தை துணைவி.... என்பர் பாடல் 8)

புரை - மூத்தவள் என்றும் பொருள் - மும்மூர்த்திகளுக்கும், மூன்று புரங்களுக்கும் தலைவி.

செப்புரை செய்யும் புணர்முலையால் வருந்திய வஞ்சி :-

ஸௌந்தர்யலஹரீ (79), ''நிஸர்க்க- க்ஷீணஸ்ய ஸ்தன-தட- பரேண க்லம ஜுஷோ :-'' நகில்களின் பாரத்தினால் வருந்தும் இடையுடைய அன்னை - என்று அழகாக வர்ணிக்கிறது.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் 207. மனோன்மனீ : மனோன்மனீ ரூபமாயிருப்பவள். தன்னை த்யானம் செய்யும் பக்தர்களுக்கு அவர்கள் மனதில் உத்க்ருஷ்டமான ஞானத்தோடு கூடியிருக்கும் உன்மனீ பாவத்தை உண்டு பண்ணுவதால் அம்பாளுக்கு மனோன்மனீ என்று பெயர்.

மனம் + உன்மனீ = மனம் பற்றற்று, சலனமற்று இயங்காமல் நிற்கும் நிலை உன் மனீ என்று கூறுவர்.

278. பத்மாஸனா :- தாமரையில் வீற்றிருப்பவள். தாமரையை ஆஸனமாகக் கொண்டவர் ப்ரஹ்மா (கமலாலயன்), ஸரஸ்வதி, லக்ஷ்மி. இம்மூவரின் வடிவமும் தேவியேதான் என்பதால் பத்மாஸனா. பிந்துவிற்கும் பத்மம் என்று பெயர். அதில் வீற்றிருப்பவள். பத்ம - என்றால் சூரபத்மன். அவனை ஸம்ஹாரம் செய்தவள். ஸஹஸ்ரார கமலத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமாட்டியும் அவளே.

782. ப்ராகாஶா : சிறந்ததான ஆகாஶமாக இருப்பவள். எங்கும் விளங்குவது ஆகாயம். அது இருப்பதை உணர முடிகிறது. ஆனால் காணக் கூடிய பரிமாணம் இல்லை. ஆகையால் ஆகாயம் ஸூக்ஷ்மமானது. இந்த ஆகாய வடிவில் இருப்பவள். ''ஸைஷா பார்கவீ வாருணீ வித்யா । பரமே வ்யோமன் ப்ரதிஷ்ட்டிதா ।'' (தை. உப. 3.6.)

609. தஹராகாஶரூபிணீ :- மனிதனுடைய ஹ்ருதயமாகிற ஸூக்ஷ்மமான குகையில் ஆகாச வடிவமாக விளங்குபவள். 'ஆகாச' என்றால் வெற்று வெளி, சூன்யம், இடம் என்று பொருள். மனித சரீரத்தின் ஹ்ருதயத்தில் அதி ஸூக்ஷ்மமான வெளி இருக்கிறது. இதுவே பரப்ரஹ்மம், தேவி என்றெல்லாம் வணங்கப்படுகிறது.

"தஹர குஹா" - சாந்தோக்கிய உபநிஷத்து

அதாவது, சிதாகாசத்தில் உறைபவளாதலின் - அந்தரி என்ற பெயர். அந்தரம் - ஆகாசம், சிதாகாசம் - மனதில் உள்ள ஒரு சிறிய இடம். அந்தரி - எல்லாவற்றிற்கும் அவளே முடிவு - அவள் முடிவில்லாதவள் - மூலமில்லாதவள். அந்தரி என்றால் தனக்கென்று வேறு ஆதாரமில்லாமல் தானே சகலத்திற்கும் ஆதாரமாக இருப்பவள் என்று பொருள்.

இப்போது, அந்தரி - துர்கா என்று நமக்கு தெரிகிறது அல்லவா !

சிவானந்தலஹரீ - "நாலம் வா பரமோபகாரக – மிதம் த்வேகம் பசூனாம்பதே" (31).

உலகைக் காக்க, சிவபெருமான், தன் கருணை உள்ளத்தால், நஞ்சை உண்டான். ஆனால் அந்த நஞ்சு வயிற்றுக்குள் சென்றால், கோடானு கோடி அண்டங்களும் அழிந்து விடுமே என்று, அபிராமி அன்னை, தன் கணவன் கழுத்தை தன் கரத்தால் அணைத்துக் கொண்டாள். நஞ்சும் கழுத்திலேயே நின்றுவிட்டது. அதனால் சிவன் கழுத்து நீல நிறமாகியது - நீலகண்டன் - ஸ்ரீகண்டன்.

அன்னை அபிராமியை முன்னும், 'திருவே'என்றார். 'திரு' என்பது வடமொழியில் 'ஸ்ரீ' எனப்படும். 'ஸ்ரீ' என்ற சொல் செல்வம், விஷம் - இரண்டையும் குறிக்கும் ! அன்னை, அதாவது 'ஸ்ரீ'யானவள், ஐயனின் கழுத்தை (கண்டத்தை) அணைத்ததால் ஸ்ரீகண்டன். (பிரகலாதனையும், விடம் உண்டு சாகாமல் காப்பாற்றிய விஷ்ணு - அன்னையின் சகோதரர் அல்லவா.)

326. கருணாரஸ ஸாகரா :- கருணைக்கடல். லலிதா த்ரிசதியில் கருணாம்ருத ஸாகரா (9), கடாக்ஷஸ்யந்தி கருணா (151). காருண்ய விக்ரஹா (153) அதாவது கருணையே சரீரமாகக் கொண்டவள் என்று தெரிகிறது.

## 6. அன்னை வழிபாடு - காயம், மனம், வாக்கு.

*சென்னியது உன் பொன் திருவடித்தாமரை சிந்தையுள்ளே*
*மன்னியது உன் திருமந்திரம் சிந்துர வண்ணப்பெண்ணே*
*முன்னிய நின் அடியாருடன் கூடி முறைமுறையே*
*பன்னியது என்றும் உன்றன் பரமாகம பத்ததியே.*

**(மந்திர சித்தி பெற)**

| | |
|---|---|
| சிந்துர வண்ணப் பெண்ணே | செந்நிறம் பொருந்திய திருமேனியுடைய அபிராமி தேவியே |
| உன் பொற்றிருவடித் | உன்னுடைய பொன் போல் |
| தாமரை | பிரகாசிக்கும் பாத பங்கயம் |
| சென்னியது | (எனது) சிரசில் அமர்ந்து இருக்கிறது. |
| சிந்தையுள்ளே | என் உள்ளத்தில் |
| உன் திருமந்திரம் | உன்னுடைய மகிமை பொருந்திய மந்திரம் |
| மன்னியது | நிறைவுற்றிருக்கிறது. |
| முன்னிய நின்னடியாருடன் | உன்னை இடைவிடாது த்யானம் |
| நின்னடியாருடன் கூடி | செய்யும் அடியார்களுடன் சேர்ந்து |
| முறைமுறையே | முறை தவறாமல் |
| பன்னியது | ஆராய்வது (அறிவது) |
| என்றும் | எப்பொழுதும் |
| உன்றன் பரமாகம | உன்னுடைய மேலான ஆகம |
| பத்ததியே | பத்ததிகளாகும். (பூஜா விதானம்) |

சிந்தூரத்தைப் போன்று செந்நிறம் பொருந்திய திருமேனியையுடைய இளம் உருவத்தில் எழுந்தருளியிருக்கும் அபிராமி அன்னையே, அடியேனுடைய தலையின் மேல் இருப்பது உன்னுடைய பொன் (பொலிவு) போல் பிரகாசிக்கும் அழகிய பாதமாகிய தாமரை மலர். அடியேனுடைய மனத்தில் என்றும் நிலையாக இருப்பது உன்னுடைய மஹிமை பொருந்திய (தெய்வத்தன்மையுடைய) மந்திரம். உன்னையே சதா சர்வ காலமும் தியானித்து வாழும் அடியார்களுடன் என்றும் இடைவிடாது முறையாகப் பாராயணம் செய்பவை உன்னுடைய மேலான ஆகம பத்ததிகளாகும் (பூஜா விதானங்கள்).

மந்திரம் : யார் தன்னை மனத்தால் நினைக்கிறார்களோ, அவர்களுடைய பாவத்தை நீக்குவது. மூன்று வகைப்படும்.

வாசிகம் : பிறர் காதில் விழும்படியாகச் சொல்வது. மந்தம் : மந்திரத்தின் முழுவடிவம் தெரியாமல் மெல்ல இரகசியமாகச் சொல்வது. மானஸம் - மனத்துள் தியானிப்பது. இதுவே சிறந்தது.

அம்பிகையின் மந்திரங்கள் ஏகாக்ஷரீ, நவாக்ஷரீ, பஞ்சதசாக்ஷரீ, ஷோடசாக்ஷரீ என்று பலவகைப்படும். (குரு மூலமே உபதேசம் பெற்று ஜபிக்க வேண்டும்)

மற்ற ஆகமங்களை விட அம்பிகையின் தந்திர சாத்திரங்கள் மேலானவையாதலின் அவற்றைப் பரமாகமம் என்றார்.

அம்பிகையின் திருவடித் தாமரையை சென்னியிலே வைத்துக் காயத்தினாலும், அவள் திருமந்திரத்தை சிந்தனையுள்ளே ஜபித்து மனத்தினாலும், அவள் அடியாருடன் கூடிப் பரமாகம பத்ததியைப் பண்ணி வாக்காலும் வழிபாட்டைச் செய்தவர் அபிராமிபட்டர் என்று தெரிகிறது அல்லவா !

முற்காலத்தில் ஆடவரும் தலையில் மலர் அணிவது உண்டு. மலர் கேசத்தில் உள்ள நாற்றத்தைப் போக்கி அழகு தந்து மணமும், தன்மையும் தரும். ஆனால் பிரமதேவன் தலையில் எழுதியதை (அதாவது - தலையெழுத்தை) எப்படி மாற்றுவது ? அதற்கும் வழி உண்டு. அது தான் அன்னையின் திருவடித்தாமரை. தலைக்கு பூவாக அம்மையின் திருவடியைச் சூடுபவர் அபிராமிபட்டர். அப்பர் தம் தேவாரத்தில் இறைவனுடைய திருவடி அப்பூதியடிகளின் குஞ்சிப் பூவாக இருக்கிறதென்று பாடுகிறார்.

"அழலோம்பும் அப்பூதி குஞ்சிப்பூவாய் நின்ற சேவடியாய்"

இறைவன் திருவடிக்கும் நம் தலைக்கும் இணைப்பு உண்டாகாவிட்டால் இந்தப் பிறவி எடுத்ததன் பயன் இல்லை.

கோளில் பொறியிற் குணம் இலவே எண் குணத்தான்

தாளை வணங்காத் தலை - திருக்குறள். (9)

திருவடியோடு தொடர்பு கொள்வதால் தான் அடியார் என்ற பெயரே ஏற்பட்டது. அதனால் தான் பெரியோர்கள் எப்போதும் 'நான்' என்று சொல்லாமல் 'அடியேன்' என்று கூறிக்கொள்வர்.

மனிதன் ஒரு கூட்டத்தினிடையே பழகினால் அவர் களுடைய பழக்கம் அவனை அறியாமலேயே அவனுக்கும்

சார்ந்துவிடும். இதனால் ஸத்சங்கம் - அவசியம்.

"நிலத்தியல் பால் நீர் திரிந்தற்றாகும் மாந்தர்க்

கினத்தியல்பதாகும் அறிவு." - குறள். (452)

திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் :

"ஆறெழுத் தடக்கிய அருமறைக் கேள்வி நாவியல் மருங்கின் நவிலப் பாடி" - என்பர்.

மந்திரங்களை, நாவை இயக்கிச் சொன்னாலும் புறத்தே புலனாகாமல் சொல்ல வேண்டும் என்று பொருள்.

அபிராமிபட்டர் - சிறந்த ஸ்ரீவித்யா உபாசகர். த்யானத்தில் அவர் கொண்டது திரிபுரசுந்தரி. எனவே செவ்வண்ணத் திருமேனியையே அடிக்கடி வழிபட்டவேண்டும். இதுவே நம் பிறவிப் பயன்.

## 7. முதல் மூவரும் வணங்கும் முதல்வி - அபிராமியே.

*ததியுறு மத்திற் சுழலும் என் ஆவி தளர்விலதோர்*
*கதியுறு வண்ணம் கருது கண்டாய் கமலாலயனும்*
*மதியுறு வேணி மகிழ்நனும் மாலும் வணங்கி என்றும்*
*துதியுறு சேவடியாய் சிந்துரானன சுந்தரியே.*

**(மலையென வரும் துன்பம் பனியென நீங்க)**

| | |
|---|---|
| கமலாலயனும் | தாமரையைத் தனது இருப்பிடமாக கொண்ட பிரம்மாவும் |
| மதியுறுவேணி மகிழ்நனும் | சந்திரனை உடைய சடையையுடைய உனது கணவனும் |
| மாலும் | மஹாவிஷ்ணுவும் |
| வணங்கி என்றும் | வணங்கி எப்போதும் |
| துதியுறு சேவடியாய் | துதி செய்கின்ற சிவப்பான திருவடிகளை உடையவளே |
| சிந்தூரானன சுந்தரியே | குங்கும திலகம் அணிந்த திருமுகம் அமைந்த அழகியே ! |
| ததியுறு மத்திற் | தயிரில் இடப்பட்ட மத்து போல |
| சுழலும் | மாறி மாறிச் சுழலும் |
| என் ஆவி | எனது உயிர் |
| தளர்விலதோர் | தளர்ச்சி இல்லாத ஒரு - |
| கதியுறு வண்ணம் | நற்கதி (சாயுஜ்யம்) அடையும்படி |
| கருது கண்டாய் | திருவுளம் பற்ற வேண்டும் |

தாமரையைத் தனது இருப்பிடமாகக் கொண்ட பிரமனும், சந்திரனைத் தாங்கும் சடாபாரத்தையுடைய நின் கணவனாகிய சிவனும், திருமாலும் வணங்கி எப்போதும் துதிசெய்கின்ற செம்மையான திருவடிகளை உடையவளே, செவ்வண்ணத்திலகம் அணிந்த நெற்றியுள்ள பேரழகியே !

தயிரில் நின்று சுழலும் மத்தைப் போல பிறப்பு, இறப்புகளின் இடையே (நல்வினை, தீவினையால்) சுழலும் என் உயிர், தளர்ச்சியில்லாததாகிய ஒரு நல்ல நிலையை அடையும் வண்ணம் நீ திருவுள்ளம் கொண்டருள வேண்டும்.

மாணிக்க வாசகரும் இதனை மனதில் கொண்டு,
*"மத்துறு தண்டயிரிற் புலன் தீக்கது வக்கலங்கி*
*வித்துறு வேனை விடுதி கண்டாய்" - என்கிறார்.*

மேலும் அவர் சிவபுராணத்தில்
*"புல்லாகி பூடாய் புழுவாய்.....*
*எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்"* என்பார்.

ஆதிசங்கரரும், பஜகோவிந்தத்தில்
*"புனரபி ஜனனம் புனரபி மரணம்......"* என்கிறார்.

பட்டினத்தாரும்,
*"மாதாவும் உடல் சலித்தாள், வல்வினையேன் கால் சலித்தேன்*
*வேதாவும் கை சலித்து விட்டானே"* - என்றார்.

அதாவது, தளர்ச்சி என்பது திரும்பத் திரும்ப பிறப்பு, இறப்பு இவைகளால் ஏற்படுவது. இந்தத் தளர்ச்சி இல்லாத கதி (முக்தியானந்தம்) கொடு என்று வேண்டுகிறார்.

ததியுறுமத்து - அழகான உவமையணி.

மத்து - தயிர் கடைவதற்காக தயிர்ப் பானையில் இடப்பட்டு கயிற்றினால் இழுக்கப்பட்டு இடசாரி, வலசாரியாகச் சுழலும். பிரபஞ்சம் - தயிர்ப் பானை. மத்து - ஜீவன். நல்வினை, தீவினை - இரண்டும் கயிற்றின் இரு நுனிகள். அபிராமி அன்னையே - தயிர் கடையும் சிற்றிடைச்சி.

தயிர் உடைந்து வெண்ணெய் திரண்டு மோருக்கும், வெண்ணெய்க்கும் சம்பந்தம் இல்லாமல் விலகும் போது கடைதலும் நிற்கும். மத்து மாறி, மாறிச் சுற்றும். பிரபஞ்ச வாழ்க்கையிலே மத்தாகிய ஜீவனானது நல்வினை, தீவினைகளால் மாறி, மாறி சுற்றுகின்றது. ("அறம் பாவம் என்னும் அருங்கயிற்றால்" - திருவாசகம்) அம்பிகையின் கருணாவிலாசமே திரோபவ சக்தியாகி பிரபஞ்சத்தில் மாறி மாறிப் பிறக்கச் செய்து பிரபஞ்சம் நீங்கி தயிர் உடைந்து மோராகி வெண்ணெய்யும் திரண்டு விட்டது போல் ஜீவன் பக்குவ நிலையடைந்தால் மோரில் ஒட்டாத வெண்ணெய் போல், பானையிலே கிடந்தாலும் தனித்திருக்கும். அப்போது கடைவது நிற்கும்.

பக்குவ நிலை கண்டு கடைதலை நிறுத்துபவளும் அபிராமியே தான். பக்குவம் வரக் கடைபவளும் அவளே தான். அவளின்றி அணுவும் அசையாது.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் :- 632. ஸிந்தூர தில காஞ்சிதா - நெற்றியில் ஸிந்தூரப் பொட்டினால் அலங்கரிக்கப்பட்டவள். ஸிந்தூரம் என்ற பதம் சிவந்த குங்குமம், கோரோசணையைக் குறிக்கும்.

181. ம்ருத்யு மதனீ - பக்தர்களுக்கு மரண பயத்தைப் போக்குபவள். பரமேஸ்வரர் கால காலனாக, மார்க்கண்டேயரை எம பயத்திலிருந்து காப்பாற்றியதைப் போல அம்பாளும் தன் பக்தர்களை மரணத்திலிருந்தும் காப்பாற்றுகிறாள். சிவனும், சக்தியும் ஒன்றே தான் அல்லவா ! மரணம் சரீரத்திற்கு மட்டும் தான். ஆத்மாவிற்கு இல்லை என்ற தத்துவஞானத்தை பக்தர்கள் உணரச் செய்கிறாள். தயிரைக் கடைந்து, வெண்ணெயைப் பிரித்து எடுப்பது போல, மரணம் என்ற பயத்தை நன்கு கடைந்து தத்துவஞானத்தை ஏற்படுத்தி பயத்தைப் போக்குகிறாள் அன்னை அபிராமி. அதாவது பக்தன் பாவனையால் அவளாகவே மாறிவிடுவதால் அழிவற்றவன் ஆகிறான்.

357. தாபத்ரயாக்னி ஸந்தப்த ஸமாஹ்லாதன சந்திரிகா - தாபத்ரயங்களால் பொசுக்கப்படும் ஜீவனை அம்பாள் தன் கருணையாகிற நிலவினால் அவனுடைய தாபத்தைப் போக்கி ஆனந்தத்தை அளிக்கிறாள்.

பராசக்தியின் அதிஷ்டானம் இல்லாவிடின், பஞ்ச ப்ரஹ்மங்களும் தத்தம் தொழிலைச் செய்ய இயலாது.

58. பஞ்சப்ரஹ்மாஸனஸ்த்திதா - ஐந்து ப்ரஹ்மங்களான ஆஸனத்தில் அமர்ந்திருப்பவள். ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரன், ஈசானன் - இந்நால்வரும் நான்கு கால்களாகவும் ஸதாசிவன் மேல் பலகையாகவும் உடைய கட்டிலில் காமேசுவரரோடு இருக்கிறாள். இந்த ஐந்து ப்ரஹ்மங்கள் பரப்ரஹ்மம் உலகாக மாறுவதற்கான இச்சைப்பட்டவுடன் ஏற்படும் அதன் மாறுதல்கள். இந்த ஐவர் முறையே ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அனுக்ரஹம் என்ற ஐந்து தொழில்கள் புரிபவர். இவர்கள் முறையே தென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு, வடகிழக்குத் திக்குகளில் கட்டில் கால்கள். மேலுள்ள பலகை ஸதாசிவம். ஐவரும் சதா கண்மூடி தேவியின் த்யானத்தில் பிரம்ம நிலையில் இருப்பதால்

பஞ்சப்ரஹ்மம் எனப்படுவர். ப்ரஹ்மத்திலிருந்து தோன்றியதாலும், அதிலேயே ஒடுங்குவதாலும் இவர்களும் ப்ரஹ்மம் என்றே குறிப்பிடப்படுகிறார்கள். இவர்கள் கட்டில் கால்களாயிருக்கக் காரணம் அப்படியாவது அம்பாளுடைய சமீபத்தில் இருந்து கொண்டு அத்யந்த ஸாமீப்ய சேவை செய்ய வேண்டும் என்ற அவாவினால் தான்.

249. பஞ்சப்ரேதா ஸநாஸீனா - ஐந்து ப்ரேதங்களாலான ஆஸனத்தில் வீற்றிருப்பவள். ப்ர இத : இருக்கும் இடத்தை விட்டு மற்றோர் இடத்தை நோக்கிக் கிளம்பியவர் என்று பெயர். மஹாப்ரளய காலத்தில் மேற்கூறிய ஐவரும் அவர்களுடைய தொழிலிலிருந்து விடுபட்டு தேவியிடம் லயமடைந்து விடுகிறார்கள். தத்தம் நிலையிலிருந்து கிளம்பிச் சென்று விட்டதால் இவர்களை 'ப்ரேத' என்று குறிப்பிட்டிருக்கிறது. அதாவது தத்தம் சக்திகளோடு செயல்படும்போது, பஞ்சப்ரஹ்மம் என்றும், அவற்றை பிரிந்தால் பஞ்சப்ரேதம் ஆவர்.

ஆஸனத்தின் மேல் பலகையாயிருக்கும் ஸதாசிவன் எல்லா தத்துவங்களுக்கும் மேற்பட்ட 25-வது தத்வமாகும்.

அவருடன் சக்தி சேர்ந்தால் 26-வதான ஸாதாக்யதத்வம், இது சக்தி, ஸதாசிவன் இருவருடைய ஸாமரஸ்ய ரூபம்.

அவர்கள் பேதமில்லாத ஒன்றேயான நிலை.

250. பஞ்ச ப்ரஹம ஸ்வரூபிணீ - 5 ப்ரஹ்மங்களின் வடிவானவள், ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரன், ஈசுவரன், ஸதாசிவன் - இவர்களை பஞ்சப்ரஹ்மங்கள் என்றும் சொல்வதுண்டு. ஆஸனத்தின் வடிவான இந்த ஐந்து பேருடைய வடிவங்களாக தேவி விளங்குகிறாள். ஐந்து வகையான வடிவங்கள் யாவும் தேவியின் வடிவங்கள். இந்தக் கருத்தினை ஆதிசங்கரரும், ஸௌந்தர்ய லஹரீயில் "சிவாகாரே மஞ்சே" (8), "கதாஸ்தே மஞ்சத்வம்" (92) என்று சொல்கிறார்.

947. பஞ்சப்ரேத மஞ்சாதிஶாயினி :- மேற்கூறிய படி ஐந்து ப்ரேதங்களாலான ஆஸனத்தில் ஐந்தொழில் புரியும், ஐவருக்கும் மேலானவள் என்பதை கட்டில் கால்கள், மேல் பலகையில் வீற்றிருக்கிறாள் என்று உருவகப்படுத்தி கூறுகிறார்கள். இவர்கள்,

தங்கள் தொழில்களை தங்கள் சக்திகளான வாமா, ஜ்யேஷ்டா முதலியவர்களால் தான் செய்கிறார்கள். சக்திகள் இல்லாவிட்டால் அவர்களால் ஒன்றும் செய்ய முடியாது. ஆகையால் அவர்கள் ப்ரேதங்கள் (சவங்கள்) எனப்படுகிறார்கள். ப்ரஹ்மா, முதலிய நால்வரும் லோகத்தின் அதிகார புருஷர்களாக இருந்தும் அம்பாளுடைய ஸமீபத்தில் இருந்து சேவை செய்ய வேண்டும் என்ற எண்ணத்துடன் கட்டில் கால்களாக ஆகிறார்கள் என்று அர்த்தம் சொல்லப்படுகிறது.

ஸ்ரீ சிதானந்த நாதர் - ஸபர்யா பத்ததி வாஸனையில் (67)

ப்ரஹ்ம மய மஞ்சபாதம் - ஸ்ருஷ்டி சக்தி - மூலாதாரம்

விஷ்ணு மய மஞ்சபாதம் - ஸ்திதி சக்தி - ஸ்வாதிஷ்டானம்

ருத்ர மய மஞ்சபாதம் - ஸம்ஹார சக்தி - மணிபூரகம்

ஈஸ்வரமய மஞ்சபாதம் - திரோதன சக்தி - அனாஹதம்

ஸதாசிவமய மஞ்சபலகம் - அனுக்ரஹ சக்தி - விசுத்தி.

மேற்கூறிய நாமாக்களிலிருந்து நாம் அறிவது யாதெனின் பராசக்தியின் அதிஷ்டானம் இல்லாவிடில் பஞ்ச ப்ரம்மாக்கள் என்ற பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், மஹேச்வரன், சதாசிவன் தத்தம் தொழிலைச் செய்ய இயலாது. (சக்தியற்றவன் எவ்வாறு தொழிலைச் செய்ய முடியும் ?) ஸௌ. ல. 1 - ''சிவ:சக்த்யா யுக்தோ''

திருமூலரும், பிரமன், விஷ்ணு, சிவன் அன்னையை வணங்குவதை, ''பேணும் சிவனும், பிரமனும், மாயனும் காணும் தலைவி நற்காரணி காணே'' என்பார். (திருமந்திரம் - 1087)

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் (975) - பூர்வஜா - எல்லாவற்றிற்கும் முன்னதாக உண்டானவள் என்று அன்னையே - மூத்தவள் என்பதை அழகாகச் சொல்கிறது.

ப்ரம்மா, விஷ்ணு, சிவன் - மூவருமே அன்னையின் திருவடிகளை வணங்கும் போது நாம் செய்ய வேண்டியது என்ன என்று கூறவும் வேண்டுமா ? அன்னை அபிராமியின் பாதார விந்தங்களை அரண் என்று கொண்டுவிட்டால் அவளே நம்மை பக்குவப்படுத்தி நம் ஆவி நற்கதியடைய வழிசெய்வாள்.

## 8. அபிராமி - துர்கா தேவி.

*சுந்தரி எந்தை துணைவி என் பாசத் தொடரை எல்லாம்*
*வந்தரி சிந்துர வண்ணத்தினால் மகிடன் தலை மேல்*
*அந்தரி நீலி அழியாத கன்னிகை ஆரணத்தோன்*
*கந்தரி கைத்தலத்தாள் மலர்த்தாள் என் கருத்தனவே*

**(பாசங்கள் நீங்கி துறவறம் பூண)**

| | |
|---|---|
| சுந்தரி | நிகரற்ற அழகுடையவள். |
| எந்தை துணைவி | என் தந்தையாகிற சிவபிரானின் மனைவி |
| என் பாசத் தொடரை யெல்லாம் | சங்கிலித் தொடர் போல என்னைப் பற்றிப் பிணிக்கும் மும்மலங்களாகிற பாசங்கள் யாவற்றையும் |
| வந்தரி (வந்து + அரி) | தானே கருணையினால் வந்து, அருளி, அழித்தவள் |
| சிந்துர வண்ணத்தினால் | குங்குமம் போன்ற செந்நிறத் திருமேனியுடையவள் |
| மகிடன் தலைமேல் | மஹிஷாசுரனது சிரஸின் மீது நின்று |
| அந்தரி (அந்து+அரி) | (எனது) தீமையை அழித்தவள் |
| நீலி | நீலநிறத் திருமேனியுடையவளும் |
| அழியாத கன்னி | கன்னி கழியாதவளும் |
| ஆரணத்தோன் | பிரம்மாவினால் (விதிக்கப்பட்ட) |
| கந்தரி கைத்தலத்தாள் | கட்டை (விதியை) அறுப்பவள் என்பதைக் காட்டும் அபய முத்திரை யுடைய திருக்கரத்தை உடைய துர்கா தேவியான அபிராமி அன்னையின் |
| மலர்த்தாள் | பாதபங்கயங்கள் |
| என் கருத்தனவே | என் உள்ளம் குடிகொண்டது. |

நிகரற்ற, யாவராலும் வர்ணிக்கமுடியாத, ஒப்புயர்வற்ற அழகியே ! அபிராமி அன்னையே ! என் தந்தையாகிற சிவபெருமானுக்குரிய வாழ்க்கைத் துணைவியாயும், சங்கிலித் தொடர் போல் அநாதி காலமாய் என்னைப் பற்றியிருக்கும் மும்மலங்களாகிற பாசத்தளைகளை, தானே கருணையினால் வந்தருளி அழிப்பவளும், குங்குமம் போன்ற செவ்வண்ண மேனியுடைய அபிராமவல்லித் தாயே !

மகிடாசுரன் தலையின் மேல் நிற்கும் அந்தரியே !

நீல நிறமான நீலியே ! என்றும் கன்னி கழியாதவளே !

பிரம்மனால் விதிக்கப்பட்ட கட்டை (தலையெழுத்தை) அறுப்பவள் என்று காட்டும் அபய முத்திரையுடைய திருக்கரத்தையுடையவளாகிய அபிராமியின் தாமரை மலரைப் போன்ற திருவடிகள் என் கருத்தில் உள்ளன.

இப்பாடல் அபிராமி அந்தாதியின் எட்டாவது பாடல் என்பது சிறப்பு அம்சம். துர்கா தேவிக்கு உரிய திதி ''அஷ்டமீ''. துர்க்கம் - அகழி. கடலின் நிறம் – நீலம். கடல் போல் எங்கும் காளியான நீலியாக இருந்து நம்மைக் காப்பாற்றுகிறாள்.

அபிராமியே - துர்கா என்று கூறுகிறார். இந்தப் பாடலை நாம் அவர் செய்யும் துர்கா த்யானம் என்று கொள்ளலாம். அருமையான பாடல் ! மகிடன் தலை மேல் நின்ற கோலத்தில் அம்பிகை துர்கா என்றும் சாமுண்டி என்றும் அழைக்கப்படுகிறாள்.

*''ஆனைத்தோல் போர்த்துப் புலியின் உரியுடுத்துக்*
*கானத் தெருமைக் கருந்தலை மேல் நின்றாயால்''* - *சிலப்பதிகாரம்*
*''கொதியாது கொதித்தெழுந்த கோட்டெருமைத் தலையின் மிசை*
*மிதியாத சீறடி மிதித்தனபோல் தோன்ற''* - *பழம் பாடல்.*

நீலி என்பது துர்க்கையின் பெயர். காளி என்றும் கூறலாம் - ''சங்கரி அந்தரி நீலி'' - சிலப்பதிகாரம்

அழியாத கன்னிகை

நீல நிறத்துடன் மகிஷாசுரமர்த்தினியாக நின்ற அம்பிகையின் திருக்கோலத்தை எண்ணினவர், எல்லாப் பொருளும் அழிந்தாலும் அன்னை அழியாத கன்னிகையாக இருப்பதை நினைக்கிறார்.

அம்பிகை உலகத்திற்கு எல்லாம் அன்னை என்றாலும் அவள் என்றும் கன்னிகையாக இருப்பவள். - கனிகையுமை (திருப்புகழ்) தாயுமானவரும்,

''அகிலாண்ட கோடியீன்ற அன்னையே பின்னையும் கன்னியென மறைபேசும் ஆனந்த ரூபமயிலே'' - என்பர்.

''பவன் பிரமசாரி ஆகும் ; பாகுமொழி கன்னியாகும்'' (சிவஞான சித்தியார்)

''கன்னியுங் கன்னி அழிந்திலன் காதலி'' (திருமந்திரம்)

பரமசிவனின் பத்னியாகிய அம்பிகையே துர்கா. அவள்

துர்க்கையாக வரும்போது, அவள் நித்ய ப்ரம்ஹசாரிணியாக இருக்கிறாள் என்பதை எந்தை துணைவி என்றும் அழியாத கன்னிகை என்றும், அபிராமிபட்டர் சொல்லும் பாணியும், நயமும், காவ்ய ரஸம் மிகுந்தது. சிந்திக்கத் தக்கது.

அம்பாள் ப்ரக்ருதி ரூபம் - அதனால் என்றுமே அவள் கன்னி.

இதனையே, "துர்கா தாரயஸே துர்கே தத்வம் துர்கா ஸ்ம்ருதாஜனை" என்கிறது. மேலும், "க்ஷேமங்கரி ததாநாம க்ஷேமா ரோக்யப்ரதாயினி" - ரூப மண்டனம்.

துர்கா - ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரன் - இவர்களின் உக்ரரூபங்களை ஒருங்கே கொண்டவள்

போகேச பவானி; புருஷேச விஷ்ணு; கோபேச காளீ; ஸமரேச துர்கா. ஆலயங்களில், சிவமூர்த்தியின் வடக்குபுற சுவற்றில் கோமுகிக்கு மேல், சங்கு, சக்கரம், அபயம், வரதம் என்ற நான்கு திருக்கரங்களும் கொண்டு, கரண்ட மகுடம், பருத்த ஸ்தனங்களும், திருவடியின் கீழ் மகிடன் தலையும் இருக்கும் துர்கா தேவியைக் காணலாம். இவள் - மோக்ஷ பிரதாயினி, சத்ருவிநாசினி. ஜீவர்களின் சகல அரிஷ்டங்களையும் போக்குபவள் - எனவே துர்கா. ( துர்கமன் என்ற அசுரனை வதம் செய்தவள்.)

கன்யா பூஜையில் ஒன்பது வயதுப்பெண் துர்கை எனப்படுபவள். ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் (190).

துர்கா - த் +உ+ர+க+ஆ :- த் - அசுரர்களின் அழிவு, உ-விக்ன நாசம், ர - ரோக நிவர்த்தி, க - பாப நாசம், ஆ - சத்ருக்களின் அழிவு.

"து$^{3}$ர்க$^{3}$ாம் தே$^{2}$வீம் ஶரண மஹம் ப்ரபத்$^{3}$யே" - து$^{3}$ர்கா ஸூக்தம்.

தேவீ மாஹாத்மியம் (11.24)

"ஸர்வ-ஸ்வரூபே ஸர்வேசே ஸர்வசக்தி - ஸமன்விதே

பயேப்பஸ் - த்ராஹிநோ தேவி துர்கே தேவி நமோஸ்துதே"

பொருள் : அனைத்து வடிவமாகவும் விளங்குபவளே ! அனைத்தையும் ஆள்பவளே ! அனைத்து சக்தியும் பொருந்திய வளே ! பயங்கரமான சூழ்நிலைகளிலிருந்து எங்களைக் காப்பாற்றி வரும் துர்கா தேவியே ! உனக்கு நமஸ்காரம்.

ஸ்ரீ காஞ்சி பெரியவர் தனது ‘துர்கா பஞ்ச ரத்னம்’ ஐந்தாவது ஸ்லோகத்தில் ‘‘த்வம் ப்ரும்மபுச்சா விவிதா மயூரிப்ரம்ம ப்ரதிஷ்டாஸ் யுபதிஷ்ட கீதா ....’’, அம்பாள் தான் ‘‘கீதையை’’ உபதேசம் செய்தவளாகக் கூறுகிறார்.

சேற்றில் விழுந்த உயிர்களை (பசுக்களை) - (அதாவது பிரபஞ்சம் என்னும் சேற்றில்) காப்பாற்றுபவள் துர்கா. மஹிஷன் தலைமேல் நிற்பது உயிர்களின் பாசங்களைப் போக்க. (த்ரைலோக்ய ரக்ஷணாத்தாய மஹிஷாசுர நாசினீ)

தாமத குணத்தின் அடையாளமான எருமையுருப்பெற்ற அசுரனை மாய்த்தவள் துர்காதேவி. பசுக்களை அஞ்ஞானக்குழியில் அழுந்தச் செய்வது தாமத குணம். அதனை மாய்க்கும் அருள் உடையாள் அன்னை என்பதே மகிஷாசுர சங்காரக் கதையின் கருத்து. இதனையே ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்.

354. பஶு பாஶ விமோசனீ : பசு (ஜனங்களை) பாசத்திலிருந்து விடுவிப்பவள். பா - தாகம், அஶ-என்றால் பசி, ஆகையால் பாஶம் என்பது இவை இரண்டையும் குறிக்கிறது. பஶுப என்றால் பசுக்களைக் காப்பவர், பரமேஸ்வரர். ஆஶா என்றால் சிவனை அடையும் விருப்பம் உள்ளவர்கள். அப்படிப்பட்டவர்களை முழுவதும் விடுவிக்கிறாள்.

810. பாஶஹஸ்தா - பாசத்தைக் கையில் கொண்டவள். பாசங்களைத் தன் கைகளால் விலக்குபவள்.

811. பாஶஹந்த்ரீ - பாசங்களை நாசம் செய்பவள்.

191. து:கஹந்த்ரீ - துக்கத்தைப் போக்குபவள் - (ஸம்ஸாரத்திலிருந்து ஏற்படும்)

அன்னை அபிராமியை துதிப்போர்க்கு பிரமன் விதித்த விதியைப் பற்றி கவலையில்லை என்று சொல்லாமல் சொல்லுகிறார் அபிராமிபட்டர் !

## 9. அம்மா என் முன் காட்சி தருவாயாக.

*கருத்தன எந்தைதன் கண்ணன வண்ணக் கனக வெற்பிற்*
*பெருத்தன பால்அழும் பிள்ளைக்கு நல்கின பேர் அருள் கூர்*
*திருத்தன பாரமும் ஆரமும் செங்கைச் சிலையும், அம்பும்*
*முருத்தன மூரலும் நீயும் அம்மே வந்து என் முன் நிற்கவே.*

**(ஸர்வ வசியம் உண்டாக)**

| | |
|---|---|
| எந்தை தன் | என் தந்தையான சிவபெருமானின் |
| கருத்தன | உள்ளத்தில் தங்கியிருப்பதும் |
| கண்ணன | அவர் கண் முன் தோன்றுவதும் |
| வண்ணக் கனக வெற்பிற் | அழகிய பொன் மலையாகிய மேருவைப் போல் |
| பெருத்தன | பருத்தனவாயும் |
| பாலழும் பிள்ளைக்கு | பால் வேண்டி அழுத பிள்ளைக்கு |
| நல்கின | பாலை ஈந்த |
| பேரருள் கூர் | வரையாது வழங்கும், அருள் சொரியும் |
| திருத்தன பாரமும் | அழகிய முலைகளும் |
| ஆரமும் | மார்பில் துலங்கும் முத்துமாலையும் |
| செங்கை | சிவந்த கைகளில் (தாங்கும்) |
| சிலையும் அம்பும் | கரும்பு வில்லும் புஷ்ப பாணங்களும் |
| முருத்தன மூரலும் | பற்களின் வெண்மை நிறம் |
| நீயும் | காட்டும் புன்சிரிப்பும் கூடியவளாய், |
| அம்மே | தாயே |
| வந்தென் முன் நிற்கவே | அடியேனுக்கு முன் வந்து காட்சியருளல் வேண்டும். |

தாயே, எம் தந்தையராகிய சிவபெருமானது திருவுள்ளத்தில் எப்போதும் தங்கியிருப்பனவும், அவர் திருவழிகளால் கண்டு மகிழ்வனவும் அழகு பெற்ற பொன்மயமான மேருமலை போல் பருத்தனவும் பால் வேண்டி அழுத பிள்ளைக்குப் பாலை அளித்து வரையாது வழங்கும் அருள் பால் சொரியும் மிகுந்த அழகு பெற்ற திருமுலைகளும், அவற்றின் மேல் உள்ள முத்து மாலையும் சிவந்த திருக்கரங்களில் தாங்கும் கரும்பு வில்லும், மலரம்புகளும், மயிலின் அடிக்குருத்துப் போன்ற புன்னகையும் (வெண்ணிறம் சிறிது காட்டும் புன் முறுவலும்) கூடியவளாய் அடியேன் முன் நின்று காட்சி அருள வேண்டும்.

அம்பிகையின் நகில்கள் : கருணையும், ஞானமும்

கொண்டவை. அருளை அள்ளித் தருபவை.

கருத்தன எந்தை தன் கண்ணன

குமரகுருபரர், "எறிதரங்கம் உடுக்கும் புவனம் கடந்து நின்ற திருவுள்ளத்தில் அழகு ஒழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிரோ வியமே" - என்பர் (மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் - 62 பாடல்). சிவனின் சங்கல்ப மாத்திரத்தில் தோன்றியவள் சக்தி. (கருத்தில்)

சிவபெருமான் எல்லா உலகிலும் தலைசிறந்த யோகியாக விளங்குபவர். இவர் யாருக்காக யோகம் புரிய வேண்டும் ? அவரோ அழிவற்றவர். உலகத்து உயிர்கள் உய்ய வேண்டுமானால் அருள் மலர வேண்டும். அருளின் வடிவம் அன்னை. அவள் உடன் இல்லாவிட்டால் ஏதும் செய்ய முடியாதவர். ஆகையால் தம் உள்ளத் திலே எப்போதும் இவர் தன் காதலியாகிய காமேசுவரியையே எண்ணி யோகம் செய்கிறார். என்ன அவர் கருணை உள்ளம் !

பத்தனாய் பாட மாட்டேன் பரமனே பரமயோகி - தேவாரம். அம்பிகையின் நகில்கள் கருணையும், அருளும் சொரிபவை. அதனாலேயே சிவபெருமான் அம்பிகையின் தனபாரத்தில் கண் ணும் கருத்தும் உடையவன். இதனையே ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்

33. காமேச்வர ப்ரேமரத்ன மணி ப்ரதிபணஸ்தனீ என்கிறது. காமேச்வரருடைய அன்பெனும் ரத்ன மணிக்கு பதிலாக அல்லது விலையாகக் கொடுக்கிற ஸ்தனங்களை உடையவள். சிவபெருமான் அம்பிகையின் தனபாரத்தை முதலில் தன் கருத்திலே அன்புடன் நினைக்கிறான். பின் தன் திருவிழிகளால் பார்க்கிறான்.

இறைவனுடைய அருள் நோக்கம் மேவுகின்ற இந்த நிகழ்ச்சியை குமரகுருபரர் வெகு அழகாகப் பாடுகிறார்.

*"தார் கொண்ட மணிமுடி ஒருத்தன் திருக்கண் மலர்*
*சாத்தக் கிளர்ந்து பொங்கித்*
*தவழுமிள வெயிலும் மழ நிலவுமள வளவலால்*
*தண்ணெண்று வெச்சென்று பொன்*
*வார்கொண்டணந்த முலை மலை வல்லி"*
*"ஆதி நாயகன் கருணையாய் அமலமாய் பரம*
*போத நீர தாய் இருந்த தன் கொங்கையிற் பொழிபால்"*

*(கந்தபுராணம்)*

பால் அழும் பிள்ளைக்கு : ஆதி சங்கரர் ஸௌந்தர்ய லஹரீயில் (75) அன்னை அழுத பிள்ளைக்குப் பால் அளித்ததை, ''தயாவத்யா தத்தம் தவ ஸ்தன்யம் ஆஸ்வாத்ய த்ரவிடசிசு:'' என்கிறார். அதாவது பால் அருந்திய ''த்ரவிட சிசு'' திருஞான சம்பந்தரைக் குறிக்கும் என்கிறார், காஞ்சிப் பெரியவர்.

அம்பிகை விசேஷமாக அணியும் மாலை - முத்தாரம்.

32. ரத்னக்ரைவேய சிந்தாகலோல முக்தா பலான் விதா:

ரத்னத்தால் அமைந்த அட்டிகை பதக்கம் அவைகளிலிருந்து தொங்கும் முத்து மாலைகளோடும் கூடியவள். க்ரீவா - என்றால் கழுத்து. அதாவது, கழுத்தை ஒட்டிய அட்டிகை, அதன் நடுவே பதக்கம், அவற்றின் கீழ் தொங்கும் முத்துச்சரங்கள். இந்த முத்துமாலையை - சகசிரதாரை என்னும் முத்துமாலை என்று கூறுகிறது-தக்கயாகப் பரணி.

முருத்தன மூரலும் : அன்னை அபிராமி புன்முறுவல் பூத்து நிற்கிறாள். இந்த புன்முறுவலுக்கே நூறு பாட்டு சொல்லியிருக்கிறார் மூககவி. மயிலிறகின் அடிக்குருத்தை அழகிய பல்லுக்கு உவமையாக சொல்வது மரபு.

அபிராமியின் புன்னகை பூக்கும் பற்கள் முருந்தைப் போல (மயிலிறகின் அடிக்குருத்துப்போல) இருக்கின்றன.

28. மந்தஸ்மிதப்ரபாபூர மஜ்ஜத் காமேச மானஸா : தனது புன்சிரிப்பின் ப்ரவாகத்தில் காமேசுவரருடைய மனதை முழுகச் செய்தவள்.

ஸ்மித என்றால் புன்சிரிப்பு-அதாவது பற்கள் வெளித் தெரியாமல் மெல்ல சிரிப்பது. அதிலும் மந்தஸ்மித என்றால் விசேஷமாக மென்மையானது. மஜ்ஜத் என்ற சொல்லிற்கு மூழ்கிக் கொண்டிருக்கும் என்று பொருள். தேவியின் புன்னகையில் காமேச்வரன் மூழ்கும் போது அதைவிட்டு வெளியே வரவேண்டாம் என்ற எண்ணமும் எழுகிறது. ஆனால் மூழ்கிப் போய்விட்டால் இதர அவயங்களின் ஸௌந்தர்யத்தை அனுபவிக்க என்ன செய்வது என்றும் ஓர் ஆசை. எனவே மூழ்கிக்கொண்டிருக்கும் என்று கூறப்பட்டிருக்கிறது.

காம கலையில் காம என்றால் பிந்து. கலா என்றால் ஸோம சூரியாக்னி. பிந்து அஹங்காரத்தைக் குறிப்பது. காம, கலா இரண்டும் காமகலையைக் குறிப்பது. காமேச்வர என்ற பதத்திற்கு ராஜராஜேச்வர என்று அர்த்தம். காமகலா ரூபமானவர் என்பது.

சிதக்னி குண்டத்திலிருந்து தோன்றிய தேவிக்கு ஸாம்ராஜ்ய பட்டம் சூட்டு முன் அவளுக்கு மணாளனாக யாரைத் தேர்ந்தெடுப்பது என்று ஒரு கேள்வி. தேவியை மணக்கும் தகுதி பரமேசுவரனுக்கே. ஆனால் தேவியின் ஒப்புயர்வற்ற அழகுக்கு, இந்த சடையாண்டி எவ்வாறு பொருத்தம் என்று தேவர்கள் திகைக்கின்றனர். உடனே காமேசுவரன் மிக அழகனாக ஆனார். தேவியும் மாலையை வீச, அது காமேசுவரரின் கழுத்தில் விழுகிறது. இதனால் தேவி புன்னகை புரிய அந்த அழகிலேயே அவர் மூழ்குகிறார். (ஸ்ரீலலிதோபாக்யானம்).

4. சிதக்னிகுண்ட ஸம்பூதா :- ஞானமாகிற யாக குண்டத்திலிருந்து தோன்றியவள். சித் - சுத்தமான ப்ரஹ்மம் - அவித்யை என்ற இருளுக்கு விரோதி. எனவே - சிதக்னி. சித் என்னும் ஞானமே அக்னியென்று பல இடங்களில் சொல்லப்பட்டுள்ளது. "ஞானாக்னி : ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா" (கீதை : 4/37)

பண்டாஸுரன் வதத்திற்காக தேவர்கள் ஓர் யகஞும் செய்தார்கள் (தேவியைக் குறித்து) அவர்கள் மூட்டிய அக்னி குண்டத்திற்கு - சிதக்னிகுண்டம் என்ற பெயர். தேவர்கள், தங்கள் உடல் பகுதிகளையே அறுத்து அக்னியில் ஹோமம் செய்யத் தொடங்கியதும் தேவி, குண்டத்திலிருந்து தோன்றினாள். அதாவது மமதைக்கும், அகந்தைக்கும் காரணமான ஸ்தூல-ஸூக்ஷ்ம காரண சரீரத் தொடர்பு கொண்ட "பொய்யான நான் என்பதையே" தேவர்கள் ஹோமம் செய்திட, அந்த சிதக்னி குண்டத்திலிருந்து உண்மையாகிய நான் ஆகிய தேவி தோன்றினாள்.

ஆதி சங்கரரும், ஸௌந்தர்ய லஹரீ 7-ம் பாட்டில், தேவியிடம் நீ, என் முன்னால் தோன்றுவாயாக என்று ப்ரார்த்திக்கிறார்.

"புரஸ்தா - தாஸ்தாம் ந:புரமதிது - ராஹோ - புருஷிகா" முப்புரத்தை அழித்த பரமசிவனுடைய ஆச்சரியமான அகம்பாவ வடிவினளுமான பராசக்தி எங்களுக்கு எதிரில் எழுந்தருளட்டும்.

## 10. பரா பூஜை

*நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினைப்பது உன்னை*
*என்றும் வணங்குவது உன் மலர்த்தாள் எழுதா மறையின்*
*ஒன்றும் அரும்பொருளே அருளே உமையே இமயத்து*
*அன்றும் பிறந்தவளே அழியா முத்தி ஆனந்தமே*

**(மோட்ச சாதனம் பெற)**

| | |
|---|---|
| எழுதா மறையின் | எழுதாமல் கேட்கப்படுகின்ற வேதத்தில் |
| ஒன்றும் | பொருந்தும் |
| அரும்பொருளே | உட்பொருளாய் உள்ளவளே |
| அருளே | (சிவபெருமானின்) அருள் சக்தியே |
| உமையே | (சக்தி பிரவணமான) உமாதேவியே |
| இமயத்து அன்றும் | அன்று இமாசலத்தில் பார்வதியாக |
| பிறந்தவளே | திருஅவதாரம் செய்தாய் |
| அழியா முக்தி ஆனந்தமே | அழியாத (சாஸ்வதமான) பேரின்ப நிலையான மோட்ச ஸ்தானமே |
| நின்றும், இருந்தும், கிடந்தும், நடந்தும் | (அடியேன்) நின்றபடியும், அமர்ந்தும் படுத்தபடியும், நடந்த படியும் (சகல அவஸ்தைகளிலும்) |
| நினைப்பது உன்னை | உன்னையே தியானம் செய்கிறேன் |
| வணங்குவது | என்றைக்கும் தலை தாழ்த்தி வணங்குவது |
| உன் மலர்த்தாள் | உன் பாத கமலங்களையே. |

எழுதாமல் கேட்கப்படுகின்ற வேதத்தில் பொருந்தும் அரிய பொருளாய் (உட்பொருளாய்) அமைந்தவளே, சிவபெருமானின் அருள் சக்தியே, உமாதேவியே, அன்று இமாசலத்தில் பார்வதியாய் திரு அவதாரம் செய்தாய், அழியாத (சாஸ்வதமான) மோட்ச ஆனந்தமாக இருப்பவளே. அடியேன் நின்றபடியும், உட்கார்ந்த படியும், படுத்தபடியும், நடந்தபடியும் (சகல அவஸ்தைகளிலும்) த்யானம் செய்வது உன்னையே. என்றைக்கும் தலை தாழ்த்தி வணங்குவது உன் திருவடித் தாமரையையே !

அபிராமிபட்டர் இந்தப்பாடலில் உலகில் உள்ளோர் அனைவரும் அன்னையை எப்படி வணங்கலாம் என்பதற்கு ஒரு இலக்கு தந்துள்ளார். நாம் அனைவரும் அவர் காட்டிய வழியில் சென்று முத்தி அடைவோமாக ! தாயுமானவரும், "துள்ளுமறியா மனது பலி கொடுத்தேன் ............ ஒரு காலமன்றிது சதா கால

பூசையா ஒப்புவித்தேன்'' என்பர்.

குழந்தைகளாகிய அன்பர்களுக்கு எப்போதும் அன்னை அபிராமி இனியவளாகவே இருப்பாள். நாம் சூது, வாது அறியாத கள்ளம், கபடம் அற்ற குழந்தை போல ஆக, ஆக அன்னை நம்மை அணுகி வந்து அருளுவாள். துர்கா, காளி கோலங்கள் கண்டு பயப்படவேண்டாம். அவை தீய சக்திகளாகிய அசுர கணத்தை அழிக்க அன்னை பூண்ட கோலங்கள்.

இவ்வுண்மையை நமது காலத்தில் தமது வாழ்க்கையில் கண்கூடாகக் காட்டி அருளியவர் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர். அவர் அன்னையிடம், ''அமீ யந்தர, துமீ யந்த்ரீ'' - என்பார்.

ஸ்ரீ மாதாவாகிய அவளிடம் எந்த நிலையிலும் அன்பு செய்யலாம். அன்னையின் நினைப்பு மூச்சு விடுவது போல எப்பவும் இருக்க வேண்டும். எந்தச் செயலைச் செய்தாலும் அம்மையை நினைத்தபடி இருக்கும் இயல்பு அடியார்களுக்கு வரும். இதுவே அவர்கள் நமக்குக் காட்டிய நல்வழி.

எல்லாவற்றிலும் உயர்ந்தது அன்னையின் சரணார விந்தங்களில் நம் தலையை வணங்குவது தான்.

அதாவது சாஷ்டாங்கமாக, தண்டாகாரமாக அவள் திருவடிகளில் வீழ்வது தான் சரணாகதி.

இதனையே, காஞ்சி பெரியவர் அழகாகச் சொல்லுவர். தண்டம் (கழி அல்லது கோல்) நாம் பிடிப்பதை விட்டுவிட்டால் தரையில் பொத்தென்று விழுந்து விடும். இதற்கு தண்டம் கழித்தல் என்பர். அதுபோல நம் காயத்தை (உடம்பை) முழுமையாக (அவள் திருவடிக்கு முன்) தரையில் போடவேண்டும்.

அம்பிகையின் பெருமைகளை நம் முன்னோர் தலைமுறை, தலைமுறையாக நமக்கு உணர்த்துகிறார்கள். நாம் இப்படியே ஆராய்ந்து கொண்டு போனால் முடிவில் வேதத்திடம் வருவோம். அந்த வேதம் தன்னுடைய பரம தாத்பர்யமாகத் தேவியைச் சொல்கிறது. வேத ஜனனீயாகவும், அதன் சாரமாகவும் உள்ளுறை பொருளாக இருப்பவள் பராசக்தி.

மறையை, 'எழுதா மறை' என்றார். வடமொழியில் சுருதி

என்றும் தமிழில் கேள்வி என்றும் கூறுவர். (539. சுருதி. 540. ஸ்ம்ருதி) சுருதி என்பது சுவர அமைப்புகள் பிறழாமல் குரு வாயினால் ஓத, அதை சிஷ்யன் தன் காதினால் கேட்டு, மனதில் பதித்துக் கொண்டு பல காலம் ஓதிப் பயில்வது. இதில் ஒலி ரொம்பவும் முக்கியம். எழுதி அறியாததால் - எழுதாக் கிளவி என்று பெயர். 335. வேத வேத்யா - வேதங்களால் அறியத்தக்கவள்.

தேவியின் இருப்பிடமான ஸ்ரீ நகரத்தின் நான்கு வாயில்களாக முறையே ரிக், யஜுஸ், ஸாம, அதர்வண வேதங்கள் அமைந்துள்ளன. இந்த வாயில்கள் வழியாகச் சென்றால் தான் தேவியை அடைய முடியும். ஆகையால் வேத வேத்யா. பின்னும், அபிராமிபட்டர், அழகுக்கு ஒருவரும் ஒவ்வாதவல்லி அருமறைகள் பழகிச் சிவந்த பாதாம்புயத்தாள் (71) என்பர். வேதங்களை முற்றும் அறிந்தோம் என்பவர்கள் அம்பிகையை உணராவிட்டால் அவர்களுடைய அறிவு பயன் பெற்றதாகாது.

அம்பிகை வேதத்தில் உறையும் அரும்பொருளாக இருப்பினும் குழந்தைகளுக்கு எளியவள். மகாராணியை குடிமக்கள் எளிதில் காண முடியாது. ஆனால் அவளே பவனியாக வெளிப்பட்டுக் காட்சியளிக்கலாம்.

அன்னை அபிராமியும் அத்தகைய கருணை உடையவள். தாயே கருணைக்கு இருப்பிடம். அவள் அனைத்துயிருக்கும் அன்னை அல்லவா ?

"தாயிற் சிறந்த தயாவான தத்துவனே" - சிவபுராணம்

அம்பிகையோ தயையே வடிவமாக இருப்பவள். அந்தத்தயையினால் அவள் அன்பு செய்வோர்க்கு எளிய பொருளாகவும் விளங்குகிறாள். அபிராமிபட்டர் அன்னையை - அருளே - என்று அழைக்கிறார். சிவனின் அருள்தானே சக்தி !

ஆதிசங்கரர் (ஸௌ.ல. 93) "அராலா கேசேஷு...." என்ற ஸ்லோகத்தில் பரமசிவனுடைய கருணையானது உலகை ரட்சிப்பதற்காக அருணா என்ற பராசக்தி வடிவில் வெற்றியுடன் விளங்குகிறது" என்கிறார்.

'அருளது சக்தியாகும் அரன்றனக்கு' - சிவஞான சித்தியார்.

581. தயாமூர்த்தி :- தயை வடிவினள். 326. கருணா ரஸ ஸாகரா. 992. அவ்யாஜ கருணாமூர்த்தி. 197. ஸாந்தர கருணா - என்று அழைக்கப்படுகிறாள்.

633. உமா - உமை என்று தமிழில் வந்தது.

உமா என்ற சொல்லில் பிரணவத்தின் அ-உ-ம என்ற அக்ஷரங்கள் உள்ளன. அகரம் - ப்ரஹ்மத்தையும், உகரம் - சக்தியையும், மகரம் - உயிர்களையும் குறிக்கும். அது ஓம் என்ற பிரணவம். பிரணவமே ஸ்மஷ்டி ரூபத்தில் ஓம் என்று ஒரே அட்சரமாய் பிரஹ்மத்தையே குறிக்கும்.

உமா என்பதில் உகர, மகர, அகரம் என்ற வரிசையில் இருக்கின்றது. அதாவது சக்தி வாசகமான உகரத்தில் ஆரம்பிக்கின்றது. ஆகையால் உமா என்பதை சக்தி ப்ரணவம் என்பர்.

வேதத்தின் உட்பொருள் பிரணவமாதலின் சக்தி பிரணவமும் வேதத்தின் உட்பொருளாயது, அகர, உகர, மகரங்கள் - ரிக், யஜீஸ், சாமம் என்ற மூன்று வேதங்களினாலும் எடுக்கப்பட்ட அக்ஷரங்கள், ஆதலால் அது வேதசாரமாகின்றது. ('எழுதாமறையின் ஒன்றும் அரும்பொருளே')

உ என்பது சிவனையும், மா என்பது திருமகளையும் குறிப்பன. அதாவது சிவனை செல்வந்தராகச் செய்கிறாள் அம்பிகை. உ - என்பது அழைக்க உதவுவது. மா - என்பது தடுக்க உதவும் சொல். இமராஜன் மனைவி மேனை, அம்மையை அழைத்து தவம் செய்ய வேண்டாம் என்று தடுத்தமையின்-உமா என்ற திருப்பெயர் அம்மைக்கு வந்தது என்பர்.

காளிதாஸனும் குமார சம்பவத்தில் (அத். 5)

'உமேதி மாத்ர தபஸோ நிஷித்தா

தஸ் மாதுமாக்ய சுமுகிஜகாமா' - என்கிறார்

ஆறு ஆண்டுள்ள கன்னிக்கு உமா என்று பெயர்.

விநாயக பீடத்திலும் சிந்து வனத்திலும் தெய்வத்தன்மை மணக்க எழுந்து அருளியிருக்கும் அம்பிகைக்கு உமா என்ற திருநாமம் வழங்குகிறது. 634. ஸைலேந்த்ரதநயா :- மலையரசனின்

மகள் "பஹுசோபமானாம் உமாம் ஹைமவதீம்". (கேனோபநிஷத்)

குறிப்பு :- அபிராமிபட்டர் பின்னும் (30) "அன்றே தடுத்து ........ என் உமையவளே" என்றும் கூறுவர். இந்தப் பாடலில் மட்டும் தான் "என்" - என்று உபயோகப்படுத்தியுள்ளார்.

அழியா முத்தி ஆனந்தமே

பிறந்தவளே-என்று சொல்லி விட்டோமே ! அன்னைக்கு, பிறப்பும் இல்லை, இறப்பும் இல்லை, என்று எண்ணிய அபிராமிபட்டர் உடனே அடுத்து வரும் பதமாக, அழியா - என்கிறார். என்ன அவர் கவித்திறம் ! தொடர்ந்து முத்தி ஆனந்தமே என்று பாட்டை நிறைவு பெறச் செய்கிறார் !

முக்தி - என்பது விடுதலை-பந்தபாசங்களினின்றும், மாயை, பிறப்பு, இறப்பு - அது ஆனந்தமயமானது. இதையே பேரானந்தம், பிரம்மானந்தம், சிவானந்தம், ஆத்மானந்தம், சச்சிதானந்தம் என்றெல்லாம் கூறுவர். உ - உயர்ந்த, மா - சித்தவ்ருத்தி அதாவது, பிறவித்தளையை அறுக்கிறது.

'உமாபிதாம் உத்தம சித்தவ்ருத்திம் நமாமி

நானா வித லோக வைபவாம்' (ஸூதஸம்ஹிதை)

பரப்ரஹ்ம ஸ்வரூபிணீயான அம்பாளே-அழியாமுத்தி ஆனந்தமானவள். அவளோடு இரண்டற ஒன்றுவதே ஆனந்தப் பிராப்தியாகும். இந்த நிலையை அடைந்தவர் தான் அபிராமிபட்டர்.

முக்தி ஆனந்தம் மனம் அழிந்த நிலையில் உண்டாவது. அது ஆத்மாவின் நுகர்ச்சி. நிழலில்லாச் சுடர் போன்றது. எல்லை அற்றது. அழியாதது. (கூடாதது;குறையாதது;பங்குபோடப்படாதது)

ஆதிசங்கரர் ஸௌந்தர்யலஹரீ "ஜபோ ஜல்ப" (27) பாடலில் இதே கருத்தைச் சொல்லியுள்ளார். எத்தொழிலைச் செய்தாலும், அனைத்தும் தனக்காக அல்ல, அம்பாளுக்கே அர்ப்பணம் என்ற மனோதிடத்துடன் செய்யப்படும் மானஸ பூஜையே ஆந்தர பூஜை அல்லது பரா பூஜா என்று சொல்லப்படும். நிற்குண மானஸ பூஜா-என்ற கிரந்தத்தில் இந்த கருத்து அழகாக சொல்லப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்

737. முக்தி ரூபிணீ - முக்தியையே ரூபமாக உடையவள்.

ஆத்ம ஸ்வரூபம் அஞ்ஞானத்தால் மறைக்கப்படுகிறது. அந்த அஞ்ஞானம் போனவுடன் ஆத்ம ஸ்வரூபம் தெரிந்து ஸ்வாத் மானந்தம் ஏற்படுகிறது. இதுவே முக்தி அல்லது மோட்சம், அம்பாள், இந்த ஆத்ம ஸாக்ஷாத்கார ஆத்மானந்த ரூபமாக இருக்கிறாள்.

736. முக்திதா-தன் பக்தர்களுக்கு அன்னை முக்தியை அளிப்பவள்.

838. முகுந்தா - முக்தி அளிப்பவள். முகு : என்றால் மோட்சம். அதைத் தருபவள். இது மஹாவிஷ்ணுவின் நாமங்களில் ஒன்று (515). விஷ்ணு-அம்பாள் பேதம் இல்லை.

839. முக்தி நிலயா- முக்தியின் இருப்பிடம்.

646. ஸத்யாநந்த ஸ்வரூபிணீ :- ஸத்யமும், ஆனந்தமுமே வடிவானவள். ஸத்-எப்போதும் இருப்பது, அழியாதது. ஆனந்தம் - சுத்தமான இன்பமயம். ப்ரஹ்மத்தின் வடிவம். இந்த ப்ரஹ்மமே தேவி.

ஸத்+சித்+ஆநந்தம் = ஸச்சிதாநந்தம் = இதுவே ப்ரஹ்மத்தின் வடிவம்

625. கைவல்ய பததாயினீ :- இரண்டற்ற, சிறந்த, ஒன்றேயான மோக்ஷ நிலையை அருள்பவள்.

மோக்ஷம் என்பது ஐந்து வகை - ஸாலோக்யம், ஸாரூப்யம், ஸாமீப்யம், ஸாயுஜ்யம், கைவல்யம்.

1. ஸாலோக்யம் - ஜீவாத்மா, பரமாத்மா ஒரே லோகத்தில் சமமாய் இருப்பது.

2. ஸாரூப்யம் - ஜீவாத்மா, பரமாத்மா இருவரும் ஒரே வடிவமாய் இருப்பது.

3. ஸாமீப்யம் - அருகருகே சேர்ந்தாற் போல் இருப்பது.

4. ஸாயுஜ்யம் - ஒன்றாய் இணைந்து விடுவது.

இந்த நான்கும் கர்மாவின் பலன்கள். எனவே அநித்ய

மானவை. கர்மாவைச் சார்ந்தவை. ஆதலால் பதங்கள் என்று கூறப்படுகிறது.

5. கைவல்யம் - தன்னைத் தனித்து ஏகாகினியாக கேவலமாக உணர்வது. (ஆத்மானுபவம்)

அன்னை இந்தக் கைவல்ய நிலையையும், நான்கு பதங்களையும் கொடுக்கக் கூடியவள்.

கைவல்யம் :- ஞானத்தின் பலனாக நிரதிசயமான ஆனந்தத்தை நிரந்தரமாகத் தருவது.

926. அனாக்ய கைவல்யபத தாயினீ :- விலை மதிப்பற்ற கைவல்ய பதத்தைக் கொடுப்பவள் - மோக்ஷத்தைத் தருபவள். (அனாக்யம் - விலை மதிக்க முடியாத)

252. பரமானந்தா - மிகச் சிறந்ததான ஆனந்த வடிவானவள். அகண்டாகாரமான பரப்ரஹ்மமானது நிறைவான ஆனந்த வடிவமானது. அதனால் பரமானந்தா. இதைவிடப் பெரியதான ஒரு சுகானுபவமும் இல்லாதது.

729. ஆனந்த கலிகா-ஆனந்தத்தின் அம்சமாக இருப்பவள்.

866. அஜா-பிறக்காதவள். 136. நித்யா-எப்போதும் இருப்பவள் 174. நிர்பவா-உத்பத்தி இல்லாதவள். 951-ஶாஶ்வதீ-எப்போதும் இருப்பவள். 867. க்ஷய வினிர்முக்தா-மரணத்திலிருந்து விடுபட்டவள். அதாவது பிறப்பே இல்லாத போது மரணம் கிடையாது அல்லவா !

க்ஷய-என்றால் வீடு. அம்பாளின் உபாஸகர்கள் வீட்டைத் துறந்து காடு செல்ல வேண்டாம். தங்கள் வீடுகளில் இருந்து கொண்டு எல்லா சுகானுபவங்களையும் அனுபவித்துக் கொண்டே அம்பாளின் அருளால் முக்தி பெறுவர்.

அம்பாளின் உபாஸகர்கள் போகம், மோக்ஷம் இரண்டையும் கையில் வைத்திருப்பவர்கள் என்று கூறப்படுகிறது.

## 11. பராசக்தியின் பாத பங்கயம் - பரமனின் திருமுடிமாலை

*ஆனந்தமாய் என் அறிவாய் நிறைந்த அமுதமுமாய்*
*வான் அந்தம் ஆன வடிவுடையாள் மறை நான்கினுக்கும்*
*தான் அந்தம் ஆன சரணாரவிந்தம் தவளநிறக்*
*கானம் தம் ஆடரங்காம் எம்பிரான் முடிக் கண்ணியதே*

**(இல்வாழ்க்கையில் இன்பம் பெற)**

| | |
|---|---|
| ஆனந்தமாய் | பேரின்ப ஸ்வரூபமாய் |
| அறிவாய் (என்) | ஞானமே வடிவாய் (என் அறிவாகி) |
| நிறைந்த அமுதமுமாய் | நிரம்பிய அமுதம் போன்றவளாகி |
| வானந்தமான | பூமி, நீர், நெருப்பு, காற்று, ஆகாசம் என்ற பஞ்சபூதங்களும் |
| வடிவுடையாள் | தன் வடிவாகப் பெற்றவளும் |
| மறை நான்கினுக்கும் | நான்கு வேதங்கட்கும் |
| தான் அந்தமான | தானே முடிவாய்த் திகழும் |
| சரணார விந்தம் | தேவியின் திருவடித்தாமரையானது |
| தவள நிறக் | வெண்மை நிறமான |
| கான் | காட்டை |
| அந்தம் ஆடரங்காம் | ஸம்ஹார திருநடனம் புரியும் இடமாகக் கொண்ட |
| எம்பிரான் | எனது இறைவனின் (சிவபிரானது) |
| முடிக் கண்ணியது | திருமுடி மாலையாக உள்ளது. |

ஆனந்த உருவமே தானாகி, என் அறிவாகி, நிரம்பிய அமுதம் போன்றவளாகி, ஆகாசம் ஈறான ஐம்பெரும் பூதங்களும் (நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாசம்) தன் வடிவாகப் பெற்ற தேவியினுடைய, நான்கு வேதங்களுக்கும் முடிவாக நிற்கும் திருவடித் தாமரையானது வெண்மை நிறமான மயானத்தைத் தம்முடைய ஆடும் இடமாக உடைய எம்பெருமானாகிய சிவபிரானது திருமுடி மாலையாக உள்ளது.

ஆனந்தமாய் என்று சொல்லி அறிவாய் என்றார். அறிவு-சித்துப்பொருள். பின் நித்தியமாகிய அமுதத்தைச் சொன்னார். அது சத்துப்பொருள். ஆகவே இந்த மூன்றினாலும் அம்பிகை ஆனந்தமாய், சித்தாய், சத்தாய் நிற்பவள். எனவே அவள் சச்சிதானந்த ஸ்வரூபி என்பதும் புலனாகும்.

700. ஸச்சிதானந்த ரூபிணீ-ஸச்சிதாநந்த வடிவானவள்.

ப்ரஹ்மத்தின் வடிவு ஸத்து-சித்து-ஆநந்தம் என்று மூன்று அம்சங்கள் உள்ளது ஸத்-நித்யமானது, சித்-(சைதன்யம்) ஞானம். ஆநந்தம்-நிறைந்த பரிபூர்ணமான ஸந்தோஷ நிலை, இம்மூன்றும் சேர்ந்து ஒரு வடிவமானது ப்ரஹ்மம். அதுவே தான் தேவி.

இருபதாம் நூற்றாண்டின் பிரபல விஞ்ஞானி ஆல்பர்ட் ஐன்ஸ்டைன், $E = MC^2 = h\gamma$ என்ற மகத்தான உண்மையை உலகிற்கு தந்தார். அதாவது சத்தை (M = matter) சித்தாக ($\gamma$ = கதிராக) மாற்றும் போது ஏற்படும் அளவிட முடியாத சக்தி (Energy) இதுவே சச்சிதாநந்தம்.

949. பஞ்சபூதேஶீ -பூமி முதலிய ஐந்து பூதங்களுக்கும் ஈஸ்வரி. பஞ்ச பூதங்களின் ஸத்தா ரூபமாக அம்பாள் இருப்பதால், அவைகளுக்கு ஈஸ்வரி அம்பாள்-பஞ்ச பூதங்களின் ஆத்மா. பஞ்ச பூதங்களை தன்னிடத்தில் சூக்ஷ்ம நிலையில் வைத்திருக்கும் மூலப்ரக்ருதியே அம்பாள் என்பதும் சாஸ்த்ர சம்மதமானது.

ப்ரஹ்மத்திலிருந்து ஆகாசமும், அதிலிருந்து வாயுவும், அதிலிருந்து அக்னியும், அதிலிருந்து அப்புவும், அதிலிருந்து ப்ருதிவியும் தோன்றின. இந்த பஞ்ச பூதங்களையும் தன் சரீரமாக உடையவள்.

397. மூலப்ரக்ருதி : எல்லாவற்றிற்கும் ஆதிகாரணமான ப்ரக்ருதி ரூபமாக இருப்பவள். மேலும் குண்டலினீ சக்தியே மூலப்ரக்ருதி எனப்படுகிறது.

110. குண்டலினீ : குண்டலினீ ஸ்வரூபமாக இருப்பவள்.

எனவே, ஆகாயத்திற்கு, ஆத்மன ஆகாஶ:ஸம்பூத: என்ற சுருதியை அனுசரித்து ஆத்மாவே ப்ரக்ருதி. அதற்கு வேறு ப்ரக்ருதி கிடையாது. ஆகையால் அது மூல ப்ரக்ருதி எனப்படும்.

திருமூலரும், திருமந்திரத்தில் (2290)

''மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதற் பூதம்'' என்பர்.

ஆதலின் பஞ்சபூதமாகக் காட்சி அளிக்கிறவள் அன்னையே

நஞ்சு உண்ட திருவிளையாடலை சிவபெருமான் செய்தாலும் அம்மையே அதனை உண்டாள் என்றும் சொல்வது உண்டு. சிலப்பதிகாரத்தில் வேட்டுவ வரி என்ற பகுதியில்,

''விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும்,

உண்ணாத நஞ்சுண்டிருந்தருள் செய்குவாய்''

அதாவது அமுதம் உண்டாலும் தேவர்களுக்கும் இறப்பு உண்டு. அவர்கள் அஞ்சி நடுங்கிய நஞ்சை தான் உண்டு என்றும் அழிவில்லாதவளாக விளங்குபவள் அன்னை. மேலும் அதிலேயே, ''நஞ்சுண்டு கறுத்த கண்டி'' என்பர். அம்பிகைதான் அழியாப் பரம்பொருள். அவள் தான் உண்மையான அமுதம். அவளை உட்கொண்டவர்கள் மரணமிலாப் பெருவாழ்வைப் பெறுவார்கள். ஆதலின் அபிராமிபட்டர் நிறைந்த அமுதமுமாய் என்றார்.

மறை நான்கினுக்கும் தான் அந்தமான சரணார விந்தம் என்பதை ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில்

289. ச்ருதிஸீமந்தஸிந்தூரி க்ருத பாதாப்ஜ தூளிகா :

அதாவது வேதங்களாகிற ஸ்தீரிகளின் முன் வகிட்டில் சிவந்த ஸிந்தூரமாக விளங்கும் தன்னுடைய பாதகமலங்களின் தூளிகளைக் கொண்டவள் (இதை முன்னரே பார்த்தோம்.)

எனவே வேதங்களின் அந்தம் அன்னையின் திருவடித் தாமரை என்று புரிகிறது அல்லவா !

எம்பிரான் முடிக்கண்ணியதே :

சரணாரவிந்தம் எவ்வாறு பரமசிவனின் தலைக்கு மாலையாவது?

பரமசிவன் அணிவது கொன்றை மலர். அது ப்ரணவகாரமானது. ப்ரணவமே வேதத்தின் ஆதியும் அந்தமும்.

ப்ரணவமே ப்ரஹ்மம் என்பது வேதங்களால் அறிவிக்கப் படுவது. ஆக கொன்றை மலரைத் தலையில் அணிவது ப்ரணவத்தை அணிவதாகும்.

ப்ரணவமே பரப்ரஹ்ம ஸ்வரூபிணியானவள் அம்பாள்.

ஆதலால் அம்பாளின் சரணார விந்தம் பரமசிவனின்

தலைக்கு மாலையாக வர்ணிக்கிறார் அபிராமி பட்டர்.

(முற்காலத்தில் ஆடவரும் தலையில் மலர் அணிவது உண்டு. இதை கண்ணி என்பர்.) கன்னியின் காலடிகளை கண்ணியாகக் கொண்டான் கால காலன் எனலாமா !

தவள நிறக்கானம் தம் ஆடரங்காம்

எம்பிரான் மயானத்தில் ஆடுகிறவர். எல்லாம் படுசூரணமாகி எங்கும் சாம்பல் நிரம்பி வெண்ணிறம் பெற்ற காடாகிய சுடலையில் ஆடுகிறவர் அவர். அந்த வெண்ணிறக் காட்டை, தாம் நடனம் ஆடும் அரங்கமாகக் கொண்டவர். எல்லாம் நீறாகி அந்த வெள்ளிய சூழ்நிலையில் ஆடும் நடனத்தைப் பாண்டரங்க நடனம் என்பர்.

உலகம் எல்லாம் அழியினும் தாம் அழியாமல் நிற்பவர் என்பதை அந்த ஆடல் காட்டுகிறது. இத்தகைய பெருமான் இறைவியை வணங்குகிறார்.

இதனையே ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் (232)

மஹேச்வர மஹாகல்ப மஹாதாண்டவ ஸாக்ஷிணீ

மஹேச்வரனுடைய மஹாப்ரளய காலத்திய மஹாதாண்டவத் திற்கு ஸாக்ஷியாயிருப்பவள். (நடனம் : ஆண்கள் - தாண்டவம், பெண்கள் - லாஸ்யம்)

மஹா கல்பம் என்பது இந்த ப்ரபஞ்சம் யாவும் அழிந்துபோகும் மஹாப்ரளய காலம். அறிவு என்பது இங்கு எல்லா ப்ரபஞ்சமும் பரமேச்வரனிடமே மறைந்து விடுதல். இதுவே தேவியின் நான்காவது தொழிலான திரோதனம் எனப்படுவது. ச்ருஷ்டிக்கப்பட்ட யாவையுமே தன்னுள் மறைத்துக் கொண்டதனால் மஹேச்வரன் பெருமகிழ்ச்சி அடைகிறான். அதன் காரணமாக மஹா தாண்டவ மென்னும் நடனத்தைச் செய்கிறான். இந்த ஸமயத்தில் ஈசுவரனின் தாண்டவத்திற்கு ஒரே ஸாக்ஷியாக எஞ்சி இருப்பது தேவி மட்டுமே.

ஸ்ருஷ்டிக்கு முன்பிருந்து மறைதல் வரை தான் மட்டுமே இருந்து எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருப்பதால் தேவி ஸாக்ஷியாகிறாள்.

மஹேச்வரன் மஹாதாண்டவம் செய்யும் போது தேவியும் லாஸ்ய நடனம் செய்வதாகக் கூறப்பட்டிருக்கிறது. இருவரும் நடனம் செய்யும் போது அம்பாளின் வேண்டுகோளின் பேரில் இருவரும் பரம கருணையுடன் லோகங்களைத் திரும்பவும் ஸ்ருஷ்டி செய்வதற்காக அனுக்ரஹம் எனப்படும் ஐந்தாவது தொழில் தொடங்குகிறது.

மூககவி - ''ஹர நடன சாக்ஷீ விஹரதாத்'' என்பர்.

தந்தையின் கருணை : உலகினைக் காப்பாற்ற நஞ்சு உண்டது.

தாயின் கருணை : அகிலாண்டமும் தன்னுள் அடக்கி இருக்கும் கணவன் உண்ட நஞ்சை அமுதாக்கியது.

தாய், தந்தையின் கருணை : லோகங்களைத் திரும்பவும் ஸ்ருஷ்டி செய்வது.

அபிராமிபட்டர் தேவியின் சரணார விந்தத்தின் பெருமையை, தன் துணைவன் (உலகத்தில் எல்லாம் தலைசிறந்து விளங்கும் அழிவற்ற பரந்தாமனான சிவபெருமான்) தன் தலைக்கு மாலையாக அணிந்துள்ளான் என்று கூறுவது, அவர் அன்னையிடம் கொண்ட பக்திக்கு சிகரமாய் அமைந்துள்ளது.

ஆதிசங்கரரும், இந்தக் கருத்தினை ஸௌந்தர்ய லஹரீ 86-வது ஸ்லோகத்தில் (ம்ருஷா க்ருத்வா கோத்ரஸ்கலன மத வைலக்ஷ்ய நமிதம்...) கவிநயத்துடன் வெகு அழகாக சொல்லியுள்ளார்.

அல்லும் பகலும் அயராமல் அன்னையின் திருவடிகளையே உள்ளத்தில் கொண்டவர் அல்லவா !

அந்தரி பாதம் என் சென்னியதே என்று அன்புடன் உரிமை கொண்டாடுகிறார் அல்லவா ! அது அவரால் தான் முடியும் !

## 12. முன் செய்த புண்ணியம்

*கண்ணியது உன் புகழ் கற்பது உன் நாமம் கசிந்து பத்தி*
*பண்ணியது உன் இரு பாதாம் புயத்தில் பகல் இரவா*
*நண்ணியது உன்னை நயந்தோர் அவையத்து, நான் முன் செய்த*
*புண்ணியம் ஏது? என் அம்மே, புவி ஏழையும் பூத்தவளே !*

**(நெஞ்சம் தியானத்தில் நிலைபேறு அடைய)**

| | |
|---|---|
| என் அம்மே | என் தாயே |
| புவி ஏழையும் பூத்தவளே | ஏழுலகத்தையும் தோற்றுவித்தவளே |
| கண்ணியது உன் புகழ் | (அடியேன்) எப்பொதும் நினைப்பது உன்னுடைய பெரும் புகழை |
| கற்பது உன் நாமம் | (குருவின் மூலமாகக்) கற்றது உன் திருநாமத்தையே |
| கசிந்து பத்தி பண்ணியது | உள்ளம் உருகி பக்தி கொண்டு வழிபடுவது |
| உன் இரு பாதாம்புயத்தில் | உன் இரண்டு திருவடித் தாமரைகளில். |
| பகல் இரவா நண்ணியது | பகலும் இரவுமாக சென்று சேர்ந்தது |
| உன்னை நயந்தோர் அவையத்து | உன்னை உபாஸனை செய்வோரின் ஸத்சங்கமே ! |
| நான் முன் செய்த புண்ணியம் ஏது ? | (இவ்வாய்ப்பு எல்லாம் அடியேன் பெற) நான் பூர்வ ஜன்மத்தில் என்ன புண்ணியம் செய்தேன்? நான் அறியேன். நீயே அறிவாய் ! |

என் தாயே ! ஏழுலகத்தையும் படைத்த பெருமாட்டியே ! அடியேன் எப்போதும் தியானம் செய்வது உன்னுடைய பெரும்புகழை : பலகாலம் பயின்று உணர்வுடன் ஓதுவது உன் திருநாமத்தை; உள்ளம் உருகிப் பக்தி பண்ணியது உன் இரண்டு திருவடித் தாமரைகளில்; பகலும் இரவுமாகச் சென்று நான் நெருங்கிப் பழகியது உன்னை விரும்பி உபாஸனை செய்யும் அன்பர்களின் சத்ஸங்கமே !

இவ்வாய்ப்பு எல்லாம் அடியேன் பெற பூர்வ ஜன்மத்தில் என்ன புண்ணியம் செய்தேனோ ? நான் அறியேன். நீயே அறிவாய் !

இதில் அபிராமிபட்டர், தன் ஆனந்த, ஆத்மார்த்த அனுபவங்களை முடிவிலிருந்து-முதல் வரை விவரிக்கிறார்.

அதாவது-முற்பிறவியில் புண்ணியம் செய்தவர்க்குத் தான் இப்பிறவியில் சத்சங்கம் அமையும். அதனால் இறைவியின் பாதார விந்தத்தை பக்தியுடன் பணியும் பழக்கம் உண்டாகும். (காயம்). மேலும் அன்னையின் திருநாமத்தை உணர்ந்து ஓதும் பயிற்சி அமையும் (வாக்கு), அதன் பின் அவள் புகழையே எண்ணி அனுபவிக்கும் மனோ நிலை உண்டாகும். (மனம்)

கற்பது உன் நாமம் - இதில் ஒரு பெரிய தத்துவம் அடங்கியுள்ளது.

பாபங்களே நிறைந்தும், தர்மானுஷ்டானங்கள் குறைந்தும் இருக்கும் கலியுகத்தில் மனிதர்களுக்கு நாமஸங்கீர்த்தனத்தைத் தவிர வேறு கதியொன்றும் இல்லை.

555. கலிகல்மஷ நாஶினீ - கலிதோஷத்தைப் போக்குபவள்.

அபிராமிபட்டர் ஒரு மகா பெரிய மகானல்லவா ! மேலும் அவர் ஒரு தலை சிறந்த ஸ்ரீவித்யா உபாஸகர். அவருக்கு தினமும் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் பாராயணம் உண்டு.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தின் மகிமையும், பெருமையும் :

எவ்வளவோ ஸஹஸ்ரநாமங்கள் இருந்தாலும், எல்லா வற்றிலும் தலை சிறந்து விளங்குவது ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்.

இந்த ஸ்தோத்ரத்தில் உள்ள நாமத்தின் பாபத்தைப் போக்கும் சக்திக்குப் போதுமான பாபத்தைச் செய்ய பதினாலு லோகங் களாலும் முடியாது. பதினாலு லோகங்களிலுள்ள ஜீவராசிகள் அனைவராலும் ஒரு நாமாவினால் நாசம் பண்ண முடியாத அளவு பாபத்தைச் செய்ய முடியாது.

அதாவது ஒரு நாமம் சொல்வதற்கே அவ்வளவு பலன். மேலும் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம், ஸ்ரீ மாதா என்று ஆரம்பித்து லலிதாம்பிகா என்று 1000-வது நாமமாக நிறைவுறுகிறது.

அதாவது பாராயணம் அல்லது நாம ஸங்கீர்த்தனம், அம்மா என்று பொருள்பட ஸ்ரீ மாதா என்று ஆரம்பிக்கும்போதே, அன்னை அங்கு சேயைக் காண வந்து விடுவாள்.

இதையெல்லாம், கருத்தில் கொண்டே, அபிராமிபட்டர், நாமம் என்று ஒருமையில் சொல்கிறார். என்னே ! அவர் கவித்வம்!

மேலும் ஸ்ரீ லலிதாத்ரிசதி பலச்ருதியில் (24) : யாருக்கு புனர்ஜென்மம் இல்லையோ அவர்களுக்குத் தான், ஸ்ரீவித்யை என்ற அம்பிகையின் உபாசனை அடையப்படுவதாகும் என்று கூறப்பட்டிருக்கிறது.

இதைத் தான் நான்முன் செய்த புண்ணியம் ஏது ! என் அம்மே ! என்று அபிராமிபட்டர் மிக உருக்கமாக அன்னையிடம் கேட்கிறார். இதனையே ஆதிசங்கரர், தனது ஸௌந்தர்ய லஹரீயின் முதல் ஸ்லோகத்தில், ''ப்ரணந்தும் ஸ்தோதும் வா கதமக்ருத - புண்ய : ப்ரபவதி ॥'' என்று கேட்கிறார். அதாவது, ''புண்ணியம் செய்யாதவன் உன்னை வணங்குவதற்கோ அல்லது துதிப்பதற்கோ எங்ஙனம் தகுதியுடையவனாவான் ?''

மனம், வாக்கு, காயம் என்று முக்கரண வழிபாட்டைக் கொண்டு அம்பிகையை எப்போதும் நினைப்பதும், வாழ்த்துவதும், பணிவதுமாகிய செயல்களை இடைவிடாது செய்து அவள் திருவருளால் அநுபூதி பெற்றவர் அபிராமிபட்டர். அவர் சொன்ன வழியிலேயே நாமும் செல்ல முயன்று, அன்னை அபிராமியின் அருளை அடைவோமாக !

## 13. அன்னை அபிராமியே - மாபெருந் தெய்வம்.

*பூத்தவளே புவனம் பதினான்கையும் பூத்தவண்ணம்*
*காத்தவளே பின் கரந்தவளே கறைகண்டனுக்கு*
*மூத்தவளே என்றும் மூவா முகுந்தற்கு இளையவளே*
*மாத்தவளே உன்னையன்றி மற்றோர் தெய்வம் வந்திப்பதே.*

**(வைராக்கிய நிலை எய்த)**

| | |
|---|---|
| புவனம் பதினான்கையும் | பதினான்கு உலகங்களையும் |
| பூத்தவளே | ஈன்றவளே, |
| பூத்த வண்ணம் | சிருஷ்டித்தவாறே |
| காத்தவளே | பாதுகாக்கின்றவளே, |
| பின் கரந்தவளே | இறுதியில் அவற்றை தன்னுள் வயப்படுத்திக் கொள்பவளே (மறைத்து வைப்பவளே) |
| கறைகண்டனுக்கு | திருநீலகண்டனுக்கு |
| மூத்தவளே | முன் தோன்றியவளே, |
| முகுந்தற்கு (என்றும்) | திருமாலுக்கு எக்காலத்தும் |
| மூவா இளையவளே | முதுமை அடையாத தங்கையே ! |
| மாத்தவளே | பெரிய தவத்தை உடையவளே ! |
| உன்னையன்றி மற்று ஓர் | உன்னையல்லாது இதர |
| தெய்வம் | தெய்வங்களை |
| வந்திப்பதே | வணங்க (வழிபட) இயலுமா ? |

உலகம் பதினான்கையும் திருவருளால் ஈன்ற பெருமாட்டியே ! அருள் கொண்டு ஈன்றது போலவே அவற்றைப் பாதுகாக்கின்ற தாயே ! பின்பு அப்புவனங்களை மறைத்துவைக்கும் (தன்னுள் வயப்படுத்திக் கொள்ளும்) அம்மையே!

திருநீலகண்டனுக்கு முன்பு தோன்றிய தத்துவமாக உள்ளவளே ! திருமாலுக்கு எக்காலத்தும் மூப்பை அடையாத தங்கையே ! பெரிய தவத்தை உடையவளே ! அடியேன் உன்னையே தெய்வமாக வழிபடுவதை அல்லாது வேறு ஒரு தெய்வத்தை வழிபடுவது முறை ஆகுமா ?

அன்னை அபிராமியே-மாபெருந் தெய்வம்

முந்தைய பாட்டில் புவி ஏழையும் என்றவர் இப்பாட்டில் புவனம் பதினான்கையும் என்றதால், முந்தின புவி ஏழு என்பதை ஸப்த தீபங்கள் (தீவுகள்) என்ற ஜம்பு, பிலக்ஷ, குச, கிரௌஞ்ச,

சாக, சான்மல, புஷ்கரம் - ஆகும். புவனம் பதினான்கு - பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், ஜனலோகம், தபோலோகம், மஹிலோகம், சத்தியலோகம்-என்ற மேலுலகேழும் அதலம், விதலம், சுதலம், தார்தலம், மஹாதலம், இரசாதலம், பாதாளம்-என்ற கீழ் உலகேழும் கூறியனதாக எடுத்துக் கொள்வது பொருந்தும்

திருமூலரும், திருமந்திரத்தில் (1074) "தானே தலைவியென நின்ற தற்பரை" என்ற பாடலில் அன்னையே பதினான்கு உலகங்களையும் படைத்தவள் என்பார்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் : 270. திரோதானகரீ : (எல்லாவற்றையும்) மறையச் செய்பவள்.

ருத்ர வடிவினால் அணுக்களாகச் செய்யப்பட்ட ப்ரபஞ்சத்தை மேலும் பரமாணுக்களாக்கி அவற்றை முறையே அஹங்காரம், மஹத், அவ்யக்தம், மூலப்ரக்ருதி என்று உலகம் எந்த வரிசையில் தோன்றியதோ அதே விதமாக ப்ரக்ருதியில் அடங்கச் செய்வது திரோதானம். இதைச் செய்பவள் தேவீ. திரஸ்கரிணீ என்று தேவியின் பரிவார தேவதைகளில் ஒன்று. அதன் வடிவானவள். பக்தி இல்லாதவர்களுக்கு அம்பாளுடைய தோற்றம் தெரியாதபடி மறைத்து விடுபவள் திரஸ்கரிணீ.

808. பரமாணு : மிகவும் ஸூக்ஷ்மமான, அணுவாக இருப்பவள். "அணோரணீயான்" - கடோப நிஷத் (2-20)

358. தருணீ :- எப்பொழுதும் யுவதியாக இருப்பவள். 344. க்ஷயவ்ருத்தி வினிர்முக்தா : அம்பாள் வளர்ச்சியும், தேய்வும் இல்லாதவள். 430. நித்யயௌவனா : முக்காலத்திலும் மாறாத யௌவனத்துடன் கூடியவள். 470. வயோவஸ்தா விவர்ஜிதா- வயதால் மாறுதல் இல்லாதவள். த்ரிசதி (272) லப்தயௌவன ஶாலினீ. 745. ஜராத் வாந்தரவிப்ரபா - முதுமை என்ற இருட்டைப் போக்கும் சூர்ய ஒளியாக இருப்பவள்.

851. ஜன்ம - ம்ருத்யு - ஜரா - தப்த - ஜன - விஶ்ராந்தி - தாயினீ : பிறப்பு - இறப்பு - மூப்பு இவைகளால் நன்கு தகிக்கப்பட்ட ஜனங்களுக்கு இந்த துக்கங்களைக் களையும் ஓய்வுகளையும், தெளிவான ஆத்மஸுகத்தையும் தருபவள்.

மேலும் மரணத்திற்குப் பின் அடுத்த பிறப்பு வரையில் உள்ள காலம் ஒரு விதமான, தற்காலிக ஓய்வு, மறு பிறப்பில்லாமல் முக்தி அடைவது நிரந்தரமான ஓய்வு. இரண்டையும் தருபவள்.

294. புவனேச்வரீ :- பதினான்கு புவனங்களுக்கும் ஈச்வரியாக இருப்பவள்.

அன்னை அபிராமி படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அனுக்கிரகம் - ஆகிய ஐந்து தொழில்களையும் செய்யும் ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன், மஹேஸ்வரன், சதாசிவன்- ஆகியவர்களுக்கு அதிகாரி அல்லவா !

அவள் இன்றி அணுவும் அசையாது.

பிரமதேவனுக்குப் படைத்தல் தொழில் :

823. ஜனனீ-தாயார்-ஸகல ஜகத்தையும் ஸ்ருஷ்டிக்கிறவள். தகப்பனால் தன் சரீரத்தில் சேர்க்கப்பட்ட சுக்லத்திற்கு கருவாக உருக்கொடுப்பவள்.

826. ப்ரஸவித்ரீ-எல்லாவற்றையும் படைத்தவள். தக்க தருணத்தில், தேவையான அளவு கருவளர்ந்த பிறகு அதை வெளியில் கொண்டு வந்துவிடுபவள்.

264. ஸ்ருஷ்டிகர்த்ரீ : ஸ்ருஷ்டியைச் செய்பவள். படைத்தல் என்ற தொழில் ஈசுவரனுடைய ரஜோகுண ப்ரதானமான வடிவின் செயல். பரம்பொருளிலிருந்து பிரம்மா முதலிய வடிவுகளை வேறுபடுத்திக் காட்டுவது மாயை.

265. ப்ரஹ்ம ரூபா :- ப்ரஹ்மாவின் வடிவமாயிருப் பவள். படைக்கும் தொழிலைச் செய்யும் ப்ரஹ்மா பரம்பொருளின் வடிவான தேவியின் மாயையினால் வேறுபடுத்தி காட்டப்பட்ட உருவம்.

திருமாலுக்கு காக்கும் தொழில்.

266. கோப்த்ரீ - காத்தல் என்ற தொழிலைச் செய்கிறவள். படைக்கப்பட்ட ப்ரபஞ்சத்தை தேவி தன்னுடைய ஸத்வகுண ப்ரதானமான வடிவினால் காக்கிறாள்.

267. கோவிந்தரூபிணீ - கோவிந்தன் - அதாவது

விஷ்ணுவின் வடிவானவள். காத்தல் தொழிலைச் செய்யும் ஸத்வகுண மூர்த்தியான விஷ்ணுவும் தேவியே தான். கோ-வாக்கு. அதனால் தெரிந்து கொள்ளப்படுபவர் கோவிந்தன். வாக்குக் கெட்டாத பரம்பொருள், காப்புத்தொழிலை ஏற்றுக் கொண்டதனால், ஜீவனின் குரல் கேட்டு ஓடிவரும் கோவிந்தன்.

892. வைஷ்ணவீ - விஷ்ணுவின் சக்தியாக இருப்பவள் :

893. விஷ்ணு ரூபிணீ - விஷ்ணு ரூபமாக இருப்பவள் - லக்ஷ்மீ ரூபமானவள். (வைஷ்ணவீ - விஷ்ணுவின் அன்னை, எதிரிகளை அழிப்பவள்) விஷ்ணுவைச் சார்ந்தவள். விஷ்ணுவின் ரூபமாக சங்கு, சக்கரம், கதை இவற்றைத் தரிக்கிறாள்.

ருத்ரனுக்கு அழித்தல் எனும் தொழில்.

268. ஸம்ஹாரிணீ - ஸம்ஹாரம் அல்லது அழித்தல் தொழிலைச் செய்பவள். ப்ரபஞ்சத்தை பரமாணுக்களாக நொறுக்கி அழித்து விடுவது மூன்றாவதான ஸம்ஹாரத் தொழில். பரம்பொருளின் தமோகுண ப்ரதானமான வடிவினால் தேவி செய்விப்பதால் அவருக்கு ஸம்ஹாரிணீ என்று பெயர்.

269. ருத்ர ரூபா - ருத்ரன் வடிவானவள். பரம்பொருளான தேவியின் தமோகுணம் மிகுந்த வடிவு ருத்ரன். இது உலகை சம்ஹாரம் செய்கிறது. ஸம்ஸாரச் சுழலில் சுற்றிச் சுற்றி வருவதால் ஏற்பட்ட வேதனையை மறக்கச் செய்வதால் ருத்ரன். (ருஜம்-வேதனையை) த்ராவயதி-ஓடச் செய்கிறாள். ரோதயதி என்றால் அழவைப்பது. அழிவினால் ஏற்படும் பிரிவு. அழவைப்பதால் ருத்ரன் என்ற பெயர். முதலில் ப்ரஹ்மாவினுடைய நெற்றியிலிருந்து தோன்றிய ருத்ரன் உரக்கவும், பயங்கரமாகவும் அழுதார்-ரோதனம் செய்தார். எனவே ருத்ரன்.

சூர்யனுக்கும்-ருத்ரன் என்று பெயர்.ப்ரளயகாலத்தில் தோன்றி உலகைப் பொசுக்குவார். அதனால் பெருமழை ஏற்பட்டு உலகம் ஜலத்தில் மூழ்கும்.

மும் மூர்த்திகளுக்கும் தேவியானவள்

628. த்ரிமூர்த்தி-ப்ரஹ்மா முதலிய மூவரின் வடிவானவள். மூன்று வயதான கன்யா வடிவானவள்.

கறை கண்டவனுக்கு மூத்தவளே

சக்தி தத்துவத்தினின்றே சதாசிவ தத்துவம் தோன்றியது. (பின்னும் தவளே இவள் எங்கள் சங்கரனார் மனைமங்கலமாம், அவளே அவர் தமக்கு அன்னையும் ஆயினள் என்பர். பாடல் 44)

திருமூலர், திருமந்திரத்தில் (1178)

"வாயு மனமுங் கடந்த மனோன்மணி
பேயுங் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை
ஆயுங் அறிவுங் கடந்த அரனுக்குத்
தாயும் மகளும் நல் தாரமும் ஆமே" – என்பார்

சிவஞான சித்தியாரில், 'சக்திதான் சிவத்தை ஈன்றும், திருக்கோவையாரில், அவள் அத்தனாம் மகளும் தில்லையான் என்றும், திருவாசகத்தில் இமவான்மகட்குத் தன்னுடைக்கேள்வன், மகன், தகப்பன், தமையன் என்றும் வரும்.

மாத்தவளே : எம்பெருமாட்டி, பார்வதியாக அவதரித்த போது பரமேசுவரனைத் திருமணம் செய்து கொள்ளும் பொருட்டு தவம் புரிந்தாள் அல்லவா ! அம்பிகை தவம் புரிந்தால் அது மாபெருந் தவமாகவே இருக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா ?

எல்லாத் தெய்வங்களுக்கும் மேலான தெய்வமாக அன்னை அபிராமி இருக்க வேறு ஒரு தெய்வத்தை வணங்க வேண்டிய அவசியம் இல்லையே. மேல் படியை அடைந்தவனுக்கு கீழ்ப்படிகளில் கால் வைக்கும் அவசியம் இராது.

பிற, பிற தெய்வங்கள் இயற்றும் தொழில்களுக்கெல்லாம் மூலகாரணமாக நிற்பவள் பராசக்தியாதலின், அவள் பால் பக்தி செய்கிறவர்களுக்கு வேறு இடங்களை அடைந்து பெறுவது ஒன்றும் இல்லை. 410. ஶிவபரா-சிவனுக்கும் மேற்பட்டவள். (சிவன் ஒருவரை தனக்கு மேற்பட்டவராக எண்ணுபவள். தன் பக்தர்களுக்கு சிவனைக் காண்பிப்பவள்)

எனவே சக்தியின் திருவருளால் தான் சிவனை காணமுடியும்.

## 14. மண்ணில் எளிதாம் - அன்னையின் அருள்.

*வந்திப்பவர் உன்னை வானவர் தானவர் ஆனவர்கள்*
*சிந்திப்பவர் நற்றிசைமுகர் நாரணர் சிந்தையுள்ளே*
*பந்திப்பவர் அழியாப் பரமானந்தர் பாரில் உன்னைச்*
*சந்திப்பவர்க்கு எளிதாம் எம்பிராட்டி நின் தண்ணளியே !*

**(தலைமை பெற)**

| | |
|---|---|
| உன்னை | அபிராமி அன்னையே ! உன்னை |
| வந்திப்பவர் | வழிபடுகிறவர்கள் |
| வானவர் | தேவர்களும் |
| தானவர் | அசுரர்களும் |
| ஆனவர்கள் | ஆவார்கள் |
| சிந்திப்பவர் | உன்னை தியானம் செய்கிறவர்கள் |
| நற்றிசைமுகர் | நான்முகனான ப்ரம்மாவும் |
| நாரணர் | திருமாலும். |
| சிந்தையுள்ளே | தமது உள்ளத்தில் |
| பந்திப்பவர் | அன்பினாலே கட்டி இன்புறுகிறவர் |
| அழியாப் பரமானந்தர் | அழியாத பரமானந்த சொரூபியாகிய சிவபெருமான். |
| பாரில் உன்னை | உலகத்தில் உன்னை |
| சந்திப்பவர்க்கு | தரிசிப்பவருக்கு, |
| எளிதாம் | லகுவாக சித்திக்கின்றது ! |
| எம்பிராட்டி | என் தலைவியே ! |
| நின் தண்ணளியே | உனது குளிர்ந்த திருவருள் அல்லவா ! |

எம்பெருமாட்டியே, உன்னை வணங்குபவர்கள் தேவர்களும், அசுரர்களுமாகிய ஆற்றலுடைய பெரியவர்கள்.

உன்னைத் தியானிப்பவர்கள் நான்முகனான ப்ரம்மாவும், திருமாலும் (கோடிக் கணக்கான பிரமர்களும், நாரணர்களும் என்றும் கொள்ளலாம்.) பரமயோகியான தம்முடைய திருவுள்ளத்துக்குள் அன்பினாலே கட்டி இன்புறுகிறவர் அழியாத பரமானந்த சொரூபியாகிய சிவபெருமான்.

மும் மூர்த்திகளும், தேவர்களும், அசுரர்களும் மாபெரும் பிரயத்தனம் செய்யும் போது, எந்த ஒரு கஷ்டமும், சிரமும் இல்லாமல், எளிதாக, உலகத்தில் உள்ளவர்கள் உன்னை தரிசிக்கும் போது உன் குளிர்ச்சி பொருந்திய திருவருள் கிடைத்து விடுகிறதே!

இது என்ன வியப்பு !

பிரமதேவர் தம் த்யானமூர்த்தி வந்துவிட்டாள் என்று குழைந்து வணங்குகிறார். நாராயணரோ அவள் அருளுக்கு ஏங்கி நிற்கிறார். சிவபெருமான் அவளுடைய அந்தரங்கத்தை நாடித் தவம் கிடக்கிறார். வானவர் வணங்குகின்றார்கள். தானவர்கள் வந்திருக்கின்றனர். ''வந்தடி போற்றுவர் வானவர் தானவர்-'' (திருமந்திரம் 1242)

64. தேவர்ஷிகண ஸங்காத ஸ்தூயமானாத்ம வைபவா- தேவர்கள், ரிஷிகள் இவர்களுடைய கூட்டங்களால் ஸ்தோத்ரம் செய்யப்பட்ட வைபவத்தோடு கூடியவள். 297. ஹரிப்ரஹ்மேந்த்ர ஸேவிதா-விஷ்ணு, ப்ரஹ்மா, இந்திரன் முதலியவர்களால் வணங்கப்பட்டவள்.

இவ்வளவு உயர்ந்த நிலையில் உள்ள அன்னை, மண்ணுலகத்தில் தன்னை உபாசிக்கிறவர்களிடத்தில் மிக எளியவளாக நின்று அருள் புரிகிறாள் ! அகிலாண்டமும் ஆதிக்கம் கொண்ட அன்னை, இராஜராஜேஸ்வரியாக கொலு வீற்றிருக்கிறாள். ஆனால் இந்தப்பாரில் தன்னை சந்தித்துத் தரிசனம் செய்யும் அடியவர்களுக்கு எளியவளாக இருந்து தண்ணளி செய்கிறாள். என்னே அவள் கருணை !

அன்னையின் கருணையைக் கண்ட அடியார்கள், கருணா தரங்கிதாக்ஷிம், கருணாரஸஸாகரா, கருணாம்ருத ஸாகரா, காருண்ய விக்ரஹா என்கிறார்கள்.

590. கடாக்ஷகிங்கரீ பூத கமலா கோடி ஸேவிதா

அந்த அம்பாளின் கடைக்கண் பார்வை ஒரு பக்தன் மேல் விழுந்து விட்டால், கோடிக்கணக்கான லக்ஷ்மிகளும் அவனுக்குப் பணிவிடை செய்து விடுவார்கள். எல்லா ஸௌபாக்யங்களையும் அவன் பெறுவான் என்று சொல்லாமல் சொல்லப்படுகிறது. அம்பாளுடைய கடாக்ஷத்தின் மஹிமை மூக பஞ்ச சதியில் கடாக்ஷ சதகத்தில் காவ்யரஸனையுடன் சொல்லப்படுகிறது.

197. ஸாந்த்ர கருணா - (எதிர்பார்ப்பதை விட) அதிகமான கருணை உள்ளவள். ஸ்ரீ லலிதா த்ரிசதீ (153) காருண்ய விக்ரஹா -

கருணையே உருவெடுத்தவள்.

326. கருணாரஸ ஸாகரா - கருணையினால் உண்டாக்கக் கூடிய மோக்ஷரூப அம்ருதத்திற்குக் கடல் போன்றவள்.

ஸ்ரீ லலிதா த்ரிசதீயில்

105. ஹராராத்யா – சிவனால் ஆராதிக்கப்பட்டவள்.

106. ஹரிப்ரஹ்மேந்த்ர வந்திதா – ஹரியாலும், பிரம்மாவினாலும், இந்திரனாலும் பூஜீக்கப்பட்டவள் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

குமரகுருபர முனிவரும்,

''எறிதரங்கம் உடுக்கும் புவனம் கடந்து நின்ற ஒருவன்

திருவுள்ளத்தில் அழகு ஒழுக எழுதிப் பார்த்திருக்கும்

உயிர் ஓவியமே !'' என்று பாடுகிறார்.

ஆதிசங்கரரும், ஸௌந்தர்ய லஹரீயில் ''முகுந்த ப்ரஹ்மேந்த்ர'' (22) ''தநீயாம்ஸம் பாம்ஸும்'' (2) என்ற ஸ்லோகங்களில் இந்தக் கருத்தினை தெரிவிக்கிறார்.

869. க்ஷிப்ர ப்ரஸாதினீ-சீக்கிரமே அனுக்ரஹம் செய்பவள்.

992. அவ்யாஜ கருணாமூர்த்தி-பக்ஷபாதமில்லாத கருணை உருவம்.

அன்னை அபிராமி - கருணையே உருவானவள்.

## 15. மூன்று செல்வம்.

*தண்ணளிக்கென்று முன்னே பலகோடி தவங்கள் செய்வார்*
*மண்ணளிக்கும் செல்வமோ பெறுவார்? மதிவானவர் தம்*
*விண்ணளிக்கும் செல்வமும் அழியாமுத்தி வீடுமன்றோ*
*பண்ணளிக்கும் சொல் பரிமள யாமளைப் பைங்கிளியே !*

**(பெருஞ்செல்வமும், பேரின்பமும் பெற)**

| | |
|---|---|
| பண்ணளிக்கும் சொல் | (கேட்பவர்களுக்கு) இன்னிசையாக விருந்தளிக்கும் இனிய சொற்களை உடையவளும் |
| பரிமள யாமளை | திவ்ய மணமுடைய சியாமள நிற மேனியுடையவளுமான |
| பைங்கிளியே | பச்சைக் கிளியே (அபிராமியே) |
| தண்ணளிக்கென்று | (உன்னுடைய) குளிர்ந்த அருளைப் பெற வேண்டுமென்று |
| முன்னே | முன் பிறவிகளில் |
| பலகோடி தவங்கள் | எண்ணிறந்த தவங்களைச் |
| செய்வார | செய்த பாக்கியவான்கள் |
| மண்ணளிக்கும் | இந்த உலகம் தருகின்ற |
| செல்வமோ பெறுவர் | ஐஸ்வரியத்தை மட்டுமா அடைவர் ? |
| மதிவானவர் தம் | யாவரும் மதிக்கின்ற இந்திராதி தேவர்கள் வசிக்கின்ற |
| விண்ணளிக்கும் | சொர்க்கலோகம் தருகின்ற |
| செல்வமும் | சங்கநிதி, பதுமநிதி, கல்பகவிருக்ஷம் போன்ற செல்வங்களையும், |
| அழியா முத்தி வீடுமன்றோ | என்றும் அழியாத பிறப்பு, இறப்பு இல்லாத ஸாயுஜ்ய பதவியையும் கூடவல்லோ அடைவர். |

பண்களைப் போல (இராகங்கள்) இனிமையைத் தரும் திருவாய்மொழியையும் திவ்ய மணத்தையும் கொண்ட சியாமளா தேவியாகிய பச்சைக் கிளி போன்ற தாயே, நின்னுடைய குளிர்ந்த கருணையைப் பெறும் பொருட்டு முன் பிறவிகளில் பலகோடி தவங்களைச் செய்பவர்கள் இந்த உலகைக் காத்து ஆளும் செல்வமாகிய அரசுரிமையை மட்டுமா பெறுவார்கள் ? அறிவில் சிறந்த தேவர்களுக்குரிய தேவலோகத்தை ஆளும் செல்வமாகிய இந்திர பதவியையும், பின்பு என்றும் அழியாத முத்தியா ய வீட்டுலக வாழ்வையுமல்லவா பெறுவார்கள் !

அம்பிகையை உபாசிப்பவர்கள் இம்மை, மறுமை, வீடுகளைப் பெறுவார்கள் என்பது இந்தப் பாடலின் கருத்து.

அம்பாளைக் கிளி என்றதில் ஓர் விசேஷார்த்தம் உள்ளது. கிளியின் உடல் பச்சை. அதன் மூக்கு சிவப்பு. சிவன் - சிவந்த மேனியன். அம்மையின் நிறம் பச்சை. (மதுரை மீனாட்சி அம்மன் பச்சை நிறத் திருமேனியுடன், தனது திருக்கரத்தில் கிளியைக் கொண்டிருப்பதும் காண்க.) இவ்விரண்டு நிறங்களும் கலந்திருப்பது சிவசக்தி சம்மேளனத்தைக் குறிக்கும். சிவனும், சக்தியும் சேர்ந்தே பூர்ண வஸ்துவாகின்றது.

ஸ்ரீ லலிதா த்ரிசதீ (215) - ஹ்ரீங்கார - பஞ்சரசுகீ - ஹ்ரீங்காரமாகிய கூண்டில் உறையும் பச்சைக் கிளி.

ஆதிசங்கரர் (நவரத்ன மாலா) - "ஓங்கார - பஞ்சரசுகீ" - ஓங்காரமென்னும் கூண்டில் வாழும் கிளி.

தவம் : தாயே, உன்னுடைய அருள் வேண்டும் என்று வேண்டிச் செய்வது தான் உண்மையான தவம். (நிஷ்காம்யம் என்று சொல்வர்) மனிதப் பிறவியை அடைவது அரிது. 84 லட்ச வகையான ஜீவராசிகள் இந்த உலகத்தில் உள்ளன. அதில் மானிடப் பிறவி தான் தலை சிறந்தது. பல காலம் செய்த புண்ணியப் பயனாகவே வந்தது இந்தப் பிறவி.

"பெறுதற்கரிய பிறவியைப் பெற்றும்" (அருணகிரி நாதர்)
"அரிது ! அரிது ! மானிடப் பிறவி" (ஔவையார்)

இறைவன் திருவருளைப் பெறுவதற்கு இந்த மனிதப்பிறவி ஒன்று தான் தகுதி உடையது. மண்ணிலே முளைத்து, வானிலே பழுத்த பழமானாலும், அதன் விதை மண்ணிலே விழுந்துதான் முளைக்க வேண்டும். ஆதலின் இந்தப் பிறவி ஒரு வகையில் தேவர் பிறவியை விடச் சிறந்ததென்று சொல்ல வேண்டும். மனிதப் பிறவியில் புண்ணியம் செய்வதனால் சொர்க்கப் பதவி கிடைக்கிறது. மறுபடியும் மண்ணில் பிறந்து இறைவனை வழிபட்டு மோட்சம் அடைய வேண்டும்.

இதன் கருத்து யாதெனில், இவ்வுலக வாழ்வைப் போலவே தேவலோக வாழ்வும் நிலையாதது. எல்லாவற்றையும் விட

உயர்ந்தது முக்தி (மோட்சம்) - அது தான் வீட்டின்பம். இதைத் தான் நாம் எல்லோரும் இப்பிறவியின் குறிக்கோளாக கொள்ள வேண்டும்.

மரத்தின் நிழல் போல இருப்பது - இந்த வாழ்வில் உள்ள இன்பம் - ராஜயோகம் அல்லது அரச பதவியின் இன்ப வாழ்வு.

மலரின் மணம் போல இருப்பது - சொர்க்க இன்பம். கனியைப் போல இருப்பது - முத்தி இன்பம். இதனையே இம்மை, மறுமை, வீடு (அல்லது) இகம், பரம், மோட்சம் என்பர். அன்னையின் அருள் தான் அனைத்தையும் அளிக்கும்.

"மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்

எண்ணின் நல்ல கதிக்கு யாது மோர் குறைவிலை" - திருஞானசம்பந்தர்

அபிராமிபட்டர் ஒரு சிறந்த தேவி உபாஸகர் ! தேவி உபாஸகர்கள் அடிக்கடி தேவியின் குணங்களைச் சொல்லி தேவியின் நினைவாகவே இருப்பார்கள். தேவியின் கருணையால் கிடைக்கும் இன்பங்களைச் சொன்னவர் தேவியின் வாக்கு இனிமையும், திவ்ய மணத்தோடு திகழும் திருமேனியையும் பண் அளிக்கும் சொல் பரிமள யாமளைப் பைங்கிளியே என்று தியானம் செய்கிறார். சொல்லாகிய ஒலியும், பரிமளமாகிய மணமும், திருமேனிச்சோதியும் அவர் மனக் கண்ணிலே அருங்காட்சியாக அமைகிறது.

631. திவ்ய கந்தாட்யா - தெய்வீக மணத்தால் நிறைந்தவள். திவ்யம் என்றால் வானுலகில் உள்ள கதம்பம், பாரிஜாதம் முதலிய தெய்வீக மலர்கள், சந்தனம் முதலிய பொருள்களின் நறுமணத்தோடிருப்பவள். பூமியில் கிடைக்கும் சந்தனம், குங்குமப்பூ, கஸ்தூரீ ஆகியவற்றின் மணத்தாலும் நிறைந்தவள்.

வேதமும், "கந்தத்வாராம் துராதர்ஷாம்" என்கிறது.

486. ஶ்யாமாபா - பசுமை கலந்த கருப்பு நிறம் உள்ளவள். மேகம் முதலியவற்றில் காணப்படும் கருப்பு நிறம். 16 வயது கன்யைக்கு ஶ்யாமா என்று பெயர். அந்த ரூபத்தில் இருப்பவள். சியாமளாதேவி இருதய கமலமான அனாஹதத்தில், இரண்டு முகங்களோடு, அக்ஷமாலையை உடையவளாக வர்ணிக்கப் படுகிறாள். சியாமளா என்பது தமிழில் யாமளை என்று வரும்.

காளிதாஸன் தனது சியாமளா தண்டகம் என்ற கிரந்தத்தின் இறுதியில், ''கிம் ந ஸித்யேத்வபு : ஶ்யாமலம் கோமலம் சந்த்ரசூடாந்விதம் தாவகம் த்யாயத :'' என்கிறார்.

அதாவது, அதிகோமளமும், சியாமளமும், சந்த்ரகலை அணிந்ததுமான உன் திரு உருவை த்யானிப்பவனுக்கு எந்த சித்தி தான் சாத்தியமாகாது ? அவனுக்கு சமுத்திரம் விளையாடும் குளம். இந்திரனுடைய நந்தவனம் விளையாடும் சோலையாகும். பூலோகம் பத்ராஸனமாகும். ஸரஸ்வதி பணிப்பெண்ணாவாள். ஸ்ரீ தேவி தானாகவே வந்து அவனது வேலைக்காரி ஆகின்றாள்.

அம்பாளின் மாதுர்ய வசனத்தை, ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் ''நிஜ ஸல்லாப மாதுர்ய விநிர்பர்த்ஸித கச்சபீ'' என்கிறது.

தன்னுடைய பேச்சின் இனிமையால் கச்சபீ எனப்படும் ஸரஸ்வதி தேவியின் வீணையையும் வென்றவள்.

கச்சபீ என்பது சரஸ்வதியின் வீணையின் பெயர்.

வீணையில் ஸாஹித்யங்களின் ஒலிகேட்காது. ஸ்வர ஒலி மட்டும் தான் கேட்கும். ஆனால் ஸரஸ்வதீ-நாதரூபிணி, சப்தரூபிணி என்பதால் அவள் வீணையில் அக்ஷர ஒலியும், ஸ்வர நாதத்துடன் சேர்ந்து ஒலிக்கும். ஆனாலும் அவ்வக்ஷர ஒலி கிளி, சிசு இவர்களது மழலை போலவே ஸ்பஷ்டமாகப் புரியாது. இப்படிப்பட்ட ஸரஸ்வதீ தேவியின் வீணை ஒலியையும் தேவியின் பேச்சின் இனிமை வென்றுவிடுகிறது.

இந்த வாக்கினிமையை விளக்குவதாக ஸௌந்தர்ய லஹரீ (66-வது பாடல்) ஸ்லோகம் ''விபஞ்ச்யா காயந்தீ'' - சொல்கிறது. ஸரஸ்வதீ தேவி வீணை வாசிக்கும் போது, அதன் இனிமையை ரசித்த தேவீ ஸபாஷ் என்று வாய் விட்டு கூற முற்பட்டதுமே, தேவியின் வாக்கின் இனிமையினால் வெட்கிய ஸரஸ்வதீ தன் வீணையை உறையிலிட்டு மூடினாள் என்று கூறப்படுகிறது.

பின்னும் அபிராமிபட்டர் (70) 'கண்களிக்கும்படி கண்டுகொண்டேன் கடம் பாடவியில் பண் களிக்கும் குரல் வீணையும் கையும் பயோதரமும்' என்பார். ஸரஸ்வதியின் கடாக்ஷம் பெற இந்தப் பாடலை, பாராயணம் செய்வர்.

## 16. அடியேனையும் ஆண்டுகொண்ட அதிசயம்.

*கிளியே கிளைஞர் மனத்தே கிடந்து கிளர்ந்து ஒளிரும்*
*ஒளியே ஒளிரும் ஒளிக்கு இடமே எண்ணில் ஒன்றும் இல்லா*
*வெளியே வெளிமுதற் பூதங்கள் ஆகிவிரிந்த அம்மே*
*அளியேன் அறிவு அளவிற்கு அளவானது அதிசயமே !*

**(முக்காலமும் உணரும் ஆற்றல் உண்டாக)**

| | |
|---|---|
| கிளியே | கிளியைப் போன்ற திருமேனி உடைய தேவியே |
| கிளைஞர் மனத்தே கிடந்து | உன்னையே அண்டின உறவினரான சாக்த அன்பர்களின் உள்ளத்தில் இருந்து |
| கிளர்ந்து ஒளிரும் | மேலும் மேலும் ஓங்கி வளரும் |
| ஒளியே | பிரகாசமே |
| ஒளிரும் ஒளிக்கு | தோற்றமாய் இருக்கின்ற ஒளிகளாகிய சந்த்ர, சூரிய, அக்னிகளின் |
| இடமே | ஆதாரமாய் இருப்பவளே |
| எண்ணில் | ஆராய்ந்து பார்க்குமிடத்து |
| ஒன்றுமில்லா வெளியே | ப்ரக்ருதி சம்பந்தமே இல்லாத வெறும் பாழே ! |
| வெளி முதல் பூதங்களாகி | ஆகாயம் முதலாக உள்ள பஞ்ச பூதங்களாக |
| விரிந்த | விகஸித்த |
| அம்மே | யாவற்றிற்கும் தாயே ! |
| அளியேன் | இரக்கத்திற்குரிய அடியேனது |
| அறிவு அளவிற்கு அளவு | சிற்றறிவிற்கும் அளவாக |
| ஆனது | உன்னை சுருக்கி கொண்டது |
| அதிசயமே ! | வியக்கத்தக்கதே ! |

கிளியைப் போன்ற திருமேனியை உடைய தேவி ! உன் உறவினராகிய அன்பர்களின் மனத்தே நிலைபெற்று ஒரு காலைக்கு ஒரு கால் விளங்கித் தோன்றும் ஒளியே ! விளங்குகின்ற ஒளிக்கெல்லாம் ஆதாரப்பொருளே ! எண்ணிப் பார்க்கும் போது எந்தத் தத்துவமும் ஆகாமல் எல்லாம் கடந்து நின்ற பரவெளியே ! ஆகாசம் முதலிய ஐம்பெரும் பூதங்களுமாகி விரிந்த தாயே !

இவ்வளவு பெரியவளாகிய நீ, இரங்கத்தக்க அடியேனது சிற்றறிவின் எல்லைக்கு உட்பட்டது அதிசயமல்லவா ! (வியப்பு தருவதாகும்)

இனிய மொழியாலும், பச்சை நிறத்தாலும் தேவி கிளியைப் போல விளங்குகிறாள். வேதமாகிய மழலைச் சொல்லைப் பேசும் கிளி என்று குமரகுருபரர் பாடுகிறார்.

''எழுதாச்சொல் மழலைததும்பு பசுங்குதலைச் சோலைக் கிளியே''

எம்பெருமாட்டியை த்யானம் செய்பவர்களுக்கு அவள் ஒளி வடிவாகக் காட்சி தருவாள். அவளுடைய தேஜோமய உருவத்தைத் தியானிக்கிறார்கள். அம்பிகை தன் ஜோதி வடிவத்தை அன்பர்கள் உள்ளத்தே நிறுத்தி மேன்மேலும் ஒளிவிடும் படி செய்கிறாள்.

''அகந்தை கிழங்கை அகழ்ந்தெடுக்கும்

தொழும்பர் உளக்கோயிற்கு ஏற்றும் விளக்கே''-குமரகுருபரர்

தேவர்களே ஒளிமயமான திருஉரு உடையவர்கள் என்றால் அம்பிகையைப் பற்றி சொல்ல வேண்டுமா என்ன ? அவள் ஒளிவடிவை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்

• 449. காந்தி : காந்தி ரூபமாக இருப்பவள். பிறரை வசீகரிக்கும் மேனி ஒளி காந்தி எனப்படும். பரப்ரஹ்மத்தின் காந்தியால் ஸுர்யன், சந்திரன் முதலியோர் ப்ரகாசிக்கிறார்கள் என்று ஸ்ருதி கூறுகிறது. காந்தி என்பது இச்சா சக்தியைக் குறிக்கும். 452. தேஜோவதி : தேஜஸ்ஸை (ஒளியை) உடையவள். 414. ஸ்வப்ரகாஶா :- ஸ்வயம் ப்ரகாசமாக இருப்பவள். அதாவது தன்னிடமிருந்து வேறல்லாத ப்ரகாசத்துடன் கூடியவள். அதன் ப்ரகாசத்தாலேயே (ஒளியாலேயே) மற்ற எல்லாப்பொருள்களும் விளங்குகின்றன. அதை ப்ராகாசிக்கச் செய்யும் பொருள் ஒன்றும் கிடையாது. அது ஸ்வயம் ஜ்யோதிஸ், ஸ்வப்ப்ரகாஶம் எனப்படும். 806. பரஞ்ஜ்யோதி :- பேரொளியாக இருப்பவள். 596. ரவிப்ரக்யா - சூரியனைப் போன்று காந்தி உடையவள்.

உலகிற்கு ஒளி தரும் பொருள்கள் மூன்று : சூரியன், சந்திரன், அக்னி. அவற்றுள் இருந்து, அவற்றுக்கு ஒளி தந்து அவை பரப்பும் ஒளிக்கு இடமாக ஆதாரமாக விளங்குகிறாள்.

275. பானு மண்டல மத்யஸத்தா - சூரிய மண்டலத்தின்

நடுவில் இருப்பவள். அம்பாளை சூர்ய மண்டலத்தின் நடுவில் இருப்பவளாகத் த்யானித்து வழிபடுவது ஒரு முறை. ஸூர்ய மண்டலத்தில் தெரியும் ஹிரண்மயமான புருஷன் பரமேச்வரன் என்று கூறப்படுகிறது. அதே மூர்த்தியை தேவியாகக் கூறுகிறது இந்த நாமம். அனாஹத சக்ரத்தை பானுமண்டலம் என்று சொல்வதுண்டு. அதில் உறையும் குண்டலினீ வடிவானவள்.

240. சந்த்ரமண்டல மத்யகா - சந்திர மண்டலத்தின் மத்தியில் இருப்பவள். சிரஸில் உள்ள ஸஹஸ்ரார கமலத்தில் எப்போதும் பூர்ணமாக உள்ள கலைகளையுடைய சந்த்ர மண்டலம் இருப்பதாகச் சொல்லப்படும். அந்தச் சந்திரமண்டலத்தின் நடுவில் விளங்குபவள் தேவீ. நம் சரீரத்தில் உள்ள குண்டலினீ சக்தியானவள் விழித்தெழுந்து ஷட்சக்கரங்களை பேதித்து ஸஹஸ்ரார கமலத்திற்கு வந்து பரமசிவனைச் சேருவதனால் சந்த்ரமண்டலம் எனப்படும் ஸஹஸ்ரார கமலத்தை வந்து அடைந்தவள் என்றும் பொருள் உண்டு.

பௌர்ணமியன்று லலிதா தேவியை வானில் தோன்றும் சந்த்ரபிம்பத்தில் விளங்குவதாகப் பாவித்து, ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தைப் பாராயணம் செய்வதால் ஸர்வ வியாதி நிவாரணமும் நீண்டாயுளும் கிட்டும் என்று அதன் பலச்ருதி கூறுகிறது. இம்முறைக்கு ஆயுஷ்கர ப்ரயோகம் என்று பெயரும் குறிப்பிட்டிருக்கிறது.

சிவன் அக்னியின் சிகையிலிருப்பதாகவும், அம்பாள் சந்திர மண்டலத்தில் இருப்பதாகவும் சிவபுராணம் கூறுகிறது.

சந்திர மண்டலமே ஸ்ரீசக்ரம் என்பது ரஹஸ்யம்.

352. வஹ்னி மண்டல வாஸினீ - அக்னி மண்டலத்தில் வசிப்பவள். அக்னி மண்டலம் மூலாதாரத்திலும் பரமாகாசத்திலும் இருப்பதாகச் சொல்லப்படும். வஹ்னி - என்றால் நெருப்பு, மூன்று என்ற எண்ணையும் குறிக்கும். மூன்று மண்டலங்களில் (அக்னி, சூர்ய, சந்திர மண்டலங்களில்) வஸிப்பவள். இவை முறையே மூலாதாரத்தில், அனாஹதத்தில், ஸஹஸ்ராரத்தில் இருக்கின்றன. மூன்று மண்டலங்கள் என்பது பஞ்சதசீ மந்த்ரத்தின் மூன்று கூடங்களையும் குறிக்கும்.

எண்ணில் ஒன்றும் இல்லா வெளியே

609. தஹராகாஶரூபிணீ - மனிதனுடைய ஹ்ருதயமாகிற ஸூக்ஷ்மமான குகையில் ஆகாச வடிவமாக விளங்குபவள். ஒவ்வொரு ஜீவனுடைய ஹ்ருதய ப்ரதேசத்தில் மிக ஸூக்ஷ்மமான ஒரு மறைவிடம் (குகை) உள்ளது. அதில் விளங்கும் ஆகாச வடிவினள். ஆகாச என்றால் வெற்றுவெளி, சூன்யம்,இடம் என்று பொருள். மனித சரீரத்தின் ஹ்ருதயத்தில் அதி ஸூக்ஷ்மமான வெளி இருக்கிறது. இதுவே பரப்ரஹ்மம், தேவி என்றெல்லாம் வணங்கப்படுகிறது.

782 பராகாஶா - சிறந்ததான ஆகாசமாக இருப்பவள். எங்கும் விளங்குவது ஆகாயம். அது இருப்பதை உணரமுடிகிறது. ஆனால் காணக் கூடிய பரிமாணம் இல்லை. ஆகையால் ஆகாயம் ஸூக்ஷ்மமானது. இந்த ஆகாய வடிவில் இருப்பவள். ஆகாயம் என்பதால்-பரம்பொருள்-பரஹ்மத்தைக் குறிக்கிறது. பரப்ரஹ்ம ஸ்வரூபிணியான அம்பாள் பராகாஶ ஸ்வரூபமாக இருக்கிறாள்.

வெளிமுதற் பூதங்கள் ஆகி விரிந்த அம்மே !

பஞ்சபூதங்களில் ஒன்று பூதாகாசம். பூதங்கள் தோன்றும் போது முதலில் ஆகாசமும் பின்பு வாயு,அக்கினி, நீர், நிலம் தோன்றும். இந்த ஐந்து பூதங்களாக விரிந்து நிற்பவள் அபிராமியே. ஞானம் இல்லாதவர்களுக்குப் பூதமைந்தும் விலங்கியே விகாரப் பாடாக இந்த பிரபஞ்சம் தோன்றினாலும், மெய்ஞ்ஞானம் பெற்றவர்களுக்கு யாவும் பரம்பொருளாகத் தோன்றும். இதனையே,

''பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்

பரத்தில் மறைந்தது பார்முதல் பூதமே'' - என்கிறது திருமந்திரம்.

தோன்றும் முறையில் முன்னே வருவது ஆகாசம். அது விரியும் முறை. ஒடுங்கும் போது ஆகாசம் கடைசியில் நிற்கும்.

949. பஞ்ச பூதேசி - பஞ்ச பூதங்களின் ஸத்தாரூபமாக அம்பாள் இருப்பதால் அவற்றுக்கு ஈஸ்வரியாக சொல்லப் படுகிறது.

பெரியவர்களுக்குத் தம்முடைய குறைகளே மிகுதியாகத் தோன்றும். தன்னுடைய இணையற்ற கருணையினால், அன்னை

அபிராமி, தன் அன்பர்களின் குறைகளை எண்ணாமல், அவர்களை ஆட்கொள்வாள். இதனை நினைந்து, நினைந்து அந்த அன்பர்களும் உருகுவார்கள்.

அபிராமிபட்டரும், தாயே ! என்னுடைய அறிவு சிற்றறிவு. நீயோ, உருவாகியும், உருவின்றியும் விரிந்து பரந்தவள். இவ்வளவு பெரியவளான நீ என்னுடைய சிற்றறிவுக்கும் அகப்பட்டு அதற்குள் நின்று (இரங்கத்தக்க) என்னை ஆட்கொண்டாயே ! இது என்ன அதிசயம் ! என்று வியந்து பாராட்டுகிறார். கருவூர்சித்தர், ''அன்னமாய் விசும்பு பறந்தயன் தேட, அங்ஙனே பெரிய நீ சிறிய என்னையாள் விரும்பி என் மனம் புகுந்த எளிமையை என்றும் நான் மறக்கேன்'' -என்கிறார்.

808. பரமாணு - மிகவும் ஸூக்ஷ்மமான அணுவாக இருப்பவள். கடோபநிஷத் (11-20) அணோரணீயான் (அணுவை விடச் சிறிய அணு) என்கிறது. அறிய முடியாத ரூபத்தை உடையவள். அணு-மந்த்ரம். பரமாணு-மிகவும் உயர்ந்த மந்த்ர ரூபமாக இருப்பவள்.

திருமூலரும் (திருமந்திரம் - 1239),

''ஆயும் அறிவுங் கடந்தணு ஆரணி'' - என்பார்.

தாய், சேய் எவ்விடத்து இருந்தாலும் அவ்விடத்தே அவள் வருவாள் என்று சொல்லிய அபிராமிபட்டர், இந்தப்பாடலில் அவர், அன்னை சேய்க்காக தன் உருவங்களையும் கூட மாற்றிக் கொண்டு வரத்தயங்க மாட்டாள் என்கிறார்.

## 17. அன்னையின் அதிசய வடிவு.

*அதிசயமான வடிவுடையாள் அரவிந்தமெல்லாம்*
*துதிசய ஆனன சுந்தரவல்லி, துணைஇரதி*
*பதிசயமானது அபசயமாக முன் பார்த்தவர் தம்*
*மதிசய மாக அன்றோ வாமபாகத்தை வவ்வியதே !*

**(கன்னிகைகளுக்கு நல்ல வரன் அமைய)**

| | |
|---|---|
| அதிசயமான | வியக்கத்தக்க |
| வடிவுடையாள் | திருவுருவத்தை உடைய அபிராமி |
| அரவிந்தம் எல்லாம் | தாமரை மலர்கள் அனைத்தும் |
| துதி | துதி செய்கின்றதான |
| சய ஆனன | வெற்றியையுடைய திருமுகத்தை உடைய |
| சுந்தரவல்லி | அழகிய பூங்கொடி போன்றவள் ! |
| துணை இரதிபதி | துணைவியாகிய இரதியின் கணவனாகிய மன்மதன் |
| சயமானது | தோல்வியே கண்டறியாத வெற்றியானது |
| அபசயமாக | தோல்வியுறும்படி |
| முன் பார்த்தவர் தம் | முன்பு நெற்றிக் கண்ணால் பார்த்த சிவபெருமானின் |
| மதி | திருவுள்ளம் (சங்கல்பமானது) |
| சயமாக அன்றோ | தனக்குரிய வெற்றியாக மாற்றி |
| வாமபாகத்தை | அவருடைய இடது பாகத்தை |
| வவ்வியதே | ஆக்ரமித்தது. |

வியக்கத்தக்க அதிஅற்புதமான அழகே உருவான திருவுருவத்தை உடையவளாகிய அபிராமி, தாமரைகளெல்லாம் துதிக்கும் வெற்றியையுடைய திருமுகத்தையுடைய அழகுக் கொடி போன்றவள் !

துணைவியாகிய இரதியின் கணவனாகிய மன்மதன் (தோல்வி அறியாதவன்) இதுவரை பெற்ற வெற்றியானது, தோல்வியாகும்படியாக, முன்பு நெற்றிக்கண்ணால் பார்த்தவருடைய திருவுள்ளம் தனக்குரிய வெற்றியாக மாற, அதனால் அல்லவோ அப்பெருமாட்டி அவருடைய இடப்பாகத்தை மேற்கொண்டது ?

மனிதர்களுக்கு இருப்பது போலவே இறைவனுக்கும் ஹ்ருதயம் இடது பக்கம் இருக்க வேண்டும் என்றதாலும்,

ஹ்ருதயமே துடிப்பு இடமாக இருப்பதாலும் சிவத்தில் ஏற்படும் துடிப்பே சக்தியாதலாலும் அம்பாளை இடது பக்கம் வைப்பது மரபு. அபிராமிபட்டரின் காவ்ய ரசனை ததும்பும் பாடல் இது.

இணைபிரியாமல் இருவரும் இணைந்தே செயல்படும் ரதி மதன மிதுனத்தில் மன்மதனை எரித்து ரதியைப் பிரித்தார். அதற்குப் பழிவாங்குவது போலவும் அவனுக்கு மறுபடியும் உயிர் கொடுப்பதற்காகவும் சக்தி பரமசிவனின் சரீரத்தை ஆக்ரமித்துக் கொண்டாள். பின்னும் அபிராமிபட்டர் (83) ''விழியால் மதனை அழிக்குந் தலைவர் அழியா விரதத்தை அண்டம் எல்லாம் பழிக்கும்படி ஒரு பாகம் கொண்டு ஆளும் பராபரையே'' என்பார்.

84. ஹர நேத்ராக்னிஸந்தக்த காமஸஞ்ஜீவநௌஷதி : ஹரனின் கண்களிலிருந்து தோன்றிய நெருப்பினால் பஸ்மமான மன்மதனுக்கு ஸஞ்ஜீவினி எனும் பச்சிலையாக அவனுக்கு உயிர் கொடுத்தவள். ஸஞ்ஜீவினி என்பது ஒரு மூலிகை. இறந்தவனைப் பிழைக்க வைக்கும் சக்தி உள்ளது. ஜீவாது என்றும் இதற்குப் பெயர்.

பண்டாஸுர வதத்திற்குப் பிறகு தேவி ப்ரஹ்மாதிகளால் ப்ரார்த்திக்கப்பட்டு மன்மதனை உயிர்பெற்றெழச் செய்த வ்ருந்தாந்தம் கூறப்படுகிறது. எப்படி தகப்பனால் தண்டிக்கப்பட்ட குழந்தை தாயிடம் ஆதரவு தேடுமோ அவ்வாறே தகப்பனான பரமசிவனால் எரிக்கப்பட்ட மன்மதனும் மாதாவான அம்பாளால் திரும்பவும் உயிர்ப்பிக்கப்படுகிறான்.

சக்தியைப் பிரிந்திருந்த சமயம் சிவன் மன்மதனை எரித்தது. சக்தியுடன் சேர்ந்தவுடன் மன்மதனுக்குப் புத்துயிர் வழங்கப்பட்டது. பரமசிவனைப் பார்க்கும் முன் தேகத்தோடு இருந்தான். அவன் எரிந்த பின் தேகமில்லாதவனானான். அம்பாளின் கருணையால் இரதியின் கண்களுக்கு மட்டும் தெரியும்படியான சூக்ஷ்ம தேகத்தைப் பெற்றான். அநங்கன் என்ற பெயரும் பெற்றான்.

அதாவது ஆன்மா அவித்யையினால் சரீரத்தை அடைகின்றது. பரமாத்மாவின் பார்வையால் அவித்யை விலகி சரீரம் நழுவி விடுகிறது. பின் அது ப்ரஹ்ம சொரூபத்தை அடைகிறது என்று அழகாக விளக்கம் தருகிறார் ஸ்ரீ பாஸ்கர ராயர். அதாவது, விஷய காமம் எரிந்த பின் தான் ஆத்ம காமம் பிறக்கும்.

621. திவ்ய விக்ரஹா - அதிரமணீயமான வடிவுடையவள். திவ்ய-ஆகாசம். விக்ரஹ - யுத்தம். ஆகாயத்தில் யுத்தம் செய்தவள். சும்பாஸுரனுடன் நடந்த யுத்தத்தில் இருவரும் பூமியிலிருந்து உயரக் கிளம்பி ஆகாயத்தில் சண்டையிட்டனர்.

390. நிர்வாண ஸுக தாயினி - மோட்ச சுகம் தருபவள். வாண (அல்லது பாண) - சரீரம். நிர்வாண - என்றால் சரீரமில்லாத என்று பொருள். அதாவது வாக்கால் வர்ணிக்கமுடியாத ஆனந்தத்தை அம்பாள் தருகிறாள். கூர்ம புராணத்தில் ஹிமவானைக் குறித்து அம்பாள் சொல்வது

''என்னை உதாசீனம் செய்தால், ஓ ! மலையரசனே ! உன்னால் மிக உயர்ந்த நிர்வாண பதத்தை அடைய முடியாது. ஆகையால் என்னை சரணம் அடை.'' (மாம் அனாத்ருத்ய)

392. ஸ்ரீ கண்டார்த ஶரீரிணீ -பரமசிவனைப் பாதி உடலாகக் கொண்டவள்.

ஸ்ரீ என்றால் விஷம் என்பது ஒரு பொருள். விஷத்தை கழுத்தில் உடையவர். ஆதலால், பரமசிவனுக்கு ஸ்ரீகண்டன். (தமிழில் திருநீலகண்டன் என்பர்.) என்று பெயர். பரமசிவனை பாதி சரீரமாக உடையவள் அல்லது அவரோடு வேறுபடாத பாதி சரீரத்தை உடையவள் என்றும் பொருள் கூறலாம்.

616. அமேயா - அளவிட முடியாத வடிவையும், ப்ரபாவத்தையும் உடையவள். அவளுடைய ஸ்வரூபத்தை அளவிட முடியாது. அதாவது அளவிடக் கூடிய வஸ்து ஏதுமில்லை என்ற பொருள். ஸ்ருஷ்டிக்கப்பட்ட பொருட்கள் எல்லாம் அளவிடப்படக் கூடியவை. படைக்கும் சக்தி அளவிட முடியாதது.

சிவபெருமான் ஞான சொரூபி. பரமயோகி. மன்மதனை எரித்த ஞானக்கண்ணுடையவருடைய உள்ளத்தை மாத்திரமா கொண்டாள் பிராட்டி ? அவருடைய உடலின் பாதிப் பாகத்தையே வவ்விக்கொண்டாள்.

அன்னையின் வெற்றி அம்பினால் அடைந்ததல்ல ! அன்பினால் அடைந்தது ! வெற்றி கொண்ட நாட்டில் குடியேறுவது மன்னர் வழக்கம். பலரை வென்று வெற்றி கொண்ட ஒரு பெரு

வீரனை வெற்றி கொண்ட மகாராணியாக, சக்கரவர்த்தினியாக விளங்குகிறவள் இராஜராஜேசுவரியாகிய அம்பிகை.

அன்னை ஆண்டவனை ஆக்கிரமித்ததை அபிராமிபட்டர் ''வாமபாகத்தை வவ்வியதே'' என்று நயம்பட வர்ணிக்கிறார். அதாவது சிவபெருமான் தன் வாம பாகத்தில் அம்பிகையை வைத்திருக்கிறார் என்று சொல்லாமல், அவர் வாம பாகத்தை அம்மை எடுத்துக்கொண்டாள் என்கிறார்.

அதாவது, அபிராமிபட்டர், அன்னையை அர்த்தேசுவர நாரீயாக த்யானித்தார். அருணகிரி நாதரும்,

''ஒருவரைப் பங்கில் உடையாள் திரியம்பகனைப்

பாகத்தில் வைக்கும் பரம கல்யாணி'' - என்று சொல்கிறார்.

ஒட்டக்கூத்தரும், 'பாகன் அகம் குழைவித்த பவித்ர பயோதரி' என்பர்.

861. காந்தார்த விக்ரஹா :- தன் கணவனின் சரீரத்தில் பாதி ரூபத்தைக் கொண்டவள்.

ஆதிசங்கரரும் செளந்தர்ய லஹரியில் (45) ''அராலை:ஸ்வா பாவ்யா'' - ''அரவிந்த மெல்லாம் துதி'' என்ற கருத்தையும், பரமசிவன் காமதகனம் செய்த கருத்தையும் வர்ணித்திருக்கிறார். அங்கு, ''பரிஹஸ்தி பங்கேருஹருசிம்'' - அதாவது தாமரை புஷ்பத்தின் அழகு, மென்மை, மணம், நிறம், இவற்றை பழிக்கின்ற அம்பாளின் லாவண்யம். மேலும், ''ஸ்மரதஹனசக்ஷுர் மதுலிஹ மாத்யந்தி'' - மன்மதனை எரித்தவராகிய பரமசிவனுடைய கண்களாகிற தேனீக்கள் மயக்கத்தை அடைகின்றன.

வல்லி - என்று அபிராமிபட்டர் கவிநயத்துடன் சொல்வது, சிந்திக்கத் தக்கது. வல்லி என்றால் கொடி, அது தாவிப் படர கொம்பு தேவையல்லவா ? சக்தியாகிற கொடி, சிவமாகிற கொம்பையன்றி வேறு எங்கு படர முடியும் ? பின்னும் பாடல் 48-ல், 'படரும் பரிமள பச்சைக்கொடி...' என்பர் .

அபிராமி என்ற திருநாமத்திற்கு அபரிமிதமான (அளவிட முடியாத) அழகுடையவள் என்பது பொருள்.

## 18. காலனும் காலும்

*வவ்விய பாகத்து இறைவரும் நீயும் மகிழ்ந்திருக்கும்*
*செவ்வியும் உங்கள் திருமணக்கோலமும் சிந்தையுள்ளே*
*அவ்வியம் தீர்த்தென்னை ஆண்ட பொற் பாதமும் ஆகி வந்து*
*வெவ்விய காலன் என்மேல்வரும் போது வெளிநிற்கவே.*

**(மரண பயம் நீங்க)**

| | |
|---|---|
| வவ்விய பாகத்து | உன்னால் ஆக்ரமிக்கப்பட்ட இடது |
| இறைவரும் | பாகத்தை உடைய சிவபெருமானும் |
| நீயும் | அவரது இடது பாகத்தை விட்டு அகலாத பராசக்தியாகிய நீயும் |
| மகிழ்ந்திருக்கும் செவ்வியும் | மகிழ்ந்திருக்கும் காட்சியின் அழகும் |
| உங்கள் திருமணக்கோலமும் | உங்கள் திருமணக் கோலமும் |
| சிந்தையுள்ளே | (எப்போதும்) என் உள்ளத்தில் இருப்பதால் |
| அவ்வியம் | எனது மனக் கோணல்களை (அகங்கார மமகாரம்) |
| தீர்த்து | நசிக்கச் செய்து |
| என்னை ஆண்ட | அடியேனை ஆண்டு கொண்ட |
| பொற்பாதமும் ஆகிவந்து | பொலிவு பெற்ற திருவடியுமாகி நீ எழுந்தருளி வந்து |
| வெவ்விய காலன் | கொடிய யமன் |
| என் மேல் வரும் போது | (உயிரைக் கொள்ள) என்னை நோக்கி வரும்போது |
| வெளி நிற்கவே | (என்முன்) வெளிப்பட்டு நின்று அருளல் வேண்டும். |

தாயே, நீ பற்றிக் கொண்ட வாமபாகத்தையுடைய சிவபெருமானும் நீயும் ஒன்றி (அர்த்தநாரீ சொரூபமாக) மகிழ்ந்திருக்கும் நிலையில் உள்ள கோலமும், இருவரும் பிரிந்து, பின் ஒருவரை ஒருவர் மணந்து கொண்ட திருமணக் காட்சியைக் காட்டும் கோலமும், என் உள்ளத்தே இருந்த அகந்தையைப் (ஆணவ மலங்களை) போக்கி, என்னை ஆட்கொண்ட பொலிவு பெற்ற திருவடியுமாகி நீ எழுந்தருளி வந்து, கொடுமையான காலன் உயிரைக் கொள்ள என்னை நோக்கி வரும்போது என் கண் முன் தோன்றி நின்றருளல் வேண்டும்.

அம்பிகையின் சரணார விந்தங்களைப் பற்றிக் கொண்டவர்களுக்கு யமபயம் இல்லை.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் 181. ம்ருத்யுமதனீ -பக்தர்களுக்கு மரணபயம் இல்லாமல் செய்பவள். மரணம் சரீரத்திற்கு மட்டும் தான். ஆத்மாவிற்கு இல்லை. தயிரைக் கடந்து வெண்ணெய் எடுப்பது போல மரணம் என்ற பயத்தை நன்கு கடைந்து, தத்வ ஞானத்தை ஏற்படுத்தி பயத்தைப் போக்குகிறாள்.

552. ஸர்வ ம்ருத்யு நிவாரிணீ - எல்லாவித மரணங்களையும் (அகால மரணம், வயதானதால் ஏற்படும் மரணம்) தடுப்பவள்.

'ஞாத்வா தேவம் ம்ருத்யு முகாத் ப்ரமுச்யதே' (கடோபநிஷத் (1-3-15) 'தமேவம் ஞாத்வா ம்ருத்யு பாஶாந்ஶ சினத்தி' (ஸ்வேதாஸ்வதர உப. 4 -15)

557. காலஹந்த்ரீ - காலனை (ம்ருத்யுவை) அழிப்பவள். ப்ரஹ்மம் காலனுக்கும் காலனாக இருப்பதாக சுருதி கூறுகிறது.

749. ம்ருத்யு தாருகுடாரிகா - மரணம் என்ற பயத்தை வெட்டும் கோடாலியாக இருப்பவள்.

அதாவது அம்பாளையே உபாஸிப்பவர்களுக்கு மரணபயம் கிடையாது. கொடியவனாகிய யமன், உயிரை உடம்பினின்றும் பிரிப்பதற்காக மரணகாலத்தில் என்னைப் பற்றவரும்போது, நீ என் முன் பிரத்தியட்சமாக எழுந்தருளிக் காப்பாற்ற வேண்டும் என்று அபிராமிபட்டர் அன்னையிடம் வேண்டுகிறார் !

இது போலவே இன்னும் சில பெரியோர்களும் வேண்டுகிறார்கள்.

அப்பர், "சாதல் நாள் நாயேன் உன்னை எங்குற்றாய் என்ற
போதால் இங்குற்றேன் என் கண்டாயே" - என்பர்.

"உயிர் மங்கும் பொழுது கடிதே மயிலின் மிசை வர வேண்டும்" (திருப்புகழ்)

"கார்மா மிசைகாலன் வரிற் கலபத்தேர் மாமிசை வந்தெதிர்ப்படுவாய் (அநுபூதி)
கூற்றுவன் பாசத்தினால் பிடிக்கும் பொழுது வந்து அஞ்சலென்பாய் (அலங்காரம்)

மாகத்தை முட்டி வரும் நெடுங் கூற்றன் வந்தாலென் முன்னே
தோகைப் புரவியல் தோன்றி நிற்பாய்" - அலங்காரம்

"அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன்" - ஆழ்வாரும்.

நாம் நம் வீட்டில் சென்று கதவைத் தட்டுகிறோம். உள்ளே இருப்பவர்கள், யார் என்று கேட்கும் போது, ''நான்'' என்று பதில் சொல்கிறோம். மறுபடியும், யார் என்று கேட்டால், ''நான் தான்'' என்று அழுத்தமாகச் சொல்லுகிறோம். அதாவது அகங்காரமே நானாகவும், தானாகவும் வடிவெடுக்கிறது.

ஸ்ரீ காஞ்சிப் பெரியவாளும் இதற்கு ஒரு உதாரணம் கொடுத்தார். நாம் உண்ணும் உணவில் குழம்பு, ரஸம் - என்ற இரண்டு உண்டு. இதில் உள்ள முக்கிய வேறுபாடு. குழம்பில், 'தான்' இருக்கும். ரஸத்தில் அது இல்லை.

அதாவது ஆத்ம வாழ்வில் ''தான்'' இருந்தால் குழப்பம். (குழம்பு) தான் இல்லாது தெளிவாக இருக்கும் போது ரஸம் தோன்றும். பரம்பொருளை ரஸம் என்று வேதம் கூறுகிறது. 'ரஸோ வை ஸ :' (தைத்திரீய உபநிஷத் 6-1) 311. ரஸ்யா - ஆத்மானந்த ரஸத்தை ஊட்டுபவள்.

அகந்தை (அவ்வியம்) ஒழிந்தால் இன்பம் பெறலாம். அதை எப்படி ஒழிப்பது ? அபிராமி அன்னையின் திருவடியை எண்ணி, எண்ணி இந்த அகந்தையினின்றும் அறவே நீங்கியவர் அபிராமி பட்டர்.

அன்னையின் திருவடிகள் - அகந்தையை அறவே அழித்து ஆத்மஞானம் தருவது.

திருக்கடவூர் கால சங்கார க்ஷேத்திரம். சிவபெருமான் காலனை உதைத்தார். அது அவரது இடக்கால் அல்லவா ? எனவே காலனை உதைத்தது அன்னையின் திருவடி என்று சொல்லவும் வேண்டுமா ? ஆகவே காலனால் வரும் துன்பத்தைப் போக்க வேண்டும் என்று சொல்ல வரும்போது அம்பிகையின் பொற்பாதத்தை இறுதியாகச் சொல்கிறார்.

1. சிவபெருமானும் அம்பிகையும் ஒருவருள் ஒருவராக மறைந்திருக்கும் சமயம். (999. ஶிவஶக்த்யைக்ய ரூபிணீ)

2. பாதிப்பாதியாக இணைந்திருக்கும் செவ்வி.

3. தனித்தனியாக இருந்து கணவன் மனைவியாக வீற்றிருக்கும் திருக்கோலம்.

வாம பாகத்தை வவ்வியது-அர்த்த நாரீசுவரத் திருக்கோலம், உலகம் தோன்று முன் இருந்த கோலம்.

548. விமர்சரூபிணீ : விமர்ச வடிவினள். சிவன் - ப்ரகாச ரூபம். சக்தி விமர்ச ரூபம். இதுவே அர்த்தநாரீச்வர தத்துவம். காளிதாஸனும் "வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தெள" (ரகுவம்சம் 1.1) என்கிறார். 'வாக்' - விமர்சம். 'அர்த்தம்' - பிரகாசம்.

சங்க நூலாகிய ஐங்குறு நூற்றின் கடவுள் வாழ்த்துப் பாடல்

"நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை உலகும் முகிழ்த்தன முறையே !!" என்கிறது.

நீலத் திருமேனியும் தூய ஆபரணங்களும் அணிந்த அம்பிகையை ஒரு பாதியிலே கொண்ட சிவபெருமானுடைய இரண்டு திருவடி நிழலின் மேல், கீழ், நடு என்று அமைந்த மூன்று வகை உலகங்களும் ஒன்றன்பின் ஒன்றாக முறையே தோன்றின.

மணிவாசகரும், "தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையுமுடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந் தூதாய் கோத்தும்பீ" - என்பார்.

மக்கள் முதலில் திருமணம் செய்து கொண்டு அப்பால் இணைவார்கள். ஆனால் இங்கே முதலில் ஒன்றாக இருந்தவர்கள் பிறகு பாதி பாதியாகத் தோன்றினர். பின்னால் ஒருவரை ஒருவர் பிரிந்து திருமணம் செய்து கொள்கிறார்கள். இது உலகப் படைப்புக்காக எம்பெருமாட்டி செய்கிற நாடகம். இந்த மூன்று அழகிய திருக்கோலங்களையும் மனத்தினிலே த்யானித்த அபிராமிபட்டர், அம்பிகையின் அங்கங்களுள் பக்தருக்கு பற்றுக் கோடாக இருக்கும் திருவடிகளில் தன் வேண்டுகோளை சமர்ப்பிக்கிறார். அதாவது என்னை ஆட்கொண்ட பொற்பாதத்தோடு வரவேண்டும் என்று தாயிடம் சேயாகக் குரல் கொடுக்கிறார்.

இந்தப் பாடலில் அபிராமிபட்டரின் சாதனையும், அவர் பிரார்த்தனையும் காண முடிகிறது.

அன்னையை எப்போதும் தியானம் செய்து தமது உள்ளத்தில் இருத்தி வைப்பவர்களுக்கே அவள் மரண சமயத்தில் தரிசனம் தருவாள் என்பது குறிப்பாய் காட்டப்பட்டிருக்கிறது.

## 19. அன்னை அபிராமியின் ஸ்தூல - ஸூக்ஷ்ம ரூபங்கள்

*வெளி நின்ற நின் திருமேனியைப் பார்த்து என் விழியும் நெஞ்சும்*
*களி நின்ற வெள்ளம் கரைகண்டதில்லை கருத்தினுள்ளே*
*தெளிநின்ற ஞானம் திகழ்கின்றது என்ன திருவுளமோ*
*ஒளி நின்ற கோணங்கள் ஒன்பதும் மேவி உறைபவளே !*

**(பேரின்பம் உண்டாக)**

| | |
|---|---|
| ஒளிநின்ற | பிரகாசம் பொருந்திய |
| கோணங்கள் ஒன்பதும் | நவகோணங்களிலும் |
| மேவி உறைபவளே ! | வியாபித்து வசிப்பவளே |
| வெளி நின்ற | புறத்திலே யாவரும் காண எழுந்தருளிய |
| நின் திருமேனியைப் | உனது உருவத் திருமேனியை |
| பார்த்து | தரிசித்து |
| என் விழியும் | புறத்தே கண்ட கண்களும் |
| நெஞ்சும் | அகத்தே கண்ட என் உள்ளமும் |
| களி நின்ற வெள்ளம் | நிறைந்து நிற்கும் ஆனந்த வெள்ளம் |
| கரை கண்டதில்லை | எல்லையற்றதாக உள்ளது. |
| கருத்தினுள்ளே | (அதன் காரணமாக) எனது சிந்தையில் |
| தெளி நின்ற ஞானம் | தெளிந்த மெய்ஞ்ஞானம் |
| திகழ்கின்றது | ஒளி வீசுகிறது |
| என்ன திருவுளமோ | இதுவும் உன் திருவுளக்குறிப்போ ? |

ஒளி நிலையாக நிற்கும் நவகோண சக்ரத்தை விரும்பி அதில் தங்கும் அபிராமியே, புறத்திலே யாவரும் காண எழுந்தருளிய நின்னுடைய அழகிய திருக்கோலத்தைப் புறத்தும் அகத்தும் தரிசித்து, அதனால் அடியேனுடைய கண்களிலும் நெஞ்சிலும் நிலைத்து நின்ற ஆனந்த வெள்ளத்துக்குக் கரைகாண முடியவில்லை. அடியேன் உள்ளத்தில் தெளிந்து நின்ற மெய்ஞ் ஞானம் விளங்குகின்றது. இதுவும் உன் திருவுளக்குறிப்போ ?

அம்பிகையைப் புறத்தே தரிசித்து அகத்தே தியானித்தால் மிக்க இன்பம் உண்டாகும் என்பது இதன் கருத்து.

அபிராமிபட்டர் முதலில் அபிராமி அம்மையின் விக்ரஹத் திருமேனியைக் கண்டார். அதனால் எல்லையற்ற ஆனந்த மடைந்தார். அவளையே த்யானம் செய்தார். அதன் காரணமாக அஞ்ஞான இருள் அகன்று மெய்ஞ்ஞானம் பெற்றார். இதற்கு சாதகமாக இருந்த யந்திரபூஜையையும் நினைத்து அதன் ஒன்பது

கோணங்களிலும் அம்பாளை தரிசித்ததையும் கூறுகின்றார்.

அம்பாளின் வழிபாட்டில் ஸ்ரீசக்ரபூஜை - முதலிடம் வகிக்கின்றது.

நமது சமயத்தில் விக்கிரக வழிபாடு - முக்கியமான முதற்கட்டம். ஆலயங்களிலும், வீடுகளிலும் பலமூர்த்திகளைத் தொன்று தொட்டு வழிபட்டு வருகிற பழக்கம் நம் நாட்டில் இன்றும் நிலவி வருகிறது.

ஒரு பொருளுக்கு பெயரும், உருவமும் இருந்தால் தான் அது மனதில் பற்றும். அன்னை அருவமானவள் என்றாலும், அன்பர்களாகிய அடியவர்களுக்காக, பல பல வடிவங்களில் காட்சி தருகிறாள். (இது அவள் கருணை உள்ளத்தால்)

அவள் திருவருள் துணையினால், அவள் திருவுருவத்தைக் கண்ட அடியார்கள், தாம் கண்டதைப் பிறரும் தெரிந்து வழிபட (உலக நன்மைக்காக) விக்கிரங்களிலும், ஓவியங்களிலும் உருவாக்கிக் காட்டச் செய்தார்கள்.

இதனையே அப்பர்,

''அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்

இப்படியன் இந்நிறத்தின் இவ்வண்ணத்தன்

இவள் இறைவன் என்று எழுதிக் காட்டொணாதே'' என்றும் ''அருட்கண்ணால் நோக்காதார் அல்லாதாரே'' என்றும் கூறுவர்.

அதாவது அடியவர்கள் அகக் கண்ணால் கண்ட அன்னையின் திவ்ய வடிவத்தைப் பிறகு புறத்தே வடிக்கச் செய்தார்கள்.

நம்மைப் போன்ற சாமானியரும் அந்த வடிவத்தை முதலில் கண்ணால் கண்டு, பிறகு மனத்திலே பதித்தால், முறுகிய (இடைவிடாத) பயிற்சியின் விளைவாக, அந்த ஒளிமயமான திருவுருவத்தை, அகக் கண்ணினால் தரிசிக்கும் பேறு நமக்கும் கிடைக்கும்.

அகக் கண்ணில் கண்டவர்கள், முகக் கண்ணுக்குக் காட்டினார்கள். இப்போது முகக் கண்ணில் கண்டவர்கள் பின்பு அகக்கண்ணில் காணும் நிலைபெற வேண்டும்.

ஆலயங்களுக்குச் சென்று அன்னையை வணங்கும் போது, மற்ற காட்சிகளையும், எண்ணங்களையும் மறந்து, அன்னையின் திருஉருவத்தை தரிசித்து படம் எடுத்துக் கொள்ள வேண்டும். அவ்வுருவத்தை அகக் கண்ணில் நிறுத்த வேண்டும். இது அவ்வளவு எளிதல்ல. ஆகவே இடைவிடாது, புறத்தே கண்ட உருவத்தை அகத்தே நிறுத்திப் பயில வேண்டும். இந்த தியானச் சிறப்பினால் உள்ளத்திலே புகுந்த அந்த வடிவம் உயிரோவியமாகவும், சுடருருவமாகவும் மாறும். அப்பால் அதுவே இன்ப அநுபவமாகும். அதாவது, முடிவாகப் பார்த்தால், உன்முக த்யானம் செய்தால் தான் அன்னையின் அருளை அடைய முடியும்.

பிறர் பூஜை செய்வதைப் பார்த்து உருகுவது சரியை, தானே பூஜை செய்வது கிரியை, உன் முகத்திலே த்யானம் செய்வது யோகம். இறுதியில் அடைவது ஞானம்.

மேற்கூறியவை ஒன்றுக்கு ஒன்று படியாக இருப்பது. பின்னும் அபிராமிபட்டர் (பாடல் 80) ''கூட்டிய வா என்னைத் தன் அடியாரில், கண்ட கண்ணும் மனமும் களிக்கின்றவா'' என்று கூறுவர்.

இவ்வாறு, கண்ணிலே கண்டதைக் கருத்திலே பதித்து, அகக் கண்ணில் கண்டு மகிழும் அனுபவத்தைப் பெற்றவர் அபிராமிபட்டர். அந்தத் திருமேனியைக் கண்டதனால்தான் கரைகாணாக் களிவெள்ளம் பொங்கியது. அப்போது கருத்தானது - தெளிவான ஞானம் நிரம்பியதாயிற்று.

இவ்வளவும் அம்பிகையின் அருளால் விளைந்தவை அல்லவா ! அதனாலேயே ''என்ன திருவுளமோ'' - என்று அபிராமிபட்டர் அதிசயிக்கிறார்.

ஒளி நின்ற கோணங்கள் ஒன்பதும் மேவி உறைபவளே

ஸ்ரீசக்ரம் - தேஜோமயமான ஒன்பது கோணங்களை யுடையது.

அபிராமிபட்டர் சிறந்த தேவி பக்தர். ஸ்ரீ வித்யா உபாஸகர். ஸ்ரீசக்ர பூஜையை தவறாது செய்து வந்தவர். ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் தவறாது பாராயணம் செய்து வந்தவர்.

இப்பேர்ப்பட்ட அநுபூதிமான்களுக்கு அடுத்த பிறவி கிடையாது. இதுவே அவர்களது கடைசிப்பிறவி.

''வீற்றிருப்பாள் நவகோணத்திலே'' - வராகி மாலை.

சகுண உபாசனையால் தியானம் முறுகிவரும் என்பதை அறிந்த பெரியவர்கள் காட்டிய வழிகளில் உருவ வழிபாடும், யந்திர பூஜையும் முக்கியமானவை. அந்த இரண்டிலும் ஈடுபட்டவர் அபிராமிபட்டர்.

**ஸ்ரீசக்ரம்**

அம்பாளைப் பற்றிய முக்யமான யந்திரம் ஸ்ரீசக்ரம் எனப் படும். (இந்த யந்திரம் ஒன்றிற்கே 'ஸ்ரீ' என்ற அடைமொழி.)

பிந்து, முக்கோணம், எட்டுக்கோணம், இரண்டு பத்து கோணங்கள், பதினாலு கோணம், எட்டுத்தளம், பதினாறு தளம், மூன்று வட்டம், மூன்று கோட்டுப் பூபுரம் இவற்றால் ஆனது.

இந்த ஸ்ரீசக்ரத்தையே மூன்று பரிமாணங்கள் (three dimensions) உள்ள விதமாகச் செய்தால் அது 'மேரு' எனப்படும்.

ஸௌந்தர்ய லஹரீ, 11-வது ஸ்லோகம் ''சதுர்ப்பி : ஸ்ரீ கண்டை : சிவயுவதிபி :'' - ஸ்ரீசக்ர வர்ணனை.

அம்பாளின் மகிமையை சௌந்தர்ய லஹரீயில் ஆதி சங்கரர் சொல்கிறார். 95-வது ஸ்லோகம் - 'புராராதே'

அம்மா ! ஒன்பது சுற்றுப் பிரகாரங்களை (வர்ணம்) உடைய வாசஸ்தானத்தின் உள்ளுக்குள்ளே அந்தப்புரத்தில் பரப்ரும்ம சொரூபியான பரமேஸ்வரனுடன் நீ சேர்ந்து இருக்கிறாய். அந்த அந்தப்புரத்திற்கு அருகில் வரவே எவருக்கும் யோக்யதை இல்லை. வெளியிலே ஒன்பது சுற்றுக்களையும் தாண்டியிருக்கிற வாசலில் தான் மகா பெரிய இந்திராதி தேவர்களும் காத்துக் கிடக்கிறார்கள். அந்த வெளி வாசலில் காவல் செய்கிற அணிமா முதலிய சித்திகளே இந்திராதி தேவர்களுக்கு அஷ்டமா சித்திகளைக் கொடுத்து விடுகிறார்கள்.

இந்த ஒன்பது கட்டு அரண்மனை தான் ஸ்ரீ சக்ரம்.

996. ஸ்ரீசக்ர ராஜ நிலயா - ஸ்ரீசக்ரத்தை தன் இருப்பிட மாகக்

கொண்டவள். பிந்து, த்ரிகோணம் இவைகளின் உருவமான ஸ்ரீசக்ரத்தை தன் வாஸஸ்தானமாகக் கொண்டவள். ஸ்ரீசக்ரம் - சிவன், அம்பாள் இவர்களின் சரீரம் என்று த்ரிசதியில் சொல்லப்பட்டிருக்கிறது. (ஸ்ரீசக்ரம் ஶிவயோர் வபு :) எவ்வாறு சரீரத்தில் ஜீவன் உள்ளதோ அதே போல் ஸ்ரீசக்ரத்தில் சிவனும் அம்பாளும் இருக்கிறார்கள் என்பது அதன் தாத்பர்யம். சக்ரங்களில் எல்லாம் மிக உயர்ந்ததானதால் இது ஸ்ரீசக்ரம், சக்ரராஜம் எனப்படும்.

ஸ்ரீ வித்யா பூஜையில் முதல் அங்கம் வகிப்பது குரு வணக்கம். இந்த குரு என்ற தத்துவம் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் தக்ஷிணாமூர்த்திரூபிணீ (725) என்ற நாமாவில் உள்ளது. தேவியே குருவடிவானவள். அவளே ஆதிகுரு. அவள் மூலமாக இன்றும் தொடர்ந்து வருவது குரு-சிஷ்ய பரம்பரை. எனவே ஒவ்வொரு உபாஸகனுக்கும் தன் குரு, தன் பரமகுரு (குருவின் குரு) மற்றும் தன் பரமேஷ்டி குரு என்று மூன்று தலைமுறை தெரிந்தே இருக்க வேண்டும். இம்மூவருக்கும் தனித்தனியாக பாதுகா மந்த்ரங்கள் மூன்று உள்ளன. இதைத் தவிர இதற்கு மேல் நான்கு தலைமுறைகள்-அதாவது மொத்தம் ஏழுதலை முறைவரை தெரிந்து கொள்வது விசேஷம்.

திருமூலரும், ''குருவின் உருவம் குறித்த அப்போதே திரிமலம் தீர்ந்து சிவன் அவனாமே'' (திருமந்திரம் 2659) என்று குருவின் 'பெருமையை' பாராட்டுகிறார்.

ஓம் ஸர்வசைதன்ய ரூபாம் தாமாத்யாம் தேவீம்ச தீமஹி ।

புத்திம் யாந : ப்ரசோதயாத் ॥

இந்தப்பாடல் அபிராமிபட்டர் ஒரு சிறந்த ஸ்ரீ வித்யா உபாசகர் என்பதை உணர்த்துகிறது. மேலும் புறக்கண்ணில் கண்ட அன்னையை அகக் கண்ணில் அமர்த்தி அடைக்கலம் அடைவதே ஆனந்தம் என்பதையும் தெள்ளத் தெளிவாகக் காட்டுகிறது.

## 20. அன்னையே ! நீ எங்கு உள்ளாய் ?

*உறைகின்ற நின் திருக்கோயில் நின் கேள்வர் ஒரு பக்கமோ*
*அறைகின்ற நான்மறையின் அடியோ முடியோ அமுதம்*
*நிறைகின்ற வெண் திங்களோ கஞ்சமோ என்றன் நெஞ்சகமோ*
*மறைகின்ற வாரிதியோ பூரணாசல மங்கலையே !*

**(வீடு, வாசல் முதலிய செல்வங்கள் உண்டாக)**

| | |
|---|---|
| பூரணாசல மங்கலையே | என்றும் பூர்ணமாயும், அசலாமாயும் (அசைவு அற்ற, மாறாத) இருக்கும் நித்ய கல்யாணியே ! |
| உறைகின்ற நின் | நீ நித்யவாசம் செய்யும் உன் |
| திருக்கோயில் | அழகிய கோயில் |
| நின் கேள்வர் | உன் கணவராகிய பரசிவத்தின் |
| ஒரு பக்கமோ ? | ஓர் பகுதியோ ? (இடது பாகமோ !) |
| அறைகின்ற நான்மறையின் | கோஷிக்கின்ற வேதங்களின் |
| அடியோ ? | மூலமாகின்ற பிரணவமோ ? |
| முடியோ ? | முடிவாகிய உபநிடதங்களோ |
| அமுதம் நிறைகின்ற | அமுதம் நிறைந்திருக்கும் |
| வெண் திங்களோ | வெண்மையான சந்திரனோ |
| கஞ்சமோ | அங்குள்ள ஸஹஸ்ரார கமலமோ ? |
| என்றன் நெஞ்சகமோ | (உன்னை எப்போதும் தியானிக்கும்) என் உள்ளமோ |
| மறைகின்ற வாரிதியோ | எல்லா பொருளும் மறைவதற்கு இடமாகிய கடலோ (பாற்கடலோ) |

எங்கும் நிறைந்தவளாயும், தளர்ச்சியற்றவளாயும் (அசைவு இல்லாததாயும்) நிறைந்த மங்கலம் உடையவளாயும் உள்ள அபிராமி அன்னையே !

நீ எழுந்தருளியிருக்கின்ற நின்னுடைய அழகிய கோயில் நின் பிராணநாதராகிய சிவபிரானுடைய ஒரு பக்கமாகிய வாமபாகமோ ? உன் புகழைச் சொல்கின்ற நான்கு வேதங்களின் மூலமாகிய பிரணவமோ ? அவற்றின் முடியாகிய உபநிஷத்துக்களோ ? அமுதம் நிறைந்திருக்கின்ற சந்திர மண்டலமோ ? அச்சந்திர மண்டலத்திலிருக்கும் ஸஹஸ்ரார கமலமோ ? அடியேனுடைய நெஞ்சமாகிய இடமோ ? எல்லாப் பொருளும் மறைவதற்கு இடமாகிய கடலோ ?

அபிராமிபட்டர் அம்மையின் திருக்கோலங்களை எண்ணிப் பார்க்கிறார். அம்பிகையோ எங்கும் உறைபவள். அவள் எங்கும் நிறைந்த பரிபூரணையாக இலங்குகிறாள். அவள் கொள்ளும் திருஉருவங்களுக்கு கணக்கு வழக்கே இல்லை. ஏதாவது ஒருவகைப்படுத்திப் பார்க்கலாம் என்ற திருமுயற்சியில் இறங்குகிறார். சிலவற்றைச் சொல்லி 'இதுவோ ! அதுவோ' என்று வினவி பூரிப்பு அடைகிறார்.

அபிராமிபட்டர் எப்போதும் 'அப்பனை' சொல்லியே, அன்னையைப் பற்றி கூறுவார். இதை நாம் நன்கு உணர வேண்டும். காப்புச் செய்யுள், 'தாரமர்' என்று ஆரம்பிப்பதிலிருந்தே இதை நாம் அறிகிறோம்.

உலக மாதாவும், பிதாவும் ஆகிய இவர்களுக்கு உயிரும் உடம்பும் ஒன்றுதான். இதை மனதில் கொண்டு "நின் கேள்வர் ஒரு பக்கமோ" என்று பாடலை ஆரம்பிக்கிறார்.

'ஒன்றே உடம்பு அங்கு இடும்பங்கு இரண்டே...' குமரகுருபரர். அம்மையும், அப்பனும் ஒட்டியிருக்கும் திருக்கோலம் - அர்த்தநாரீசுவர மூர்த்தம். இதனையே 'ஒரு பக்கமாய பரம்பரன் தேவி' - என்கிறது தக்கயாகப் பரணீ.

வேதத்தின் சாரமாகவும், முடியாகவும் இருப்பது உபநிஷத் துக்கள். ஞானபாகமாக விளங்கும் அப்பகுதியில் அம்பிகை இருக்கிறாளாம். அவள் இருந்தால் தானே ஞானம் ஒளிரும்.

வேதத்தின் தொடக்கமாகிய (அடியாகிய), ஓங்காரத்தில் இருப்பவள். அவளே வேதத்திற்கு வித்தாகவும் வேராகவும் இருப்பவள்.

அன்னையை 'ஓங்காரம்' என்னும் கூட்டில் இருக்கும் கிளி - என்பர்

திருமூலர்

'ஓங்காரி என்பாள் அவள் ஒரு பெண் பிள்ளை
நீங்காத பச்சை நிறத்தையுடையவள்
ஆங்காரி ஆகியே ஐவரைப் பெற்றிட்டு
ரீங்காரத்துள்ளே இனிது இருந்தாளே.' (திருமந்திரம் - 1073)

அடுத்து அபிராமி பட்டர் சொல்வது, அவர் எப்போதும் உள்ளத்திலே நினைத்து, நினைத்து உருகும் 'சந்திரமண்டலம்'. (240. சந்த்ர மண்டலமத்யகா - சந்த்ரமண்டலத்தின் மத்தியில் இருப்பவள். சிரஸில் உள்ள ஸஹஸ்ரார கமலத்தில் எப்போதும் பூர்ணகலைகளை உடைய சந்திர மண்டலம் இருப்பதாகச் சொல்லப்படும். அந்தச் சந்திர மண்டலத்தின் நடுவில் விளங்குபவள் தேவி.)

சரபோஜி மன்னன் அவரைக் கேள்வி கேட்டபோதும் இந்நிலையில் தான் அவர் இருந்தார் என்று சொல்லவும் வேண்டுமா ? என்ன !

சந்திரனை - 'அமுதகிரணன்' என்பர். அம்பிகை அங்கே எழுந்தருளியிருப்பதனால் தான் அவன் அமுதம் நிறைந்தவனானான்.

(சந்திர மண்டலமே - ஸ்ரீ சக்ரம் என்பது ரகசியம்)

எனவே 'அமுதம் நிறைகின்ற வெண்திங்களோ' - என்றார்.

அடுத்து, 'கஞ்சமோ' - தாமரையோ - என்றார்.

278 : பத்மாஸனா - தாமரையில் வீற்றிருப்பவள். தாமரையை இருப்பிடமாக கொண்டவர்கள் ப்ரஹ்மா, ஸரஸ்வதீ, லக்ஷ்மீ. இம் மூவரின் வடிவமும் தேவியேதான் என்பதால் 'பத்மாஸனா'.

அதாவது ப்ரக்ருதிமயமான இலைகளோடும், விக்ருதி மயமான கேஸரங்களோடும் ஸம்வித்தாகிய தண்டோடும் கூடிய தாமரையை பீடமாகக் கொண்டவள். பிந்துவிற்கும் பத்மம் என்று பெயர். அதில் வீற்றிருப்பவள்.

அம்பிகை வீற்றிருக்கும் தாமரைகள்

514. மூலாதாராம்புஜாரூடா - மூலாதாரம் என்பது குஹ்ய ஸ்தானம். ஐந்து திருமுகங்களோடு நான்கு இதழ்கள் கொண்ட தாமரையில் வீற்றிருப்பவள்.

504. ஸ்வாதிஷ்டானாம் புஜகதா - குஹ்ய ஸ்தானத்திலிருந்து நாபிக்கும் மூலாதாரத்திற்கும் நடுவில் இருப்பது. நான்கு திருமுகங்களோடு ஆறு இதழ்களையுடைய தாமரையில் வீற்றிருப்பவள். (பொன்னிறம்) பீதவர்ணா - 507 ல.ஸ.

495. மணிபூராப்ஜநிலயா - நாபியில் உள்ளது. பத்து இதழ்களையுடைய தாமரையில் மூன்று முகங்களை உடையவளாகத் திகழ்கிறாள்.

485. அனாஹதாப்ஜநிலயா - இது ஹ்ருதயத்திலுள்ளது. பன்னிரண்டு இதழ்களை உடைய தாமரையில் இரண்டு திருமுகங்களுடன் அம்பிகை கோயில் கொண்டிருக்கிறாள்.

475. விஶுத்திசக்ரநிலயா - இது கழுத்தில் இருக்கிறது. இந்த சக்ரத்தில் ஜீவன் ஹம்ஸரூபியான ப்ரம்ஹத்தைப் பார்ப்பதனால் சுத்தமாகிறான். 16 இதழ்களையுடைய தாமரையில் ஒரு முகமும் மூன்று கண்களும் கொண்டு வீற்றிருக்கிறாள்.

521. ஆக்ஞா சக்ராப்ஜநிலயா - புருவங்களுக்கு நடுவில் இருப்பது ஆக்ஞா சக்ரம். ஆறு திருமுகங்களுடன் இரண்டு இதழ்கள் கொண்ட தாமரையில் வீற்றிருப்பவள். இது மனத்தின் ஸ்தானம்.

105. ஸஹஸ்ராராம்புஜாரூடா - ஆறு ஆதாரங்களுக்கும் மேலே இருப்பது பிரம்ம யந்திரம். இதற்குக் கீழே உள்ள ஆயிரம் இதழ் தாமரையில் இருப்பவள். அந்த மலருக்கு ஸஹஸ்ரார பத்மம் என்று பெயர். எத்திசையிலும் உள்ள பன்முகங்கள் உடையவளாகப் பொலிகிறாள்.

528. ஸஹஸ்ரதள பத்மஸ்தா - ஸஹஸ்ரார கமலத்தில் இருப்பவள்.

'மேலும் வெண்கஞ்சமோ' - என்று சேர்த்து வெள்ளைத் தாமரையில் கலைமகளாகவும் இருந்து கல்விக்குத் தெய்வமாகத் திகழ்கிறாள் அன்னை என்றும் பொருள் சொல்லலாம். 704. ஸரஸ்வதீ - ஞான அபிமான தேவியான ஸரஸ்வதியாக இருப்பவள். பின்னும் 'அருணாம்புயத்தும் ....' (58) என்ற பாடலில் அன்னையின் திருமேனியை ஒரு தாமரைக் காடாகவே வர்ணிக்கிறார்.

அபிராமிபட்டர் அடுத்து 'உன்னைப் பற்றி நினைக்கவும், உன்னைத் தியானிக்கவும் எனக்கு ஒரு கருவியைக் கொடுத்திருக் கிறாயே ! அந்த உள்ளமும் உன்னுடைய திருக்கோயில்தானே ?

என்று நெஞ்சுருகி, 'என்றன் நெஞ்சகமோ' - என்றார்.

ஆம், அபிராமி பட்டர் எப்போதும் தன் உள்ளத்திலே அன்னை அபிராமியை கொண்டவர் அல்லவா ! எனவே அவர் உள்ளம் - அபிராமியின் திருக்கோயில் என்பதே சரியான கருத்து. பின்னும், அபிராமி பட்டர் (பாடல் - 56), 'ஒன்றாய் அரும்பி பலவாய் விரிந்து ... என்றன் நெஞ்சினுள்ளே பொன்றாது நின்று புரிகின்றவா...' (பாடல் 90) 'வருந்தாவகை என் மனத்தாமரையில்' - என்பார்.

மறைகின்ற வாரிதி - பாற்கடலிலே முன்பு தேவலோகப் பொருள்களெல்லாம் மறைந்து கிடந்தன. அதனால் அதனை 'மறைகின்ற வாரிதி' - என்றார்.

61. ஸுதா ஸாகர மத்யஸ்த்தா - அம்ருதக் கடலின் மத்தியில் வசிப்பவள். நம் சரீரத்தில் சிரஸிலுள்ள ஸஹஸ்ரார பத்மத்தில் உள்ள சந்திர மண்டலத்தின் பிந்து ஸ்தானத்தில் உள்ளது. பிந்து ஸ்தானமே ஸுதாஸிந்து. ஸுதா ஸாகரத்தைப் பற்றி ஆதிசங்கரர் ஸௌந்தர்ய லஹரியில் அழகாக வர்ணித்துள்ளார். (ஸௌ.ல. 8 – ஸுதா – ஸிந்தோர் )

'பூரணாசல மங்கலையே'

292. பூர்ணா - எங்கும், எதிலும், எப்போதும் நிறைந்திருப்பவள். ப்ரஹ்மத்தின் வடிவான தேவிதான். (காலம், தேசம், வஸ்து இவற்றால் கட்டுப்படாதவள் தேவி.) அதாவது 'பார்க்குமிடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தமாக இருப்பவள்'

அசலை - அவள் எங்கும் இருப்பவள் அல்லவா ! அதனால் சலனம் இல்லாதவள். மங்கலை - அவள் நித்திய மங்கலை. எப்போதும் மங்கலம் குறையாமல் இருப்பவள். 933. மங்கலாக்ருதி - மங்கள •ரூபமுடையவள். 200. ஸர்வ மங்கலா - எல்லா மங்களங்களையும் உடையவள். அவைகள் அனைத்துக்கும் மூலமாக இருப்பவள்.

967. ஸுமங்கலி - மிகவும் மங்களமானவள். மங்களம் என்பது ப்ரஹ்மத்தைக் குறிக்கும்.

970. ஸுவாஸினீ - பதியுடன் கூடி வாழ்பவள். இது தான் பெண்களுக்குச் சிறப்பு.

115. பத்ரப்ரியா - மங்களத்தில் பிரியமுள்ளவள். தன் பக்தர்களுக்கு எல்லா மங்களங்களையும் கொடுப்பதில் ப்ரியமுள்ளவள். 116. பத்ரமூர்த்தி - மங்களமான ரூபத்தை உடையவள். அவள் ஒருத்தியே என்றும் சுமங்கலையாக இருப்பவள் (மஹாபிரளயக் காலத்திலும் )

232. மஹேச்வர மஹாகல்ப மஹா தாண்டவ ஸாக்ஷிணீ - மஹேச்வரனுடைய மஹாப்ரளய காலத்திய மஹாதாண்டவத்திற்கு ஸாக்ஷியாயிருப்பவள். ஆதிசங்கரர் ஸௌந்தர்யலஹரீ, ஸ்லோகம் - 28ல்) ''ஸுதா மப்யாஸ்வாத்ய .... தாடங்க மஹிமா'', - சிவன் கொடிய விஷத்தை உண்டும், என்றும் அழிவில்லாதவனாக இருப்பது தேவியின் காதிலுள்ள தாடங்க மகிமையால் தான் என்கிறார். தேவியின் தாடங்கம் - ஸ்ரீ சக்ரரூபமே.

அபிராமிபட்டர் அபிராமி அந்தாதியின் முதற்பாடலில் (உதிக்கின்ற செங்கதிர்...) அன்னையின் திருமேனியை ஆறு உவமைகளுடன் சொன்னார். இங்கு, அன்னை எங்கும் பரிபூரணமாக வியாபித்து இருந்தாலும், அவள் இருப்பிடங்கள் சிலவற்றைக் கூறி அக மகிழ்கிறார்.

## 21. பஞ்ச சக்திகளும் அவளே.

*மங்கலை செங்கலசம் முலையாள் மலையாள் வருணச்*
*சங்கலை செங்கை சகலகலாமயில் தாவுகங்கை*
*பொங்கலை தங்கும் புரிசடையோன் புடையாளுடையாள்*
*பிங்கலை நீலி செய்யாள் வெளியாள் பசும் பெண்கொடியே*

**(அம்பிகைக்கு செய்த அபசார தோஷம் நீங்க)**

| | |
|---|---|
| மங்கலை | என்றும் சுமங்கலியாக இருப்பவள் |
| செங்கலசம் முலையாள் | சிவந்த கலசம் போன்ற ஸ்தனங்களை உடையவள் |
| மலையாள் | பர்வதராஜன் குமாரத்தி |
| வருணச்சங்கு அலை | கடலில் உதிக்கும் சங்குகளினால் ஆன வளையல்கள் அசைகின்ற |
| செங்கைச் | சிவந்த திருக்கரங்களையுடைய |
| சகல கலா மயில் | சகல கலைகளுக்கும் தலைவியான மயில் போன்ற சாயையுடையவள் |
| தாவு கங்கை | பாய்ந்த கங்கையில் |
| பொங்கு அலை | பொங்கிய அலைகள் |
| தங்கும் புரிசடையோன் | தங்கும் முறுக்கிய சடையையுடைய சிவபெருமானது |
| புடையாளுடையாள் | இடது பாகத்தை தனக்கே உரிமையாகக் கொண்டு ஆளும் அபிராமி, |
| பிங்கலை | பொன்னிறமுடையவள் |
| நீலி | நீல நிறமுடையவள் |
| செய்யாள் | சிவந்த நிறமுடையவள் |
| வெளியாள் | வெண்ணிறமுடையவள் |
| பசும் பொன் கொடியே | பச்சைப் பெண் கொடி போன்றவள். |

மங்கல வடிவினளும், சிவந்த கலசம் (கும்பம்) போல பருத்த தனங்களை உடையவளும், மலைமகளாயும், கடலில் பிறந்த சங்காலாகிய வளையல்கள் ஒலிக்கும் சிவந்த கரங்களை உடையவளும், எல்லாக் கலைகளுக்கும் நாயகியான மயில் போன்றவளும், பாய்ந்து வரும் கங்கையின் பொங்கிய அலைகளை அடக்கி அமைதியாகத் தாங்கும் முறுக்கிய சடையையுடைய பரமசிவனின் ஒரு பக்கத்தைத் தனக்கே உரியதாகக் கொண்டு ஆளும் உரிமையுடையவளுமாகிய அபிராமி - பொன்னிற முடையவள், நீலவண்ணம் படைத்தவள், செந்நிறமானவள், வெண்மை நிறத்தினள், பச்சைப் பெண் கொடி போன்றவள்.

சடையோன் புடையாள் உடையாள் என்று பிரித்தும் பொருள் கொள்ளலாம். உடையாள் - ஆன்மாக்களை தன்னுள் அடக்கி வைத்திருப்பவள்.

அம்பிகையின் வடிவத்தையும், வண்ணத்தையும் தியானித்து பாடியது இந்தப் பாடல்.

மங்கலை - மங்கலமுடையவள். நித்ய சுமங்கலி. சிவபெருமானைப் பதியாகக் கொண்டவள் அல்லவா ! அவளுடைய மங்கலம் என்றும் மங்காமல் இலங்குவது. கும்பகோணத்தில் எழுந்தருளியிருக்கும் அன்னைக்கு 'மங்களாம்பிகை' என்று பெயர். சென்ற பாட்டில், மங்கலாக்ருதி (933), ஸுமங்கலி (967), ஸுவாஸினீ (970) என்ற திருநாமங்களைப் பார்த்தோம்.

அன்னையின் நகில்கள் - சிவந்த கலசத்தைப் போ உருண்டு திரண்டிருக்கின்றன. அகில லோகத்தையும் ஈன்றும் அவள் கன்னிகையாகவே இருத்தலின் அவளுடைய தனங்கள் வடிவு குன்றாமல் உள்ளன. கருணையும், அருளும் தருபவை.

'எண்ணிறந்த சராசரங்கள் ஈன்றும் தாழாக்கொங்கை அறகண் மலர்க் கூந்தற் குமரி' - திருவிளையாடற் புராணம்.

பின்னும், அபிராமிபட்டர் (44) "இவளே எங்கள் சங்கரனார் மனைமங்கலமாம்" - என்பார்.

'மழுவார் திருநெடுமங்கல மகளே' - என்பார் ஒட்டக்கூத்தர்.

246. பார்வதி (மலையாள்) - பர்வதராஜனுடைய மகளாக அவதாரம் செய்து, பரமசிவனை மணந்தாள் அல்லவா ! ('பார்வதி' என்ற திருநாமம்) 634. சைலேந்தரதனயா. 'வரைராசனுக்கிருகண் மணியா யுதித்து மலை வளர் காதலிப் பெண் உமையே' என்று தாயுமானவர் பாராட்டுவார்.

மலையாள் என்பதற்கு மலையின்மேல் வாழ்பவள் என்றும் பொருள் கொள்ளலாம். பண்டாசுரனை அம்பிகை அழித்து வெற்றி கொண்ட பிறகு லலிதாம்பிகைக்கும், காமேச்வரனுக்கும் திருக்கோயில் அமைக்க தேவர்கள் விரும்பி, தெய்வத் தச்சனாகிய விசுவகர்மாவையும், அவுணத் தச்சனாகிய மயனையும் அழைத்தனர். அச்சிற்பியர் பதினாறு ஸ்ரீ நகரங்களை (ஒன்பது

மலை மேலும், ஏழு கடலிலும்) அமைத்தனர். அந்த ஒன்பது மலைகளின் மேல் வாழ்வதனால் மலைமகள் என்றும் பொருள் கொள்ளலாம்.

55. ஸுமேருமத்யச்ருங்கஸ்த்தா - மேரு பர்வதத்தின் நடுவிலிருக்கும் சிகரத்தில் இருப்பவள். ஸுமேரு எனும் தங்கமலை உலகைத் தாங்கும் ஆதாரமாய் உள்ளது. இதன் மத்தியில் ஒரு முக்கோணம் போல் மூன்று சிகரங்கள் உள்ளன. இச்சிகரங்களுக்கும் நடுவே அவற்றை விட உயர்வாக நான்காவதாக ஒரு சிகரம் உள்ளது. தேவி உறையும் ஸ்ரீநகரம் இச்சிகரத்தில் உள்ளது. (ஸ்ரீதுர்வாஸ மஹரிஷி - லலிதாஸ்தவராஜம்)

775. மேரு நிலயா - மேருவில் வசிப்பவள். மேலே கூறியவாறு, அந்த நடுசிகரத்தின் மேல் அம்பாளுடைய 'சிந்தாமணி க்ருஹம்' இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

336. விந்த்யாசல நிவாஸினீ - விந்த்ய மலையில் வசிப்பவள்.

458. மலயாசல வாஸினீ - மலயாசலத்தில் (மலய பர்வதத்தில்) வஸிப்பவள். கேரளத்தில் உள்ளது. மலயாலயா பகவதீ, மலையாள பகவதீ.

வருணச் சங்கு அலை செங்கை - அம்பிகை கையில் சங்கினால் ஆன, பல நிற மணிகளால் பதிக்கப்பட்ட (பல வண்ணங்கள் வீசும்) வளையல்களை அணிந்துள்ளாள்.

சகலகலாமயில் - அன்னை அபிராமி - சகல கலாவல்லி. கலை அவள் உருவம். கலைகள் அவளால் உண்டாக்கப் படுகின்றன. கலைகளையே அவள் தன் உரையாடலாகக் கொண்டிருக்கிறாள். கலா என்பது மயிலின் தோகைக்கும் பெயர். ஆதலின் அதனோடு சேர்த்து மயில் என்றார். 'கலா மயிற் கூத்தயர் குளிர்புனம்' (மீனாட்சி பிள்ளைத் தமிழ்)

236. சதுஷ் ஷஷ்டி கலாமயீ - 64 கலைகளின் வடிவமாயிருப்பவள்.

327. கலாவதீ - கலைகளுடன் கூடியவள்

328. கலாலாபா - கலைகள் வடிவான பேச்சை உடையவள்.

611. கலாத்மிகா - கலைகளின் வடிவானவள்.

612. கலாநாதா - கலைகள் எல்லாவற்றிற்கும் தலைவி.

794. கலாமாலா - 64 கலைகளை மாலையாக உள்ளவள்.

கலா - லாவண்யம், அழகு. மா - சோபை, ப்ரகாசம், ஒளி. லா - கொண்டு வருவது. லாவண்யத்தையும், சோபையையும் உடையவள் என்றும் பொருள் கூறலாம்.

797. கலாநிதி - கலைகளின் நிதி

798. காவ்யகலா - காவ்யங்களாக இருப்பவள். சொற்களின் ஒலியால் ஏற்படும் காவியங்கள் ரூபமாக இருப்பவள்.

தாவு கங்கை பொங்கு அலை தங்கும் புரிசடையோன் - கங்கை 'என்னைத் தாங்குவார் யார்' என்ற அகந்தையோடு தாவி வந்தது. அலைகள் பொங்க ஆரவாரித்தது. அதன் அகந்தையை அழித்து தன் சடையிலே அடங்கச் செய்தார் சிவபெருமான்.

'விண்ணுக்கடங்காமல் வெற்புக்கடங்காமல்

மண்ணுக்கடங்காமல் வந்தாலும் - பெண்ணை

இடத்திலே வைத்த இறைவர்தம் சடாம

குடத்திலே கங்கையடங்கும்' - காளமேகப் புலவர்.

புடை ஆளுடையாள் - இத்தகைய இறைவருடைய ஒரு பக்கத்தில் இருந்து ஆளுகின்றாளாம் தேவி.

அம்பிகையின் வடிவத்தை சொன்ன அபிராமிபட்டர், இப்போது வண்ணத்தைச் சொல்கிறார்.

மஞ்சள், நீலம், சிவப்பு, வெள்ளை, பச்சை நிறங்கள் கொண்டவளாக வர்ணிக்கிறார்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில், நமது சரீரத்தில் இருக்கும் ஆதார ஸ்தானங்களில் இருக்கும் ஒவ்வொரு சக்திக்கும் ஒவ்வொரு நிறம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

1. மூலாதாரம் - நீலம் (கருப்பு) - 520. ஸாகின்யம்பா ஸ்வரூபிணீ - காளி, 'மகிடன் தலை மேல அந்த்ரி நீலி' 514. மூலாதாராம் புஜாரூடா

2. ஸ்வாதிஷ்டானம் - பொன்னிறம் (மஞ்சள்) - 570. பீதவர்ணா. 513. காகினீரூபதாரிணீ 504. ஸ்வாதிஷ்டானாம்புஜகதா

3. மணிபூரகம் - சிவப்பு - 499. ரக்தவர்ணா. 495. மணிபூராப்ஜ நிலயா. (485. அநாஹதாப்ஜநிலயா)

4. அநாஹதம் - பசுமை கலந்த கருப்பு நிறம். (பச்சை) 486. ஶ்யாமாபா. பார்வதியின் நிறம் பச்சை. மரகதவல்லி என்று தேவியைச் சொல்வது வழக்கம். (246)

5. விசுத்தி - சிவப்பு கலந்த வெண்ணிறம். 476. ஆரக்தவர்ணா - பாதிரிப்பூவைப் போல் நிறம் உடையவள். 475. விசுத்தி சக்ர நிலயா

6. ஆக்ஞா - வெண்ணிறமானவள். 522. ஶுக்லவர்ணா. 521. ஆக்ஞா சக்ராப்ஜ நிலயா.

7. ஸஹஸ்ராரம் - எல்லா வர்ணங்கள் - 529. ஸர்வ வர்ணோபஶோபிதா – பாதிரி (சிவப்பு கலந்த வெண்ணிறம்), கருப்பு (நீலம்) பச்சை (பசுமை கலந்த கருப்பு) சிவப்பு, மஞ்சள் (பொன்னிறம்)

சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார, திரோபவ, அனுக்ரஹம் - பஞ்சப்ரம்மாக்கள். சரஸ்வதி, லக்ஷ்மீ, ரௌத்ரீ, மாஹேச்வரி, மனோன்மணி - ஐந்து சக்திகள். வெண்மை, சிவப்பு, பச்சை, நீலம், மஞ்சள் - ஐந்து வர்ணங்கள்.

அதாவது, இதன் கருத்து என்னவென்றால்

சித் சக்தி,பராசக்தி, இச்சாசக்தி, கிரியா சக்தி, ஞானசக்தி சேர்ந்த சமஷ்டி ரூபமே - அன்னை அபிராமி என்பதை அழகாகச் சொல்கிறார்.

அன்னை அபிராமியின் அடியாராகிய அன்பர் 'அபிராமி பட்டர்'. சித்சக்தி (உயிருக்கு ஒளி), பராசக்தி (பிராணன் முதலிய வாயு), பஞ்ச பூதங்களாய் பரிணமிப்பது இச்சா சக்தி, வினைத்துணையாக நிற்பது கிரியா சக்தி, ஐம்பொறியுணர்ச்சியாக இருப்பது ஞானசக்தி என்பர்.

இறுதியில், 'பெண் கொடியே !' என்று சொல்வது மிக அழகு.

## 22. அன்னையே ! பிறவா வரம் வேண்டும்.

*கொடியே, இளவஞ்சிக் கொம்பே எனக்கு வம்பே பழுத்த*
*படியே, மறையின் பரிமளமே பனிமால் இமயப்*
*பிடியே, பிரமன் முதலாய தேவரைப் பெற்ற அம்மே*
*அடியேன் இறந்துஇங்கு இனிப் பிறவாமல் வந்து ஆண்டுகொள்ளே.*

**(பிறவிப் பிணி தீர)**

| | |
|---|---|
| கொடியே | கொடி போன்றவளே |
| இளவஞ்சிக் கொம்பே | இளைய வஞ்சி மரத்திலுள்ள பூங்கொம்பு போன்றவளே |
| எனக்கு | அடியேனுக்கு |
| வம்பே பழுத்த | பருவமில்லாக் காலத்தில் பழுத்த |
| படியே | (படிவமே) உருவமே ! |
| மறையின் | வேதங்களின் |
| பரிமளமே | சுகந்தமே, வாஸனையே ! |
| பனிமால் இமயப் | பனி நிறைந்த இமய மலையில் |
| பிடியே | உலாவிய பெண் யானையே ! |
| பிரமன் முதலாய | பிரமன் முதலான |
| தேவரைப் பெற்ற அம்மே | தேவர்களை பெற்ற தாயே |
| அடியேன் இறந்து | அடியேன் இப்போது இறந்து |
| இங்கு இனிப் | இவ்வுலகத்தில் மீண்டும் |
| பிறவாமல் | பிறவி எடுக்காமல் இருக்க |
| வந்து | எழுந்தருளி வந்து |
| ஆண்டு கொள்ளே | ஆட்கொண்டு அருள்வாயாக ! |

கொடி போன்றவளே, இளைய வஞ்சிமரத்திலுள்ள பூங்கொம்பு போன்றவளே, எனக்குப் பக்குவம் இல்லாவிட்டாலும் அதனை எண்ணாமல் காலம் அல்லாத காலத்தில் பழுத்த இன்பக் கனியின் திருவுருவமே, வேதமென்னும் மலரில் பரவிய மணம் போல இருப்பவளே, பனியையுடைய பெரிய இமயமலையில் உலாவிய பெண் யானை போன்றவளே, பிரமன் முதலாகிய தேவர்களைப் பெற்ற தாயே !

அடியேன் இப்போது இறந்து அப்பால் இந்த உலகத்தில் மீண்டும் பிறவாமல் இருக்கும்படி நீயே உன் கருணையினால் என்பால் வந்து எழுந்தருளி ஆட்கொள்ள வேண்டும்.

அன்னை அபிராமியிடம் 'பிறவா வரம் வேண்டும்' என்று கேட்கிறார் அபிராமிபட்டர். அவர் மனிதன் பிறந்தால் இறப்பு

உண்டு என்பதை நன்குணர்ந்து 'இனி' - பிறவாமை வேண்டும் என்று கேட்பது நயம் பொருந்தியது. இதனையே வள்ளுவரும், 'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை' - என்பர்.

பட்டினத்தாரும், 'பிறவாதிருக்க வரந்தர வேண்டும்' - என்கிறார். அதாவது, அன்னை அடியாரை ஆட்கொண்டால், முத்திநிலை கிட்டும். பிறகு பிறவி இல்லை. எல்லா அடியார்களும் வேண்டுவது - 'அழியா முத்தி ஆனந்தமே'.

அன்னையை கொடியாகவும், கொம்பாகவும் சொல்வது மிகச் சிறப்பு. கொடி ஒரு சிறு காற்றுக்கும் ஆடக்கூடியது. அதாவது அன்பர்களுக்கு ஒரு சிறிய துன்பம் ஏற்பட்டாலும், அதைப் போக்க அவள் ஓடி வருவாள்.

வம்பே பழுத்தபடியே - பக்குவமில்லாத காலத்தில் பழுக்கும் கனிக்கு ஒப்பான வடிவமே என்கிறார். 'தானாகப் பழுக்காத பழத்தை தடியால் அடித்துப் பழுக்க வைப்பது' - என்று ஒரு பழமொழி உண்டு. அது போலப் பக்குவமாகாத என்னை உன் கருணை என்னும் தடியால் அடித்து வம்பாகப் பழுக்க வைத்தாய் என்று மிக அழகாகச் சொல்கிறார் அபிராமி பட்டர். அவர் அடியார்களில் மிகவும் உயர்ந்தவர். ஆனால் அவர் எப்போதும் தன்னை தாழ்த்தியே கூறுவர். என்னே அவரது தன்னடக்கம் !

353. பக்தி மத் கல்ப லதிகா - பக்தர்களுக்கு கல்பகக் கொடி போன்று வேண்டியதை அளித்து உதவுகிறவள்.

மற்றொரு விளக்கம் : 'கல்ப' என்பது சற்று குறைவை உடையது என்று பொருள்படும். (பூரணமான பக்தி இல்லாதவர்கள் அல்லது சற்று குறைந்த பக்தி உள்ளவர்கள்.) இவர்கள் பக்திமத் கல்பர்கள் எனப்படுவர். 'லதா' என்றால் கொடி. அதன் தன்மை படருவது. அதாவது, பக்திமத் கல்பர்களைக் "கொடி" போல படரச் செய்து தன்னை அடையச் செய்பவள். சிறிது பக்தி இருந்தாலும் அதை வளர்த்து தன்னுடன் சேர்த்துக் கொள்கிறவள். அந்தக் கொடிக்கு "கொம்பு" போன்று ஆதாரமாய் இருப்பவள். சரியான வழி தெரியாமலும், சிறிது பக்தி உள்ளவரையும் கூட, அம்பாள், பக்குவப்படுத்தி, தன்னை பூர்ணமாக உபாசிக்கும் சக்தியை அளிக்கிறாள் என்று கருத்து.

இந்தக் கருத்தினை, "கொடியே, இளவஞ்சிக் கொம்பே, எனக்கு வம்பே பழுத்த படியே" - என்று மிக அழகாக சொல்கிறார் அபிராமி பட்டர். என்னே ! அவர் கவித்துவம் !

மறையின் பரிமளமே - மணமில்லாத மலரை யாரும் விரும்புவதில்லை. மணம் மலருக்கு அவசியமான லட்சணம். அது போல இலக்கியங்களுக்கு மணம் அவற்றின் சொல் அழகும், பொருள் ஆழமும் ஆகும். வேதத்திற்கு அதன் சொல்லும், பொருளும் மணம் ஆகும். வேதமாகிய மலருக்கு மஹாவாக்கியங் களே மணம் என்றும், அந்த மணம் அம்பாளே ஆகும்.

425. தத் - அது. புத்தியை சுழலும்படி செய்யும் சக்தி. அம்பாள் ஸகல ஜனங்களுடைய புத்தியிலும் சுழன்று கொண்டிருப்பதால் இந்தப் பெயர்.

363. தத்பதலக்ஷ்யார்தா - மஹாவாக்கியத்தில் 'தத்' என்ற சொல்லின் பொருளாக இருப்பவள்.

908. தத்வமர்த ஸ்வரூபிணீ - தத்த்வமஸி என்ற மஹா வாக்யத்தின் பொருளாக இருப்பவள். 'தத்' என்பது ஶிவம் (பரமாத்மா). த்வம் என்பது ஜீவாத்மா. இவைகளின் ஐக்யத்தைப் போதிக்கும் மஹா வாக்யத்தின் பொருளாக இருப்பவள்.

285. ஆப்ரஹ்மகீடஜனனி - ப்ரஹ்மா முதல் புழு, பூச்சி வரை உள்ள எல்லா ஜீவன்களையும் ஈன்றவள். கீடம் - நுண்ணிய கிருமி. தேவிக்கு எல்லா உயிர்களிடத்தும் ஒரே மாதிரியான அன்புதான். இதனையே அபிராமிபட்டர் 'பிரமன் முதலாய தேவரைப் பெற்ற அம்மே' - என்றார்.

எல்லோருக்கும் தாயாக இருக்க, மலையரசனின் மகளாக தோன்றியது அவளது எளிமையைக் காட்டுகிறது.

'வினை காரணமாகவே பிறவி வருகிறது. அன்னை அபிராமியின் திருவருளால் வினையற்று விடின் உடனே பிறவாத நிலையாகிய முக்தி கிடைத்துவிடும்.' என்று அன்னை அபிராமியிடம் அன்புடன் சமர்ப்பிக்கிறார், அபிராமிபட்டர்.

## 23. அபிராமியே என் கண்ணின் மணி.

*கொள்ளேன் மனத்தில் நின் கோலம் அல்லாது அன்பர் கூட்டந்தன்னை*
*விள்ளேன் பரசமயம் விரும்பேன் வியன் மூவுலகுக்கு*
*உள்ளே அனைத்தினுக்கும் புறம்பே உள்ளத்தே விளைந்த*
*கள்ளே களிக்கும் களியே அளிய என் கண்மணியே !*

**(மனச் சஞ்சலம் உண்டாதிருக்க)**

| | |
|---|---|
| வியன் மூவுலகு | விரிந்து அகன்ற சுவர்க்க, மத்ய, பாதாளம் என்ற மூவுலகங்களின் |
| உள்ளே | உள் நின்று உறையும் மூலப் பொருளே (அந்தர்யாமி) |
| அனைத்தினுக்கும் | எல்லா உலகங்களுக்கும் |
| புறம்பே ! | அப்பால் உள்ள பொருளே ! |
| உள்ளத்தில் விளைந்த | சாதகர்களின் உள்ளத்தில் விளைந்த |
| கள்ளே | தேனே ! |
| களிக்கும் களியே | அந்தத் தேனின் சுவையால் சாதகன் மகிழ்தற்கு ஏதுவாகிய மகிழ்ச்சியே |
| அளிய என் கண்மணியே ! | இரங்குவதற்குரிய அடியேனுக்கு, கண்ணின் மணி போன்றவளே ! |
| மனத்தில் | என்னுடைய மனத்தில் |
| நின் கோலமல்லாது | உன் திவ்ய தேஜோமய உருவம் அல்லாது |
| கொள்ளேன் | (வேறு எதையும்) தியானம் செய்ய மாட்டேன் |
| அன்பர் கூட்டந்தன்னை | உன்னை உபாசிக்கும் மெய்யன்பர் கூட்டத்தை (ஸத்சங்கம்) விட்டு |
| விள்ளேன் | பிரிய மாட்டேன் |
| பரசமயம் விரும்பேன் | சாக்த சமயத்தை விட்டு வேறு எந்த சமயத்தையும் விரும்ப மாட்டேன். |

விரிவான சுவர்க்க, மத்ய, பாதாளம் என்ற மூவுலகுக்கு அந்தர்யாமியாகவும் அவற்றிற்கு அப்பாலாய் வேறாயும் என்னுடைய இருதயத்தில் உன் உபாசனையால் ஊறும் தேனாயும், அத்தேனில் உண்டாகும் மகிழ்ச்சியாகவும், என் கண்ணின் மணியாக இருக்கும் அன்னை அபிராமியே !

அடியேன் நின்னுடைய திருஉருவத்தையல்லாமல் வேறு எதையும் என் மனத்தில் தியானப் பொருளாகக் கொள்ள மாட்டேன்.

நின் அன்பர்களின் கூட்டத்தை என்றும் பிரிந்து நிற்கமாட்டேன். பிற சமயத்தை விரும்பேன்.

அன்னையின் திருஉருவங்களும், திருநாமங்களும் எண்ணிலடங்கா. இதை நன்கு அறிந்தவர் அபிராமிபட்டர். ஆனாலும் 'அன்னை அபிராமியின்' திருவுருவக் கோலம் ஒன்றே தியானிப்பதற்குரிய பொருளாக அவர் உள்ளத்திலே நின்றது. இவ்வாறு அவர் 'அன்னை அபிராமியையே' சதா சர்வகாலமும் இடைவிடாது தியானித்ததால் தான், அன்னையின் திருவுருவம் தேசுடைய வடிவமாக மாறித் திவ்வியமான காட்சியைக் காணும் பேறு கிடைத்தது. இதனையே, காரைக்கால் அம்மையார்,

'ஒன்றே நினைந்திருந்தேன் ஒன்றே துணிந்தொழிந்தேன்

ஒன்றே என் உள்ளத்தின் உள்ளடைத்தேன்' - என்று பாடுகிறார்.

ஒன்றை இடைவிடாமல் உள்ளத்தே அடைக்கும் வன்மை யாருக்கு இருக்கிறதோ அவர் அம்பிகையின் திவ்ய தரிசனத்தை அகக்கண்ணில் கண்டு களிக்கும் நிலையை அடைவார். புறத்தே காணும் தரிசனத்துக்குப் பயன் அகத்தே தியானிப்பது தான்.

எல்லாப் பொருளையும் கடந்து, எல்லாப் பொருளுக்கு உள்ளும் நிற்பவன் எவனோ அவனே கடவுள். அம்பிகை அப்படி இருக்கிறாள்.

'கள்ளே' - என்று அம்பாளைச் சொல்வது சுருதி பிரமாணம்.

717. மதுமதீ - மதுவுடன் இருப்பவள். மது - தேன் என்றும், மயக்கம் தரும் பொருள் (கள் முதலியவை) என்றும் பொருளுடையது. ஸ்ரீபாஸ்கரராயர் 'மஹத்யை வா ஏதத்தேவதாயை ரூபம் யன்மது' - என்று மேற்கோள் காட்டி இது 'சுருதிவாக்கு' என்று ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம வியாக்யானத்தில் கூறுகிறார். அதாவது 'அம்பாளுடைய ரூபமே தேன் போன்றது' - என்று பொருள்.

"எத்திக்கும் தானாகி என் இதயத்தே ஊறி

தித்திக்கும் ஆனந்தத் தேனே !" - என்பார் தாயுமானவர்.

56. மதுப்ரீதா - அம்பாள் மதுவினால் (தேன்) ப்ரீதியடைகிறாள்.

575. மாத்வீ பானாலஸா - திராட்சையும், தேனும் சேர்ந்த மது - மாத்வீ. இதை அருந்தி ஏற்பட்ட மயக்கத்தால், சோம்பேறித்

தனத்துடன் இருப்பவள்.

333. வாருணீ மதவிஹ்வலா - பேரீச்சம் பழ வகை மது - வாருணீ - இதை அருந்தி அதன் மதத்தால் மெய்மறந்தவள்.

235. சது:ஷஷ்ட்யுசாராட்யா - அம்பாளுக்கு 64 வகை உபசாரங்கள். அதில் (51) - அம்ருதாஸவசஷகம் - அம்ருதமாகிய மது நிறைந்த கிண்ணம்.

அளிய - என்ற சொல்லுக்கு ஆதரிக்கத் தக்கவன், இரங்குவதற்குரியவன் என்று பொருள். 'அளியன் தானே முதுவாய் இரவலன்' - திருமுருகாற்றுப்படை. அளி என்பதற்கு 'வண்டு' என்ற பொருளும் உண்டு. அன்னை அபிராமியைக் 'கள்ளே' என்று 'விளித்து', அளி என்ற கூறியதால் - தேனைப் பருகும் வண்டாகத் தன்னை கூறிக்கொள்வதாகவும் அமையும்.

காளியின் சிறந்த பக்தரான பாரதியாரும்,

"தீம் பழந்தன்னில் சுவையே சக்தி

பாட்டினிலே வந்த காளியே சக்தி" - என்பார்.

உள்ளத்தே விளைந்த கள்ளே - கள்ளைக் குடிப்பதனால் உண்டாகும் மயக்கத்துக்கு 'களி' என்று பெயர். இந்தக் கள்ளால் உண்டாகும் ஆநந்த அனுபவமும் ஒருவகைக் களியே ஆகும்.

அம்பிகையே ஆனந்த உருவமாக இருக்கிறாள் அல்லவா ? அவள் அன்பர்களின் கண்ணுள் மணியாக நின்று இந்தக் காட்சியைக் காணச் செய்கிறாள். பக்தர்கள் பால் இரக்கம் கொண்டு இந்த நிலையை அருள்கிறாள்.

எனவே 'என் கண்மணியே' என்று கூறி பாடலை நிறைவு பெறச் செய்கிறார் அபிராமிபட்டர்.

## 24. அபிராமியை வணங்கியின் பின் யாரையும் பணியேன்.

*மணியே மணியின் ஒளியே ஒளிரும் மணிபுனைந்த*
*அணியே அணியும் அணிக்கழகே அணுகாதவர்க்குப்*
*பிணியே பிணிக்கு மருந்தே அமரர் பெரு விருந்தே*
*பணியேன் ஒருவரை நின் பத்மபாதம் பணிந்த பின்னே.*

**(தீராத வியாதிகள் தீர)**

| | |
|---|---|
| மணியே | மாணிக்க மணியே ! |
| மணியின் ஒளியே | அம்மணியின் ஒளியே ! |
| ஒளிரும் மணி புனைந்த | பிரகாசிக்கும் மாணிக்க |
| அணியே | கற்களாலாகிய ஆபரணமே ! |
| அணியும் அணிக்கு | உன் திருமேனியில் அணிவதால் |
| அழகே | அந்த ஆபரணங்களுக்கு அழகு தருபவளே |
| அணுகாதவர்க்கு | உன் திருவடியை அடைக்கலமாக அடையாதவர்களுக்கு |
| பிணியே ! | பிறவிப்பிணியை விளைவிப்பவளே |
| பிணிக்கு மருந்தே | பிறவி என்னும் நோயை அழிக்கும் மருந்தானவளே ! |
| அமரர் பெருவிருந்தே | தேவர்களுக்கு பெரிய விருந்தாக (அமிர்தம்) இருப்பவளே ! |
| நின் பத்ம பாதம் | உன்திருவடிக் கமலங்களை |
| பணிந்த பின் | (சரண் புகுந்து) வணங்கிய பின் |
| ஒருவரைப் பணியேன் | வேறு எவரையும் வணங்கேன். |

மாணிக்கத்தைப் போன்றவளே, அம்மணியின் ஒளி போன்றவளே, பிரகாசிக்கும் மணிகளால் புனையப் பெற்ற ஆபரணம் போன்றவளே ! அணியும் அணிகளுக்கு அழகாக விளங்குபவளே ! உன்னை அணுகிப் பணியாதவர்களுக்கு பிணி போன்றவளே ! பிறவி என்னும் நோய்க்கு மருந்தாக இருப்பவளே !, அமரர்களுக்கு பெருவிருந்தாக இருந்து வாழ்வு தருபவளே !

நின்னுடைய தாமரையைப் போன்ற திருவடியைப் பணிந்த பிறகு வேறு ஒருவரையும் வணங்கமாட்டேன்.

தாய், 'பொன்னே, மணியே, பட்டே, கரும்பே' - என்று சேயைக் கொஞ்சுவது வழக்கம். ஆனால் இங்கோ அபிராமி பட்டர் அன்னையிடம் அன்பினால் உருகும் சேயாகவே மாறிவிடுகிறார்.

அவருக்கு அன்னையை, சமயம் கிடைத்தபோது எல்லாம் அவள் புகழையே பாடவேண்டும் என்ற பெரு அவா. அவர் தன் புலமையை அன்னையின் புனிதத் திருவடிக்கே அர்ப்பணம் செய்தவரல்லவா !

அபிராமி பட்டரும், அது போலவே தியாகப்பிரம்மமும், தெய்வத்தைத் தவிர வேறு யாரையுமே, பாடியதில்லை. அதற்கு அவசியமுமில்லை !

மணியே - ஒன்பது கிரகங்களுள் சூரியன் சிறந்து நிற்பது போல, ஒன்பது மணிகளுள் நாயகமாக விளங்குவது மாணிக்கம் (செம்மணி). சிவனும், சக்தியும் செம்மேனி உடையவர்கள். (சிவனெனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான் - தேவாரம்) எனவே அபிராமி பட்டர் மாணிக்கத்தை மனதில் கொண்டு 'மணியே' என்கிறார். ஆதிசங்கரரும் ஸௌந்தர்ய லஹரீ, 42 - வது ஸ்லோகத்தில் 'கதைர் மாணிக்ய த்வம்...' தேவியின் கிரீடத்தில் இருக்கும் மாணிக்கங்களை வர்ணிக்கிறார்.

14. குருவிந்தமணி ச்ரேணீ கநத் கோடீர மண்டிதா - குருவிந்தமணி என்பது பத்மராகம் எனப்படும் ஒரு சிவந்த கல். தேவியின் கிரீடத்தில் இந்த சிவப்புக் கற்கள் வரிசையாகப் பதிக்கப்பட்டுள்ளன. தேவியின் மேனிச் செம்மைக்கு ஏற்றவாறு தாமரை போன்ற சிவந்த ரத்னங்கள் கிரீடத்தில் உள்ளன. இந்தத் திருக்கோலத்தில் அம்பாளை தியானிப்பதால் பக்தி அதிகரிக்கும் என்று குறிப்பிடப்படுகிறது.

அணியும் அணிக்கு அழகே - எம்பிராட்டி 'அழகுக்கு ஒருவரும் ஒவ்வாதவல்லி!' அல்லவா ! அவளுக்கு ஆபரணங்களோ, அணிகலன்களோ தேவையில்லை. அன்னை அணிகளை அணிவதால் அணிகளுக்கு அழகு ஏற்படுகிறது என்று சொல்லவும் வேண்டுமோ ?

51. ஸர்வாபரணபூஷிதா - எல்லா ஆபரணங்களினாலும் அலங்கரிக்கப்பட்டவள். ஆனால் அந்த ஆபரணங்களினால் அன்னையின் அழகைக் கூட்ட முடியவில்லை. அதற்கு மாறாக அந்த ஆபரணங்கள் அழகு பெறுகின்றன.

அதாவது ஆபரணங்கள் யார் அணிவதால், அதன் அழகு கூடி, அலங்கார பொருளாகும் தன்மையை அடைகின்றனவோ 'அவளே தேவி' என்றும் பொருள் கொள்ளலாம். (பூஷிதா)

அணுகாதவர்க்குப் பிணியே - வீட்டில் இருந்து அன்னை அன்புடன் ஊட்டும் உணவை நல்ல குழந்தைகள் உண்ணுகிறார்கள். பொல்லாத குழந்தையோ வீட்டுக்கு புறம்பே போய் வீதியிலுள்ள மண்ணைத் தின்கிறது. இது போலவே அன்னையை நாடினால் அருள் கிடைக்கும். அன்னையை நாடாமல் பிரபஞ்சத்தில் உழலுபவர்கள் அல்லல் அடைவார்கள். அப்படியும் அன்னை என்ன செய்கிறாள் தெரியுமா ?

மண்ணைத் தின்னும் குழந்தையை அடித்து திருத்துவதுபோல தன்னை அணுகாதவர்களுக்குப் பிணியைக் (பிறவியை) கொடுத்து நோயாக வருகிறாள்.

பகவான் கீதையில், ''கஷ்டத்தைக் கொடுத்து அதைத் தாங்கும் சக்தியையும் கொடுத்து அவர்களை வீரராக்குவேன்'' என்கிறார்.

ஏதோ ஒரு வகையில் அம்மையைப் பிணியே என்று சொன்னவர், மனம் ஆற்றாமல் அடுத்து, 'பிணிக்கு மருந்தே' என்கிறார். அதாவது பிறவி என்ற பிணியை அழித்து, என்றும் அழியாத ஆனந்த முத்தியைத் தருகிறாள். என்னே ! அவள் கருணை ! இதனையே குமரகுருபரரும்,

'வெம்பாசம் மருவிய பிணிகெட மலைதரும் அருமை மருந்தே பிறவிப் பெரும்பிணிக்கோர் மருந்தே' - என்பார்

தேவர்களும் அமுதம் (பாற்கடல்) உண்டவர்களானாலும் அசுரர்களின் இன்னல்களைப் பொறுக்கமாட்டாமல் திண்டாடினார்கள். அசுரர்களை அன்னை அழித்து தேவர்களின் பெருவிருந்தானாள். அமுதமாகிய பழைய விருந்து சிறு விருந்து.

'அம்பிகையாகிய புது விருந்து பெருவிருந்து'

இதனை மனதில் கொண்டு அபிராமிபட்டர் வெகு அழகாக 'அமரர் பெருவிருந்தே' என்றார். பின்னும், '... விண்மேவும் புலவருக்கு வேலை மருந்தானதை ... (90) என்பர்.'

'அமரர் வாழ்வு வாழ்வாக அமுதபானம் ஈவாளே' - தக்கயாகப் பரணி. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில்.

551. ஸர்வவ்யாதி ப்ரசமனீ - எல்லா வியாதிகளையும் அடக்குபவள்.

876. நிராமயா - வ்யாதி இல்லாதவள். இவளே எல்லா வியாதிகளுக்கும் மருந்து. இவ்வுலக மருத்துவர்கள் சரீரத்தில் ஏற்பட்டிருக்கும் வியாதிக்குத்தான் மருந்து கொடுக்க முடியும். சரீரமே (அதாவது பிறவி) நோய் என்றால் அவர்களால் என்ன செய்ய முடியும். அதற்கு மருந்து கொடுப்பவளும், மருந்தாக இருப்பவளும் அன்னை அபிராமிதான் !

'அன்னையை அணுகும் அன்பராகிய அடியார்க்கு அழியாத ஆனந்தம்' ஏற்படும். அது எல்லோரும் வேண்டும் 'முத்தி நிலை.' அபிராமி பட்டரும் ஜீவன் முக்தர் அல்லவா !

193. துஷ்டதூரா - துஷ்டர்களால் அடைய முடியாதவள்.

194. துராசார ஶமனீ - கெட்ட நடத்தையை (ஆசாரத்தை) அடக்குபவள்.

748. ரோகபர்வத தம்போலி - வ்யாதி என்ற மலையைப் பிளக்கும் வஜ்ராயுதமாக இருப்பவள். வஜ்ராயுதம் இந்த்ரனுடைய ஆயுதம். ததீசி முனிவரின் முதுகெலும்பால் ஆனது எனப்படும். அது மிகவும் வலிவானது. கடினமான பொருள்களையும் அழிக்கும் சக்தி, ப்ரபாவம் உள்ளது. வ்யாதிகளை - மலைக்கும், அம்பாளை வஜ்ராயுதத்திற்கும் ஒப்பிடுகிறார்கள் வசினீ தேவதைகள். துர்கா ஸப்தசதீயில் 'ரோகான ஶேஷானபஹம்ஸி'- என்று துதிக்கப் படுகிறவள். (அத். 11).

749. ம்ருத்யுதாருகுடாரிகா - மரணம் என்ற மரத்தை வெட்டும் கோடாலியாக இருப்பவள். இது ஒரு அழகான உவமை.

851. ஜன்ம - ம்ருத்யு - ஜரா - தப்த - ஜன - விஶ்ராந்தி - தாயினீ

ஜன்மம் (பிறப்பு), இறப்பு, மூப்பு - இவைகளால் நன்கு தகிக்கப்பட்ட ஜனங்களுக்கு, இந்த துக்கங்களைக் களையும் ஓய்வுகளையும், தெளிவான ஆத்ம ஸுகத்தையும் தருகிறவள்.

மரணத்திற்குப் பின் அடுத்த பிறப்பு வரையில் உள்ள காலம் ஒருவிதமான தாற்காலிக ஓய்வு. மறுபிறப்பு இல்லாமல் முத்தி அடைவது நிரந்தரமான ஓய்வு. இரண்டையும் தருபவள்.

அன்னையின் ரூப அழகு - கண்ணுக்கு விருந்து

மதுரவசனம் - செவிக்கு விருந்து

அருள் - மனதிற்கு விருந்து

பரிமளம் - நாசிக்கு விருந்து

காளிதாசன் - ச்யாமளா தண்டகத்தில் ('நம்ரல திக்பால ஸிமந்திநீ ...') - திக்பாலர்களின் பத்தினிகள் அம்பாளை நமஸ்கரிப்பதாயும், இந்திரன், விஷ்ணு, சிவன், ப்ரம்மா, யமன், நிருதி, குபேரன், வாயு, அக்னி இவர்களும் அம்பாளை வணங்குவதாகச் சொல்கிறார்.

இவ்வாறு தேவியை எல்லோரும் வணங்குவதால், வேறு எந்த தெய்வத்தையும் வணங்க வேண்டிய அவசியம் இல்லை.

அன்னை அபிராமி தன் பாதகமலங்களை சரண் அடைந்தவர்களுக்கு, ஒன்று விடாமல், எந்த ஒரு குறையும் இல்லாமல் எல்லாம் தந்து அருள்புரிவாள். ஆகையால் அன்னையின் அடியார்கள் வேறு புகலைத் தேடும் அவசியமும் மன இயல்பும் இல்லாதவர்கள் ஆகிறார்கள்.

989. வாஞ்சிதார்த ப்ரதாயினீ - பக்தர்கள் கோரும் பொருள்களை (புருஷார்த்தங்களையும்) அபரிமிதமாகக் கொடுப்பவள். பக்தர்கள் கேட்க கூட வேண்டாம். விரும்பினாலே போதும். அந்தப் பொருள்களை அம்பாள் கொடுத்து விடுகிறாள் என்பது 'வாஞ்சித' என்ற பதப்பிரயோகத்தால் தெரிகிறது. ஆதிசங்கரரும் ஸௌந்தர்ய லஹரியில் (4) - 'த்வ-தன்ய: பாணிப்ப்யா ...' அம்பாள், மற்ற தேவதைகள் போல், 'வரதமுத்ரை' வைத்துக் கொள்வதில்லை. அதற்கு அவசியம் இல்லை. அவளுடைய 'பாதகமலங்களே' - பக்தர்கள் விரும்புவதற்கும் அதிகமாகக் கொடுத்து விடுகின்றன.

இதனால்தான் அபிராமி பட்டரும், 'பணியேன் ஒருவரை நின் பத்மபாதம் பணிந்த பின்னே' என்று உரிமையுடன் கூறுகிறார்.

## 25. அபிராமியே அருமருந்து.

*பின்னே திரிந்து உன் அடியாரை பேணிப் பிறப்பறுக்க*
*முன்னே தவங்கள் முயன்று கொண்டேன் முதல் மூவருக்கும்*
*அன்னே உலகுக்கு அபிராமி என்னும் அருமருந்தே*
*என்னே இனி உன்னை யான் மறவாமல் நின்று ஏத்துவனே.*

**(நினைத்த காரியம் இடையூறின்றி ஈடேற)**

| | |
|---|---|
| முதல் மூவருக்கும் அன்னே | மும் மூர்த்திகளுக்கும் (பிரம்மா, விஷ்ணு சிவன்) அன்னையாகத் திகழும் அபிராமியே ! |
| உலகுக்கு அபிராமி | சிவத்தோடு அபின்னமாய், அருவமாய் இருந்த சித்சக்தியான நீ, உலகத்து உயிர்கள் உய்யும் பொருட்டு அபிராமி என்ற பெயரும், வடிவமும் பெற்று, அவதரித்தவளே |
| என்னும் அருமருந்தே ! | பிறவிப்பிணியைப் போக்கும் அரிய மருந்தே ! |
| உன் அடியாரைப் பேணி | உன் உபாஸகர்களை வழிபட்டு, |
| பின்னே திரிந்து | அவர்கள் வழியையே நானும் பின்பற்றி |
| பிறப்பறுக்க | எனது பிறவிநோய் அழிய |
| முன்னே தவங்கள் | முன் பிறவிகளில் பல தவங்களைச் |
| முயன்று கொண்டேன் | செய்து, முயற்சி கொண்டேன் |
| என்னே இனி | இனிமேல் எனக்கு என்ன கவலை ! |
| உன்னை | அருமருந்தாகிய உன்னை, |
| யான் | அடியேன் |
| மறவாமல் | (என்றும்) நிரந்தரமாக |
| நின்று | உன் வழிபாட்டில் அசையாது நிலை பெற்று |
| ஏத்துவனே | புகழ்ந்து துதி செய்து வழிபாடு செய்வேன். |

அருவுருவமாகியிருந்த நிலையிலிருந்து சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் முதலிய தொழில்களைச் செய்வதற்கு உருவமாக ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற மும்மூர்த்திகளாய் தோன்றிய மூவருக்கும் தாயே ! உலகத்துயிர்களின் நன்மை பொருட்டு அபிராமி என்று போற்றப்பெற்று, பிறவிப் பிணிக்கு அம்ருதம் போன்ற அரிய மருந்தே !

உன்னை யான் என்றும் மறவாமல் நிலையாக நின்று

துதிப்பேன் ! இனி எனக்கு என்ன கவலை ? இப்பேறு கிடைத்த தற்குக் காரணம் என்ன ?

உன் உபாசகர்களை வழிபட்டு அவர்கள் பின்பற்றிய வழியையே நானும் பின்பற்றி, அவர்களுக்கு ஆளாகத் திரிந்து, அவர்களைப் போற்றி, பிறப்பை அறுப்பதற்குத் தக்கபடி, முன்ஜென்மங்களில் பல தவங்களைச் செய்து முயற்சி செய்தேன்.

இந்தப் பாடல் மூலமாக உலகிற்கு அபிராமிபட்டர் சொல்லுவது யாதெனில் அன்னையைத் தொழுது பக்தி மார்க்கத்தில், முதல் படியாக நல்ல அடியார்களின் சேர்க்கை வேண்டும். இதனையே 'சத்சங்கம்' - என்று கூறுவர். இத்துடன், குருபரம்பரை சாக்த சித்தாந்தத்தின் அடிப்படை. ஸ்ரீவித்யா பூஜை மிக ரகசியமானது. இந்த பூஜையை குருவின் மூலமாகவே தான் அறியவேண்டும். ஸ்ரீவித்யா பூஜையில் முதன்முதலில் செய்வது குருபரம்பரைக்கு வணக்கம். (ஏழு தலைமுறைகள்)

மாதா, பிதா, குரு, தெய்வம் என்பது வேதவாக்கு. குருதான் நம்மை தெய்வத்திடம் சேர்ப்பது. எனவேதான், 'உன் அடியாரைப் பேணி, பின்னே திரிந்து பிறப்பறுக்க' என்றார். அதாவது 'குருசேவை' செய்து அவரின் மூலமாக 'பிறவி' என்ற நோயின் பிடியிலிருந்து விடுபட என்று பொருள் கொள்ள வேண்டும். பின்திரிதல் - என்பதற்கு பின்பற்றுதல், அவர்கள் விதித்த வழியில் செல்லுதல் என்று பரந்த பொருளில் கொள்ள வேண்டும்.

607. தேவேசீ - மும்மூர்த்திகள், தேவர்களுக்கு ஈஸ்வரி, (975. பூர்வஜா - எல்லாவற்றிற்கும் முன்னே உண்டானவள்).

'முன்னே தவங்கள் முயன்று கொண்டேன்'

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் பல ச்ருதியில் இதன் பொருளுக்கு நல்ல விளக்கம் கிடைக்கிறது. அதாவது எவனொருவன் கோடிக்கணக்கான ஜன்மங்களில் இதர தேவதைகளின் நாமஸங்கீர்த்தனம் செய்திருக்கிறானோ அவனுக்கு மட்டும் ஸ்ரீதேவியின் நாமஸங்கீர்த்தனத்தில் ச்ரத்தை ஏற்படுகிறது. எப்படி ஒருவன் தன் கடைசிப் பிறவியில் ஸ்ரீவித்யா உபாஸகன் ஆவானோ அதே மாதிரி இந்த ஸஹஸ்ரநாம பாடமும் கடைசி ஜன்மத்தில் தான் கிடைக்கும்.

ஸ்ரீலலிதா த்ரிசதீயின் பலச்ருதியில், 'ஸ்ரீவித்யை என்ற சாக்த வழிபாடு யாரொருவருக்கு புனர்ஜன்மம் கிடையாதோ அவராலும் அல்லது ஈசுவராவதாரம் யாரோ அவராலுமேதான் அடைய முடியும்' - என்று சொல்லப்பட்டிருக்கிறது.

'அபிராமி அந்தாதி' என்னும் இந்த மந்திர நூல் தமிழர்களுக்கு அபிராமி பட்டர், அன்னையின் அருளினால், அளித்த அரிய வரப்பிரசாதம். ஸ்ரீஸௌந்தர்யலஹரீ, ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம், ஸ்ரீ ச்யாமளா தண்டகம் போன்ற நூல்களின் 'சாராம்சம்' என்றும் சொல்லலாம். மேலும் குறிப்பாக, வடமொழி தெரியாத, தமிழ் மட்டும் தெரிந்தவர்களுக்கு மிக எளிய நடையிலே, தெள்ளத் தெளிவாக, அருமையாக இயற்றப்பட்ட நூல் இது.

அன்னை அபிராமியின் அன்பரான 'அபிராமிபட்டருக்கு' எப்படி அடுத்த பிறவி இல்லையோ அதுபோல அவர் இயற்றிய 'அபிராமி அந்தாதியை' இடைவிடாது பாராயணம் செய்வோர்க்கு 'மறுபிறவி' கிடையாது என்பதில் இம்மியளவும் சந்தேகமே இல்லை.

சென்ற பாடலில் 'அமரர் பெருவிருந்தே' என்றார். இந்த மண்ணுலகிற்கும், இந்த கலியுகத்தில் 'அன்னை அபிராமியே கண்கண்ட தெய்வம்' என்பதை உணர்த்த "உலகுக்கு அபிராமி என்னும் அருமருந்தே" என்றார்.

ருத்ரம் :- "யா தேருத்ர சிவா தனூ : சிவா விச்வாஹே பேஷஜீ

சிவா ருத்ரஸ்ய பேஷஜீ தயா நோம்ருடஜீவஸே" - என்கிறது.

பொருள் : "பரமசிவனே ! எந்த பராசக்தி உனது பாதி சரீரம் உடையவள் ஆகின்றாளோ அவள் உலகனைத்திற்கும் மருந்து. ருத்ரனாகிய உனக்கும் அவள் தான் மருந்து. விஷத்தை உண்டும் அவள் அருளால் தான் எங்களுக்காகப் பிழைத்து இருக்கிறாய்."

சென்ற பாடலில், 'பணியேன் ஒருவரை நின் பத்ம பாதம் பணிந்த பின்னே' என்று கூறி இந்தப் பாடலில் 'உன்னை யான் மறவாமல் நின்று ஏத்துவனே' - என்று சொல்லியிருப்பது அவருக்கு அன்னையிடம் எப்பேர்ப்பட்ட ஈடுபாடு உள்ளது என்பதை உலகிற்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது.

## 26. அடியார்களின் பெருமையும், தன் சிறுமையும்.

*ஏத்தும் அடியவர் ஈரேழுலகினையும் படைத்தும்*
*காத்தும் அழித்தும் திரிபவராம் கமழ்பூங்கடம்பு*
*சாத்தும் குழல் அணங்கே மணம் நாறும் நின்தாளிணைக்கு என்*
*நாத்தங்கு புன்மொழி ஏறியவாறு நகையுடைத்தே.*

**(சொல்வன்மையும், செல்வாக்கும் பெற)**

| | |
|---|---|
| கமழ் பூங்கடம்பு | நறுமணம் கமழ்கின்ற கடம்ப மலரை |
| சாத்தும் குழல் | அணிந்த கேச பாரத்தை |
| அணங்கே | உடைய அபிராமியே |
| ஏத்தும் அடியவர்கள் | உன்னை உபாசித்து சித்தி பெற்ற சாதகர்கள் |
| ஈரேழ் உலகினையும் | பதினான்கு உலகங்களையும் |
| படைத்தும், காத்தும் | தோற்றுவித்தும், ரட்சித்தும் |
| அழித்தும் | ஸம்ஹரித்தும் |
| திரிபவராம் | உலாவுவர், (அப்படி இருக்க) |
| மணம் நாறும் | நல்ல வாசனை வீசும் |
| நின் தாளிணைக்கு | உன்னுடைய இரண்டு திருவடிகளுக்கு |
| என் | (ஒன்றுக்கும் பற்றாத) அடியேன் |
| நாத்தங்கு | நாவினால் உதிக்கும் |
| புன்மொழி | ஒரு சுவையுமில்லாத சொல் |
| ஏறியவாறு | ஏறிய செயல் |
| நகையுடைத்தே | சிரிப்புக்கு இடமாவதே. |

மணம் வீசுகின்ற கடம்பமலரை அணியும் கூந்தலையுடைய தெய்வப்பெண்ணே, உன்னைத் துதிக்கும் அடியவர்கள் பதினான்கு உலகங்களையும் படைத்தும், காத்தும், அழித்தும் திரிபவர்களாகிய மும்மூர்த்திகள். அப்படியிருக்க, மணம் வீசுகின்ற நின்னுடைய இரண்டு திருவடிகளுக்கு, ஒன்றுக்கும் பற்றாத அடியேனுடைய நாக்கில் தங்கிய பொலிவற்ற மொழிகள் ஏறிய செயல் நகைக்கத்தக்கதாக இருக்கிறது !

எம்பெருமாட்டியின் திருவடிகளில் தம் பாமாலை சேர்ந்து விளங்குவதால் அபிராமி பட்டருக்கு ஒருவகையில் பெருமிதமும், மற்றொரு வகையில் வியப்பும் தோன்றுகிறது. 'நம்முடைய அன்புக்குகந்த பிள்ளை கட்டிய மாலை ஆயிற்றே' என்று தன் தாயுள்ளத்தால் (கருணையினால்) ஏற்றுக்கொண்டாள் என்று அவர்

நினைக்கிறார். மூவர் போற்றும் அன்னைக்கு இது ஒரு பொருளா ? ஆனாலும் இம்மாலையை ஏற்றுக்கொண்டாள் அன்னை அபிராமி !

'அன்னைக்கு அன்பர்களிடம் அவ்வளவு அக்கறை'

அபிராமிபட்டரோ அனுபூதிமான்: அம்பிகையை புறக்கண்ணாலும், அகக்கண்ணாலும் தரிசித்தவர். ஆனாலும் அன்னையிடம் தன்னை மிகச் சாமான்யனாகவே எப்போதும் சொல்லிக்கொள்வது அவருடைய 'உயர்ந்த நிலையை' நமக்கு உணர்த்துகிறது.

அருணகிரிநாதரும் 'மல்லே புரிபன் னிருவா குவில்என் சொல்லே புனையும் சுடர்வே லவனே' - என்பார்.

மற்றொரு விளக்கம் - 'ஏத்தும் அடியவர்' - இவர்கள் மும்மூர்த்திகளான ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன் என்று முன் பார்த்தோம். ஆனால், அன்னையின் அன்பர்கள், அபிராமிபட்டர் போல, ஸதாசர்வகாலமும் அன்னையையே பக்தியால் பூஜித்து இறுதியில், அவருடன் தாதாம்யம் ஆகிவிடுகின்றனர். அதாவது அடியார் அம்பிகையாக ஆகிறார். இதைக் கருத்தில் கொண்டு நோக்குங்கால், அவர்களே 'படைத்தும், காத்தும், அழித்தும்' என்ற மூன்று தொழில்களையும் செய்யும் தகுதியை அடைகின்றனர்.

அதாவது 'ஏத்தும் அடியவர்' - என்பதற்கு உன்னை உபாஸித்து சித்தி பெற்ற சிறந்த சாக்த பக்தர்கள் என்று பொருள்.

'தேவி உபாஸகர்களால் செய்ய முடியாத ஓர் செயலும் இல்லை' இதற்குத் தலைசிறந்த உதாரணமாய்த் திகழ்கிறார் அபிராமி பட்டர். அன்னை அபிராமியின் அருளினால் 'அமாவாசை-பௌர்ணமியானது' அல்லவா !

323. கதம்பகுஸுமப்ரியா - கதம்பப் பூவில் ப்ரிய முள்ளவள்.

60. கதம்ப வனவாஸினீ - கதம்ப மரக்காட்டில் வசிப்பவள். சிந்தாமணி க்ருஹத்தைச் சுற்றி ஒரு பெரிய மணிமண்டபம். அதனைச் சுற்றி கடம்ப மரக்காடு. அதில் வசிப்பவள். மதுரை க்ஷேத்திரத்திற்கு கடம்பவனம் என்று பெயர். அங்கு உறையும் மீனாட்சி தேவி.

ஸ்ரீபுரத்தில் 25 தத்துவங்களின் வடிவாய் உலோகங்கள்

ரத்னங்கள் இவற்றால் ஆன 25 மதில்கள் இருப்பதாய் சொல்லப்பட்டிருக்கிறது. அவைகளில் தங்கம், வெள்ளி இருமதில்களுக்கு நடுவில் கடம்பவனம் உள்ளது.

த்ரிசதியில் 11-வது நாமா 'கதம்பகுஸுமப்ரியா'. இதற்கு ஸ்ரீ ஆசார்யர்களின் பாஷ்யத்தை தமிழில் மொழிபெயர்த்த ஸ்ரீ 'ஸார்' ஸுப்ரமண்ய அய்யர் கொடுத்த குறிப்பு பின்வருமாறு :-

'கதம்ப விருக்ஷமானது தேவ வ்ருக்ஷமாகிய கற்பக வ்ருக்ஷங்களில் ஒன்று. கற்பக விருக்ஷமென்பது அந்தக்கரண மாகும்.' அந்தக்கரணம் - பஞ்ச பூதங்களின் ஸத்வ குணங்களின் ஸமஷ்டியாகும். அங்ஙனமே கல்பவிருக்ஷமும் ஸந்தானம், ஹரிசந்தனம், மந்தாரம், பாரிஜாதம், கதம்பம் என்னும் ஐந்து வகை வ்ருக்ஷங்களின் பொதுப்பெயர். அந்தக்கரணத்தின் ஐந்து பாகங்கள் மனம், புத்தி, சித்தம், அஹங்காரம், உள்ளம் என்பவையாகும்.

மனம் வாயுவின் ஸத்வாம்சம்; புத்தி அக்னியின் ஸத்வாம்சம்; சித்தம் ஜலத்தின் ஸத்வம்; அஹங்காரம் ப்ருதிவியின் ஸத்வாம்சம்; உள்ளம் ஆகாசத்தின் ஸத்வாம்சம்; ஆதலின் கதம்பம் என்பது மனமாகும். மனமென்னும் காட்டில் வசிப்பவள். த்ரிசதீ (10-வது நாமா) கதம்பகானனாவாஸா - கதம்ப வனத்தில் வசிப்பவள்.

'கதம்ப குஸுமம்' என்பது மனத்தின் வ்ருத்தியாகும். ஞானமும் வ்ருத்தியும் அவிநாபாவ ரூபங்கள். வ்ருத்தியின்றி ஞானமில்லை. ஞானத்தை அடையும் உத்தேசமின்றி எந்த வ்ருத்தியும் இல்லை. ஆதலின் விஷய ஞானரூபமும் தத்வஞான ரூபமும் அபேதமாய் உடைய 'பரதேவதைக்கு மனோவ்ருத்தி ரூப கதம்ப குஸுமம் அதிக ப்ரீதிகரமானது.'

297. ஹரிப்ரஹ்மேந்த்ரஸேவிதா - விஷ்ணு, ப்ரஹ்மா, இந்திரன் முதலியவர்களால் வணங்கப்பட்டவள்.

இவர்களும் அம்பாளை வணங்குவதால், அம்பாளின் உபாஸகர்கள், இவர்களை வணங்க வேண்டிய அவசியம் இல்லை, இது சிவானந்த லஹரீயில் சிவபரமாகக் கூறப்பட்டிருக்கிறது. இதனையே ஆதிசங்கரரும் ஸௌந்தர்ய லஹரீ, 25-வது ஸ்லோகத்தில், ("த்ரயாணாம் தேவானாம்...") கூறியுள்ளார்.

231. மஹா பைரவ பூஜிதா - மஹாபைரவரால் பூஜிக்கப் பட்டவள்.

பைரவர் என்ற பெயரில் உள்ள 'ப' என்ற எழுத்து 'பரணம்' (நிறப்புதல்) - ச்ருஷ்டியையும், 'ர' என்ற எழுத்து 'ரமணம்' - காப்பாற்றுதலையும், 'வ' - என்ற எழுத்து 'வமனம்' - ஸம்ஹாரத்தையும் (முத்தொழிலையும்) குறிப்பது. இதனால் பரமசிவனுக்கு பைரவர் என்ற பெயர். முப்பெருந் தொழில்களைச் செய்வதால் 'மஹாபைரவர்' - என்று கூறப்படுபவர்.

இவர் தேவியை பூஜித்ததாக பத்மபுராணம் கூறுகிறது. சிதக்னி குண்டத்தில் (4) மஹாபைரவர் மஹாயாக க்ரமத்தினால் ஸ்ரீ லலிதா தேவியைத் தோன்றும்படி செய்தார். எனவே மஹாபைரவபூஜிதா.

558. கமலாக்ஷநிஷேவிதா - (தாமரைக் கண்ணனான) மஹா விஷ்ணுவால் விசேஷமாக ஸேவிக்கப்பட்டவள். மஹாவிஷ்ணு, இந்திர நீல ரூபமுடைய அம்பாளை எப்போதும் ஆராதிக்கிறார். அதனால் தன் பதவியை அடைந்தார் என்று பத்மபுராணம் கூறுகிறது.

மஹாவிஷ்ணு பரமேச்வரனை தாமரை மலர்களால் அர்ச்சித்தார். அப்பொழுது ஒரு தாமரை குறைந்ததால், தன் அழகிய கண்ணையே எடுத்து அர்சித்தார். சிவனும், சக்தியும் ஒன்றே. இந்த ஆராதனையை தேவிக்கும் செய்தார் என்றும் பொருள் கொள்ளலாம்.

அபிராமிபட்டர், அன்னை அபிராமியின் பெருங்கருணை யினாலும், அருளினாலுமே 'அபிராமி அந்தாதி' உருவானது என்கிறார்.

ஆதிசங்கரரும், ஸௌந்தர்ய லஹரீ, கடைசி (100-வது) ஸ்லோகத்தில் (ப்ரதீப - ஜ்வாலாபிர்...), தேவியிடம், "உன்னுடையதேயான வாக்குகளால் அமைந்த இந்த உனது ஸ்தோத்ரம்" - என்று தன்னடக்கத்தோடு, பணிவாகச் சொல்கிறார்.

### 27. அன்னை அபிராமி அருளினால் அடையும் பேறு.

*உடைத்தனை வஞ்சப்பிறவியை உள்ளம் உருகும் அன்பு*
*படைத்தனை பத்மபதயுகம் சூடும் பணி எனக்கே*
*அடைத்தனை நெஞ்சத்து அழுக்கை எல்லாம் நின்அருட்புனலால்*
*துடைத்தனை சுந்தரி நின்அருள் ஏதென்று சொல்லுவதே !*

**(மனநோய் தீர)**

| | |
|---|---|
| சுந்தரி | சுந்தரியாகிய அபிராமியே ! |
| வஞ்சப்பிறவியை | மாயா மயக்கத்தினால் ஏற்பட்ட பிறவியை |
| உடைத்தனை | அழித்தாய் ! |
| உள்ளம் உருகும் | நெஞ்சம் நெக்கு நெக்காக உருகும் |
| அன்பு படைத்தனை | மெய்யன்பை உண்டாக்கினாய் ! |
| பத்ம பதயுகம் | உன்னுடைய தாமரை மலரைப் போன்ற இரண்டு திருவடிகளை |
| சூடும் பணி | (எளியேன்) தலையில் அணிந்து வழிபடும் வேலையை |
| எனக்கே அடைத்தனை | எனக்கே அளித்தாய் ! |
| நின் அருட் புனலால் | உனது அருளாகிய தூய திருநீரால் |
| நெஞ்சத்து | என் உள்ளத்தில் உள்ள |
| அழுக்கை எல்லாம் | மலங்களை எல்லாம் |
| துடைத்தனை | துடைத்து விட்டாய் ! |
| நின்னருள் | உன்னுடைய பேரருளை |
| ஏதென்று | எத்தகையது என்று |
| சொல்லுவதே ! | (யாரால்) அளவிட்டு சொல்லமுடியும் ! |

அழகுக்கு அழகு செய்யும் அழகே உருவான அபிராமியே, சுந்தரியே ! யான் அறியாவண்ணம் வந்து என்னைத் துன்புறுத்தும், மாயா மயக்கத்தால் ஏற்பட்ட பிறவியை உடைத்துவிட்டாய்.

அதற்கு முன் அடியேனுடைய உள்ளம் உருகுவதற்குக் காரணமான சிறந்த அன்பை அடியேன் பெறும்படி செய்தாய்.

இதற்குமுன், நின்னுடைய தாமரை மலரைப் போன்ற இரண்டு 'திருவடிகளை' எளியேன் தலையில் அணிந்து வழிபடும் வேலையை எனக்கு நியமித்தாய்.

இவை எல்லாவற்றிற்கும் முன்னே, ஏழையேனுடைய நெஞ்சில் இருந்த பல வகையான மலங்கள் (அழுக்குகள்) எல்லாவற்றையும் நின் அருளாகிய தூய தண்ணீரால் துடைத்து விட்டாய்.

இவ்வளவுக்கும் காரணமாய் நின்று உதவிய நின் திருவருளை எத்தகையதென்று சொல்வது !

சுருக்கமாகச் சொன்னால், மனத்திலுள்ள மலங்களைப் போக்கி, தலையிலே உன் திருவடியைத் தாங்கச் செய்து, உள்ளத்திலே உருகும் அன்பு உண்டாகி, அது முறுகி, இனி பிறப்பு இல்லை என்ற நிலையை அளித்தாய் ! எல்லாம் உன் அருளாலேதான் என்று அன்னை அபிராமியிடம் ஆனந்தத்தில் நெக்குருகிச் சொல்லும் பாடல் இது.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 880. ஸம்ஸாரபங்க நிர்மக்ன ஸமுத்தரண பண்டிதா :- ஸம்ஸார சகதியில் (சேற்றில்) முழுகியவர் களை தூக்கி வெளியே எடுப்பதில் திறமைசாலி. ஒரு முறையாவது சரணமடையும் எண்ணத்துடன் அம்பாளை நினைப்பவர்கள் முடிவில்லாத ஸம்ஸார ஸாகரத்தில் விழுவதில்லை. பகவத் கீதை (12.7) - ''தேஷாமஹம் ஸமுத்தர்த்தா'' இதே கருத்துடையதாய் உள்ளது.

842. பவரோகக்னீ - ஸம்ஸாரம் என்ற நோயை அகற்றுபவள்.

175. பவநாசினீ - ஸம்ஸார பந்தத்தை அழிப்பவள்.

742. பவதாவஸுதா வ்ருஷ்டி - ஸம்ஸாரமாகிய காட்டுத் 'தீ'க்கு அம்ருத வர்ஷமாக இருப்பவள். பவ - ஸம்ஸாரம். தாவ - காட்டுத் தீ. இதை அணைப்பதற்குப் பொழியும் அம்ருதமயமான மழை.

வஞ்சப்பிறவி என்று சொல்லுவது சாலப் பொருந்தும். தாயுமானவரும், 'இறப்பும் பிறப்பும் பொருந்த என்கெவ்வண்ணம் வந்ததென்றெண்ணியான் பார்க்கில் மறப்பும் நினைப்புமாய் நின்ற வஞ்ச மாயாமனத்தால் வளர்ந்தது தோழி' - என்பர். (அதாவது வஞ்சம் என்பதற்கு மாயை என்று பொருள் கொள்ளவேண்டும்.)

அன்னையை நினைந்து உருகுவது அன்பிற்கு அடையாளம்.

'நினைந்துருகும் அடியார்' - என்று அப்பர் சொல்வார்.

அம்பிகையின் திருவருள் இருந்தால் சித்த சுத்தியும், உபாசனா பலமும், முறுகிய பக்தியும், ஜீவன் முக்தியும் படிப்படியாக உண்டாகும் என்பது கருத்து.

## 28. அனைத்தையும் அளிப்பவள் அபிராமியே !

*சொல்லும் பொருளும் என நடம்ஆடும் துணைவருடன்*
*புல்லும் பரிமளப் பூங்கொடியே நின்புது மலர்த்தாள்*
*அல்லும் பகலும் தொழும் அவர்க்கே அழியாஅரசும்*
*செல்லும் தவநெறியும் சிவலோகமும் சித்திக்குமே.*

**(இகபர சுகங்களைப் பெற)**

| | |
|---|---|
| சொல்லும் பொருளும் என | சொல்லும் பொருளும் போல பிரிக்க முடியாதபடி |
| நடமாடும் துணைவருடன் | கூத்தப் பெருமானாகிய கணவரோடு |
| புல்லும் | ஒன்றியிருக்கும் (இணைந்திருக்கும்) |
| பரிமளப் பூங்கொடியே | (இயற்கையாகவே) ஞான மணம் வீசும் மலர்க்கொடி போன்ற அன்னை அபிராமியே ! |
| நின் புது மலர்த்தாள் | அன்றலர்ந்த செந்தாமரை போன்ற நின் திருவடிகளை |
| அல்லும் பகலும் | இரவு, பகல் இரண்டிலும் இடைவிடாது |
| தொழும் அவர்க்கே | தொழுகின்ற அடியவர்களுக்குத் தான் |
| அழியா அரசும் | என்றும் நிலையான அரச போகமும் |
| செல்லும் தவநெறியும் | (பயனடையும் வரை) செல்லும் தவநெறி வாழ்வும் |
| சிவலோகமும் | இறுதியில் மோட்சமான சிவலோகப் பதவியும் (முத்தி) |
| சித்திக்குமே | (தானே) கைகூடும். |

சொல்லும் பொருளும் போல ஆனந்தத் தாண்டவம் புரியும் நடராசப் பெருமானுடன் இணையும் ஞான மணம் வீசும் மலர்க்கொடி போன்ற அன்னையே, அப்பொழுது அலர்ந்த தாமரை மலரைப் போன்ற நின்னுடைய திருவடியை இரவும் பகலும் தொழுகின்ற அடியவர்களுக்கே, பகைவர்களால் அழிவு வராத அரசச் செல்வமும், பயனடையும் வரையில் செல்லும் தவநெறி வாழ்வும், இறுதியில் மோட்சமாகிய சிவலோகப் பதவியும் கிடைக்கும்.

சொல் -என்பது முதலில் வருவது - சக்தியைக் குறிக்கும்.

பொருள் - என்பது சொல்லைக் கேட்ட பிறகு விளங்குவது - சிவன்.

அதாவது, அபிராமி பட்டர், இந்தப் பாடலில், பக்தி மார்க்கத்தையும் அதன் பயனையும் இந்த இரண்டு சொற்களினால் விளங்க வைத்து விட்டார். சக்தியின் மூலமாகத்தான் சிவனை (சிவலோக பதவியை) அடைய முடியும்.

திருமூலரும், "மருவொத்த மங்கையும் தானும் ..." (திருமந்திரம் - 1137) என்பார். அதாவது, மலரோடு மணம் பொருந்தியிருப்பது போல சிவனும் சக்தியும் ஒன்றியிருப்பது.

(பக்தி மார்க்கம் - சக்தி உபாசனை. பயன் - சிவலோகம்) எனவே, நாம் அன்னை அபிராமியை, உபாசித்து அவள் அருளினால் முக்தி அடையலாம். 'சித்திக்குமே' - என்று அழகாக பாடலை முடிக்கிறார். அதாவது உபாஸகன் கோராமலேயே தானே கிடைக்கும் என்று பொருள். மேலும் காளிதாஸன், சொல்லும் பொருளும், 'வாகர்த்தா விவஸம்ப்ருக்தௌ' என்றான். சொல் - சக்தி பரமான விமர்சாம்சம். பொருள் - சிவாத்மகமான பிரகாசம். ஒரே வஸ்துவின் இரண்டு நிலைகள், இரண்டுபரிமாணங்கள் ஒன்றி லிருந்து ஒன்று பிரிக்க முடியாதது. மேலும் 'சக்தி சம்மேளனத் தாலேயே சிவன் ஆடுகிறார்' என்ற பொருளும் சித்திக்கின்றது.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - 734. நடேஸ்வரீ - நடேசருடைய மனைவி.

சிதம்பரத்தில் ஆடும் நடராஜாவின் மனைவி. சிதம்பரம் என்பதை க்ஷேத்திரம் என்றும், ஹ்ருதயாகாசம் என்றும் இருவிதமாகப் பொருள் கொள்ளலாம். இரண்டுமே சரியானவை. அப்படி ஆடும் நடேசருக்கு அனுஸரணையாக இவளும் நடனம் ஆடுகிறவள். இவர்கள் இருவரும் நடனம் செய்வதை "தவாதாரே மூலே" ஸௌந்தர்யலஹரீயில் (ஸ்லோகம் - 41) சொல்லப் படுகிறது.

640. வாகதீச்வரீ - வாக்குகளிற்கு அதிபதியானவள். வசினீ முதலிய எட்டு வாக்தேவதைகளுக்கும் ஈசுவரியானவள். இவர்கள், அம்பாளின் ஆக்ஞைப்படியே (இந்த) ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரத்தை எழுதினார்கள்.

எல்லா விதமான வார்த்தைகளும் எழுத்துக்களும் அம்பாளுடையதே என்று ஸௌந்தர்யலஹரீயில் பகவத்பாதாள் கூறியுள்ளார்கள்.

350. வாக்வாதினீ - வாக்கை (வார்த்தையை) சொல்கிறவள் (அல்லது) சொல்லும்படி செய்கிறவள். வாக்தேவதை - ஸரஸ்வதியின் ஒரு தோற்றம். வாக்வாதினீ என்ற ஒரு தேவதை. அம்பாளின் மந்த்ரிணீயான ராஜஸ்யமாலா (ராஜமாதங்கீ என்றும் பெயர் உண்டு)வின் அங்க தேவதை.

பரிமளப் பூங்கொடியே. (631. திவ்ய கந்தாட்யா - தெய்வீக மணத்தால் நிறைந்தவள்.) நடராசப்பெருமானுடன் நின்று விளங்குவதால் 'அவளைப் பூங்கொடியே' என்றார்.

410. சிவ பரா - தன் பக்தர்களுக்கு சிவனைக் காண்பிப்பவள்.

நின் புதுமலர்த்தாள் - அன்னையின் திருவடிகள் எப்போதும் புதிய மலரைப் போல தண்மையும், மென்மையும், விரிவும் உண்டு. ஞான மணமும், ஆனந்தத்தேனும் தருவது. அன்னையின் திருவடிகளையே எப்போதும் பற்றிக் கொள்பவர்க்கு 'அடியார் ' - என்ற பெயர் அல்லவா !

742. பவதாவஸுதாவ்ருஷ்டி. பவதா + வஸுதா + வ்ருஷ்டி என்றும் பிரிக்கலாம். பவதா – சிவனை தருபவள். வஸுதா – செல்வங்களைத் தருபவள். அதாவது மோட்சத்தையும், போகத்தையும் அளிப்பவள்.

685 ராஜ்யதாயினீ - ராஜ்யத்தைக் கொடுப்பவள். 692. ஸாம்ராஜ்யதாயினீ - ஸாம்ராஜ்யத்தைக் கொடுப்பவள். 688. ராஜபீடநிவேசித நிஜாச்ரிதா - தன்னை அண்டியவர்களை அரசபீடத்தில் அமர்த்துபவள்.

அன்னையின் அருளினால் அழியா அரசைப் பெற்று நன்றாக வாழ்ந்து, உரிய காலத்தில், ராஜவாழ்வைத் துறந்து, தவவாழ்வை மேற்கொண்டு, அதனால் முக்தி (சிவலோகம்) அடைவர்.

அபிராமி பட்டர் நமக்குத் தரும் வழி : அன்னையின் திருவடியைப் பற்றி அறம், பொருள், இன்பம் நிரம்பிய இகவாழ்விலே இன்புற்று வாழ்ந்தபின் வீட்டு நெறியாகிய தவத்தை மேற்கொண்டு, முடிவில் முக்தியை அடையலாம். அன்னையின் திருவடிகளே சரணம் !

## 29. அபிராமியே - 'ஸர்வசக்திமயீ'.

*சித்தியும் சித்திதரும் தெய்வமாகித் திகழும் பரா*
*சத்தியும் சத்திதழைக்கும் சிவமும், தவம் முயல்வார்*
*முத்தியும் முத்திக்குவித்தும் வித்தாகி முளைத்து எழுந்த*
*புத்தியும் புத்தியின் உள்ளே புரக்கும் புரத்தை அன்றே.*

**(அணிமாதி அஷ்டசித்திகளைப் பெற)**

| | |
|---|---|
| சித்தியும் | சகல சித்திகளும் |
| சித்தி தரும் | அந்த சித்திகளை வழங்கும் |
| தெய்வம் ஆகித் திகழும் | தெய்வமாகி விளங்குகின்ற |
| பராசத்தியும் | பராசக்தியும் |
| சத்தி தழைக்கும் | சக்தி தோன்றுவதற்கு |
| சிவமும் | (காரணமான) பரமசிவமும் |
| தவம் முயல்வார் | தவம் புரிவார் (அடையும்) |
| முத்தியும் | பத முக்தியும், |
| முத்திக்கு வித்தும் | அந்த முக்தியைப் பெறுவதற்கு விதையுமாகி, |
| வித்தாகி முளைத்து | அவ்விதையினின்று தோன்றி |
| எழுந்த புத்தியும் | எழுந்த அறிவும்(மெய்ஞ்ஞானமும்) |
| புத்தியினுள்ளே | அந்த அறிவினுக்குள்ளே |
| புரக்கும் | நின்று பாதுகாக்கும் |
| புரத்தை அன்றே | அன்னை, முப்புரங்களில் வாசம் செய்யும் திரிபுரசுந்தரியாகிய அபிராமி ஆவாள். |

சகல சித்திகளும் அந்தந்த சித்திகளுக்கு அதிஷ்டானமாய் விளங்கும் பராசக்தியும் சக்தி தோன்றுவதற்கு காரணமாய் நின்ற சிவமும், தவம் புரிவார் அடையும் பத முக்தியும், கடைசியாக அடையக்கூடிய சக்தியோடு தாதம்யமாகும் சாயுஜ்யத்திற்கு விதையாவதும், அவ்விதையினின்று என் உள்ளத்தில் முளைத்து எழுந்த மெய்ஞ்ஞானமும், அவ்வாறு எழுந்த மெய்ஞ்ஞானம் நழுவிவிடாமல் நிலை நிறுத்துபவளும் முப்புரங்களில் வாசம் செய்யும் அன்னை அபிராமி தான்.

திரிபுரசுந்தரியே எல்லாமாகி இருக்கிறாள் என்பது கருத்து.

மனத்தை ஒருமுகப்படுத்துவது தியானம். அது தவத்தைச் சார்ந்தது. தவமுனிவர்கள் மனத்தை அடக்கும் வல்லமை

யுடையவர்கள். அதனால் அவர்களிடம் பல அற்புத ஆற்றல்கள் தோன்றும். அவற்றை சித்திகள் என்பர். (அஷ்ட மஹாசித்திகள்) அணிமா, மகிமா, லகிமா, கரிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசித்வம், வசித்வம்.

இந்த சித்திகளாக இருப்பவள் அம்பிகை. 224 - மஹாசித்தி.

அணிமா - உடலைக் குறுக்கிக் கொண்டு (அணு அளவில்) பிறர் கண்ணில் படாமல் ஸஞ்சரித்தல்

மஹிமா - உடலை மிகப் பெரியதாக ஆக்கிக் கொள்வது.

லகிமா - உடலை லேசாக்கிக் கொள்ளுதல்.

கரிமா - உடலை மிகவும் கனமாக ஆக்கிக்கொள்ளுதல்.

ப்ராப்தி - விரும்புவதை அடைதல்.

ப்ராகாம்யம் - விருப்பம் தடைபடாமல் நிறைவேறுதல்.

ஈசித்வம் - ஜடமும், சேதனமும் ஆணைக்கடங்கி நடக்கச் செய்தல்.

வசித்வம் - பிறருக்கு வசப்படாமல் தன் விருப்பப்படி நடத்தல்.

இதைத் தவிர வேறு பல சித்திகளும் உண்டு. சித்திகளையுடைய தவமுனிவர்களை சித்தர்கள் என்று சொல்வர். (18 சித்தர்கள் - கோரக்கர், மச்சேந்திரநாதர் போன்றோர்). ஒன்பது கோடி சித்தர்கள் என்றும் ஒரு கணக்கு உண்டு. (அவர்கள் இருந்த இடம் - திருவாவடுதுறை - தவகோடிசித்தவாசபுரம்)

சிவபக்தராகிய திருமூலர், திருவாவடுதுறையில் சக்தியை வழிபட்டுப் பூர்ணத்வம் எய்தியதை, "நேரிழையாவாள்..." என்ற திருமந்திரப் பாடல் (78) சொல்கிறது. இங்கு தான் உமாதேவி பசுவாக இருந்து பரமனை வழிபட்டு முத்தி அடைந்தார் என்கிறது தலபுராணம்.

471. ஸித்தேச்வரீ - சித்தர்களுக்கு ஈஸ்வரி. காசியில் ஸித்தேச்வரீ என்ற நாமத்துடன் அருள் புரிகிறாள் அன்னை அபிராமி. சித்தர்கள் - என்பது சித்திகளை ஆத்மஞானம் அடைவதற்கு உபயோகிப்பவர்களையே குறிக்கும். இந்த

சித்திகளைக் கொண்டு 'மனோலயம்' ஏற்படுத்தித் தவம் புரிந்து அத்வைத அநுபவத்தை அடைவதே முக்கிய நோக்கம்.

472. ஸித்த வித்யா - ஸித்தமான (சாஸ்வதமான) வித்யையாக இருப்பவள். மனனம் செய்பவரைக் காப்பாற்றுவது மந்த்ரம் எனப்படும். புருஷ தேவனாக இருந்தால் - மந்த்ரம். ஸ்த்ரீ தேவதை - வித்யை.

473. ஸித்தமாதா - சித்தர்களுக்கு தாயாக, காப்பாற்றுபவளாக இருப்பவள். அன்னை அபிராமிக்கு, மேலே எந்த சக்தியோ அல்லது எவரும் இல்லாதவள்.

572. பராஶக்தி - மிகவும் உயர்ந்த, மேலான சக்தி வடிவினள். (பர - மிகவும் சிறந்த) சக்தியின் சேர்க்கையால் தான் சிவனுக்கு உத்கர்ஷம் ஏற்படுகிறது என்பது சாக்தர்களின் கொள்கை. பரா எனப்படும் மந்த்ரத்தின் சக்தி ரூபமாக இருப்பவள்.

சக்தியும் சிவமும் இணைந்து ஒன்றாயிருப்பர் சக்தி இல்லையெனில் சிவம் இல்லை. சக்தியோடு சேர்ந்தே சிவம் தொழிற்படுகிறது.

'சிவமெனும் பொருளும் ஆதிசத்தியோடு சேரின் எத்தொழிலும் வல்லதாம். அவர் பிரிந்திடின் இயங்குதற்கும் அரிதாம்.' என்று கூறுகிறது. - ஸௌந்தர்யலஹரி (1) "சிவசக்தியா யுக்தோ". (முன்னும் பார்த்தோம்.)

407. சிவமூர்த்தி - சிவனையே தன் மூர்த்தியாகக் கொண்டவள். அதாவது, சிவபெருமானது திருஉருவமாக இருப்பவள்.

இதனையே மனத்தில்கொண்டு, 'சக்தி தழைக்கும் சிவமும்' - என்று பாடுகிறார் அபிராமிபட்டர்.

உண்மையான பக்தர்கள், எல்லாவற்றினும் விடுபட்டு இறைவியோடு ஒன்றுபட வேண்டும் என்று விரும்புவர். அவர்கள் செய்வதே தவம். நிஷ்காம்யமான (எதையும் வேண்டாமல், எதிர்பார்க்காமல்) தவத்தை புரிபவர்களுக்கு முக்தியை அவள் வழங்குகிறாள். ஆனந்த மயமானது முக்தி நிலை. ஆனந்தமே உருவமாக இருப்பவள் அம்பிகை. ஆகவே, முக்தியும் அவள்

சொரூபந்தான். இதை லலிதா ஸஹஸ்ரநாமம் (737) 'முக்திரூபிணீ - முக்தியையே ரூபமாக உடையவள். 736. முக்திதா - முக்தி அளிப்பவள், என்று கூறுகிறது.

முக்திக்கு வித்தாயும் அம்பிகை இருக்கிறாள். முக்தி ஞானத்தால் கிடைப்பது. ஞானமே அவள் திருவுருவம். மக்களுக்கு உள்ள அவித்யையே (அறியாமையே) பிறவிக்குக் காரணம். அது போனால் பிறவியினின்றும் விடுதலை பெறலாம். முக்தி இன்பத்தை அடையலாம்.

அம்பிகை அவரவர்களுடைய அறிவினுக்குள் இருந்து அதை அறியும்படி செய்கிறவள். அறிவு வயிரம் போன்றது. வயிரம் இருளில் ஒளிவிடாது, ஒளியில் மிகச் சிறந்து ஒளிரும். அதுபோல அறிவு ஒளிர்வது, அதனூடே அன்னை இருந்து அறிவிப்பதனால் தான். அறிவென்னும் விளக்குக்கு ஒளிதரும் சுடர் அவள். அறிவென்னும் மலரை மணக்கச் செய்கிறவள் அவள்.

மக்களுடைய புத்தியில் இருந்து பாதுகாக்கும் இறைவி அபிராமி புத்தியை மட்டுமா பாதுகாக்கிறாள் ?

அவள் திருபுரங்களாகிய மூன்று மூன்று பொருள்களைப் புரக்கிறாள் (காக்கிறாள்). அதனால் திரிபுரசுந்தரி என்ற திருநாமம் பெற்றுள்ளாள். இதையே கருத்தில் கொண்டு, அபிராமிபட்டரும் 'புத்தியின் உள்ளே புரக்கும் புரத்தை அன்றே' - என்றார்.

முன்னும் (பாடல். 2) 'திரிபுரசுந்தரியாவது அறிந்தனமே' - என்றார்.

588. த்ரிகூடா - மும்மூன்றான கூடங்களை உடையவள்

சித்தி முதல் திரிபுரங்கள் வரையில் எல்லாம் தானாகி இருப்பவள் அன்னை. எதைத் தருகிறாளோ அதுவேயாகி இருக்கிறாள். தன்னையே தருகிறாள். யார் அதைப் பெறவேண்டுமோ அவர்களின் அறிவுக்குள் இருந்து அறிவிக்கிறாள்.

199. ஸர்வ ஶக்திமயீ - எல்லா சக்திகளையும் உடையவள்.

உலகம் ப்ரஹ்மமயம் என்று சொல்வதால், உலகத்திற்கும் ப்ரஹ்மத்திற்கும் பேதம் இல்லை என்று சொல்லப்படுகின்றது.

இந்த இடத்தில் 'மய' என்ற விகுதி அபேதத்தைக் காட்டுகிறது. அதே போல் இந்த நாமாவிலும் அம்பாளுக்கும் மற்றும் பாலை, பகளை முதலிய சக்திகளிலிருந்து வேறுபட்டவளல்ல என்று அர்த்தம்.

200. ஸர்வ மங்கலா - எல்லா மங்களங்களையும் உடையவள். அவைகள் அனைத்துக்கும் மூலமாக இருப்பவள். ஸர்வ மங்களா என்ற திதி நித்யா தேவீ, ஆகையால், ப்ரணவத்தைக் குறிக்கிறது என்றும் சொல்லலாம்.

மேலும் த்யானம், கீர்த்தனம், பூஜை முதலிய பக்திகளைச் செய்து பரதேவதையை த்ருப்தி படுத்தியவர்களுக்கு (அவர்கள் மூடர்களாய் இருந்தாலும் கூட) விரும்பிய ஸுகத்தை தருகிறவள் எனப்படுகிறது. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம் பூர்வ பாகத்தில், 'மங்களானாம் ச மங்களம்' - என்பதையும் ஒப்பிடலாம்.

எல்லாப் பொருளும் அவள். எல்லா ஆற்றலும் அவள். எல்லாக் கடவுளும் அவள். எல்லாவற்றிற்கும் மூலமும், முடிவும் அவளே.

அதாவது திரிபுரசுந்தரியாகிய அன்னை அபிராமி எல்லாமாகி இருக்கிறாள் என்பது கருத்து.

## 30. கரையேற்றுபவள் உமையாகிற அபிராமியே.

*அன்றே தடுத்து என்னை ஆண்டுகொண்டாய் கொண்டது அல்ல என்கை*
*நன்றே உனக்கு இனி நான் என் செயினும் நடுக்கடலுள்*
*சென்றே விழினும் கரைஏற்றுகை நின் திருவுளமே*
*ஒன்றே, பல உருவே, அருவே, என் உமையவளே !*

**(அடுத்தடுத்து வரும் ஆபத்துகள் நீங்க)**

| | |
|---|---|
| ஒன்றே | சிவத்தோடு ஒன்றியிருக்கும் ஒப்பற்ற ஒரே வஸ்துவே ! |
| பல உருவே | உன் இச்சையால் உயிர்களின் நன்மையைக் கருதி பல உருவங்களை மேற்கொண்டவளே ! |
| அருவே | ரூபமற்றவளே ! |
| என் உமையவளே ! | என்னுடைய (தாயான) உமாதேவியாரே ! |
| அன்றே | அந்நாளிலேயே |
| என்னை தடுத்து | அடியேனை பிரபஞ்ச மயக்கத்திலிருந்து விலக்கி |
| ஆண்டு கொண்டாய் | அடிமைப்படுத்திக் கொண்டாய் ! |
| கொண்டது அல்ல என்கை | அவ்வாறு ஆட்கொண்டதை அல்ல என்பது (மறுப்பது) |
| நன்றே உனக்கு ? | உனக்கு நியாயமா ? (நன்றாய் இருக்க மாட்டாது) |
| இனி நான் என் செயினும் | இனிமேல் அடியேன் என்ன (பிழை) செய்தாலும் |
| நடுக்கடலுள் சென்றே | கடலுக்கு நடுவே சென்று |
| விழினும் | விழுந்தாலும் |
| கரை ஏற்றுகை | (என்னை) கரையேற்றிக் காப்பாற்றுதல் |
| நின் திருவுளமே | உன் திருவுளப்பாங்கே. |

ஒருருவாக உள்ளவளே, பல உருவங்களை உடையவளே, உருவம் ஏதும் அற்ற அருவே. எனக்குத் தாயாகிய உமா தேவியே !

முன் ஒருநாள் அடியேனைத் தடுத்து ஆட்கொண்டு அருள் புரிந்தாய் ! அவ்வாறு ஆட்கொண்டதை அல்ல (இல்லை) என்று மறுத்தல் உனக்கு நியாயமா ?

இனிமேல் அடியேன் என்ன பிழை செய்தாலும், கடலுக்கு நடுவே சென்று விழுந்தாலும், என் குற்றத்தை மறந்து கரையேற்றிப் பாதுகாத்தலே நின் திருவுளப்பாங்குக்கு ஏற்ற செயலாகும்.

அபிராமி பட்டர், இந்த ஒரு பாடலில் மட்டும் தான் 'என் உமையவளே' என்று அன்னை அபிராமியை அழைக்கிறார். (உரிமையுடன் சேயைப் போல)

'உமா' - என்ற திருநாமத்தின் பெருமையை, பாடல் 10-ல் உணர்ந்தோம். அங்கு, 'இமயத்து அன்றும் பிறந்தவளே அழியா முத்தி ஆனந்தமே' என்று சொன்னது நினைவில் இருக்கிறதல்லவா !

முத்தி - நாம் ஜீவர்களாய் பிரிந்து, திரும்பவும் அன்னையிடம் ஐக்கியமாகும் உன்னத நிலை. இதுவே எல்லோரும் வேண்டுவது.

உமையே - அழியா முத்தி ஆனந்தம் என்று சொல்லி, 'அபிராமி அந்தாதி'யின் உட்பொருளை நமக்கு உணர்த்தியுள்ளார் அபிராமிபட்டர்.

அவள் எழுதா மறையின் ஒன்றும் அரும்பொருள் அல்லவா !

அவளே அருள். அவளே உமாதேவி. 633. உமா.

உமா - என்பது தேவி பஞ்சாட்சரம் அல்லவா !

பின்னும் (56-ம் பாடல்) 'ஒன்றாய் அரும்பி, பலவாய் விரிந்து இவ்வுலகெங்குமாய்' நின்றாள், அனைத்தையும் நீங்கி நிற்பாள் ... என்று சொல்வார்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் (665) - ஏகாகினீ - தனித்து இருப்பவள். தன்னைத் தவிர வேறான எந்த ஒரு வஸ்துவும் இல்லாமல் தனித்து நிற்பவள்.

623. கேவலா - தனித்த வடிவினள். வேறு எந்த குணமோ, தோஷமோ கலக்காமல் தானாக இருப்பவள்.

கேவலம் - 'மிகச் சிறந்தது' - 'தனித்தது' என்று பொருள்.

824. பஹுரூபா - பல உருவங்கள் உள்ளவள்.

அம்பாள், பரமார்த்தத்தில் ஒருத்தியாக இருந்தாலும் நர்த்தகீ (நடிகை) போல பலவிதமான வேஷங்களைப் போட்டுக்கொண்டு பலவிதமான ரூபங்களுடன் இருக்கிறாள் என்று எல்லா புராணங்களும், நூல்களும், வேதங்களும் கூறுகின்றன.

137. நிராகாரா - உருவம் இல்லாதவள். - நாம் காணும் அவள்

வடிவங்கள் - மாயை. அவளுடைய உண்மை ஸ்வரூபம் - வடிவற்றதே. எங்கும் வ்யாபித்து இருப்பதால் அவளுக்கு குண ஸம்பந்தமான உருவம் ஏதும் இல்லை என்று இந்த நாமாவின் பொருள்.

666. பூமரூபா - அனைத்துமாக இருப்பவள். பூமா என்ற சொல்லிற்கு ப்ரஹ்மம் என்றே பொருள். எனவே ப்ரஹ்ம வடிவானவள். 401. விவிதாகாரா - பலவித ரூபங்களையுடையவள்.

இங்கு அபிராமிபட்டர் - அன்னையை, 'நீ என்னை உன் அடிமை என்பதை மறுத்துவிடாதே' என்கிறார். இதற்கு மாறாக சுந்தரமூர்த்தி நாயனார் சிவபெருமானிடம் 'நான் உனக்கு அடிமை இல்லை' என்கிறார். பின்பு, விடையின் மேல், சிவபெருமான் உமாதேவியுடன் காட்சி அளித்தவுடன் தன் தவறை உணர்ந்து, 'அத்தா உனக்காளாய் இனி அல்லேன் எனலாமே' - என்று ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் வரும்படி ஒரு பதிகமே பாடினார். அடிமையாக இருப்பவன் தன் தலைவனிடம், 'நான் உமக்கு ஆள் அல்ல' என்று சொன்னாலும் அந்த வார்த்தை செல்லாது என்று புரிகிறதல்லவா !

இந்த பாடலில், அபிராமி பட்டரின் கவி நயம், சாதுர்யம், நகைச்சுவை, ஆனந்த அனுபவம், சேய்-தாய் விளையாடல் எல்லாம் நாம் உணருகிறோம். குழந்தை தன் தாயிடம் அன்புடன், உரிமை கொண்டு, 'நீ என்னை ஆட்கொள்ளவில்லை என்று சொன்னால், நான் நடுக்கடலில் வீழ்ந்து விடுவேன். பிறகு காப்பாற்ற வேண்டியது உன் பொறுப்பு' - என்கிறார். (நடுக்கடல் - ஸம்ஸார ஸாகரம்)

இந்தப் பாடலில், 'அன்னை என்னை, ஏற்றுக்கொண்ட அடியார்' என்று சொல்லி பின் 'என் உமையவளே' - என்று அன்னையுடன் ஐக்கியமாகிறார்.

## 31. அபிராமியின் அடியார் மறுபிறவி அடையார்.

*உமையும் உமைஒருபாகனும் ஏகஉருவில் வந்து இங்கு*
*எமையும் தமக்கு அன்பு செய்ய வைத்தார் இனி எண்ணுதற்கு*
*சமயங்களும் இல்லை ஈன்றெடுப்பாள் ஒரு தாயும் இல்லை*
*அமையும் அமையுறு தோளியர் மேல் வைத்த ஆசையுமே.*

**(மறுமையில் இன்பம் பெற)**

| | |
|---|---|
| உமையும் | உமாதேவியாரும் |
| உமை ஒரு பாகனும் | அத்தேவியை ஒரு பாகத்தில் கொண்ட பரமசிவனும் |
| ஏக உருவில் | ஒரே உருவத்தில் (அர்த்த நாரீஸ்வரராக) |
| வந்து இங்கு | இப்பிறப்பில் எழுந்தருளி வந்து காட்சி கொடுத்து |
| எமையும் | என் போன்ற அடியேனையும் |
| தமக்கு அன்பு செய்ய | தம்மை வழிபடும்படி |
| வைத்தார் | அருள்பாலித்தார்கள் |
| இனி எண்ணுதற்கு | இனிமேல் ஆராய்ந்து அறிவதற்குரிய |
| சமையங்களுமில்லை | சமயநெறிகள் ஒன்றுமில்லை. |
| ஈன்றெடுப்பாள் | என்னைப் பெறுவதற்கு |
| ஒரு தாயுமில்லை. | ஒரு தாயும் இல்லை (மறுபிறவிஇல்லை) |
| அமையுறு | மூங்கில் போன்ற |
| தோளியர் மேல் | தோளையுடைய பெண்கள் மேல் |
| வைத்த ஆசையும் | கொண்டே மோகமும் |
| அமையும் | (இனி) போதும். |

உமாதேவியாரும், அத்தேவியை தனது இடது பாகத்தில் கொண்ட பரமசிவனும் ஒன்றி இரண்டற நிற்கும் அர்த்தநாரீ சொரூபமாக எனக்குக் காட்சி தந்து அருளி, அவர்களை அன்புடன் உபாஸிக்க வைத்த பெருங் கருணையின் காரணமாக, இனிமேல் நான் பற்ற வேண்டிய சமயநெறி வேறில்லை. இனி பிறவாத நிலை அடைந்து விட்டதால், என்னை பெற்று எடுக்க தாய் இல்லை. மூங்கிலைப் போன்ற தோளுடைய பெண்கள் மீது வைத்த ஆசையும் போதும் என்றாயிற்று.

அபிராமி பட்டர் ஒரு சிறந்த தேவி உபாசகர். ஸ்ரீவித்யா உபாசகர். ஆனால் அவர் எப்போதும் மனதில் நினைந்து உருகுவது சிவனும் - சக்தியும் சேர்ந்து இருக்கும் அர்த்தநாரீசுவரர் திருக்கோலமே. அபிராமி அந்தாதியை படிப்பவர்களும், பாராயணம்

செய்பவர்களும் இந்தக் கருத்தை நன்கு உணரவேண்டும்.

சிவலோகப் ப்ராப்தி - என்பதுதான் அழியா முக்தி ஆனந்தம்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 410. ஶிவபரா - தன் பக்தர்களுக்கு சிவனைக் காண்பிப்பவள். எனவே தேவியின் மூலமாகவே தான் நாம் சிவனைக் காணமுடியும் என்பது தெள்ளத் தெளிவாகிறது.

392. ஸ்ரீ கண்டார்த ஶரீரிணீ - பரமசிவனை பாதி உடலாகக் கொண்டவள். 'ஸ்ரீ' என்றால் விஷம் என்று ஒரு பொருள். விஷத்தைக் கழுத்தில் உடையவராதலால் பரமசிவனுக்கு ஸ்ரீகண்டன் என்று பெயர்.

அபிராமி பட்டர் இன்னொரு முக்யமான கருத்தை நமக்கு தெரியப்படுத்துகிறார். ஆண்டவனிடம் அன்பு செய்வதற்கும் அவன் அருள் வேண்டும். அதாவது, 'மனிதர்களாகிய நம்மால், அவன் அருள் இன்றி யாவும் செய்ய இயலாது.''

'அவன் அருளாலே அவன்தாள் வணங்கி' - மாணிக்க வாசகர்

'நினைப்பித்தால் நின்னை நினைப்பேன்'

மாதா - பிதா - குரு - தெய்வம் : குருதான் நமக்கு வழிகாட்டியாக தெய்வத்தைக் காட்ட வேண்டும். தெய்வமே நமக்கு குருவாக நம் இடத்திற்கு வந்து வழிகாட்டினால், அதற்குமேல் நமக்கு வேண்டுவது ஒன்றும் இல்லையே !

இந்த ஆனந்த அனுபவத்தில் திளைத்த அபிராமி பட்டர், இனி வேறு சமயமோ, என்னை பெற்று எடுக்கத் தாயோ தேவையில்லையே என்று வெகு அழகாகச் சொல்லுகிறார்.

இவ்வுலகில் நாம் படும் அவஸ்தைகளுக்கு எல்லாம் காரணம் - 'ஆசை' என்ற கண்ணை மறைக்கும் மோகம். அதாவது மண், பொன், பெண் - என்றவைகளின் மீது வைக்கும் ஆசை. இதில் பெண்ணாசை என்பது மிகவும் வலியது, கொடியது. இதை மனதில் கொண்டு அபிராமி பட்டர் இப்பாடலை 'அமையும் அமையுறு தோளியர் மேல் வைத்த ஆசையுமே' - என்று சொல்லி நிறைவு பெறச் செய்கிறார்.

இந்தப் பாடலின் கருத்து யாதெனில், அன்னை அபிராமியின் அருள் அடியாரை அத்தனிடம் சேர்க்கும் என்பதே.

## 32. அன்னை அபிராமி என்னை ஆட்கொண்ட அதிசயம்

*ஆசைக்கடலில் அகப்பட்டு அருளற்ற அந்தகன்கைப்*
*பாசத்தில் அல்லற்பட இருந்தேனை நின் பாதமென்னும்*
*வாசக்கமலம் தலைமேல் வலிய வைத்தாண்டுகொண்ட*
*நேசத்தை என் சொல்லுவேன் ஈசர் பாகத்து நேரிழையே !*

**(அகால மரணமும், துர் மரணமும் ஏற்படாமல் இருக்க)**

| | |
|---|---|
| ஈசர் பாகத்து நேரிழையே | சிவபெருமானின் இடது பாகத்தில் அமர்ந்த, ஆபரணங்கள் அணிந்த அபிராமியே ! |
| ஆசைக்கடலில் | ஆசையாகிய கடலில் (சம்சாரம்) |
| அகப்பட்டு அருளற்ற | சிக்குண்டு இரக்கம் இல்லாத |
| அந்தகன் | யமனுடைய |
| கைப்பாசத்தில் | கையிலிருக்கும் பாசக்கயிற்றால் |
| அல்லற் பட இருந்தேனை | துன்பப்பட இருந்த அடியேனை |
| நின் பாதம் என்னும் | நினது திருவடிகள் என்ற |
| வாசக்கமலம் | மணம் பொருந்திய தாமரைகளை |
| தலை மேல் வலிய வைத்து | எனது சிரசில் நீயாகச் சூட்டி, |
| ஆண்டு கொண்ட | தடுத்து ஆட்கொண்ட |
| நேசத்தை | இன்னருளை |
| என் சொல்லுவேன் | எப்படி புகழ்ந்துரைப்பேன் ! |

சிவபெருமானுடைய வாமபாகத்தில் எழுந்தருளியிருக்கும் நுட்பமான அணிகலன்களை அணிந்துள்ள தாயே !

ஆசையென்னும் (ஆசாபாசங்களாகிற ப்ரபஞ்சமென்னும்) கரையற்ற பெருங்கடலில், துரும்பு போல அகப்பட்டு அதன் விளைவாக மரணம் வருங்கால் சிறிதும் இரக்கம் இல்லாத யமனுடைய கையிலுள்ள பாசத்தில் அகப்பட்டு மிக்க துன்பம் அடையும்படியான அவல நிலையில் கிடந்த இந்த எளியேனை, நின்னுடைய திருவடியாகிய நறுமணம் வீசும் தாமரை மலரை அடியேன் தலை மீது நீயாக விரும்பி வலிய வைத்து ஆண்டு ஆளாக்கிக்கொண்ட பெருங்கருணையை எவ்வாறு விரித்துச் சொல்லுவேன் !

இந்த மண்ணுலக வாழ்க்கையில் 'மரணம்' - என்பது மாற்றமுடியாத ஒன்று. எப்பேர்ப்பட்டவர்களானாலும் 'மரணபயம்' வந்து தாக்குகிறது.

'யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதுனுக் கென்கடவேன்' - மணிவாசகர்.

'ஒக்க அடைக்கும் போது உணரமாட்டேன்' - திருநாவுக்கரசர்

இறைவனிடம் பக்தி உண்டாக வேண்டுமானால் 'யமபயம்' உள்ளத்தில் உண்டாக வேண்டும். (அதனாலே தான் 'பயபக்தி' என்று கூறுவர் போலும் ! ) காலனிடத்தில் பயம் உண்டானால் 'கால காலனிடத்தில்' பக்தி ஆழமாக ஏற்படும்.

'ஆவிக்கு மோசம் வருமா றறிந்துன் அருட்பதங்கள்

சேவிக்க என்று நினைகின்றிலேன்' - கந்தர் அலங்காரம் - அருணகிரிநாதர்.

யாரேனும் பயமுறுத்தினால் சேய் ஓடி வந்து தாயை இறுகப் பற்றிக்கொள்ளும். அன்னை அபிராமியின் திருவடிகளைப் பற்றிக் கொண்டவர்களுக்கு, யாதொரு பயமுமில்லை என்கிறார் அனுபூதிமானான அபிராமி பட்டர்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் (557) காலஹந்த்ரீ - காலனை (ம்ருத்யுவை) அழிப்பவள். ப்ரஹ்மம் காலனுக்கும் காலனாக இருப்பதாக சுருதி சொல்கிறது.

'ஞ: காலகாலோ குணீ ஸர்வ வித்ய:' (ச்வேதாஸ்வதர உபநிஷத் 4-2)

552. ஸர்வம்ருத்யு நிவாரிணீ - எல்லாவித மரணங்களையும் தடுப்பவள். தன் ஸ்வரூபத்தை உணரச்செய்து, அம்ருத நிலையை அடையச் செய்து, ம்ருத்யுக்களில் இருந்து நம்மை அம்பாள் காப்பாற்றுகிறாள். சுருதிகளும் சொல்கின்றன.

749. ம்ருத்யுதாரு குடாரிகா : மரணம் என்ற மரத்தை வெட்டும் கோடாலியாக இருப்பவள்.

181. ம்ருத்யுமதனீ : பக்தர்களுக்கு மரண பயத்தை இல்லாமல் செய்பவள். மரணம் - சரீரத்திற்கு, ஆத்மாவிற்கு அல்ல என்ற தத்துவ ஞானத்தை உணரச் செய்து, அதாவது, தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுப்பது போல், மரணம் என்ற பயத்தை நன்கு கடைந்து, பக்தர்களை பக்குவப்படுத்தி பயத்தை போக்குகிறாள்.

'பக்தன் பாவனையால் அவளாகவே மாறிவிடுவதால் அழிவற்றவன் ஆகிவிடுகிறான்.'

திருக்கடவூர் - காலசங்கார க்ஷேத்திரம் அல்லவா !

யமனைக் காலால் எட்டி உதைத்து, தன் பக்தனாகிய மார்க்கண்டேயனுக்கு முக்தியைக் கொடுத்தவர், சிவபெருமான். அவர் யமனை உதைத்தது தனது இடதுகாலால். ஆனால் இடப்பாகத்தில் அமர்ந்திருப்பது அன்னை அபிராமி அல்லவா ! எனவே யமனை எட்டி உதைத்தது 'அன்னையின் கால்' அன்றோ !

'ஆசைக்கோர் அளவில்லை' - என்பார் தாயுமானவர். ஆசைப்பட்ட பொருள் கிடைத்துவிட்டாலும் அதனோடு நிறைவு பெறுவது மனத்தின் இயல்பு அன்று. அநுபவிக்க அநுபவிக்க மேலும் அதையே விரும்பித் தாவுகிறது. அளவில்லாத பொருள்களுக்குக் கரையில்லாத கடலை உவமை கூறுவது மரபு. ஆகவே ஆசையும் கடல் போன்றது. அதன் அளவு அறிந்து கரை ஏறுவது அரிதிலும் அரிய செயல். ஆசையினாலே, நாம் அடுத்து, அடுத்து பிறக்கிறோம், இறக்கிறோம். பிறக்கிறோம். இதையே ஆதிசங்கரர், தனது பஜகோவிந்தத்தில் 'புனரபி ஜனனம், புனரபி மரணம்' என்று சொல்லுகிறார்.

திருவள்ளுவரும், திருக்குறளில் (361),

"அவா என்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்

தவா அப்பிறப்பீனும் வித்து" – என்கிறார்.

பொருள் : ஆசையே பிறப்பிற்கும் இறப்பிற்கும் காரணம்.

மரணம் வருமுன் யமபயம் வருகிறது. யமன் - இவனுக்கு 'பாரபட்சம்' கிடையாது. குறிப்பிட்ட நேரம் வந்துவிட்டால் அவன் உடனடியாக வந்து தன் கடமையை முடித்து விடுவான். கடமையைச் சரிவரச் செய்வதில் அவனுக்கு யாரும் ஈடு கிடையாது.

அப்படியென்றால், நாம் என்ன செய்ய வேண்டும் ?

அதற்கு அபிராமிபட்டர் சொல்லும் பதில் :-

அன்னை அபிராமியின் திருவடிகளை மனதில் இடைவிடாது த்யானம் செய்யுங்கள். அவள் அருள் கிடைக்கும்.

ஆதிசங்கரரும் தம் சீடர்களுக்கு அளித்த உபதேசம் ''ஆபதிகிம் கரணீயம் ஸ்மரணீயம் பாதயுகலம் பாயா : ।'' அதாவது ''ஆபத்தில் என்ன செய்ய வேண்டும் ? அன்னையின் திருவடிகளை நினைக்க வேண்டும். அன்னையே தானாக வலிய வந்து தன் பாதமாகிய ஞான மணம் கமழும் செந்தாமரை மலரைத் தலைமேல் வைத்து நம்மை ஆட்கொள்வாள். அம்பாளின் கருணையைப் பாருங்கள் ! அவள் தன் குழந்தையின் தலையில் வலிமையான காலால் மிதிக்கவில்லை. தலையின் மேல் மலரை வைத்தாற்போல் திருவடியை வைத்து ஆண்டுகொண்டாள். முடைநாய்த் தலையில் வாசகக் கமலம் பட்டவுடன் இந்த உடம்பும், ஆத்மாவும் புனிதமாகிவிட்டது. பிறகு யமனுக்கு இங்கே என்ன வேலை ? அன்னையின் பரம கருணையை எண்ணி ஆனந்த அதிசயத்தில் வியக்கிறார் அபிராமிபட்டர்.

இந்த அற்புத அருளை 'நேசம்' என்று குறிக்கிறார். நேசம் என்பது தானே விரும்பி ஏற்படுத்திக்கொண்ட உறவு அல்லவா ! எல்லோருக்கும் பயனளிப்பது போன்ற அருள்.

அம்பிகை தானே விரும்பி வந்து தன் தாளுக்கும் அன்பர் தலைக்கும் இணைப்பு ஏற்படுத்தி உறவாக்கி கொண்டது. இது வார்த்தைகளால் வர்ணிக்க முடியாத ஒன்று. எதற்காக அன்பர்களாகிய அடியார்கள் முன்னே பலகோடி தவங்கள் செய் தனரோ, அதனால் ஏற்பட்ட புண்ணிய பலன் இது. அபிராமி பட்டர், 'ஆண்டுகொண்ட நேசத்தை என் சொல்லுவேன் !'-என்கிறார்.

எம்பெருமாட்டியின் அடையாளத்தைக் கடைசியில் சொல்லி, வெகு அழகாக பாடலை நிறைவு பெறச் செய்கிறார்.

பரமசிவனுடைய இடது பாகத்தில் நுட்பமான ஆபரணங்களை அணிந்து கொண்டு ஒன்றியிருப்பவள் அன்னை அபிராமி.

## 33. அபிராமியே ! அடுங்காலனுக்கு அஞ்சல் என்பாய்.

*இழைக்கும் வினை வழியே அடும் காலன் எனை நடுங்க*
*அழைக்கும் பொழுது வந்து அஞ்சல் என்பாய் அத்தர் சித்தமெல்லாம்*
*குழைக்கும் களபக் குவிமுலை யாமளைக் கோமளமே*
*உழைக்கும் பொழுது உன்னையே அன்னையே என்பன் ஓடிவந்தே.*

**(மரண அவஸ்தையிலும் அம்பிகையின் நினைவு அகலாதிருக்க)**

| | |
|---|---|
| அத்தர் சித்தமெல்லாம் | பிரபஞ்சத்திற்கு தந்தையாக விளங்குகின்ற பரமசிவனுடைய திருவுள்ளம் முழுவதும் |
| குழைக்கும் | உருகும்படி செய்யும் |
| களபக் குவிமுலை | கலவைச் சந்தனம் பூசிய குவிந்த தனபாரங்களை உடைய |
| யாமளைக் கோமளமே | யாமளையாகிய (ச்யாமளா) மெல்லியலே, சுந்தரியே ! |
| இழைக்கும் வினை வழியே | அடியேன் பல பிறவிகளில் இழைத்த வினையின் பயனாய், |
| அடுங்காலன் | போர்க் கோலம் பூண்ட யமன் |
| எனை நடுங்க | நான் பயந்து நடுங்கும்படி |
| வந்து அழைக்கும் பொழுது | என்னை நெருங்கிக் கூப்பிடும் சமயம், |
| உழைக்கும் பொழுது | அடியேன் யமவாதனைப் பட்டு கலங்கும் போது, |
| உன்னையே | உன்னைத்தான் |
| அன்னையே என்பன் | அம்மா என்று கூப்பிடுவேன் |
| ஓடிவந்தே | (அப்பொழுது நீ) விரைவாக எழுந்தருளி வந்து, |
| அஞ்சல் என்பாய் | அபயம் அளிக்க வேண்டும். |

பிரபஞ்சத்திற்கு தந்தையாக விளங்குகின்ற பரமசிவனுடைய உள்ளத்தை முழுதும் உருகும்படி செய்து கொள்ளை கொள்ளும், கலவைச் சந்தனம் பூசிய குவிந்த தனபாரங்களை உடைய யாமளையாகிய மெல்லியலே, எல்லாவற்றையும் வரையறுக்கும் விதியின் படி (அடியேன் பல பிறவிகளில் இழைத்த வினையின் பயனாய்) கொல்ல வரும் காலன், என்னை நடுங்கச் செய்து அழைக்கும்போது, அடியேன் யமவாதனைப் பட்டு கலங்கும்போது உன்னைத் தான் 'அம்மா' என்று கூப்பிடுவேன்.

அப்பொழுது விரைவாக நீ எழுந்தருளி வந்து பயப்படாதே என்று கூறி அபயம் அளிக்க வேண்டும்.

இவ்வுலகில் நாம் கண்கூடாகப் பார்ப்பது, மரண அவஸ்தை ஏற்படும்போது இறைவன் நினைவு வருவதில்லை. 'சாகும் தறுவாயில் சங்கரா, சங்கரா' என்பது எளிதன்று. இதையே அப்பர் ஸ்வாமிகளும் கூறுகிறார்,

'ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்,

ஒக்க அடைக்கும் போது உணர மாட்டேன்'

அப்பரே அப்படி சொல்லும்போது, நாம் எம்மாத்திரம் ? ஆனால் இறைவனிடம் பக்தி செய்து மெய்யறிவு பெற்றவர்களுக்கு காலனால் வரும் அச்சத்தை அகற்றுபவள் அன்னை அபிராமி. அது அவள் அருளினால் தான் முடியும்.

'அம்மா' என்று கூப்பிட்ட குரலுக்கு (காத்திருந்தவள்போல) ஓடிவருபவள் அவள். ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் 'ஸ்ரீமாதா' என்று ஆரம்பிக்கிறது.

அம்பாளின் ஆணையின் பேரில், அம்பாளின் அங்கமான, வாக்தேவதைகள் செய்த ஸ்தோத்திரம் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம். சரியாக 1,000 நாமாக்களை உடையது. 1000-வது நாமமாக 'லலிதாம்பிகா,' அம்பாளின் முத்திரையோடு லலிதமாக பூரணமாகிறது. மனதிற்கு சந்தோஷம் கொடுக்கும் எல்லா பாவங்களும் லலிதம் என்று சொல்லப்படும். (அதாவது ப்ரகாசம், தோற்றம், இனிமை, ஆழம், ஸ்திரத்தன்மை, சக்தி, நளினம், தாராளம்.)

1. ஸ்ரீமாதா - சிறப்பு மிகுந்த அன்னை.

கஷ்டம் வரும் போது நம்மையும் அறியாமல் முதலில் வாயிலிருந்து தானே வெளிவரும் சொல் அம்மா இதனையே மனதிற் கொண்டு அபிராமிபட்டர் உன்னையே அன்னையே என்பன் - என்றார்.

அன்னையின் ஐந்து குணங்கள்

823 - ஜனனீ - தாயார் சகல ஜகத்தையும் சிருஷ்டிக்கிறவள் தகப்பனால் தன் சரீரத்தில் சேர்க்கப்பட்ட சுக்லத்திற்கு கருவாக உருக்கொடுப்பவள்.

457. மாதா - கருவை தன்னுள் அடக்கி வைத்து

காப்பாற்றுபவள். (அடைகாப்பது போல)

826. ப்ரஸவித்ரீ - தக்க தருணத்தில், தேவையான அளவுக்கு கரு வளர்ந்த பிறகு, அதை வெளியில் கொண்டு வந்து விடுபவள்.

337. விதாத்ரீ - சிசுவை போஷித்து வளர்ப்பவள். 935. ஜகத்தாத்ரீ. உலகத்தை தாங்குபவள்

985. அம்பா - ஆபத்து வேளையில் தானே வந்து விடுபவள்.

295. அம்பிகா - சிறந்த தாயாக இருப்பவள். நித்ரையும், ஓய்வும் தருபவள்.

934. விஸ்வமாதா - உலகங்களுக்கெல்லாம் அன்னை.

உலகனைத்தும் ஈன்ற அவளை (285. ஆப்ரஹ்ம கீடஜனனீ) தாயாக வணங்குவது மறுபடியும் மற்றொரு தாயின் வயிற்றில் பிறப்பதைத் தடுக்கும். அன்பில் சிறந்தது தாயன்பு. எனவே தேவியைத் தாயென்று நினைப்பதும், வணங்குவதும் நமக்கு அவளிடம் மிகவும் நெருக்கத்தைக் கொடுக்கும். இதையே காஞ்சி பரமாச்சாரியார், மிகவும் எளிமையாக, எல்லோருக்கும் புரியும் படியாகச் சொல்லி இருக்கிறார். பூவுலகத் தாயாரை தெய்வமாக வணங்க முடியுமானால், எல்லா ஜன்மத்துக்கும் துணையாக இருக்கும் தெய்வத்தை (பரமாத்மாவை) தாயாக வைத்து வணங்கத் தான் வேண்டும். அவள் ஒருத்தி தான் அம்மா. நாம் அனைவரும் அவளுக்குப் பிறந்தக் குழந்தைகள். அதாவது எல்லோரும், எல்லாமும் சகோதரர்கள் என்ற அநுபவம் வரும். லோகம் முழுவதற்கும், காலம் முழுவதற்கும் தாயாக இருந்து அநுக்கிரகம் செய்கின்ற பராசக்தியின் கடாக்ஷம் எப்படிப்பட்டவனையும் கை தூக்கி ரட்சிக்கும். அந்த அம்பிகையை நாம் அன்போடு தியானம் செய்யவேண்டும்.

அம்மா

அம்மா - என்ற மூன்று அட்சரங்கள் விலை மதிக்க முடியாத மாணிக்கங்கள். ஒருவனுக்கு அம்மா என்று கூப்பிடத் தெரிந்தால் போதும். வேறு ஒரு மந்திரமும் வேண்டாம்.

அம்மா என்ற பதத்தை பிரித்தால் அம் - ஆ என்று வரும்.

அகாரம் - சிவம் - அதாவது ப்ரஹ்மம். முதலில் அம் -

என்பது எல்லாவற்றிற்குள்ளும் அடங்கி இருக்கும் சிவத்தைக் குறிக்கின்றது. ஆ - என்பது வெளிவந்திருக்கும் ஜீவரூபமான சிவத்தைக் குறிக்கின்றது.

ஆசார்யாளும் ஜீவன் தான் ப்ரஹ்மம் என்பார்.

ஒருவன் மனம் உருகி குழைந்து அம்மா என்று கூப்பிடும் போது 'நான் சிவமாகி அடங்கி இருந்து, அதே சிவம் வெளிவந்து ஜீவபாவத்தை அடைந்து கஷ்டப்படுகிறேனே' - என்பதைத் தான் குறிக்கிறது.

இப்போது அந்தத் தாயும், ஜீவபாவத்தை அடைந்திருக்கும் அந்த சிவமாகின்ற குழந்தையைப் பார்த்து ''ஆ'' என்று சொல், என்கிறாள். 'ஆ' - என்று சொல்லும் போது வாய் திறக்கும்.

அப்போது தாய், அன்னத்தை வாயில் ஊட்டி, பிறகு 'அம்' (வாயை மூடுவதற்கு) என்று சொல், என்கிறாள்.

அதாவது, ஜீவனாக வெளி வந்து நீ ஏன் கஷ்டப்பட வேண்டும் ? ப்ரும்மாகவே அடங்கி இரு என்பதாகும்.

சேய் சொல்வது அம்மா = அம்+ஆ

தாய் சொல்வது ஆ+அம். அதாவது அன்னை சேயை ப்ரும்மம் ஆக்கி விடுகிறாள். அத்வைதம்-என்பதற்கு சரியான பொருள் அல்லவா !

மாத : வடமொழியில் தாயைக் கூப்பிடுவது மாத : என்று. இந்த பதம் மிக அழகான அர்த்தத்தை கொண்டது. மா-வேண்டாம் அத: இந்தக் காரணத்தினால் என்று அர்த்தம் (மாத: மா+அத:)

அதாவது சம்சாரத்தில் ஜீவனாக இருந்து கஷ்டப்படுவதால் ஜன்மம் வேண்டாம் என்பதையே, (தமிழில் 'அம்மா' என்ற சொல் இருப்பது போல) வடமொழியில் மாத:.

நாமும் அபிராமியை, அன்னை அபிராமியாக பாவித்து, அவளையே மனதில் தியானித்து, அவள் பாத கமலத்தில் சரண் அடைந்தால், நம் ஜன்மா கடைத்தேறும்.

இம்மண்ணுலகில் ஒரு தாய், சில குழந்தைகளுக்குத் தாயாக இருப்பவள்.

ஆனால் அன்னை அபிராமியோ, எல்லா ஜன்மாக்களிலும், எல்லா ஜந்துக்களுக்கும் தாயாக இருப்பவள்.

அவள் ஒருத்தி தான் அம்மா. (முன்னும் 2-ம் பாடலில் "பெற்ற தாயும்" என்பார்).

தாயிடம் செல்லத் தவிக்கும் சேயைப் போல, அவள் குழந்தைகளாகிய நாம், அவளைப் பிரிந்து, இப்பிறவி எடுத்தோம் அல்லவா ! நாமும், சேயைப் போல, அவள் திருவடிகளுக்கு திரும்பிச் சென்று விடவேண்டும். இந்தப் பிறவியிலேயே முடித்து விடவேண்டும். தள்ளிப் போடக் கூடாது.

486. ச்யாமாபா - ச்யாமளா - யாமளை - 16 வயது கன்யா பெண். பசுமை கலந்த கருப்பு. 437. கோமளாகாரா, 721. கோமளாங்கீ - மெல்லிய சரீரத்தை உடையவள்.

யமனை 'அடுங்காலன்' என்று சொல்லி, அன்னையை 'யாமளைக் கோமளமே' என்று சொல்லும் நயம் வெகு அழகு. காலன் - கண்டிப்பானவன், கடுமையானவன். ஆனால் அன்னை - கருணை உள்ளம் கொண்டவள், மெல்லியள். 'காலன் வந்து', அன்னையை 'ஓடி வந்து' என்பதும் அழகு. காலனுக்கு பயத்தையும், அடியாருக்கு அபயத்தையும் தரும் அபிராமி அன்னையின் பெருமையைச் சொல்லும் பாடல்.

## 34. அபிராமி குண்டலினியாக ஆதார கமலங்களில் இருத்தல்.

*வந்தே சரணம் புகும் அடியாருக்கு வானுலகம்*
*தந்தே பரிவோடு தான் போய் இருக்கும் சதுர்முகமும்*
*பைந்தேன் அலங்கற் பருமணியாகமும் பாகமும் பொற்*
*செந்தேன் மலரும் அலர் கதிர் ஞாயிறும் திங்களுமே.*

**(பயிர் செய்ய ஏற்ற நிலபுலன்கள் கிடைக்க)**

| | |
|---|---|
| வந்தே சரணம் புகும் | (தன்னிடம்) வந்து புகலடையும் |
| அடியாருக்கு | அடியவர்களுக்கு |
| வான் உலகம் தந்தே | முக்தியை அளித்து விட்டு, |
| சதுர் முகமும் | பிரம்மாவின் நான்கு முகங்களிலும், |
| பைந்தேன் | பசுமையான தேன் துளிக்கும் |
| அலங்கற் | பலவித மலர்களாலான |
| பருமணி | கௌஸ்துப மணியும் அணிந்த |
| ஆகமும் | திருமாலின் திருமார்பிலும், |
| பாகமும் | பரமசிவனுடைய இடப்பாகத்திலும், |
| பொற் செந்தேன் மலரும் | செந்தேன் துளிக்கும் பொன் மலரிலும், |
| அலர் கதிர் ஞாயிறும் | விரிந்த கிரணங்களுடைய சூரிய மண்டலத்திலும், |
| திங்களும் | சந்திர மண்டலத்திலும் |
| பரிவோடு | விரும்பி |
| தான் போய் இருக்கும் | சென்று வீற்றிருப்பாள். |

அன்னை அபிராமி தன்னிடம் விரும்பி வந்து புகலடையும் அடியவர்களுக்குச் சொர்க்க லோக பதவியை அன்போடு தந்து, தான் பிரம தேவனுடைய நான்கு முகங்களிலும், பசுமையான தேன் துளிக்கும் பலவித, மலர்கள் சேர்த்துக் தொடுத்த மாலையும் (துழாய் மாலையும்) பருத்த கௌஸ்துப மணியும் அணிந்த திருமாலின் திருமார்பிலும், சிவபிரானுடைய இடப்பாகத்திலும் செந்தேன் சொரியும் பொலிவு பெற்ற தாமரை மலரிலும், பரவிய கிரணங்களையுடைய கதிரவனிடத்திலும் சந்திரனிடத்தும் போய் வீற்றிருப்பாள்.

கருணையே தன் உருவாகக் கொண்ட அன்னை அபிராமி, தன் குழந்தைகள் சௌக்கியமாய் இருக்கட்டும் என்று எண்ணி, தன் பெரிய மாளிகையைக் கொடுத்து விட்டு தான் எங்கோ சின்னச் சின்ன இடங்களில் சென்று தங்குகிறாள். அன்னை அபிராமியின்

கருணையை நினைத்து, நினைத்து மனம் உருகுகிறார். அதில் தோன்றிய பாடல் இது.

அன்னை அபிராமி, மண்ணுலகத்தாய்களுக்கு காட்டும் கருணை வழி.

117. பக்த ஸௌபாக்யதாயினீ - பக்தர்களுக்கு ஸௌபாக்கியத்தைத் தருபவள் 201. ஸத்கதிப்ரதா - நல்ல கதியை வழங்குபவள். த்ரிசதீ (229) 'ஸத்கதிதாயினீ ' 692. ஸாம் ராஜ்யதாயினீ - பக்தர்களுக்கு ஸாம்ராஜ்யத்தைக் கொடுப்பவள். 675. ப்ராஹ்மீ - ப்ரம்மாவின் பத்னீயான ஸரஸ்வதி. வாக்வடிவானவள்.

704. ஸரஸ்வதி - ஞான அபிமான தேவியான ஸரஸ்வதியாக இருப்பவள்.

313. ரமா - லக்ஷ்மீ ரூபமாக இருப்பவள் 892. வைஷ்ணவி- விஷ்ணுவின் சக்தியாக இருப்பவள்.

265. ப்ரஹ்மரூபா - ப்ரஹ்மாவின் வடிவமாயிருப்பவள். படைக்கும் தொழிலைச் செய்யும் ப்ரஹ்மா பரம்பொருளின் வடிவமான தேவியின் மாயையினால் வேறுபடுத்திக் காட்டப்பட்ட உருவம்.

267. கோவிந்தரூபிணீ - கோவிந்தன் (விஷ்ணு) வடிவானவள்.

266. கோப்த்ரீ - காத்தல் என்ற தொழிலைச் செய்கிறவள். படைக்கப்பட்ட ப்ரபஞ்சத்தை தேவி தன்னுடைய ஸத்வகுண ப்ரதானமான வடிவினால் காக்கிறாள்.

கோ-வாக்கு. அதனால் தெரிந்து கொள்ளப்படுபவர் கோவிந்தன். வாக்குக் கெட்டாத பரம்பொருள், காப்புத் தொழிலை ஏற்றுக் கொண்டதனால் ஜீவனின் குரல் கேட்டு ஓடி வரும் கோவிந்தன்.

விஷ்ணுக்குச் செய்யும் பூஜையும் தேவிக்கு செய்வது தான்.

முன்னும் (3-ம் பாடலில்) 'அறிந்தேன் எவரும் அறியா மறையை அறிந்து கொண்டு செறிந்தேன் உனது திருவடிக்கே திருவே...' - (லட்சுமி அம்சம்)

269. ருத்ர ரூபா - ருத்ரன் வடிவானவள். பரம்பொருளான தேவியின் தமோகுணம் மிகுந்த வடிவு ருத்ரன். இது உலகை ஸம்ஹாரம் செய்கிறது.

ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன் - ஆகியவர்களின் வடிவமாகத் திகழும் அன்னை அபிராமி, 'பொற் செந்தேன் மலரில்' உள்ளாள் என்கிறார் அபிராமிபட்டர். முன்னே, (20-ம் பாடலில்) அன்னை வீற்றிருக்கும் (ஆறு ஆதாரங்களில்) தாமரை மலர்களைப் பார்த்தோம். அவளுக்கு 'பத்மாஸனா' (278) என்ற திருநாமமும் உண்டு. ப்ரஹ்மரந்த்ரத்திற்கு கீழே ஆயிரம் இதழ்கள் கொண்ட பொற்தாமரையில் அவள் ஜோதி வடிவமாய் இருக்கிறாள். ஸஹஸ்ராராம்புஜாரூடா (105), ஸஹஸ்ரதள பத்மஸ்த்தா (528) என்ற திருநாமங்கள் அன்னைக்கு உரியவை ஆயின. 452. தேஜோவதி-தேஜஸ்ஸை உடையவள்.

அடுத்து சொல்வது, சூரியனும், சந்திரனும், பகலில் சூரியன் ஒளி தருகிறான். இரவில் சந்திரன் ஒளி வீசுகிறான். இவை காலம் தவறாமல் தம் கடமையைச் செய்கின்றன. இந்நிலையில் சிறிது தவறினாலும் பிரபஞ்சத்தின் போக்கில் பெரிய மாறுதல்களும், துன்பங்களும் உண்டாகும். இந்த இரண்டு மண்டலங்களும் வழுவாமல் ஒளிவழங்குவதற்கு காரணம் இவற்றினூடே அன்னை அபிராமி இருந்து இயக்குவது தான்.

பின்னும் (பாடல் 47)... 'இரவு பகல் சூழும் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்றதே' என்பார்.

ஆக அன்னை அபிராமி, பிரம்மனின் திருமுகங்களிலும், திருமாலின் மார்பிலும், சிவபெருமான் இடது பாகத்திலும், பொற்தாமரையிலும், கதிரவனிலும், சந்திரனிடத்தும் போய்த் தங்குகிறாள் என்று ஆறு இடங்களைச் சொல்லுகிறார்.

சிவன் அக்னியில் சிகையிலிருப்பதாகவும், அம்பாள் சந்த்ர மண்டலத்திலிருப்பதாகவும் சிவபுராணம் கூறுகிறது. 'சந்த்ர மண்டலமே ஸ்ரீ சக்ரம், ஸ்ரீ சக்ரமே அன்னை என்பது ரஹஸ்யம்.'

## 35. பெறலரும் தவம்.

*திங்கட் பகவின் மணம் நாறும் சீறடி சென்னி வைக்க*
*எங்கட்கு ஒரு தவம் எய்தியவா எண்இறந்த விண்ணோர்*
*தங்கட்கும் இந்தத் தவம் எய்துமோ ? தரங்கக் கடலுள்*
*வெங்கட் பணிஅணை மேல் துயில் கூரும் விழுப்பொருளே.*

**(திருமணம் நிறைவேற)**

| | |
|---|---|
| தரங்கக் கடலுள் | அலைவீசும் பாற்கடலில் |
| வெங்கட் பணி | வெவ்விய கண்ணையுடைய ஆதிசேஷனாகிய பாம்புப் |
| அணை மேல் | பாயலின் (படுக்கை) மீது |
| துயில் கூரும் | துயிலும் |
| விழுப்பொருளே ! | பரம்பொருளே ! |
| திங்கட் பகவின் | சிவபிரானுடைய திருமுடியில் உள்ள பிறைச் சந்திரனது |
| மணம் நாறும் | மணம் வீசும் |
| சீறடி | நின்னுடைய சிறிய அடியை |
| சென்னி வைக்க | (அடியேங்களுடைய) தலையிலே நீ வைத்தருள, |
| எங்கட்கு ஒரு தவம் | எங்களுக்கு ஒப்பற்ற தவம் |
| எய்திய வா ! | (தவத்தின் பயன்) கிடைத்தவாறு என்ன வியப்பு ! |
| எண் இறந்த | கணக்கிலடங்கா |
| விண்ணோர் தங்கட்கும் | (பலகோடி) தேவர்களுக்கும் |
| இந்தத் தவம் | இத்தகைய சிறந்த தவம் |
| எய்துமோ ? | கிடைக்குமோ ? (கிடைக்காது) |

அலை வீசும் பாற்கடலில் வெவ்விய கண்ணை உடைய ஆதிசேஷனாகிய பாம்பு படுக்கை மீது துயிலும் பரம்பொருளே, சிவபிரானுடைய திருமுடியில் உள்ள பிறைச்சந்திரனது மணம் வீசும் நின்னுடைய சிறிய அடியை அடியார்களாகிய எங்கள் தலையிலே நீ வைத்து அருள, எங்களுக்கு ஒப்பற்ற தவம் கிடைத்தவாறு என்ன வியப்பு !

கணக்கில்லாத பல தேவர்களுக்கும் இத்தகைய சிறந்த தவம் கிடைக்குமோ ?

பகவு என்றால் - சிறிய கன்று போல. திங்கட் பகவு - சந்திரனின் பிறை. தரங்கக் கடலுள் - அலைகள் நிறைந்த கடல்

அபிராமிபட்டர் எப்போதும் அன்னை அபிராமியின் திருவடிகளையே நினைத்திருப்பவர். 'அவன் அருளாலே அவன் தாள் வணங்கி' என்று அடிக்கடி கேட்டிருக்கிறோம்.

இதை மற்றும் ஒருவிதமாகக் கூடவும் சொல்லலாம்.

'அவள் அருளாலே அவன் தாள் வணங்கி' என்று. அதாவது அன்னை அபிராமியின் அருளால் தான் அமுதீசரை அடைய முடியும். சக்தி மூலமாகத் தான் சிவனை அடைய முடியும்.

தம்முடைய பெருமுயற்சி இல்லாமலே அம்பிகையின் அருளால் அந்த தவம் அவரை வந்து அடைந்ததாம். அது பெரிய வியப்பல்லவா? ! அன்னையின் கருணை அளவிட முடியாதது. தவம் எங்களை வந்து சேர்ந்தது. அது மிக ஆச்சரியமானது ! அந்த பெருந்தவத்தின் பயன் - அன்னை அபிராமி அகமகிழ்ந்து தன் திருவடிகளை தலையில் வைத்தாளாம். 'சென்னியது உன் பொற் திருவடித்தாமரை' (6) என்று முன்னும் சொன்னார் அல்லவா ! 'எங்கட்கு' என்று பன்மையில் கூறியது அவர் ஒரு சிறந்த தேவி உபாஸகர், ஸ்ரீ வித்யா உபாஸகர் என்று காட்டுகிறது. தேவி உபாஸகர்களுக்கு ஏழு தலைமுறை குருமார்களை வணங்கிவிட்டு பின்னே தான் பூஜையை ஆரம்பிப்பர். ஸ்ரீ வித்யா - ரொம்பவும் ரகஸ்யமானது. குருவின் மூலமாகவே அறிந்து கொள்ள வேண்டும். (குருவடி சரணம், திருவடி சரணம்)

111. பிஸதந்து தனீயஸீ - தாமரைத் தண்டில் இருக்கும் நூல் போல் மிக மெல்லியவள்.

அன்னை அகிலாண்டத்திற்கும் நாயகி அல்லவா ! உலகம் அடங்கும் பெரும்பாதம் உடையவள். தன் அடியார் மீது உள்ள கருணையினால், அவர்களின் தலையில் அமையும் படி சிற்றடிப் பெண்ணாக வந்து அவர்கள் தன் அடியார்கள் என்று உறுதிபடுத்துகிறாள்.

(மஹாவிஷ்ணு மகாபலியிடம் வாமனனாக வந்து பின் தன் பெரிய அடியைக் காட்டியது ஒப்பிடுக. இங்கு அன்னை, தன் பெரிய அடியை சுருக்கி சீறடியாக வருகிறாள்.)

தேவர்கட்கும் கிடைக்காத தவம் அடியவர்களுக்கு கிடைத்தது. தவத்தின் பயனாக அம்பிகை தன் சிறிய திருவடிகளை

அவர்களுடைய தலைமேல் வைத்தாள். ஏனென்றால் தேவர்கள் காமிகள். நிஷ்காம சாதகர்களுக்குத் தான் இந்த 'தவப்பயன்' கிடைக்கும். ஸௌ.ல. 95. ''புராராதே - ரந்த: '' என்ற ஸ்லோகத்தில், ஆதிசங்கரர் ''வெளிவாயிலில் நின்று சேவை புரியும் அணிமாதி சித்திகளால் இந்திராதி தேவர்கள் அங்கேயே நிறுத்தப்படுகிறார்கள். சித்திகளை அடைந்து, அதற்குமேல், அவர்கள் செல்லத் தகுதியற்றவர்கள் ஆகின்றனர்.'' என்கிறார்.

தேவர்களுக்கெல்லாம் தேவனாகிய, மகாதேவன் மீது (தலையின் மீது) மிக இரகசியமாக வைக்கிறாள். (சரணார விந்தம்..... எம்பிரான் முடிக்கண்ணியதே.) இதை அடியார்கள் எப்படி தனக்குள் உணர்கிறார்கள்! சிவபிரான் தன் தலையில் அணிந்துள்ள பிறைச்சந்திரன் மீது அன்னையின் 'திருவடிகள் பட்டு' - மணம் வீசுகிறது. (இது அறையில் நடந்தது. இதை அம்பலமாக்குவது முறையாகாது)

892. வைஷ்ணவீ - விஷ்ணுவின் சக்தியாக இருப்பவள்.

893. விஷ்ணுரூபிணி - விஷ்ணு ரூபமாக இருப்பவள். (அதாவது லக்ஷ்மீ ரூபமானவள்) இதை மனதில் கொண்டு, தீயைக் கொப்பளிக்கும் கண்களை உடைய ஆதிசேஷன் மேல் துயில்கொள்கிறாள் அன்னை அபிராமி. (பாற்கடலில்) சிவன்-விஷ்ணுவினால் உருவானவர் சாஸ்தா. எனவே பராசக்தியே புருஷரூபத்தில் விஷ்ணு. 'புருசேஷ விஷ்ணு'. சிவன் - சக்தி - விஷ்ணு அபேதம்.

முதல் பாடலில் 'விழுத்துணை' என்றார். இங்கு 'விழுப்பொருள்' என்றார். அபிராமிபட்டர் அன்னை அபிராமியிடம் கொண்ட அன்பை வர்ணிக்க வார்த்தைகளில்லை.

## 36. அபிராமியே - உன் அருளை அறிய முடியவில்லையே !

*பொருளே, பொருள் முடிக்கும் போகமே, அரும்போகம் செய்யும்*
*மருளே, மருளில் வரும் தெருளே, என் மனத்து வஞ்சத்து*
*இருள் ஏதும் இன்றி ஒளிவெளி ஆகி இருக்கும் உன்றன்*
*அருள் ஏது ? அறிகின்றிலேன் அம்புயாதனத்து அம்பிகையே.*

**(தொல்வினைகள் தொலைந்து போக)**

| | |
|---|---|
| அம்புயா தனத்து | தாமரையை ஆசனமாகவுடைய |
| அம்பிகையே | அபிராமாம்பிகையே ! |
| பொருளே | ஐச்வரிய ரூபிணியே ! |
| பொருள் முடிக்கும் போகமே | அந்த ஐச்வர்யத்தால் பெறும் சகலவிதமான இன்ப ரூபிணியே |
| அரும்போகம் செய்யும் | இன்பத்தை துய்க்கச் செய்யும் |
| மருளே | (திரோபவ சக்தியான) மாயையே |
| மருளில் வரும் தெருளே | இன்பத்தைத் துய்த்து அதில் எய்ப்பு எய்தி அதனால் உண்டாகும் தெளிவே |
| என் மனத்து | அடியேனுடைய மனதில் |
| வஞ்சத்து இருள் | மாயையால் உண்டான அஞ்ஞான இருள் |
| ஏதுமின்றி | அறவே ஒழிந்து போகும்படி, |
| ஒளி வெளியாகி | ஞான ஒளி வீசும் பரவெளியான அருட்சக்தியாகி |
| இருக்கும் உன்றன் | இருக்கும் உன்னுடைய |
| அருள் ஏது ! | திருவருள் எத்தகையது என்று |
| அறிகின்றிலேன் | அறியமாட்டேன் (நீயே உரைப்பாயாக !) |

பலவகைச் செல்வமாக உள்ளவளே, அச்செல்வத்தால் நிறைவேறும் போகமே, அரிய போகங்களைத் துய்ப்பதனால் வரும் மயக்கமே, அம் மயக்கத்தின் முடிவில் உண்டாகும் தெளிந்த ஞானமே, தாமரையாகிய இருக்கையில் எழுந்தருளிய தாயே, அடியேனது மனத்தில் மாயையிருள் சிறிதும் இல்லாமல் ஒழியச் சுடர் வீசும் பெருவெளியாக இருக்கும் நின் திருவருள் எத்தகையது என்று அடியேன் அறிய இயலவில்லை.

அபிராமிபட்டர் அன்னை அபிராமியின் அன்பிலே ஊறும் தலைசிறந்த அடியார். அவரால் அன்னையைப் புகழ்ந்து பேசாமல் ஒருகணமும் இருக்க முடியாது !

இப்பாடலிலும் அம்மா உன் திருவருள் எப்படிப்பட்டது என்று என்னால் அறிய முடியவில்லையே ! என்று உருகுகிறார்.

670. வஸுதா - எல்லோருக்கும் செல்வத்தை அளிப்பவள். நமக்கு கிடைக்கும் எல்லாபொருள்களும் அம்பாளின் அருளினால் தான். 684. ராஜராஜேஸ்வரி-ராஜராஜர்களுக்கு ஈஸ்வரி, குபேரனுக்கு ஈஸ்வரி, குபேரனுக்கு ராஜராஜன் என்ற பெயர் உண்டு.

அன்னை அபிராமி பொருள் கொடுப்பாள். அந்தப் பொருளால் வரும் போகத்தையும் கொடுப்பாள். 219. மஹாபோகா - மகத்தான சுகானுபவமே ஆனவள். போகம்-சுகத்தின் அனுபவ உணர்வு. அப்பரும், 'பொன்னானாய் மணியானாய் போகமானாய்' - என்பர். 'முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியும்' என்று திருக்கோவையார் கூறும். போகத்தை பொருள் தான் நிறைவேற்றி கொடுக்க வேண்டும். போகத்தில் ரொம்பவும் ஊறிவிட்டால் அது உண்மையானது என்ற மயக்கம் உண்டாகும். மயக்கத்தின் உருவாகவும் அன்னை இருக்கிறாளாம்.

215. மஹாமாயா - (ப்ரஹ்மாதிகளுக்கும் கூட மோக்ஷத்தை உண்டு பண்ணுவதால்) மஹாமாயா ரூபிணீயாக இருப்பவள்.

ஸப்தசதீயில் -

"ஞானினாமபி சேதாம்ஸி தேவீ பகவதீ ஹி ஸா ।
பலாதாக்ருஷ்ய மோஹாய மஹாமாயா ப்ரயச்சதி ॥" (1.55)

716. மாயா - மாயையாக இருப்பவள். தெளிவாகத் தெரியக் கூடியதை மறைப்பது மாயா சக்தி. இருப்பதை இல்லாததாக மறைப்பது, இல்லாததை இருப்பதாகக் காண்பிப்பது. இவை இரண்டும் மாயையின் கார்யங்கள் (ஆவரணம், விக்ஷேபம்).

703. ஸர்வமோஹினீ - எல்லோரையும் மோஹம் அடையும் படி செய்பவள். மோஹத்தால் ப்ரஹ்மம், ப்ரபஞ்சம் வேறு என்று நினைத்து, அதையே உண்மை என்று கொள்ளுதல்.

இவ்வாறு போகத்தினால் மயங்கிய ஆன்மாக்களை அந்த மயக்கத்தினின்றும் (மருள்) நீங்கி தெளிவை அடையும்படி செய்கிறாள் அன்னை அபிராமி. இதனையே அபிராமிபட்டர்

'மருளில் வரும் தெருளே' - என்றார்.

பகவத் கீதையில் (18–61)

"ஈச்வர: ஸர்வபூதானாம் ஹ்ருத்தேஷீர் ஜீன திஷ்டதி

ப்ராமயன் ஸர்வ பூதானி யந்த்ர ரூடானி மாயயா ॥"

பொம்மலாட்டக்காரனைப் போல கடவுள் எல்லா ஜீவராசிகளின் இதயத்தில் அமர்ந்து தன் மாயையினால் பிரமிக்கச் செய்கிறான்.

902. விக்ஞான கலனா - பக்தனுக்கு ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் கிடைக்கச் செய்பவள். அதாவது பரம்பொருளின் அனுபவத்தை அமைத்துக் கொடுப்பவள். 727. ஶிவஞான ப்ரதாயினீ - சிவ சம்பந்தமான ஞானத்தை தருபவள். சிவ ஞானத்தை அம்பாள் மூலமாகத்தான் அறிய முடியும். (வாஸிஷ்ட ராமாயணம் கூறுகிறது.) உஷ்ணத்தினாலேயே நெருப்பை அறிவது போல, அசைவினாலேயே காற்றை அறிவது போல, அம்பாள் மூலமாகவே சின்மாத்ரமான, நிர்மலமான, சாந்தமான சிவனை அறிய முடியும்.

643. ஞானதா - ஞானத்தைக் கொடுப்பவள்.

644. ஞான விக்ரஹா - ஞானமே வடிவானவள். திரிபுடி எனப்படும் அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்றும் மூன்றும் மறைந்து கேவலமான (மிகச்சிறந்த) அறிவு / ஆனந்த அனுபவம் மட்டும் எஞ்சியிருக்கும் வடிவானவள்.

விக்ரஹம் - என்றால் விஸ்தாரம் என்றும் பொருள். அம்பாளுடைய அருளினால் ஞானம் மேன்மேலும் விரிவடைந்து முடிவில் ஞானம் மட்டுமே தனித்து நிற்கும் நிலை ஏற்படும்.

கண்ணை நாம் மூடினால் நமக்கு இருட்டு (இருள்) தான் இருக்கிறது. நம் மனதிற்குள் வேண்டாத எண்ணங்கள் ஓடுகின்றன. அதனால் நம்மை அறியாமல் நமக்கு தீமைகளையே தெரிகிறது. பின் இந்த இருளைப் போக்க வழி என்ன ? அங்கு ஒரு விளக்கு போட வேண்டும். அது எப்படி? அந்த விளக்கு தான் அன்னை அபிராமி. அந்த விளக்கை அகத்தே வைத்தால் நம் மனதில் நல்லபொருள்கள் சிறிதும் இல்லை என்ற உண்மை தெரியவரும். அப்போது தீய பொருள்களை ஒவ்வொன்றாக வெளியே தள்ளிவிட முயல்வோம். அதற்கு விளக்காக மிளிர்ந்து, பின் சுடராக விரிந்து சோதியாய் பரந்து நிற்பாள். அப்போது கண்ணை மூடிக்கொண்டால் ஒரே ஒளி மயமாகத் தோன்றும். ஒரு சிறு புள்ளியளவு மாசும்

இல்லாமல், அவள் நான் என்ற வேறுபாடுகள் இல்லாமல் அந்த ஒளி வெள்ளத்தில் மூழ்கி நம்மை மறந்து நிற்போம். அப்போது உண்டாகும் ஆனந்தத்திற்கு அளவு ஏது? எல்லாம் மறந்து நாமே அந்த ஒளி வெள்ளமாகி விடுவோம். இந்த அனுபவத்தை தருகிறாளாம் அன்னை அபிராமி.

806. பரஜ்யோதி - பரம்ஜ்யோதி. பேரொளியாக இருப்பவள். ஒளியற்ற நிலை இருட்டு. அறியாமை என்பது உள்ளத்தில் ஒளியற்ற நிலை. ஒளி வந்தவுடன் இருட்டு போய் விடுகிறது. அறிவு (ஞானம்) ஏற்பட்டால் அறியாமை என்ற இருட்டும் போய் விடுகிறது. வெளி இருட்டு, உள் இருட்டு - இந்த இரண்டு நிலைகளிலும் உலகம் உணரப் படுவதே இல்லை. வெளி இருட்டை போக்குபவை சூர்யன், சந்திரன் நட்சத்திரங்கள் நெருப்பு முதலிய ஒளி மண்டலங்கள். சப்தமும் ஒளியே. இருட்டில் சப்தத்தால் சில விஷயங்களை அறிந்து கொள்கிறோம்.

"ந தத்ர ஸுர்யோ பாதி ந சந்தர தாரகம்
நேமாவித்யுதோ பாந்தி குதோऽயமக்னி : ।
தமேவ பாந்த மனுபாதி ஸர்வம் தஸ்ய பாஸா
ஸர்வமிதம் விபாதி ॥" (கட. உபநிஷத். 5.15)

பொருள் : அங்கே சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், மின்னல் கொடிகள் ப்ரகாசிப்பதில்லை. அக்னி எங்ஙனம் ப்ரகாசிக்கும் ? ஸ்வயம் பிரகாசமுள்ள அப்பரம்பொருளைப் பின்பற்றியே அனைத்தும் ப்ரகாசிக்கின்றன. அவ்வொளியாலேயே இவை அனைத்தும் விளங்குகின்றன.

மேலே கூறிய சூர்யன் முதலியவைகளும் அன்னையின் ஒளியாலேயே ப்ரகாசிக்கின்றன. ஆகையால் பரம் - மிகவும் உயர்ந்த - என்று சொல்லப்படுகிறாள். இதையே, 'அபிராமி பட்டரும்' - என் மனத்து வஞ்சத்து இருள் ஏதும் இன்றி ஒளி வெளி ஆகி இருக்கும் உன்றன் அருள் ஏது ? அறிகின்றிலேன் என்று சொல்லுகிறார். ஆனால் இந்த ஆனந்த அனுபவத்தை அவரால் சொல்ல முடியாமல் திகைத்து நிற்கிறார். அதையும் நீ தான் சொல்ல வைக்கவேண்டும் என்று மனம் உருகி நிற்கிறார். பின்னும் (82-ம் பாடல்)... 'அகிலாண்டமும் நின் ஒளியாக நின்ற ஒளிர் திருமேனியை

உள்ளுதொறும் களியாகி அந்தக்கரணங்கள்...' என்று உருகுகிறார்.

உலக நிகழ்ச்சிகள் யாவும் அவள் விளையாட்டு. அவள் குழந்தையைக் கிள்ளிவிட்டு அழச் செய்கிறாள். அழுத குழந்தைக்கு தாலாட்டு பாடித் தூங்க வைக்கிறாள். "லோகவத்து லீலா கைவல்யம்" (ப்ரம்ம சூத்ரம்)

உயிர்களுக்கு போகம் தந்து மயக்கிப் பின்பு தெளிவும் வழங்கி ஆனந்தாநுபவத்தை உண்டாக்குகிறாள்.

"ஸர்வஸ்ய புத்திரூபணே ஜனஸ்ய ஹ்ருதி ஸம்ஸ்திதே ।
ஸவர்க்கா பவர்க்கதே தேவி நாராயணி நமோ஽ஸ்துதே ॥
(தேவீ மகாத்மியம் 11.8)

278. பத்மாஸனா - தாமரையில் வீற்றிருப்பவள் ப்ரக்ருதி மயமான இலைகளோடும், விக்ருதி மயமான கேஸரங்களோடும், ஸம்வித்தாகிய தண்டோடும் கூடிய தாமரையை பீடமாகக் கொண்டவள்.

295. அம்பிகா - சிறந்த தாயாக இருப்பவள். அம்மா, அம்பா, அம்பிகா என்ற பெயர்கள் தாயாரை அன்புடன் கூப்பிடும் பெயர்கள். லோகங்கள் அனைத்திற்கும் தாயானதால் அம்பிகா எனப்பட்டது.

அம்பிகா என்ற சொல்லிற்கு ஜகன்மாதா, பாரதீ, பூமி என்ற பொருள்களும் இச்சா, ஞான, க்ரியா சக்திகளின் ஸமஷ்டி வடிவமான ருத்ராணி என்ற அர்த்தமும் உண்டு. அந்த ரூபங்களானவள். அம்பிகா-இரவு, தூக்கம் என்ற பொருள்களுண்டு. தேவி இரவின் வடிவாயும், நித்ரையாகவும் தாயைப் போல சேயை அணைத்து கட்டாயமாக ஓய்வையும், நிம்மதியையும் தருகிறாள். இந்த ஓய்வினாலும், தூக்கத்தினாலுமே விஷ்ணு ஹயக்ரீவராக வடிவெடுக்க நேர்ந்தது. - அதன் மூலம் இந்த, ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் நமக்கு கிடைத்தது. (தேவீ மகாத்மியம் 5.282)

'யாதேவீ ஸர்வ பூதேஷு நித்ராரூபணே ஸம்ஸ்திதா ।'
நமஸ்தஸ்யை । நமஸ்தஸ்யை । நமஸ்தஸ்யை நமோ நம: ॥

அன்னை அபிராமி செய்யும் அருள் விளையாடலைப் பாடித் தன்னையே மறக்கிறார் தவப்புதல்வர் அபிராமிபட்டர். பாடலை, 'அம்புயாதனத்து அம்பிகையே !' என்று நிறைவு செய்கிறார்.

## 37. அபிராமி - ஸர்வாபரண பூஷிதா.

*கைக்கே அணிவது கன்னலும் பூவும் கமலம் அன்ன*
*மெய்க்கே அணிவது வெண்முத்து மாலை விட அரவின்*
*பைக்கே அணிவது பன்மணிக் கோவையும்பட்டும் எட்டுத்*
*திக்கே அணியும் திருஉடையானிடம் சேர்பவளே.*

**(நவரத்தின ப்ராப்தி உண்டாக)**

| | |
|---|---|
| எட்டுத் திக்கே அணியும் | எண் திசைகளையே ஆடையாக உடையவனும் |
| திருவுடையானிடம் | ஸகல ஐச்வர்யத்தையும் உடைய திகம்பரனோடு |
| சேர்பவளே | பொருந்தியிருக்கும் பராசக்தியான அபிராமி அன்னையே |
| கைக்கே அணிவது | (உன்) திருக்கரங்களில் அழகுற அமைந்தவை |
| கன்னலும், பூவும் | கரும்பு வில்லும், மலர் அம்புகளும் |
| கமலம் அன்ன | தாமரை போன்ற (வாசனை, மேன்மை, நிறம் பொருந்திய) |
| மெய்க்கே | திருமேனியிலே (ஸ்தனங்களின் மேலே) |
| அணிவது | பூண்டிருப்பது |
| வெண் முத்துமாலை | வெண்மையான ப்ரகாசம் பொருந்திய முத்துமாலை |
| விட அரவின் பைக்கே | நஞ்சை உடைய பாம்பின் படம் போன்ற இரகசிய தானத்தில் |
| அணிவது | அணிபவை |
| பன் மணிக் கோவையும் | பலமணிகள் சேர்ந்த மேகலா பரணமும் |
| பட்டும் | பட்டாடையுமே. |

எட்டுத் திக்குகளையே தான் அணியும் அழகிய ஆடையாகக் கொண்ட இறைவனுடைய இடப்பாகத்தைச் சேர்ந்து எழுந்து அருளியிருக்கும் அன்னை தன் திருக்கரங்களில் அணிபவை கரும்பும், மலர்களும்; அப்பெருமாட்டி தன் திருமேனியில் அணிந்திருப்பது தூய வெள்ளையான முத்துமாலை; நஞ்சையுடைய பாம்பின் படம் போன்ற இரகசியத் தானத்தில் அணிபவை பலமணிக் கோவைகளால் ஆன மேகலையும் பட்டும் ஆகும்.

'அம்புயாதனத்து அம்பிகையே !' என்று சொல்லியவுடன் அபிராமி பட்டருக்கு, அன்னை அபிராமியின் திருவுருவம்

அகக்கண் முன் வந்து நிற்கிறது. திருமேனியின் பேரழகிலே லயிக்கப்பட்ட பின் அவள் அணியும் அணிகலன்களைப் பார்க்கிறார். அன்னை இப்போது 'தயையே' உருவாகக் காட்சி அளிக்கிறாள். வில்லும், அம்பும் கரும்பாகவும், மலர்களாகவும் மாறிவிட்டது.

அன்னை அபிராமியின் சிவந்த திருமேனிக்கு 'கமலமே' (தாமரையே) உவமையாகத் தோன்றுகிறது. மாணிக்க வாசகரும், 'திருவுடையானை' 'செந்தாமரைக் காடு அனைய மேனித் தனிச் சுடரே' - என்பர்.

கமலம் போன்ற திருமேனியில் அன்னை அபிராமி வெண்முத்து மாலையை அணிந்திருக்கிறாள்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் 32. ரத்ன க்ரைவேய சிந்தாக லோலமுக்தா பலான்விதா - ரத்னத்தால் அமைந்த அட்டிகை பதக்கம் அவைகளிலிருந்து தொங்கும் முத்துமாலைகளோடும் கூடியவள். கழுத்தை ஒட்டிய அட்டிகை, அதன் நடுவே பதக்கம், அவற்றின் கீழ் தொங்கும் முத்துச்சரங்கள். இம்மூன்றும், மூன்று வகையான பக்தர்களைக் காட்டுவது போல் உள்ளன. சிலருடைய வாய் மட்டும் தேவியை துதித்துக் கொண்டிருக்கும். ஆனால் மனம் எங்கோ இருக்கும். அவர்களது நினைவில் தேவி கழுத்தளவு தான் நிற்கிறாள். இவர்கள் க்ரைவேய சிந்தாகர்கள். கழுத்திற்கு மேல் தேவியைப் பற்றிய நினைப்போடிருப்பவர்க்ள் அட்டிகையில் தொங்கி ஆடிக் கொண்டிருக்கும் லோலர்கள். அவர்களுடைய மனமும் செயலும் வழிபாட்டில் சிறிது நேரமும் வேறெங்கோ சிறிது நேரமும் ஆடிக்கொண்டிருக்கும். மூன்றாவது வகையோ, முக்தா-விடுபட்டவர்கள். வெளிச்சிந்தனைகளும், அதன் விளைவாக செயல்பாடும் நீங்கி மனத்தாலும், செயலாலும் வாக்காலும் தேவியிடம் ஈடுபட்டவர்கள்

இவ்வாறு பக்தர்களை மூவகைப் படுத்துகிறது இந்த நாமம். இம்மூவகையினருக்கும் கிட்டும், பலனும் வெவ்வெறானது.

க்ரைவேய சிந்தாகனுக்கும், லோலனுக்கும் 'ஆ-பல' சிறிதளவு பலன். முக்தனுக்கோ 'ஆ-பலன்' முழுப்பலன்.

'ஆ-பல' - என்பதற்கு சிறிது, முழுவதும் என்ற இருவகை அர்த்தங்களை முறையே காட்டுகின்றன.

அதாவது மனம் பதியாமல் நாவளவில் நாமங்களைக் கூறி வழிபடுபவர்களுக்கு சிறிதளவில் பலன். அதிலும் நிலைத்திராமல் சஞ்சலப்படும் லோலர்களுக்கு அதிலும் குறைந்த பலன்.

மனம், வாக்கு, செயல் மூன்றும் ஒன்றுபட்டு வழிபடுவோருக்கு முழுப்பலன். ஆக மூவகை பக்தர்களுக்கும் ரத்னம் போன்ற பலனை தகுதிக்கேற்பக் கொடுப்பாள்.

அன்னை அபிராமி அன்பர்களின் பக்குவத்திற்கேற்ப பலன் தருவாள். இதனையே திருமூலரும், திருமந்திரத்தில் (1152)

"மெல்லிசைப் பாவை வியோமத்தின் மென்கொடி

பல்லிசைப் பாவை பயன்தரு பைங்கொடி

புல்லிசைப் பாவையை போகந் துரந்திட்டு

வல்லிசைப் பாவை மனம் புகுந்தானே."

இப்பாடலின் கருத்து :- ஆன்மாக்களின் பக்குவத்திற்கும், பக்திக்கும் ஏற்ப, அவரவர்களுக்கு உரிய நற்பயனை நல்குவாள். பகவத் கீதையிலும் ("துல்ய நிந்தா ஸ்துதிர் மௌனீ... 12/19) "உண்மையான பக்தன் இறைவனுக்கு ப்ரியமானவன் என்றும், அத்தகைய பக்தனுக்குரிய நற்குணங்களைக் கூறி, அவனுக்கு இறைவனுடைய கருணையால் எல்லாம் தாமாகவே நடத்தப்பட்டு விடுகின்றன" என்று விளக்கப்பட்டிருக்கிறது.

(மாம்பழம் வேண்டி மாமரம் நடுபவன் அதன் வாசனை, நிழல் இவற்றையும் சேர்த்து அனுபவிக்கிறான்.)

ஆதிசங்கரர் (ஸௌ.ல. 74) அன்னை மார்பில் விளங்கும் முத்துமாலையை "முப்புரம் அழித்த பரமசிவனுடைய பிரதாபத்தோடு கலந்த கீர்த்தியே மாலையாக வந்ததோ" என்று கவிநயத்துடன் வர்ணிக்கிறார். கஜாசுரனைப் பரமசிவன் கொன்ற பின் அவன் தலையில் இருந்த முத்துக்கள் எடுக்கப்பட்டு தேவிக்கு மாலையாக்கப்பட்டன.

33. காமேச்வர - ப்ரேமரத்ன - மணிப்ரதிபண - ஸ்தனீ -காமேச்வரருடைய அன்பெனும் சிறந்த ரத்ன மணிக்கு பதிலாக அல்லது விலையாகக் கொடுக்கிற ஸ்தனங்களை உடையவள். தேவி காமேச்வரருக்குத் தன்னிடம் இருக்கும் விலை மதிப்பிலா

அன்பைத் தன் ஸ்தனமாகிற ரத்னங்களால் வாங்கியிருப்பவள்.

தான் வாங்கும் ப்ரேமையான ஒரு ரத்னத்திற்கு தன் ஸ்தனங்களாகிய இரு வஸ்துக்களை விலையாக அல்லது விலைபோல கொடுத்திருப்பது பதிலுக்கு பதில் மட்டுமல்லாமல் இரட்டிப்பாக கொடுத்திருப்பதாக அதிசயோக்தியாகக் கூறப்பட்டுள்ளது (''பலமபி ச வாஞ்சாஸமதிகம்'' (ஸௌ.ல. 4))

37. அருணாருண கௌஸும்ப வஸ்த்ர பாஸ்வத் கடீதடீ - மிகவும் சிவந்த பட்டாடையால் ப்ரகாசிக்கும் இடையை உடையவள். அருண-அருண என்ற இரட்டைச்சொல் மிகவும் சிவந்த என்ற பொருள் உள்ளது. சூரியோதயத்திற்கு முன் தோன்றும் அவனுடைய தேரோட்டியான அருணனைப் போல் சிவந்தது.

கௌஸும்ப வஸ்த்ர-என்றால் சிவந்த பட்டாடை. பட்டிற்குச் சிவப்பு நிறமேற்ற குசும்பாச் செடியின் சாற்றைச் சேர்ப்பர். எனவே கௌஸும்ப வஸ்திரம். தேவீ தனது இடுப்பில் கௌஸும்ப வஸ்த்ரத்தை உடுத்தியிருக்கிறாள். அருணா - வாக்தேவியின் பெயர் மறைமுகமாகக் கூறப்பட்டதாகத் தோன்றுகிறது.

செல்வ வளம் உள்ள மகளிர் தம் இடையிலே பல வடங்களையுடைய மேகலைகளை அணிந்திருப்பார்கள்.

312. ரணத் கிங்கிணிமேகலா - சலங்கைகள் ஒலிக்கும் ஒட்டியாணம் அணிந்தவள். (ஒ. 'க்வணத் காஞ்சீ தாமா' - ஸௌ.ல. 7)

38. ரத்ன - கிங்கிணிகா - ரம்ய - ரசனா - தாம - பூஷிதா - இரத்தினச் சதங்கைகளுடன் விளங்கும். அழகான அரைஞாணை (மேகலா ஸூத்ரம்) அணிந்தவள்.

தமிழ்பழம் பாட்டு ஒன்று அழகாக சொல்வது :-
*எண்கோவை காஞ்சி, எழுகோவை மேகலை*
*பண்கொள் கலாபம் பதினாறு -கண்கொள்*
*பருமம் பதினெட்டு, முப்பத்திரண்டு*
*விரிசிகை என்றுணரற் பாற்று.*

அம்பிகை அணிந்திருப்பது 32 வடங்களையுடைய 'விரிசிகை'. அம்பிகை செம்பட்டு உடுத்தியிருப்பதை பின்னும்,

'சின்னஞ்சிறிய மருங்கினில் சாத்திய செய்யப் பட்டும் (53),' 'ஒல்கு செம்பட்டுடையாளை' (84) என்றும் சொல்வர்.

தக்கயாக பரணி (17) - 'சாத்துவன கோசிகமோ' - என்கிறது.

திருப்புகழ் - 'த்ரிபுரை செம்பட்டுக் கட்டு நுசுப்பிற்றிரு' என்று சொல்லும்.

அம்மையின் அணிகலன்களையும், ஆடையும் சொல்லி முடிந்தவுடன் ஐயனை நினைத்துப் பார்க்கிறார். அவனோ திகம்பரன் =திக்+அம்பரன். எட்டு திக்குகளையே ஆடையாக உடையவன். 'அன்னை', அவனுக்கு சகலாபரண பூஷிதையான மனைவி என்பதின் கவிநயம் கருதத் தகுந்தது.

திகம்பரனின் தத்துவம் என்னவெனில், ஸ்ரீ சங்கரபகவத் பாதாள் தமது 'நிர்குணமானஸ பூஜா' - ஸ்தோத்திரத்தில், 'ஆத்மஸ்வரூப பிரம்மாபின்ன சித்சக்தியானது உள்ளும் புறமும் வியாபித்து ஏகவெளியாய் பரிபூரணமாய் இருக்கின்றது. இதை எங்ஙனம் ஓரிடத்தில் ஆவாஹனம் பண்ண முடியும் ? ஸர்வத்திற்கும் ஆதாரமானதற்கு, எது ஆஸனமாகும் ? ஆயிரத்தெட்டு பிரம்மாண்டங்களைத் தன் வயிற்றுக்குள் அடக்கிவைத்துள்ள விராட்ஸ்வரூபத்திற்கு எங்ஙனம் வஸ்திரம் சாத்த முடியும் ?' - என்று வினவுகிறார்.

51. ஸர்வாபரண பூஷிதா - எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்றவள்.

சிவனை திகம்பரனாகச் சொல்லி, அவன் பத்னியை சகலாபரண பூஷிதையாகக் கூறும் அபிராமி பட்டரின் கவிநயம் வெகு அழகு !

## 38. அமராவதியை ஆளவேண்டுமா - [illegible]ணுகுவீர் அபிராமியை.

*பவளக்கொடியிற் பழுத்த செவ்வாயும் பனிமுறுவல்*
*தவளத் திருநகையும் துணையா எங்கள் சங்கரனைத்*
*துவளப் பொருது துடியிடை சாய்க்கும் துணை முலையாள்*
*அவளைப் பணிமின் கண்டீர் அமராவதி ஆளுகைக்கே.*

**(விரும்பிய பொருளை விரும்பியவாறே பெற)**

| | |
|---|---|
| அமராவதி ஆளுகைக்கு | ஸ்வர்க்கலோக ஸாம்ராஜ்யம் விரும்பு விரானால் |
| பவளக் கொடியிற் | பவளக் கொடியை விடச் சிவந்த |
| பழுத்த செவ்வாயும் | செம்மையாய் அமைந்த திருவாயையும், |
| பனிமுறுவல் | குளிர்ச்சியுடைய புன்னகை பூக்கும் போது |
| தவளத் திருநகையும் | தெரிகின்ற வெண்மையான அழகிய பற்களும், |
| துணையா | தமக்கு துணையாக இருக்க, |
| எங்கள் சங்கரனைத் | எங்களுக்கு சுகத்தை கொடுக்கும் சிவபெருமானை |
| துவளப் பொருது | குழையும்படி, வலிய அணைத்து, |
| துடியிடை | உடுக்கை போன்ற சிற்றிடையை |
| சாய்க்கும் | வளையச் செய்யும் |
| துணை முலையாள் | இரண்டு தனங்களை உடையவளாகிய |
| அவளை | (அந்த) அபிராமியை |
| பணிமின் கண்டீர் | வணங்குங்கள். |

போகத்தை விரும்பி யார் யாரையோ கும்பிடும் மக்களே, எல்லா போகங்களிலும் சிறந்ததாகிய இந்திர போகத்தைப் பெற்று தேவராஜாவாக இருந்து அமராவதியை ஆள விரும்புவீரானால் பவளக்கொடி போலக் கனிந்த செவ்வாயும் குளிர்ச்சியுடைய புன்னகை தோன்றும் வெண்மையான அழகிய பற்களும் தமக்குத் துணையாக இருக்க, எங்களுக்கு சுவாமியாகிய சங்கரனைக் குழைந்து நெகிழும்படியாக மோதி, உடுக்கை போன்ற இடையைத் தளரச் செய்யும் இரண்டு தனங்களை உடையவளாகிய அந்த அபிராமியை வணங்குங்கள்.

இது தான் பயனுள்ள செயல் என்பதை அறிவீர்கள்.

அன்னை அபிராமியை அடைக்கலம் அடைந்தவர்கள் அடையமுடியாதது ஏதும் இல்லை என்பதை கவிநயத்தோடு நமக்குக் காட்டும் பாடல் இது.

இவ்வுலகில் இன்ப வாழ்வும், சொர்க்க போகமும், அழியா முத்தி ஆனந்தமும் தருகின்றவள் அல்லவா எங்கள் அன்னை அபிராமி !

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் (24) நவவித்ரும்பிம்ப ஸ்ரீந்யக்காரிதசனச்சதா

செம்மையான பொருள்களில் சிறந்ததான பவழம், கோவைப்பழம் இவற்றின் காந்தியை வெல்லும்படியான சிறந்த சிவந்த அதரங்கள் அன்னைக்கு. (ரதனச்சதா என்றும் பாடமுண்டு. அர்த்தம் அதே.)

25. சுத்த வித்யாங்குராகார த்விஜ பங்க்த்தி த்வயோஜ்வலா - சுத்தவித்யையின் முளைகள் போன்ற இரு பல்வரிசைகளால் ஒளிமிக்க தோற்றமுள்ளவள். 242. சாருஹாஸா - அழகிய புன்சிரிப்போடு கூடியவள். ‘உன் இனிய புன்சிரிப்பே சந்திரன்.’

28. மந்தஸ்மித ப்ரபாபூர மஜ்ஜத் காமேச மானஸா - தனது புன்சிரிப்பின் ப்ரவாஹத்தில் காமேசுவரருடைய மனதை முழ்கச் செய்தவள். ஸ்மித-புன்சிரிப்பு-பற்கள் வெளித் தெரியாமல் மெல்லச் சிரிப்பது. ‘மந்தஸ்மித’-இன்னும் விசேஷமான மென்மையானது. அம்பிகையின் புன்சிரிப்பிற்கு ‘மூககவி’ - ‘மந்தஸ்மித சதகம்’ என்ற நூறு பாடல்கள் கொண்ட நூலை செய்திருக்கிறார்.

‘துவளப் பொருது துடிஇடை சாய்க்கும் துணைமுலையாள்’, பவளக்கொடி போல பழுத்த செவ்வாயையும், பனிமுறுவல் அமைந்த திருநகையையும் துணையாகக் கொண்டு சிவபிரான் மனத்திண்மையை மாற்றிப் பிறகு, தாம் முன்னின்று அவனைத் துவளும்படி செய்து விடுகின்றன அன்னையின் தனங்கள். இவை உடுக்கையைப் போன்று முன்பே மெலிந்திருக்கும் இடையை இன்னும் சிறிது சாய்க்கின்றன.

36. ஸ்தன பார தலன் மத்யபட்ட பந்த வளித்ரயா - ஸ்தனங்களின் சுமையினால் முறிந்து போய்விடுமோ என்று தோன்றக் கூடிய இடுப்புக்குப் பட்டை கட்டியது போன்று அமைந்துள்ள மூன்று மடிப்புகளை உடையவள். உத்தம ஜாதி ஸ்திரீ புருஷர்களுக்கு நெற்றியிலும், கழுத்திலும், வயிற்றிலும் மூன்று கோடுகள் போன்ற மடிப்புகள் இருக்கும் என்று ஸாமுத்ரிகா

சாஸ்த்ரம் கூறும் லட்சணம். அவை மகத்தான ஸௌபாக்கியத்திற்கு அடையாளம்.

'பாகன் அகம் குழைவித்த பவித்ர பயோதரி' -தக்கயாக பரணி. 'எந்தை.... திருமேனி குழைத்திட்ட அணிமணிக் கிம்புரிக்கோடு ஆகத்தாக' என்று மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழும் கூறும். ஸௌந்தர்ய லஹரியிலும் ஸ்லோகம் 80. "குசௌ ஸத்ய :" அம்பாளின் நகில்களைப் பற்றி வர்ணிக்கின்றது.

திரிபுர சுந்தரியாகிய காமேசுவரி காமேசுவரனோடு ஒன்றுபடுவதனால் உலகம் எங்கும் இன்பமயமாய் ஆகிறது. மனிதன் நியாயமான முறையில் போகத்தை அநுபவிப்பதில் தவறு எதுவும் இல்லை.

867 க்ஷய வினிர் முக்தா - க்ஷய-வீடு அன்னையின் அன்பர்கள் காடு தேடிப் போக வேண்டாம். தங்கள் வீடுகளில், எல்லாவிதமான சுகபோகங்களை அனுபவித்துக் கொண்டே அம்பாளின் அருளால் முக்தியை அடைவார்கள். அவர்கள் போகம், மோட்சம்-இரண்டும் கையில் வைத்திருப்பவர்கள். (மரணத்தி லிருந்து விடுபட்டவள் என்றும் அர்த்தம் உண்டு)

சிவனுக்கே போகம் அருளும் எம்பெருமாட்டி, அவளைப் பணிவோருக்கு (இந்திரன் ஆளும்) அமராவதியை ஆளும் உயர்ந்த தேவலோகப் பதவியைத் தருவாள். (இந்திரன் அனுபவிக்கும் போகம் தான்-போகத்தின் எல்லை).

சிவந்த இதழும், வெண்மையான பற்களும், இடுப்பை வருத்தும் ஸ்தனபாரங்களும் உடைய உருவத்தை மனதில் அனுஸந்தானம் பண்ணி உபாஸனை செய்வோருக்கு ஸ்வர்க்காதிபத்யம் கிடைக்கும் என்று கூறுகிறார் அபிராமிபட்டர்.

'துவள'-என்பதை சங்கரனுக்கு ஏற்றி அம்பாளின் அணைப்பில் அவன் துவளுகிறான் என்றும் கூறலாம்.

காஞ்சி க்ஷேத்ரத்தில் காமாட்சி அம்மை சிவலிங்கத்தை ஆலிங்கனம் செய்த போது சிவபெருமான் குழைந்து கொடுத்தது.

'கோதிலா அமுதனையவள் முலைக்குக் குழைந்த' என்ற சேக்கிழார் பெருமான் வாக்கு நினைவுக்கு வருகின்றது.

62. காமாக்ஷீ - அழகான கண்களையுடையவள். காமேச்வரனையே (கண்ணுக்குக்) கண்ணாக உடையவள். பக்தர்களுக்குத் தன் கண்களாலேயே ஸகலவிதமான அபீஷ்ட்டங்களையும் தருபவள். கா-ஸரஸ்வதீ. மா-லக்ஷ்மீ. இவர்களைக் கண்களாய்க் கொண்டவள். 51- பீடங்களில் ஒன்றானது காஞ்சி. தேவியின் ஒட்டியாணம் அணியும் உடற்பகுதி விழுந்த இடம். இங்கு உறையும் தேவிக்கு காமாக்ஷீ என்று பெயர். சிருஷ்டி பண்ணும் சக்தி பெறவேண்டி ப்ரஹ்மா வேள்வி நடத்தினார். அவரது விருப்பத்தை நிறைவேற்றியதால் காமாக்ஷீ என்று பெயர் பெற்றாள். பரமசிவனின் கோபக்கண்ணால் எரிந்த காமனை தன் பார்வையினால் உயிர் பெறச் செய்தவள் என்பதனால் காமாக்ஷீ.

84. ஹரநேத்ராக்னி - ஸந்தக்த - காமஸஞ்ஜீவ - நௌஷதி - ஹரனின் கண்களிலிருந்து தோன்றிய தீயினால் எரிக்கப்பட்ட மன்மதனுக்கு ஸஞ்ஜீவினி எனும் பச்சிலையாக அவனுக்கு உயிர் கொடுத்தவள்.

முன்பு அன்னை மணலினால் செய்யப்பட்ட லிங்கத்தை இங்கு பூஜை செய்து வந்தாள். அப்போது ஊருக்குள் வெள்ளம் வந்தது. லிங்கம் கரைந்து விடுமோ என்ற அச்சத்தால் லிங்கத்தை அரவணைத்துக் கொண்டாள் என்கிறது ஒரு பழம்புராணம்.

## 39. அபிராமியை அண்டுபவர்க்கு அருளுண்டு !

*ஆளுகைக்கு உன்றன் அடித்தாமரைகள் உண்டு அந்தகன் பால்*
*மீளுகைக்கு உன்றன் விழியின் கடைஉண்டு மேல் இவற்றின்*
*மூளுகைக்கு என் குறை நின்குறையே அன்று முப்புரங்கள்*
*மாளுகைக்கு அம்பு தொடுத்த வில்லான் பங்கில் வாள் நுதலே !*

**(அஸ்திர வித்தையில் தேர்ச்சி பெற)**

| | |
|---|---|
| முப்புரங்கள் மாளுகைக்கு | திரிபுரங்களும் அழிவதற்காகத் |
| அம்பு தொடுத்த | திருமாலை அம்பாகத் தொடுத்து |
| வில்லான் | மேரு மலையை வில்லாக கொண்ட சிவபெருமானது |
| பங்கில் வாள் நுதலே | இடது பாகத்தில் எழுந்தருளி இருக்கும் ஒளிபடர்ந்த நெற்றியை உடைய அபிராமியே |
| ஆளுகைக்கு | (அடியேனை) ஆண்டு கொள்வதற்கு |
| உன்றன் | உன்னுடைய |
| அடித்தாமரைகள் உண்டு | திருவடித் தாமரை மலர்கள் இருக்கின்றன. |
| அந்தகன்பால் | யமனிடத்திலிருந்து |
| மீளுகைக்கு | தப்புதற்கு |
| உன்றன் | உன்னுடைய |
| விழியின் கடை உண்டு. | கடைக்கண் பார்வை இருக்கிறது. |
| மேல் இவற்றின் | (அப்படி இருந்தும்) இவ்விரண்டின் |
| மூளுகைக்கு | பயனும் பெறாமல் இருப்பது |
| என் குறை | என் குறை தான் (என் பூர்ம ஜன்ம வினை தடுக்கின்றது) |
| நின் குறையே அன்று | உன்னுடைய கருணையின் குறையே அல்ல. |

திரிபுரங்களும் அழிவதற்காகத் திருமாலாகிய அம்பைத் தொடுத்த, மேருமலையாகிய வில்லையுடைய சிவபெருமான் இடது பாகத்தில் எழுந்தருளியிருக்கும் ஒளிபடர்ந்த நெற்றியை யுடைய அபிராமி அம்மையே !

அடியேனை ஆட்கொள்வதற்கு நின் திருவடித் தாமரை மலர்கள் இருக்கின்றன. காலனிடம் செல்லாமல் மீண்டு உய்வதற்கு உதவியாக நின் கடைக்கண் பார்வை இருக்கிறது. இவற்றோடு தொடர்பு பெற்றுக்கொள்வதற்கு முடியாமல் இருப்பது என் குறைதான். நின் திருவருட்குறையே அன்று.

அம்பாளின் அருட்பிரவாஹம் 'பொதுங்கித் ததும்பிப் பூரணமாய் ஏகவுருவாய்க் கிடந்தாலும் உயிர்', தமது வினையின் பயனால் அதனை அநுபவிக்க இயலாமல் தவிக்கின்றது என்பதை தன் மேலேற்றிக் கூறிக் கொள்கிறார் அபிராமிபட்டர்.

'அம்பு தொடுத்த வில்லான்' என்றார். அதாவது சிவன் மேருமலையை வில்லாக வளைத்தான். அம்பு கோத்து எய்தவில்லை. அதற்குள் அம்பாக இருந்த திருமாலுக்கு, (திரிபுரங்கள் நம்மால் அழியப் போகிறது) என்று அகங்காரம் வந்தது. அதை எண்ணி சிவன் சிரிப்பது போலச் சிரித்தான். அந்த சிரிப்பே முப்புரங்களை அழித்தது. திருமூலர் இதனை வெகு அழகாகச் சித்தரிக்கிறார். (பாடல் 343)

*'அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்*
*முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்*
*முப்புரமாவது மும் மல காரியம்*
*அப்புரம் எய்தமை யாரறிவாரே.'*

ஆணவம், கன்மம், மாயை -என்பதே மூன்று மலங்கள். இறைவன் ஞானசொருபீ. அவன் புன்முறுவலாகிய ஞானத்தால் மும்மலங்களும் அழிந்த அசுரர்கள் இறைவன் திருத்தொண்டில் ஈடுபட்டு இன்பத்தை அடைந்த செயல்.

15. அஷ்டமீசந்த்ர விப்ராஜ தளிக ஸ்தல சோபிதா-அஷ்டமியில் தோன்றும் அரைவட்ட சந்திரனைப் போல் பிரகாசிக்கும் நெற்றியுடன் சோபிக்கிறவள். இதையே - வாணுதல் என்கிறார் அபிராமிபட்டர்.

காளிதாஸனும் நெற்றியில் அம்பாளின் முன்மயிர்பட்டு சந்திரனின் களங்கம் போன்று விளங்குவதாக வர்ணித்திருக்கிறார். நெற்றியின் பிரகாசம் ஞானவொளியைக் காட்டுகிறது.

ஆளுகைக்கு அடித்தாமரையும் யமன் கையினின்று மீளுகைக்கு கடைக்கண்ணும் என்பதை ஆதிசங்கரர் 'ஜன்ம ஜலதௌ நிமக்னானாம் முரரிபு வராஹஸ்ய தம்ஷ்ட்ராபவதி' - என்கிறார். (ஸௌ.ல. 3)

உயிர்கள் சம்சாரக்கடலில் மூழ்கித் தவிக்கும் போது அம்பாளின் இருபாதங்களும் வராஹமூர்த்தியின் இருகோரைப்

பற்கள் போல இருக்கின்றன என்கிறார். தண்ணீரில் மூழ்கிக் கிடந்த 'பாசிதூர்ந்த பார்மகளை' வராஹ அவதாரம் எடுத்துத் தனது கோரைப் பற்களில் தாங்கி வெளிக்கொணர்ந்தது போல அம்பாளின் திருவடிகள் ஸம்ஸாரக் கடலில் மூழ்கிய ஜீவர்களைக் கரையேற்றுவன என்பது பொருள்.

மாணிக்க வாசகரும் 'எம்மை ஆளுடையாள்' (திருவெம்பாவை) என்பர்.

18. வக்த்ர லக்ஷ்மீ பரீவாஹ சலன் மீனாப லோசனா - முகத்தின் அழகாகிய வெள்ளத்தில் ஓடும் மீன்களையொத்த கண்களையுடையது. மீன்கள் தன் குஞ்சுகளை 'வாத்ஸல்யத்தோடு பார்க்கும் பார்வையினாலேயே வளர்ப்பதாக' ஒரு நம்பிக்கை. அம்பாளின் அடிக்கடி சலிக்கும் கண்கள், இங்குமங்கும் பாய்ந்தோடும் இருமீன்கள் போலத் தோன்றுகின்றன. அன்னை அபிராமியின் கண்கள் அன்பர்களைக் காப்பதற்காகவே இங்கும் அங்கும் சுழன்று கொண்டே இருக்கின்றன. இதனால் அவளுக்கு 'மீனாக்ஷி' என்ற பெயர்.

16. முகசந்த்ர-கலங்காப-ம்ருகநாபி - விசேஷகா - சந்த்ர மண்டலத்தில் களங்கம் காணப்படுவது போல தேவியின் முகமாகிற சந்திர மண்டலத்தில் நெற்றியின் கஸ்தூரி திலகம் களங்கம் போல் அழகு கூட்டுகிறது.

திருக்கடவூர் - காலஸம்ஹார தலம் அல்லவா ! அதனால் அந்தகன் அன்னையின் கடைக்கண் பார்வை பட்டதும் பறந்து விடுவான்.

இவ்வுலகில் நாம், ''பிறர் கண் பட்டுவிடுமோ'' என்று பயப்படுகிறோம். ஆனால் அன்னை அபிராமியின் கடைக்கண் பட்டால் காலனைப் பற்றி கவலைப்பட வேண்டிய அவசியமில்லையே !

அபிராமி அந்தாதியின் 'பலச்ருதி' போல் விளங்கும் 69-வது பாடலில் 'தனம் தரும்.... அபிராமி கடைக்கண்களே.' என்று அபிராமிபட்டர் அழகாகச் சொல்வர்.

## 40. அபிராமியிடம் அன்புகொள்வதும்-முன் செய் புண்ணியமே !

*வாணுதற் கண்ணியை விண்ணவர் யாவரும் வந்து இறைஞ்சிப்*
*பேணுதற் கெண்ணிய எம்பெருமாட்டியைப் பேதை நெஞ்சில்*
*காணுதற்கு அண்ணியள் அல்லாத கன்னியைக் காணும் அன்பு*
*பூணுதற்கு எண்ணிய எண்ணமன்றோ முன்செய் புண்ணியமே !*

**(பூர்வ புண்ணியம் தடையின்றி பயன் தர)**

| | |
|---|---|
| வாணுதல் கண்ணியை | ஒளி பொருந்திய நெற்றியில் ஞானக் கண் உடையவளை |
| விண்ணவர் யாவரும் | தேவர்கள் எல்லோரும் |
| வந்து இறைஞ்சிப் | தேடிவந்து பணிந்து விரும்பி |
| பேணுதற்கு எண்ணிய | வழிபடுவதற்கு எண்ணிய |
| எம்பெருமாட்டியை | எம்முடைய தலைவியை |
| பேதை நெஞ்சில் | அறியாமையுடைய மனத்தில் |
| காணுதற்கு | காண்பதற்கு |
| அண்ணியள் அல்லாத | சமீபத்தில் இல்லாத, |
| கன்னியைக் | என்றும் கன்னியாக இருக்கும் அபிராமி தேவியை, |
| காணும் அன்பு | தரிசிக்கும் அன்பு |
| பூணுதற்கு | கொண்டதற்கு |
| எண்ணிய எண்ணம் | மனத்தில் ஆர்வம் |
| அன்றோ | உண்டானதும். |
| முன் செய் புண்ணியமே | முற்பிறவிகளில் செய்த புண்ணியமே காரணமாகும். |

ஒளி பொருந்திய நெற்றியில் ஞானத் திருவிழியுடையவளே ! அன்னை அபிராமியே ! தேவர்கள் யாவரும் தன்னை வந்து வழிபட சங்கல்பித்திருப்பவளும், அவித்யையினால் மூடப்பட்ட ஜீவாத்மாக்கள் நெஞ்சில் நினைப்பதற்குக் கூட அதிக தூரத்தில் இருப்பவளும், என்றும் கன்னிகையாகவே இருப்பவளுமாகிய அபிராமி அன்னையை அகக்கண்ணால் கண்டு தரிசிக்க வேண்டும் என்ற விருப்பம் கூட பூர்வ புண்ணியத்தால் தான் கிட்டும்.

முன்பிறவியில் புண்ணியம் செய்வோருக்குத் தான் இப்பிறவியில் அவள்பால் பக்தி உண்டாகும். ஸ்ரீவித்யா உபாசனையும், தேவீ மந்திரமும் பூர்வ புண்ணியத்தாலேயே உண்டாகும். ஆதிசங்கரர் ஸௌந்தர்ய லஹரீ முதல் ஸ்லோகத்திலேயே ''ஹரி-ஹர-விரிஞ்சாதிபி - ரபி ப்ரணந்தும்

ஸ்தோதும் வா கதமக்ருத - புண்ய: ப்ரபவதி'' - என்று ஒரு கேள்வியாகக் கேட்பது வெகு அழகு. அதாவது, ''விஷ்ணு, ருத்ரன், பிரம்மா முதலியவர்களாலும் பூஜித்தற்குரிய உன்னை புண்ணியம் செய்யாதவன், வணங்குவதற்கோ அல்லது துதிப்பதற்கோ எங்ஙனம் தகுதியுடையவனாவான் ?''

193. துஷ்டதூரா - துஷ்டர்களால் அடைய முடியாதவள். அவர்களுக்கு வெகு தூரத்தில் இருப்பாள்.

சென்ற பாட்டில் தம் குறையை எண்ணி வருந்திய அபிராமிபட்டர் இந்தப் பாட்டில் தமக்குக் கிடைத்த புண்ணியப் பயனை எண்ணிப் பெருமிதம் அடைகிறார்.

'தவம் தவமுடையார்க் காகும் ; அவமதனை

அஃதிலார் மேற்கொள்வது.' திருக்குறள்.

அதாவது, முன்னைத் தவம் இருந்தாலன்றி, இப்போது தவம் செய்யும் ஆசை பிறவாது. 'வலஞ்சுழி வாணனை வாயாரப் பன்னி ஆதரித்து ஏத்தியும், பாடியும் வழிபடும். அதனாலே, என்னப் புண்ணியம் செய்தனை நெஞ்சமே ?' என்று கேட்கிறார் திருஞானசம்பந்தர்.

'அன்னையைக் காண வேண்டும். அதற்குரிய அன்பைப் பூண வேண்டும்' என்ற எண்ணும் எண்ணமே புண்ணியப் பயன் என்று சொல்கிறார்.

சென்ற ஆண்டு அவரைக்கொடி போட்டு நெற்றெடுத்து வைத்திருந்தால்தான் இந்த ஆண்டில் விதையை நடலாம். அதைப் பந்தலில் படரச் செய்யலாம். பிறகு பலனை அடையலாம். அவ்வண்ணமே போன பிறப்பில் புண்ணியச் செயல் புரிந்திருந்தால் தான் இந்தப்பிறப்பில் எண்ணலாம். எண்ணி அன்பு பூணலாம். அதன்பின் அம்பிகையைக் காணலாம். 'வித்து முற்பிறவியிலே எடுப்பது ; விளைவு இந்தப்பிறவியிலே.'

தேவி மூன்று கண்கள் உடையவள் - சூர்யன், சந்திரன், அக்னி, அவள் இமையாத முக்கண்ணுடையவளாதலின் உலகம் ஏதேனும் ஒரு சுடரையாவது எப்போதும் பெற்றிருக்கிறது. பின்னும் 'ஒன்றோடிரண்டு நயனங்களே' (73) 'முக்கண்ணியை' -

(நூற்பயன்) - என்பர் அபிராமிபட்டர்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் :- 453.த்ரிநயனா - மூன்று கண்களை உடையவள்.

477. த்ரிலோசனா - (மூன்று கண்கள் உடையவள் - சந்திரன், சூர்யன், அக்னி இவைகள் மஹாபிந்துவிலிருந்து பிரிந்து வரும் ஏனைய மூன்று பிந்துக்களின் பெயர்களாகும்.) காமகலா ஸ்வரூபம் என்றும் சொல்லலாம். '∘°∘'- இந்த ரூபம். 762. த்ர்யம்பகா - முக்கண்ணி, த்ரிமூர்த்திகளின் தாயார் என்றும் சொல்லலாம். 5. தேவ கார்ய ஸமுத்யதா - தேவர்களின் பணிக்காக முனைந்தவள். தேவர்களின் கார்யம் அசுரர்களை (பண்டாஸுரன், மஹிஷாசுரன்) அழித்து என்றும் இன்புறுதல். 'அவள் இன்றி வேறு துணை இல்லை' - என்பதை உணர்ந்து எப்போதும் அன்னை அபிராமியிடம் அடைக்கலம் புகுந்தவர்கள். அதாவது 'எங்களுக்குத் தெய்வமாகிய பிராட்டி தேவர்கள் வணங்கும் பெரியவள்' - என்று பெருமையுடன் சொல்கிறார். ஆனால், இப்பேர்ப்பட்ட அன்னை, அறியாமை இருள் படர்ந்து நெஞ்சில் அன்பு இல்லாமல் இருப்பவர்களுக்கு, எளியாள் அல்லள். அந்த நெஞ்சால் அவளைக் காண இயலாது. கண்ணுக்கு எட்டாத தூரத்தில் இருப்பவள்.

64. தேவர்ஷிகண ஸங்காத ஸ்தூயமானாத்ம வைபவா-தேவர்கள், ரிஷிகள் இவர்களுடைய கூட்டங்களால் ஸ்தோத்ரம் செய்யப்பட்ட வைபவத்தோடு கூடியவள். 83. ப்ரஹ்மோ பேந்த்ர மஹேந்த்ராதி தேவஸம்ஸ்துத வைபவா-ப்ரஹ்மா, விஷ்ணு, இந்த்ரன் முதலிய தேவர்களால் துதிக்கப்பட்ட பெருமையுள்ளவள்.

543. புண்ய லப்யா - முன் செய்த புண்யத்தால் அம்பாளின் க்ருபை கிடைக்கும்.

சுருக்கமாகச் சொன்னால், நாம் முற்பிறவியில் புண்ணியம் செய்து இருந்தால் தான் அம்பாளை இப்பிறவியில் பூஜை செய்யும் பாக்கியம் கிடைக்கும். அதுவும் அவள் அருளாலேயே !

**41. அபிராமியே அருளுவாள் அன்பர் அமைப்பை.**

*புண்ணியம் செய்தனமே மனமே புதுப்பூங்குவளை*
*கண்ணியும் செய்ய கணவரும் கூடி நம் காரணத்தால்*
*நண்ணி இங்கே வந்து தம் அடியார்கள் நடு இருக்கப்*
*பண்ணி நம் சென்னியின் மேல் பத்ம பாதம் பதித்திடவே.*

**(ஸத்ஸங்கம் உண்டாக)**

| | |
|---|---|
| மனமே | மனமே ! |
| புதுப் பூங்குவளைக் | அன்றலர்ந்த நீலோத்பல மலர் |
| கண்ணியும் | போன்ற திருக்கண்களை உடைய அபிராமி அன்னையும், |
| செய்யக் கணவரும் | (அவ்வன்னையின்) சிவந்த நிறமுடைய |
| கூடி | கணவராகிய சிவபெருமானும் சேர்ந்து |
| நம் காரணத்தால் | நம்மை ஆட்கொள்ள வேண்டும் என்ற காரணத்தினால் |
| நண்ணி இங்கே வந்து | விரும்பி நம் இடம் வந்து, |
| தம் அடியார்கள் | தமது அடியார்களின் |
| நடுவிருக்கப் பண்ணி | நடுவிலே இருக்கச் செய்து |
| நம் சென்னியின் மேல் | நமது தலை மேலே |
| பத்மபாதம் | (தம்) திருவடித் தாமரைகளைப் |
| பதித்திடவே | பதிப்பதற்கு தக்கபடி, |
| புண்ணியம் செய்தனமே | புண்ணியம் செய்திருக்கிறோம் ! (என்ன வியப்பு) |

மனமே! அப்போது மலர்ந்த நீலோத்பல புஷ்பம் போன்ற திருக்கண்களையுடைய அபிராமி அன்னையும் செம்மை வண்ணமுடைய தன் கணவரான சிவபிரானும் சேர்ந்து, நம்மை ஆட்கொள்ளவேண்டும் என்ற காரணத்தினால் நாம் இருக்கும் இடம் தேடிவந்து, நம்மைத் தம்முடைய அடியார்களிடையே இருக்கும்படி செய்து, நம் தலை மேலே தம் திருவடித் தாமரைகளைப் பதிப்பதற்குத் தக்கபடி நல்ல புண்ணியச் செயல்களை முன்பே செய்திருக்கிறோம். என்ன வியப்பு !

அடியார்களுடன் சேரும் கூட்டுறவும் அன்னை அபிராமியின் அருளினால் அமைவது என்றும், அதன் பயனாக அவளுடைய அருளாநுபவம் கிடைக்கும் என்றும் இந்தப்பாடல் சொல்கிறது.

'ஸத்சங்கம்' - எவ்வளவு அவசியம், அதுவும் அன்னையின் அருளால் அமைவது என்பதை தெள்ளத் தெளிவாக கூறுகிறார்

அபிராமிபட்டர். முன்னும் 'பகல் இரவா நண்ணியது உன்னை நயந்தோர் அவையத்து' என்றும் 'வெறிவிப் பிறிந்தேன் நின்அன்பர் பெருமை எண்ணாத காரணத்தால்..' என்றும் கூறுவர். பின்னும், 'கயவர் தம்மோடு என்ன கூட்டுஇனியே.' என்பர்.

'ஆன்மா இறைவனைத் தேடுவது சாமானியக் கருத்து.

இறைவன் ஆன்மாவைத் தேடுவது - மிகச் சீரிய கருத்து.'

ஆன்மாவின் பரிபக்குவம் அறிந்து அன்னை அபிராமியே வலிய வந்து தம் அன்பர்களை ஆட்கொள்வாள் என்பது அருமையான கருத்து (நம் காரணத்தால் நண்ணி இங்கே வந்து).

அன்னையை, நீலோத்பல மலர் போன்ற திருக்கண்கள் உடையவள் என்று சொல்லி, சிவபிரானை-செய்ய (சிவந்த மேனியுடைய) கணவராகச் சொல்லி இருப்பது-அன்பர்கள் தியானம் செய்வதற்குரிய ஓர் வடிவம். கம்பனும், ''சிவந்தவாய் சீதையும், கரிய செம்மலும்'' என்பர். திருமூலரும், ''நீலக்குவளை மலரன்ன கண்ணினாள்'' என்பர். திருமந்திரம் (1100). ''பைங்குவளை கார் மலரால்'' - மணிவாசகர் (திருவெம்பாவை)

'ஸத்ஸங்கம்' பற்றி, 'சான்றோர் இனத்திரு' - என்பார் ஔவைப்பாட்டி. ''ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்'' (ஆதிசங்கரர்)

தாயுமானவரும், 'அன்பர் பணிசெய்ய எனை ஆளாக்கி விட்டுவிட்டால் இன்ப நிலை தானே வந்தெய்தும் பராபரமே !' என்றார். அதாவது, 'அன்பர்களுடன் கூட அவர்களுக்குப் பணி செய்யும் பாக்கியம் எனக்குக் கிடைத்து விட்டால் போதும். நான் மோட்சத்தைத் தேடிக்கொண்டு போக வேண்டிய அவசியம் இல்லை. அதுவே என்னைத் தேடிக்கொண்டு வந்து விடும்.' என்பது.

மாணிக்கவாசகரும் 'உடையாள் உன்றன் நடு இருக்கும்' என்று தொடங்கும் பாடலில் 'அடியார் நடுவுள் இருக்கும் அருளைப்புரியாய்..' என்று பாடுகிறார். ஆனால் அபிராமிபட்டரோ, 'அடியார்கள் நடுவிருக்கப் பண்ணி' - என்கிறார். இது தாயிடம் சேய் உரிமையுடன் கொண்ட அன்பைக் காட்டுகிறதல்லவா !

## 42. ஐயனையும் ஆட்டிவைப்பவள் அபிராமி.

*இடங் கொண்டு விம்மி இணை கொண்டு இறுகி இளகிமுத்து*
*வடங்கொண்ட கொங்கைமலை கொண்டு இறைவர் வலியநெஞ்சை*
*நடங் கொண்ட கொள்கை நலம் கொண்ட நாயகி நல்அரவின்*
*படங் கொண்ட அல்குல் பனிமொழி வேதப் பரிபுரியே !*

**(உலகம் நமக்கு வசியப்பட்டிருக்க)**

| | |
|---|---|
| இடங்கொண்டு | பரந்த இடத்தைக் கொண்டு |
| விம்மி | பருத்து |
| இணை கொண்டு | ஒன்றோடு ஒன்று ஒக்க வளர்ந்து |
| இறுகி | தளர்ச்சியின்றிச் செறிந்து (கடினமானதாயும்) |
| இளகி | மெத்தெனக் குழைந்து |
| முத்து வடங் கொண்ட | முத்தாரம் அணிந்த |
| கொங்கை மலை | மலை போன்ற ஸ்தனங்களை |
| கொண்டு | சாதனமாகக் கொண்டு |
| இறைவர் | சிவபிரானது |
| வலிய நெஞ்சை | வன்மை பெற்ற உள்ளத்தை |
| நடங் கொண்ட | தன் இச்சைப்படி ஆட்டி வைக்கும் சீரிய |
| கொள்கை நலம் | சங்கல்பத்தை (விரதத்தை) |
| கொண்ட நாயகி | உடைய தலைவி (யாரெனில்) |
| நல்லரவின் | நல்ல பாம்பின் |
| படங்கொண்ட | படத்தைப் போன்ற |
| அல்குற் | கடிதடத்தையும் |
| பனிமொழி | குளிர்ந்த (இனிய) வாய்மொழிகளையும், |
| வேதப் பரிபுரையே | வேதங்களை தனது சிலம்புகளாகக் கொண்ட பராசக்தியான அபிராமியே. |

அகன்று பருத்து ஒன்றோடொன்று நெருங்கி கடினமான தாயும், மென்மையானதாயும் முத்தாரம் அணிந்த மலை போன்ற கொங்கைகளை சாதனமாகக் கொண்டு சிவபெருமானுடைய வன்மை பொருந்திய உள்ளத்தைத் தன் இச்சைப்படி ஆட்டிவைக்கும் தலைவி யார் எனின், சீரிய சங்கல்பத்தை கொண்டும், நல்ல பாம்பின் படத்தைப் போன்ற நிதம்ப பிரதேசத்தையும் குளிர்ந்த (இனிய) வாக்சாதுர்யத்தையும் வேதங்களைத் தனது சிலம்புகளாகக் கொண்ட பராசக்தியேயாகும் - அதாவது அன்னை அபிராமியே ஆகும்.

அதாவது 'சிவம் தன்னால் இயங்காது, சக்தியே அதனை

இயக்குகிறாள்' 'சக்தியின்றி சிவமில்லை' - என்று அழகாகச் சொல்லியுள்ளார். ஆதிசங்கரர், ஸௌந்தர்யலஹரி முதல் ஸ்லோகத்திலேயே, 'சிவ : சக்தியாயுக்தோயதி பவதி சக்த : ப்ரபவிதும் ந சேதேவம் தேவோ ந கலு குசல : ஸ்பந்திதுமபி'- என்கிறார். அதாவது 'சிவமெனும் பொருளும் ஆதி சக்தியோடு சேரின் எத்தொழிலும் வல்லதாம். இவள் பிரிந்திடில் இயங்குதற்கும் அரிதெனா மறைஉரைக்குமால்'

ஸ்தாணுவாய் (அசைவற்றதாய்) இருக்கும் சிவத்தில் சக்தி ஸ்புரிக்கும் போது ஓர் ஸ்பந்தம் (அசைவு, துடிப்பு,) ஏற்படுகின்றது. இதனாலேயே சிவம் தொழிற்படுகிறது.

'சிவமெனும் நிர்க்குண மூர்த்தியின் இயக்கமே சக்தி.'

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்-முதல் நாமா. ஸ்ரீமாதா - (வேதமாதா. ஸ்ரீ-வேதம்) அன்னை அபிராமியின் திருவடியில் வேதமே சிலம்பாக அமைந்திருக்கிறது. சிலம்புக்குள் பரல்கள் மறைவாக இருக்கும். அதுபோல வேதத்திற்குள் பலபொருள்கள் இரகசியமாய் இருக்கின்றன. அதனால் அதற்கு மறை என்ற பேர் அமைந்தது. 'அறைகின்ற நான்மறையோா' என்றார் அபிராமிபட்டர். அன்னை நடந்தால், சிலம்பின் ஒலியாக வேதங்கள் ஒலிக்கும்.539. ஸ்ருதி - அம்பாள் வேதங்களின் ரூபமாகவும், ஒலியாகவும் இருப்பவள். வேதங்கள் வாயால் ஓதி - செவியால் கேட்கப்படுவது.

அன்னை அபிராமியின் 'மொழி'-குளிர்ச்சியாகவும், இனிமை யாகவும் உள்ளது. இதற்கு ஈடு, இணை, நிகர் எதுவும் இல்லை.

27. நிஜ ஸல்லாப மாதுர்ய விநிர்பர்த்ஸித கச்சபீ - தன்னுடைய பேச்சின் இனிமையினால் கச்சபீ எனப்படும் ஸரஸ்வதி தேவியின் வீணையும் தோற்றது. இதையே ஆதிசங்கரர் ஸௌந்தர்யலஹரியில் (66) சொல்கிறார். "விபஞ்ச்யா காயந்தீ"

46. ஸிஞ்ஜான மணிமஞ்ஜீர மண்டித ஸ்ரீபதாம்புஜா சப்திக்கின்ற மணிகளையுடைய சிலம்புகளால் அலங்கரிக்கப்பட்ட திருவடித் தாமரைகளையுடையவள்.

இந்தப்பாடல் அபிராமிபட்டர் - ஒரு தலைசிறந்த சாக்த பக்தர் என்று நமக்கு புரிய வைக்கிறது.

## 43. சிவனின் சரிபாகத்தில் இருப்பவள் அபிராமியே.

*பரிபுரச் சீறடிப் பாசாங்குசை பஞ்சபாணி இன்சொல்*
*திரிபுர சுந்தரி சிந்துர மேனியள் தீமை நெஞ்சில்*
*புரிபுர வஞ்சரை அஞ்சக் குனி பொருப்புச் சிலைக்கை*
*எரிபுரை மேனி இறைவர் செம்பாகத்திருந்தவளே.*

**(தீமைகள் ஒழிய)**

| | |
|---|---|
| பரிபுரச் சீறடி | சிலம்பை அணிந்த சிறிய திருவடிகளையும் |
| பாசாங்குசை | பாசம், அங்குசம் என்ற ஆயுதங்களை தாங்கியவளும் |
| பஞ்சபாணி | ஐந்து மலர் அம்புகளை உடையவளும் |
| இன்சொல் | இனிய சொற்களையுடைய |
| திரிபுர சுந்தரி | திரிபுர சுந்தரியாகிய தேவி |
| சிந்துர மேனியள் | சிவந்த திருமேனியை உடையவள். |
| நெஞ்சில் தீமைபுரி | தீத் தொழிலை உள்ளத்தில் கொண்டு |
| புரவஞ்சரை | (அவ்வாறு) தீமை செய்த திரிபுர அசுரர்களை |
| அஞ்ச | அஞ்சும்படி செய்த, |
| குனி பொருப்புச் | வளைத்த மேருமலையாகிய |
| சிலைக்கை | வில்லைத் திருக்கரத்தில் பெற்றவரும் |
| எரிபுரை மேனி | தீத்தழல் போன்ற திருமேனியை உடைய |
| இறைவர் | சிவபெருமானது |
| செம்பாகத்து | சரியான ஒரு பாதியில் |
| இருந்தவளே | எழுந்தருளி இருந்தவள் அபிராமியே ஆகும். |

சிலம்பணிந்த சிற்றடிகளையும் (சிறிய திருவடிகள்) பாசாங்குசத்தையும் உடையவள். ஐந்து மலர் அம்புகளை ஏந்தியவள், இனிய சொல்லையுடைய திரிபுர சுந்தரி, சிந்துரம் போலச் சிவந்த திருமேனியை உடையவள். மனத்தினால் உலகுக்குத் தீமை செய்யவேண்டும் என்று நினைத்து அவ்வாறு செய்த திரிபுரத்தில் இருந்த வஞ்சகர்களாகிய அசுரர்கள் அஞ்சும்படியாக வளைத்த மேருமலையாகிய வில்லைத் திருக்கரத்தில் பெற்றவரும், நெருப்பை ஒத்த திருமேனியை உடையவருமாகிய சிவபெருமானது சரிபாதியில் எழுந்தருளி இருந்தவள் ஆகும்.

அன்னை அபிராமியின் உருவத் தியானத்தினால் ஆணவம், மாயை, கன்மம் என்ற மும்மலமும் அழிந்து, அன்னையின் அன்பு என்னும் அருளினால் இன்பம் உண்டாகும் என்பதை அபிராமிபட்டர் இந்தப் பாடல் மூலம் சொல்கிறார்.

சென்றபாட்டில் அன்னை அபிராமியின் மதுர வாசகத்தைப் 'பனிமொழி' என்றவர் இங்கு 'இன்சொல்' என்கிறார்.

முதலில் சீறடியை வணங்கினார். பின்பு பாசாங்குசம், பஞ்சபாணங்கள், அன்னையின் இனிய சொல் என்று பிறகு திரிபுரசுந்தரி என்றும் சொல்லி எதையோ மறந்தது போல உடனேயே 'சிந்துரமேனியள்' என்று சொல்வது மிகவும் நயம் பொருந்தியது. 'சிந்துர வண்ணப் பெண்ணே' (6), 'சிந்துர வண்ணத்தினாள்' (8) - என்று முன்னும் கூறினார். 2-வது பாட்டில்....'திரிபுரசுந்தரியாவது அறிந்தனமே.' வருவது காண்க.

அன்னை அபிராமியின் கைகளில் பாசம், அங்குசம், மலர்கணைகள், கரும்பு வில் இருப்பதை முன்னும் பார்த்தோம்.

அன்னை அபிராமி பாசம் (அல்லது ஆசை) என்னும் கயிற்றை தனது இடது பின்கையில் தாங்கியிருப்பது பாசத்தைக் காட்டும் பண்பு உடையவள் அன்னை என்று சொல்லுகிறது. கயிற்றின் இருமுனைகளும் நமக்கு அடங்கினால் தான் ஆசைப்படும் பொருளை வசப்படுத்த முடியும். தேவியின் கையிலுள்ள பாசத்தின் இருமுனைகளும் அவள் கையிலே அடங்கியுள்ளதால் 'நமது ஆசை அவளருளால் தான் நிறைவேறும்' என்று குறிக்கிறது. (பாசம் -விருப்பு)

அங்குசம் என்பது யானையை அடக்க அதன் பாகன் பயன்படுத்தும் தொரட்டி. யானை மிகவும் பலசாலியானது. அதற்கு மதம் பிடித்தால் அடக்கப் பயன்படும் ஆயுதம் தொரட்டி. எல்லாவற்றிற்கும் மூலமாகிய மலம் ஆணவம். அதற்கு யானையை உவமையாகச் சொல்வது வழக்கம். அகங்காரம் என்னும் மதயானையை அடக்க நம்மால் இயலாது. அது அவள் அருளினால் தான் முடியும். இந்த மதயானையை அடக்கும் பாசாங்குசத்தை அவள் ஏந்தியிருப்பது இதற்கு அடையாளம்.

மன்மதனின் ஆயுதங்களை அன்னை அபிராமி வைத்திருப்பது தனது அன்பர்களை காமவலையில் விழாமல் இருக்கச் செய்வது. கரும்பு வில்-ஈரமும் இனிப்பும் உடையது. அது அன்னையின் கருணையைக் காட்டுகிறது. அம்பு எய்துபவனது இலக்கை அடைந்து பயனைத் தரும். ஜீவன்-பக்தனானால் தேவியின் அம்புகளுக்கு நல்ல இலக்காவான். பக்தனின் கருத்தில் தோஷம் இருந்தால் விரும்பத் தகாத பலன்களைப் பெறுவான்.

மேலும் காமத்தில் வசப்படுத்தும் மாயா சொரூபியும், அதனின்று நீக்கும் ஞானசொரூபியுமாக விளங்குகிறாள் அன்னை அபிராமி. முதல் வேலை மன்மதனுக்கு. இரண்டாவது வேலை ஞானக்கொழுந்தாகிய கணபதியின் மூலம் நடக்கிறது. இதனாலே தான் கணபதியின் கையில் பாசாங்குசம் காணப்படுகிறது. அகங்காரம் அழிய அன்னையை பாசாங்குசம் ஏந்தியவளாகத் தியானிக்க வேண்டும்.

இவ்வாறு பாசாங்குசம், கரும்பு வில், பஞ்சபாணியுடன் சிந்துர மேனியாகக் காட்சிதருபவள் அன்னை திரிபுரசுந்தரியே. (முன்னும் பார்த்தோம்) இவள், நெருப்புத் தழல் போன்ற சிவந்த திருமேனியை உடைய சிவபிரானின் சரிபாதியில் இருந்து அகிலத்திற்கும் அருள் புரிகிறாள்.

திரிபுரங்களை (ஆணவம், கன்மம், மாயை) ஆண்ட வஞ்சகரான அசுரர்களை அழிக்க சிவபெருமான் புறப்பட்ட போது திருமாலுக்கு அகந்தை ஏற்பட்டது. அதைப் பார்த்து சிவபெருமான் புன்முறுவல் பூத்தான். அந்த புன்முறுவலிலேயே திரிபுரங்கள் அழிந்தன. திருமாலின் அகந்தை ஒழிந்தது. தவறை உணர்ந்து திருந்திய அசுரர்களை தன் பணியாளர்களாகவும் நியமித்தான். அப்பேர்ப்பட்ட ஞானமூர்த்தி ! கருணை வள்ளல் ! சிவனும் - சக்தியும் ஒன்றல்லவா !

## 44. அன்னை அபிராமியே - மேலான தெய்வம்.

*தவளே இவள் எங்கள் சங்கரனார் மனைமங்கலமாம்*
*அவளே அவர் தமக்கு அன்னையும் ஆயினள் ஆகையினால்*
*இவளே கடவுளர் யாவர்க்கும் மேலே இறைவியுமாம்*
*துவளேன் இனி ஒரு தெய்வம் உண்டாக மெய்த்தொண்டு செய்தே.*

**(பேத புத்தி நீங்க)**

| | |
|---|---|
| தவளே | தவத்தின் உருவமாய் இருப்பவளே ! (அப்படி இருந்தும்) மாபெரும் தவம்புரிந்த உமாதேவியே ! |
| இவள் எங்கள் | இவளே எங்களுடைய |
| சங்கரனார் | (தந்தையாகிய) சங்கரனின் |
| மனை மங்கலமாம் | இல்லத்திற்கு மங்களம் செய்பவளாம். |
| அவளே | அப்பெருமாட்டியே, |
| அவர் தமக்கு | அச் சிவபெருமானுக்கு |
| அன்னையும் ஆயினள் | தாயும் ஆவாள். |
| ஆகையினால் | அக்காரணத்தினாலேயே |
| இவளே | இவள் தான் |
| கடவுளர் யாவர்க்கும் | தெய்வங்கள் எல்லாவற்றிற்கும் |
| மேலை இறைவியுமாம் | மேலான தெய்வம். |
| இனியொரு தெய்வம் | இனி இவளுக்குப் புறம்பாய் வேறு ஒரு தெய்வம் |
| உண்டாக | இருப்பதாக எண்ணி |
| மெய்த்தொண்டு செய்து | அந்தத் தெய்வங்களுக்கு உடலினால் பணி செய்து (வழிபட்டு) |
| துவளேன் | வருந்தமாட்டேன். (தளர்ச்சி அடையேன்) |

தவமாகவும் தவத்தின் பயனாக இருக்கும் எங்கள் திரிபுரசுந்தரி எங்கள் சங்கரனார் வீட்டுக்கு மங்களத்தை கொடுப்பவளான மனைவி. அவளே அவருக்கு அன்னையும் ஆவாள். அவளே கடவுளர் என்று சொல்லக்கூடிய அனைவருக்கும் மேம்பட்டவள். அவர்களுக்கு ஈஸ்வரியாகவும் இருப்பவள். அவரை வழிபட்டவுடன் (பின்) வேறு ஒரு தெய்வம் உண்டென்று நினைக்கவும் மாட்டேன். அத்தகைய தெய்வங்களை வழிபட்டு வீணாக வருந்தவும் மாட்டேன்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தில்,

233. மஹா காமேச மஹிஷீ - மஹாகாமேச்வரருடைய

பட்டமஹிஷியானவள். இரண்டாவது நாமாவில்'மஹாராக்ஞீ' என்று சொல்லப்பட்டது மஹா காமேச்வரரின் பட்டமஹிஷி என்பதாலேயே அல்லவா !

பரசிவத்துக்கு வீடு என்பது அவருடைய மனதே. அதில் அம்பாள் வீற்றிருந்து அவரைத் தொழில்படுத்துகிறாள். சங்கரன் என்ற சொல்லுக்கு ஹிதத்தைச் செய்கிறவன். மகிழ்ச்சியைக் கொடுப்பவன் என்று அர்த்தம். 406. சிவாராத்யா - சிவனால் வழிபடப்பெற்றவள். சிவனும் தேவியை ஆராதித்ததாக ப்ரஹ்மாண்ட புராணம் கூறுகிறது. இவளைத் தியானித்தும், யோக பலத்தினாலும் எல்லா சித்திகளுக்கும் அதிபதியாக (ஈஸ்வரனாகவும் அர்த்தநாரீஸ்வரராகவும் ஆனார்.) சிவனால் உபாஸிக்கப்பட்ட நான்கு கூடங்களுள்ள ஒரு மந்த்ர ஸ்வரூபமாக இருப்பவள் 410. சிவபரா-சிவனுக்கும் மேற்பட்டவள். 126.ஶாங்கரீ- சங்கருடைய பத்னீ, ஶம் (சுகம்) - இதைச் செய்பவர் சங்கரர். அல்லது ஶம் (மங்களம்) இதைக் கையில் கொண்டவர் சங்கரர். அவருடைய சக்தி வடிவானவள். ஶாங்கரீ-இரவு ரூபமாக இருப்பவள் என்றும் பொருள் 933. மங்கலாக்ருதி - மங்கள ரூபமுடையவள். 116. பத்ரமூர்த்தி - மங்களமான ரூபத்தை உடையவள். 200. ஸர்வ மங்கலா - எல்லா மங்களங்களையும் உடையவள். அனைத்துக்கும் மூலமாக இருப்பவள் - ப்ரணவத்தையும் குறிக்கிறது என்றும் சொல்லலாம். 967. ஸுமங்கலீ-மிகவும் மங்களமானவள்.

சங்கரன் என்ற சொல்லுக்கு சுகம், ப்ரியம், மகிழ்ச்சி தருகிறவன் என்ற பொருள்கள் உண்டு. இவற்றை சக்தியின் உதவியினாலேயே செய்வதால் தேவியை ''சங்கரனார் மனை மங்கலம்'' என்கிறார் அபிராமி பட்டர். சங்கரனுக்கு சக்தி தாயார் என்பதை திருமூலரும் 'தாயும் மகளும் தாரமுமாமே' என்று சொல்வது முன்பே கூறப்பட்டது. இதையே மாணிக்கவாசகர், 'இமவான் மகட்குத் தன்னுடைக் கேள்வன் மகன்' - என்பர். அதாவது, சிவன் சக்திக்கு மணாளனாகவும், மகனாகவும் இருக்கின்றானாம். 369. பரதேவதா - சிறந்த தேவதையாக இருப்பவள். எல்லோரினும் உயர்ந்த தெய்வம் பரமேசுவரள்.

அவனுக்கும் மேலானவள் அம்பிகை-அன்னை அபிராமி.

இப்பேர்ப்பட்ட உயர்ந்த. தலைசிறந்த தெய்வம் இருக்கும்போது மற்ற தெய்வங்களை நாடவேண்டிய அவசியம் இல்லை. முன்னும், 'மாத்தவளே ! உன்னை அன்றி மற்றோர் தெய்வம் வந்திப்பதே' (13) என்று பாடினார்.

மனம், வாக்கு, காயம் என்னும் மூன்று காரணங்களாலும் அன்னை அபிராமியையே சதா தியானித்து, வாழ்த்தி தொண்டு புரிகிறவர் அபிராமிபட்டர். தனி உரிமையாக அம்பிகையே அவற்றைப் பெற்றிருக்கிறாள். அப்படி இருக்க, மெய்யினால் செய்யும் தொண்டை வேறு ஒருவரைத் தெய்வமென்று கருதி அர்ப்பணம் செய்வாரா ? அப்படிச் செய்தால் அதனால் தளர்ச்சி தான் உண்டாகும் என்பது அவருக்கு நன்றாகத் தெரியும்.

அப்பைய தீக்ஷிதர் தனது ஸ்ரீ துர்கா சந்திரகலா ஸ்துதியில்

"யத் பூஜநஸ்துதி நமஸ்க்ருதி பிர்பவந்தி
ப்ரீதா : பிதாமஹரமேச ஹராஸ்த்ர யோபி ।
தேஷாமபி ஸ்வககுணைர் தததீம் வபூம்ஷி
தாமீச்வரஸ்ய தருணீம் சரணம் பரபத்யே" - என்கிறார்.

பொருள் :- அம்பிகையை பூஜிப்பதையும், ஸ்தோத்தரிப்பதையும், மீண்டும், மீண்டும் நமஸ்காரம் செய்வதையும் கண்டு, பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகளும் மிகவும் ப்ரீதி அடைகிறார்கள். பிரும்மாதி தேவர்களுக்கு அம்பிகையே சத்துவம், தமஸ், ரஜஸ் ஆகிய தனது முக்கோணங்களால் சரீரங்களை அளித்தாள். அந்தத் தாயை நான் சரணம் அடைகிறேன்.

அன்னை அபிராமியே மகாதேவனுக்கும் மற்று எல்லா தேவர்களுக்கும் தலைவியாக இருப்பதால், அவளை வழிபடுவோர், மற்ற தெய்வங்களை வழிபடத்தேவையில்லை என்பதை தெள்ளத் தெளிவாக அன்பர்களுக்கு கூறும் இந்த அறிவுரை அவருடைய பேரானந்த அனுபவத்தினால் ஏற்பட்டது.

இந்தக் கருத்தை, ஆதிசங்கரர், ஸௌ.ல. 25 : "த்ரயாணாம் தேவானாம்...." என்ற ஸ்லோகத்தில் ஆணித்தரமாகச் சொல்கிறார்.

**45. அபிராமி அன்னையே-என் குற்றங்களை பொறுத்துக் கொள்.**

*தொண்டு செய்யாது நின்பாதம் தொழாது துணிந்து இச்சையே*
*பண்டு செய்தார் உளரோ இலரோ அப்பரிசு அடியேன்*
*கண்டு செய்தால் அது கைதவமோ அன்றிச் செய்தவமோ*
*மிண்டு செய்தாலும் பொறுக்கை நன்றே பின் வெறுக்கை அன்றே.*

**(உலக அபவாதம் நீங்க)**

| | |
|---|---|
| தொண்டு செய்யாது | உனக்கு சேவை செய்யாமலும் |
| நின் பாதம் தொழாது | உன் திருவடிகளை வணங்காமலும் |
| துணிந்து | தைரியமாய் |
| இச்சையே | மனம் போன போக்கில் |
| பண்டு செய்தார் | முன்பு உன்னை வழிப்பட்டவர்கள் |
| உளரோ, இலரோ ? | இருந்தார்களோ, இல்லையோ ? |
| அப்பரிசு அடியேன் | அதைப்பார்த்து அடியேனும் |
| கண்டு செய்தால் | அவ்வாறு உன்னை வழிப்பட்டால் |
| அது கைதவமோ | அது பொய்யாகுமோ |
| அன்றிச் | அல்லது |
| செய்தவமோ | நான் செய்த தவப்பேறோ |
| மிண்டு செய்தாலும் | அடியேன் மாறுபட்ட செயல்களைச் செய்தாலும் |
| பொறுக்கை நன்றே | பொறுப்பது தான் நன்மையாகும் (நான் உன் சேய் அல்லவா) |
| பின் வெறுக்கை அன்றே | அவ்வாறு பொறுக்காமல் வெறுப்பது நன்றன்று. |

தாயே நின் திருவடிக்குக் கைங்கரியம் செய்யாமலும் நின் பாதத்தை வணங்காமலும் உண்மையான பொருள் இன்னதென்று உறுதியாகத் தெளிந்து, தம் மனம் விரும்பியவற்றையே செய்தவர்கள் பழங்காலத்தில் இருந்தார்களோ இல்லையோ ?

(அப்படி மெய்ஞ்ஞானியர் திருவருள் அநுபவத்தால் இருந்தார்களாதலால்) அவ்வண்ணமே அடியேனும் அவர்களைப் பார்த்து என் இச்சைக்குரிய (மனம் போனபடி) செயல்களைச் செய்தால் அது வஞ்சமாகுமா ? (கைதவம்) அல்லது, அவர்களுடைய செய்கைகள் எல்லாம் தவமாவது போல என் செய்கைகளும் தவமாகுமா ?

அடியேன் மாறுபட்ட செயல்களைச் செய்தாலும் நான் உன் குழந்தை என்ற உண்மை கருதி என்னைப் பொறுப்பது

நன்மையாகும்.

அப்படியின்றி என்னை வெறுத்துப் புறக்கணித்தல் நன்று அன்று. பின்னும், " தரம் அன்று இவன் என்று தள்ளத்தகாது" - (88) என்பர்.

அபிராமிபட்டர் இந்தப்பாடலில் ஓர் அரிய கருத்தினை வெகு அழகாகச் சொல்லுகிறார். இந்தப் பாடலின் கருத்து இக்காலத்திற்கு பொருத்தமாக உள்ளது.

'ஞானத்தின் முதிர்ச்சியால் சமாதி நிலையில் வாழும் முக்தர்கள் எது செய்தாலும் அதுவே தவமாக இருக்கும். அவர்கள் நடப்பதே சரியை. அவர்கள் செய்வதே கிரியை. அவர்கள் மூச்சு விடுவதே யோகம். அவர்கள் தூங்குவதே சமாதி நிலை. அவர்கள் செய்வது சதாகால பூஜை.'

அவர்களைப் பார்த்து நாமும் அது மாதிரி, 'இறைவனைத் தொழமாட்டோம், தொண்டு செய்ய மாட்டோம், அர்ச்சனை செய்ய மாட்டோம், கும்பிட மாட்டோம்...' என்று சொல்லலாமோ ? அவர்கள் நிலை-சாதனையின் எல்லை. உயர்ந்த அநுபூதி நிலை. நாம் அந்த மாதிரி நினைப்பது சோம்பல் நிலை (கைதவமோ ? என்றார்).

அபிராமிபட்டர் - சிறந்த அநுபூதிமான் அல்லவா ? குறைகளைத் தன் மீது ஏற்றிக்கொண்டு, தாயிடம்-சேய் கேட்பது போல அன்னை அபிராமியிடம், 'தாயே ! நான் எது செய்தாலும் என்னைப் பொறுத்தருள வேண்டும். வெறுக்கக் கூடாது. எனக்கு உன்னையின்றி புகல் வேறு இல்லை.'

'நான் அறியேன், சிறியேன், வினையேன், பேயேன், நாயேன்..' என்று அபிராமிபட்டர் அன்னை அபிராமியிடம் சொல்வது நம்மைப்போன்ற ஜீவர்களுக்காக. இவர்களுக்கும் நீ, திருவருள் புரியவேண்டும் என்று அவர் விண்ணப்பம் செய்கிறார். என்னே ! அவரது கருணை உள்ளம் ! அன்னை அபிராமி கருணைக் கடல் அல்லவா ! அவளின் அன்பர்களும் அப்படித்தானே !

தாயுமானவர் மலர்களைப் பறித்து அர்ச்சிக்கவில்லை. பூசை செய்யவும் இல்லை. கும்பிடவும் இல்லை. அவருக்கு எதிலும்,

எப்போதும், எங்கும் இறைவனைக் கண்டதனால் ஏற்பட்டது இந்நிலை. "பண்ணேன் உனக்கான பூசையொரு வடிவிலே பாவித் திறைஞ்ச ஆங்கே பார்க்கின்ற மலரூடு நீயே இருத்தி.." என்பார் தாயுமானவர்.

கண்ணப்பர் வரலாறும் காண்க. சிவகோச்சாரியார் செய்த யதோக்தமான வழிபாட்டை விட கண்ணப்பர் செய்த அன்பு வழிபாடே இறைவனுக்கு ஏற்றுக் கொள்ளக் கூடியதாக இருந்தது.

"பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோமே பக்த்யா ப்ரயச்சதி

ததஹம் ப கத்யுபஹ்ருத மஶ்னாமி ப்ரயதாத்மன :" பகவத் கீதை (9.26).

இதை கீதையிலும் ஶ்ரீ கிருஷ்ண பரமாத்மா சொல்கிறார். 'எவன் ஒருவன் பக்தியோடு ஒரு இலை/பூ/கனி/நீர் - எனக்கு அளித்தாலும் அந்த அன்புக்குக் கட்டுபட்டு அதையும் நான் உட்கொள்வேன்.

ஶ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் (994) ஆபால கோபவிதிதா - சிறுவர்களாலும் இடையர்களாலும் கூட அறியப்படுபவள். இதனால் அவளுக்கு ஜனங்கள் மத்தியில் மதிப்பும், மரியாதையும் குறைவதில்லை. யாரும் அவளுடைய கட்டளைகளை மீற முடியாது. ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன் போன்றோரும் அவள் புருவங்கள் அசைவுகளிலிருந்தே, தத்தம் தொழிற்களைச் செய்கின்றனர். (995. ஸர்வானுல்லங்கய ஶாஸனா - எவராலும் மீற முடியாத கட்டளைகளை உடையவள்.) 'குற்றஞ் செய்யினும் குணமெனக் கருதும் கொள்கை கண்டு நின் குரை கழல் அடைந்தேன்' - என்பது திருநாவலூரரார் திருவாக்கு, 'தத்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும் அத்தன்.' (திருவாசகம்)

அபிராமிபட்டர் அன்னை அபிராமியின் மேல் அன்பும், பாச உணர்வும் கொண்டு, தாயிடம் நெருங்கிக் கொஞ்சும் குழந்தையாதலால், முதலில் 'நானும் இவர்கள் மாதிரி செய்யக் கூடாதா' என்று சொல்லிவிட்டு பின், 'அம்மா என் குற்றங்களையெல்லாம் பொறுத்துக்கொள்' என்று அன்பு கலந்த உரிமையோடு விண்ணப்பித்துக் கொள்கிறார்.

## 46. அன்னையே நீ என்னை மறுத்தாலும் நான் உன்னை வணங்குவேன்.

*வெறுக்கும் தகைமைகள் செய்யினும் தம் அடியாரை மிக்கோர்*
*பொறுக்கும் தகைமை புதியதன்றே புதுநஞ்சை உண்டு*
*கறுக்கும் திருமிடற்றான் இடப்பாகம் கலந்த பொன்னே*
*மறுக்கும் தகைமைகள் செய்யினும் யான் உன்னை வாழ்த்துவனே.*

**(எல்லாவித நடத்தை தோஷங்களும் தீர)**

| | |
|---|---|
| புது நஞ்சையுண்டு | பாற்கடலில் தோன்றிய ஆலகால விடத்தை உண்டு |
| கறுக்கும் திருமிடற்றான் | கறுத்த திருக்கழுத்தை உடைய சிவபெருமான் (ஸ்ரீகண்டன்) |
| இடப்பாகம் கலந்த | இடது பாகத்தில் பொருந்திய |
| பொன்னே | பொன்னிறமேனிப் பெருமாட்டியே ! |
| வெறுக்கும் தகைமைகள் | வெறுக்கத்தக்க செயல்களை |
| செய்யினும் | செய்தாலும் |
| தம் அடியாரை | தம்மை அண்டினவரை |
| மிக்கோர் | பெரியோர் (சான்றோர்கள்) |
| பொறுக்கும் தகைமை | மன்னித்து பொறுக்கும் இயல்பு (மாண்பு) |
| புதியதன்றே | புது வழக்கமல்லவே ! (தொன்று தொட்டு வந்தது தானே) |
| மறுக்கும் தகைமைகள் | (அவ்வாறு நீ) என் வெறுக்கும் |
| செய்யினும் | செயல்களை பொறுத்து அருட் செய்ய மறுத்தாலும் |
| யானுன்னை வாழ்த்துவனே! | அடியேன் உன்னைப் போற்றிப் புகழுவேன். |

புதிய ஆலகால விடத்தை நுகர்ந்து கறுத்த திருக்கழுத்தை உடைய சிவபிரானது வாம பாகத்தில் பொருந்திய பொன் போன்ற நிறத்தவளே ! தாம் வெறுப்பதற்குரிய செயல்களைச் செய்தாலும் தம்மை அண்டினவரை மன்னித்து பொறுக்கும் மாண்பு, பெரியோர் களுக்கு தொன்று தொட்டு வழிவந்த வழக்கம் அல்லவா ! நேற்று இன்று வந்த புதிய பழக்கம் இல்லையே ! ஆதலால்,

நீ ஏற்றுக் கொள்ளாத செயல்களை அடியேன் செய்தாலும், (அவற்றை நீ பொறுத்தருள்வாய் என்ற தைரியத்தால் !) மீண்டும் மீண்டும், அடியேன் நின்னை வாழ்த்தி துதித்துக் கொண்டே இருப்பேன்.

தேவாரத்தில் 'துடைக்கினும் போகேன்' - என்று வரும்.

அன்னை அபிராமி - சிவனின் செல்வமாக இருப்பவள். முன்னும், 'திருவே' என்றார்.

உன் கணவன் உலகைக் காக்கும் பொருட்டு கொடிய நஞ்சை உண்டான். அதுபோல நீ என்னைக் காக்க வேண்டும். மன்னித்து அருளல் வேண்டும்' என்கிறார். திருமூலரும், "மிக்கார் அமுது உண்ண நஞ்சுண்ட மேலவன்" (திருமந்திரம் - 2815) என்பார்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 507. பீதவர்ணா - பொன்னிற மானவள். 504. ஸ்வாதிஷ்டானாம்பு ஜகதா. 513. காகினி ரூப தாரிணீ- ஸ்வாதிஷ்டானத்தில் காகினீ தேவியின் ரூபத்தை கொண்டு வீற்றிருக்கிறாள்.

'இடப்பாகம் கலந்த பொன்னே' - கவிநயம் மிகுந்தது. சிவனுக்கு செல்வம் கொடுப்பவள். முன்னும் 'திருவுடையான்' என்றார்.

885. தனாத்யக்ஷா - செல்வத்தின் அதிபதி. குபேரன் அவளின் உபாசகர். எனவே அன்னையே 'குபேரனுக்கும் - குபேரன்'.

326. கருணா ரஸ ஸாகரா - அன்னை கருணையின் கடல். த்யான ஸ்லோகத்திலும் 'அருணாம் கருணா தரங்கிதாக்ஷீம்'- என்று சொல்லப்படுகிறது. 992. அவ்யாஜ கருணாமூர்த்தி - பட்ச பாதமில்லாத கருணை உருவம் த்ரிசதியில் - கருணாம்ருத ஸாகரா (9), கடா க்ஷஸ்யந்தி கருணா (151), காருண்ய விக்ரஹா (153) - என்ற நாமாக்கள் அன்னை அபிராமி 'கருணையின் வடிவமானவள்' என்பதை அழகாகச் சொல்லுகின்றன. 392. ஸ்ரீ கண்டார்தஶரீரிணீ - பரமசிவனின் பாதியை உடலாகக் கொண்டவள். ஸ்ரீ-விஷம் என்று ஒரு பொருள். விஷத்தைக் கழுத்தில் உடையவராததால் பரமசிவனுக்கு ஸ்ரீ கண்டன் என்ற பெயர். பரமசிவனைப் பாதி சரீரமாக உடையவள் அல்லது அவரோடு வேறுபடாத பாதி சரீரத்தை உடையவள் ஆகும். (ஒ. ஸௌந்தர்ய லஹரீ (23)- "த்வயா ஹ்ருத்வா...")

பரமசிவனுக்கு சரீரம் வெளுப்பாகவும், கழுத்து கறுப்பாகவும் இருக்கிறது. அதேபோல், அம்பாளுடைய சரீரமும் ஒரு பக்கம் வெளுப்பு நிறமுடைய கௌரிரூபமாகவும், மற்றொரு பக்கம் கறுப்பு நிறமுடைய காளீ ரூபமாகவும் இருப்பதாக வாயுபுராணம் சொல்கிறது. கௌரீ ரூப சரீரத்திலிருந்து, அம்பிகா ரூபம் வெளிப்பட்டதாகவும், காளீ ரூபம் வெளிப்பட்டதாகவும் சொல்லப்படுகிறது. (ஸப்தசதீ -5-ம் அத்யாயம்)

'தாயே,நான் குறைபாடு உடையவன். குற்றம் செய்வது என் இயல்பு. நீ தயையால் நிறைவுடையவள். எனவே, நீ என்னைப் பொறுத்தருள வேண்டும்.' என்று அன்னை அபிராமியிடம் மன்றாடுகிறார் அபிராமிபட்டர்.

'தாயிற் சிறந்த தயாவான தத்துவனே' - மாணிக்கவாசகர்.

"அன்னையும் தயையும்"-பழம்பாட்டு.

தாயுமானவர் உரிமையுடன் கேட்கிறார் :-

'பொல்லாத சேயெனில் தாய் தள்ளல் நீதமோ ? புகலிடம் பிறிதுமுண்டோ'

'பெற்ற மனம் பித்து. பிள்ளை மனம் கல்லு' - பழமொழி

அன்னை அபிராமி 'இந்த உலகத்து தாயை' விட ஆயிரம் மடங்கு கருணை உடையவள். உண்மையான பக்தன், 'பக்தியில் சிறந்தவனாக இருந்தாலும் இன்னும் எனக்கு தக்கபடி பக்தி உண்டாகவில்லையே' என்று கதறுவான். நாயன்மார்களும் ஆழ்வார்களும் பாடிய பாடல்களில் இந்த நைச்சியாநு சந்தானத்தைக் காணலாம்.

'அன்னை அபிராமி நம் குற்றங்களைப் பொறுத்து, நம் அன்பைப் பெரிதாகப் பாராட்டுவாள்.'

## 47. அபிராமியை அண்டினால் ஆனந்த வாழ்வு பெறலாம்.

*வாழும்படி ஒன்று கண்டு கொண்டேன் மனத்தே ஒருவர்*
*வீழும்படி அன்று விள்ளும்படி அன்று வேலை நிலம்*
*ஏழும் பருவரை எட்டும் எட்டாமல் இரவு பகல்*
*சூழும் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்றதே.*

**(யோக சித்தி பெற)**

| | |
|---|---|
| வாழும்படி ஒன்று | நித்யானந்த வாழ்வு பெற்று சாசுவதமாய் வாழ்வதற்கு ஓர் மார்க்கம் (வழி) |
| கண்டு கொண்டேன் | (ரகசியத்தை) அறிந்து கொண்டேன். |
| மனத்தே ஒருவர் | மனத்தினால் அதை ஒருவர் |
| வீழும்படியன்று | சிந்திக்க இயலாது |
| விள்ளும்படியன்று | வாயினால் சொல்லவும் முடியாது. |
| வேலை நிலம் ஏழும் | கடல் சூழ்ந்த ஏழு உலகங்களுக்கும் |
| பருவரை எட்டும் | எட்டு மலைகளுக்கும் |
| எட்டாமல் | எட்டமுடியாமல் அப்பாலாய் |
| இரவு பகல் சூழும் | இரவையும், பகலையும் |
| சுடர்க்கு | முறையே செய்யும் சுடர்களாகிய சந்திர, சூர்யர்களுக்கு |
| நடுவே கிடந்து | நடுவே அமைந்து |
| சுடர்கின்றதே | ஒளிர்கின்றது. |

அழிவற்ற இன்ப வாழ்வு வாழும்படியாக ஒரு பரம் பொருளைத் திருவருளால் பெற்ற ஞானத்தைக் கொண்டு அறிந்து கொண்டேன். அது மனத்தினால் ஒருவர் விரும்பித் தியானிக்குமாறு உள்ளதன்று. வாயினால் உரைப்பதற்கும் உரியதன்று. கடல் ஏழும் உலகு ஏழும் பெரிய மலைகள் எட்டும் அணுகாமல், இரவையும் பகலையும் செய்யும் சுடர்களாகிய சந்திர, சூரியர்களுக்கு நடுவே விளங்குகின்றது

'ஒளிமயமான அன்னை அபிராமியைப் பற்றிக்கொண்டால் இன்ப வாழ்வு பெறலாம்'-என்று புரிய வைக்கிறார் அபிராமிபட்டர்.

கண்டதோடு நின்றவை பல. கண்டு பிறகு கைவிட்டவை பல. இப்போது தான் நிச்சயமாக இது தான் வாழும் வகைக்கு உரியது என்று 'ஒன்றைக் கண்டேன். அதை விடாமல் கைப்பற்றிக் கொண்டேன் என்றார். அவ்வாறு கண்டதும், கொண்டதும் பற்றி தன் பேரானந்தத்தில் விளைந்த அனுபவம் இது.

மக்கள் வாழ்க்கையில் பலபல வேண்டுமென்று ஆசைப்பட்டு தேடி, அதை ஈன்று, அதனால் துன்பமே அடைகின்றனர். இதைத் திருக்குறள் அழகாகச் சொல்கிறது.

"யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்

அதனின் அதனின் இலன்." (341)

ஆனால் அபிராமிபட்டர், 'ஒன்றே ஒன்று தான் வாழும்படி செய்யும். அந்த ஒன்றையே நினைத்து, நினைத்து, பின் கண்டார், கொண்டார்.' இதனையே தான் கண்டுகொண்டேன்- என்கிறார்.

அபிராமிபட்டர், 'அவளுடைய காட்சியிலே நான் உண்மையிலே பித்தனாகி விட்டவன் தான்' என்று சரபோஜீ மன்னரிடம் சொல்கிறார். பின்னும், 'முன் சொன்ன எல்லாம் தரும் பித்தர் ஆவர் என்றால் அபிராமி சமயம் நன்றே.' என்பர். 'பித்து பிடித்தல்' - என்பது எல்லாவற்றையும் மறந்து, 'ஒன்றையே சதா காலம் நினைத்திருப்பது'

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - 554. அசிந்த்ய ரூபா - மனதுக்கு எட்டாத சிந்திக்க இயலாத ரூபமுடையவள். 139. நிர்குணா - ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்கள் இல்லாதவள். குணங்களின் ஸம்பந்தம் இல்லாதபடியால், நினைவுக்கு எட்டாத ரூபத்தை உள்ளவள். (ஸௌ.ல. 36. தவாஜ்ஞா - சக்ரஸ்த்தம்)

415. மனோவாசா மகோசரா - மனதுக்கும் வாக்குக்கும் எட்டாதவள். ஞானிகளின் ஞானத்தால் மட்டுமே அறிய முடியும். அதாவது பக்குவமடைந்த மனது உள்ளவர் தான் அம்பாளை அறியமுடியும். 413. அப்ரமேயா - அளவிட முடியாதவள். இதனையே, அபிராமிபட்டர், 'மனத்தே ஒருவர் வீழும்படி அன்று. விள்ளும்படி அன்று' - என்கிறார்.

தொடர்ந்து, 'ஏழு கடலுக்கும் எட்டாதது. ஏழு உலகங்களுக்கும் கிட்டாதது. எட்டு மலைகளுக்கும் தட்டுப் படாதது.' - என்று சொல்கிறார். அதாவது, கடலை விட ஆழமானது. உலகை விட விரிவானது. மலையை விட உயர்ந்தது. பின் அது யாது ? நம் அறிவினால் உணர்ந்த எல்லாவற்றையும் விட மேலான பரம்பொருள் பரதேவதையாகிய அன்னை அபிராமியே - என்று மிக

அழகாகப் புரிய வைக்கிறார். உலகத்திற்கு ஒளி தருவது கதிரவன் (பகல்). சந்திரன் (இரவு). இவர்களுக்கு நடுவில் நிலையாக இருந்து ஒளி வீசும் சுடராக (ஜோதியாக) இருக்கிறாள் அன்னை அபிராமி. 275. பானு மண்டலமத்யஸ்த்தா. 240. சந்த்ர மண்டல மத்யகா என்பதை முன்னும் பார்த்தோம்.

அபிராமி பட்டர் அடைந்த பேரானந்த நிலையை, திருமூலரும், திருமந்திரத்தில் அழகாகச் சொல்லுகிறார்.

"நல்குந் திரிபுரை நாதநா தாந்தங்கள்
பல்கும் பரவிந்து பாரண்ட மானவை
நல்கும் பரை அபிராமி அகோசரி
புல்கு மருளுமப் போதந்தந் தாளுமே." (1048)

திரிபுரையான சக்தி, நாதமும் நாதம் கடந்த நாதாந்த நிலையும் அருளுவாள். பரந்த விரிந்த பாருலகும் இன்னும் உள்ள பேரண்டங்களும் தருவாள்.

அபிராமி, அகோசரியாக விளங்கும் அன்னை, உயிர்களுடன் பொருந்தித் தன் பேரருளை, ஞானத்தைத் தந்து ஆட்கொள்ளுவாள்.

"அகோசரி" - என்றால் மனதுக்கும், வாக்குக்கும் எட்டாதவள். இவ்வாறு, அபிராமி அகோசரியாக இருந்தாலும், அவளே அன்பர்களைத் தேடி, வலிய வந்து அன்பும், அருளும், ஞானமும் தருகிறாள் என்று திருமூலர் வெகு அழகாகச் சொல்கிறார். அன்னை அபிராமியின் கருணையை எவ்வாறு புகழ்வது ! அவள், "காருண்ய விக்ரஹா" (கருணையின் வடிவம்) அல்லவா !

அபிராமிபட்டரின் பேரானந்த நிலை எப்படிப்பட்டது ? அவர் சொல்கிறார். 'வாக்கு, மனம், வையம், கடல், மலை - இவற்றைக் கடந்து நிற்கும் பரம்பொருளாகிய அன்னை அபிராமி, சூரிய சந்திரர்களுக்குள் இருந்து ஒளி தரும் சுடராக உலகிற்கு அஞ்ஞானத்தைப் போக்கி, மெய்ஞ் ஞானத்தைத் தருகிறாள். அம்பெருமாட்டியைக் கண்டேன். என்னுள்ளே தியானித்தேன். எனக்குரிய பொருளாகப் பற்றிக் கொண்டேன். அதனால் அழியாத முத்தி ஆனந்தம் அடைந்தேன்.'

## 48. அபிராமியை தியானிப்பவருக்கு அண்டாது மறுபிறவி.

*சுடரும் கலைமதி துன்றும் சடைமுடிக்குன்றில் ஒன்றிப்*
*படரும் பரிமளப் பச்சைக் கொடியைப் பதித்து நெஞ்சில்*
*இடரும் தவிர்த்து இமைப்போதிருப்பார் பின்னும் எய்துவரோ*
*குடரும் கொழுவும் குருதியும் தோயும் குரம்பையிலே.*

**(சரீரப் பற்று நீங்க)**

| | |
|---|---|
| சுடரும் கலைமதி | பிரகாசிக்கின்ற பூரண கலையுடன் கூடிய சந்திர கலா மண்டலத்திலே |
| துன்றும் சடைமுடிக் | இருக்கும் சடைமுடியை உடைய |
| குன்றில் | சதாசிவ மூர்த்தியின் முடியில் |
| ஒன்றிப் படரும் | (பிரணவ நாதத்தைக் குறிக்கும்) கொன்றை மாலை உருவமாக படர்ந்து இருக்கும் |
| பரிமள பச்சைக் | நறுமணம் மிக்க பச்சையான |
| கொடியைப் | கொடிப் போன்ற மனோன்மணியை |
| பதித்து | பொருத்தி |
| நெஞ்சில் | மனதில் (உள்ளத்தில்) |
| இடரும் தவிர்த்து | தாபத்ரயங்களைப் போக்கி |
| இமைப்போது இருப்பார் | ஒரு நொடியாவது தியான சமாதியிலே இருப்பவர்கள் |
| பின்னும் | இனியும் |
| குடரும் கொழுவும் | குடலும், மாமிசமும் |
| குருதியும் தோயும் | இரத்தமும் பொருந்தும் |
| குரம்பையிலே | கர்ப்பப் பையை (உடம்பை) |
| எய்துவரோ | அடைவார்களா ? (மாட்டார்) |

பிரகாசிக்கின்ற பூரண கலையுடன் கூடிய சந்திர கலா மண்டலமாகிற ஸஹஸ்ராரத்தில் வசிக்கும் சதாசிவனின் முடியில் (ப்ரணவம்) கொன்றை ரூபமாகப் படரும் ஞானமணம் வீசும் பசுங்கொடியாகிய மனோன்மணியை தம்முடைய நெஞ்சில் பதித்து தியானம் செய்து அதனால் துன்பம் நீங்கி இமைக்கும் கணப்போதேனும் நிஷ்டானுபூதி நிலையில் இருப்பவர்கள் பின்னும் குடலும் சதையும் இரத்தமும் ஒருங்கே கூடிய கர்ப்பப் பையைச் சேரார். (மறுபிறவி இல்லை)

குரம்பை-என்பதற்கு கூடு, குழல் என்ற பொருள்கள் உண்டு. அதை சரீரம் என்ற பொருள் கொண்டு, வேறொரு

சரீரத்தில் புகார் என்று கூறுவர். ஆயினும் கர்ப்பத்தைக் குறிப்பதாகக் கருதுவது சிறந்த பொருள்.

சென்ற பாட்டில் யோக சாதனையைக் கூறி, இங்கு உபாஸனா மார்க்கத்தைக் கூறுகிறார் அபிராமிபட்டர்.

பிரணவம்-அம்பாள். கொன்றை மாலை பிரணவத்தின் அறிகுறி. முன்னே 11ம் பாடலில், 'மறை நான்கினுக்கும் தான் அந்தமான சரணார விந்தம் தவள நிறக் கான் அந்தம் ஆடரங்காம் எம்பிரான் முடிக் கண்ணியதே.' - என்றார்.

அதாவது தேவியின் பாதங்கள் - வேதங்களுக்கு எல்லாம் முடிவாகத் திகழுகின்றன. அத்திருவடிகள் இறைவன் தலையில் சூடும் கொன்றை மாலையாயின. அதாவது இறைவன் தன் தலையிலே தன் தலைவியைத் தாங்குகிறான்.

சென்ற பாட்டில் 'சூழும் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்றதே' என்பதை - இடா, பிங்கலா நாடிகளாகக் கொண்டு, அதில் நடுவே சுழுமுனை நாடி என்று கொண்டு, அதில் இருக்கும் குண்டலினி போல் விளங்கும் சுடர் (ஜோதி) (தடில்லதா ஸமருசி) மின்னல் போன்று பேரொளியுடன் தேவி விளங்குகிறாள்.

இதனையே, 'மலர்க்கமலை துதிக்கின்ற மின்கொடி' என்றார் முதல் பாடலில்.

சிவன்-அசலம். சக்தி-சலம். எனவே சிவனை 'குன்றாகவும், சக்தியை பரிமள பச்சைக் கொடியாகவும்' வர்ணித்திருப்பது மிகுந்த காவ்யரசனை பெற்றது. சிவனோடு ஒன்றியிருக்கும் போது அவள் உமாதேவியாகப் பச்சை வண்ணம் கொண்டவளாக விளங்குகிறாள்.

மென்மையும், தண்மையும், அன்பர்களுக்கு வேண்டியபடி வளைந்து கொடுக்கும் நெளிவும் இருப்பதால் அவளைக் கொடி என்று கூறுவர்.

பரிமளம்-என்பது ஞானந்தான்.

631. திவ்ய கந்தாட்யா -தெய்வீக மணத்தால் நிறைந்தவள். இப்பேர்ப்பட்ட அம்பிகையை, மனதில் த்யானிக்கும் போது, தீயகுணங்கள் தானாகவே ஓடிவிடும். மனம்-ஞானமயமாகிவிடும்.

357. தாபத்ரயாக்னி ஸந்தப்த ஸமாஹ்லாதன சந்த்ரிகா-மூன்று விதமான தாபங்கள் என்ற அக்னியால் நன்கு வாட்டப்படுபவர்களுக்கு மனமகிழ்வைத் தரும் நிலவைப் போன்றவள். (ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம்). இந்த மூன்று விதமான தாபங்கள் தான் ஸம்ஸாரம் என்பதின் லட்சணங்கள். இவைகளால் எரிக்கப்படும் ஜீவனை, அம்பாள் தன் கருணையாகிற நிலவினால் (அவனுடைய தாபத்தை நீக்கி) மகிழ்விக்கிறாள் என்பது கருத்து. 641. த்யான கம்யா - த்யானத்தினால் அடையக் கூடியவள்.

644. ஞான விக்ரஹா - ஞானமே வடிவானவள். 643. ஞானதா-ஞானத்தைக் கொடுப்பவள். 842. பவரோகக்னீ - ஸம்ஸாரம் என்ற நோயை அகற்றுபவள். 175. பவநாசனீ-ஸம்ஸார பந்தத்தை அழிப்பவள்.

486. ஶ்யாமாபா - பசுமை கலந்த கருப்பு நிறம் உள்ளவள். 16 வயது கன்யைக்கு 'ஶ்யாமா' என்று பெயர். 364. சிதேகரஸ ரூபிணீ - முழுவதும் ஞானமே வடிவானவள். 372. பக்த மானஸ ஹம்ஸிகா - பக்தர்களின் மனமாகிற ஏரியில் அன்னப்பறவை போல் விளங்குபவள். ஸௌந்தர்ய லஹரீ, 38-வது ஸ்லோகம், "ஸமுன் மீலத் - ஸம்வித்..." இந்தக் கருத்தினை சொல்கிறது.

747. பக்த சித்த கேகி கனாகனா - பக்தர்களின் மனம் என்ற மயிலுக்கு ஆனந்தந்தரும் மேகம் போன்றவள்.

அம்பிகையைத் தியானிப்பது எளிதான காரியம் அன்று. உடம்பினாலே பலசெயல்களை முறைப்படி செய்யலாம். உரையினாலும் திட்டமிட்டுப் பேசலாம். ஆனாலும் மனம் நாம் செய்யும் வரையறைக்குள் அடங்கி நிற்பதில்லை. காலம், காலமாகச் செய்யும் பயிற்சியினால் இந்த நிலையை அடைய வேண்டும். பொறிகளின் வாயிலாக மனம் செல்லாமல் உன்முகமாக நிற்கப் பழகினால் தியானப் பொருளைத் தெளிவாகக் காணலாம். இவ்வாறு ஒரு கணப்போது இருந்தாலும் மிக்கப் பயன் உண்டு என்பதையே அபிராமி பட்டர், 'இமைப்போதிருப்பார்' என்றார். எத்தகைய சித்திபெற்றாலும் மனத்தை அடக்கும் சித்திக்கு நிகர் இல்லை.

## 49. அபிராமியே - கூற்றுவன் வருங்கால், அபயம் அளிப்பாயாக !

*குரம்பை அடுத்துக் குடிபுக்க ஆவி வெங்கூற்றுக்கு இட்ட*
*வரம்பை அடுத்து மறுகும் அப்போது வளைக்கை அமைத்து*
*அரம்பை அடுத்த அரிவையர் சூழவந்து அஞ்சல் என்பாய்*
*நரம்பை அடுத்த இசைவடிவாய் நின்ற நாயகியே !*

(மரண அவஸ்தை இல்லாது ஒழிய)

| | |
|---|---|
| நரம்பை அடுத்த | யாழின் சுரஸ்தானங்களைப் பொருத்தி |
| இசைவடிவாய் | (அவற்றால் எழும்) நாதவடிவாய் (சிவத்தினின்று சக்தி ஸ்புரிக்கும் போது உண்டாகும் நாதம்) |
| நின்ற | அமைந்த |
| நாயகியே ! | யாவற்றிற்கும் தலைவியாகிய அபிராமியே ! |
| குரம்பை அடுத்து | உடலாகின்ற கூட்டை அடைந்து |
| குடிபுக்க ஆவி | இந்திரியங்களோடு ஒண்டுக்குடி புகுந்த என் உயிர், |
| வெங்கூற்றுக்கு | கொடிய யமனுக்கு, |
| இட்ட வரம்பை | விதித்த காலவரையை |
| அடுத்து | அடைந்து (என்னை நோக்கி வரும் போது) |
| மறுகும் | சுழன்று தவிக்கும். |
| அப்போது | அந்த சமயத்தில் |
| வளைக்கை அமைத்து | (உன்) வளையல்கள் அணிந்த கையை அபய முத்திரையாகக் கொண்டு, |
| அரம்பை அடுத்த | ரம்பை முதலிய |
| அரிவையர் சூழ | பரிவாரங்களோடு |
| வந்து அஞ்சல் என்பாய் | என் முன்னே வந்து 'பயப்படாதே' என்று சொல்லி, அபயமளிக்க வேண்டும். |

யாழின் சுரஸ்தானங்களைப் பொருத்தி அவற்றால் எழும் இசையின் வடிவாக நின்ற அன்னை அபிராமியே ! இந்த உடலாகின்ற கூட்டை அடைந்து சில காலம் இருப்பதற்கு குடியாகப் புகுந்த எளியேன் உயிர், கொடுமையான யமனுக்கு, விதியால் வகுக்கப்பட்ட கால எல்லையை அணுகி வருந்தும், (தவிக்கும்). அந்த சமயத்தில், அரம்பையும் அவளோடு அடுத்துவரும் பிற தெய்வப் பெண்களும் உன்னைச் சூழ்ந்து வர, நீ எழுந்து அருளி வந்து, 'நீ அஞ்சாதே' - என்று கூறி, உன் வளையணிந்த கையை அபயமுத்திரையாக அமைத்துக்கொண்டு,

(என்முன் தோன்றி) அபயம் அளிக்க வேண்டும்.

464. காலகண்டீ - நீல நிறத்தை உடைய கழுத்தை உடைய சிவபெருமான் மனைவி. மதுரமான, மென்மையாக 'த்வனி' அவள் தொண்டையிலிருந்து எழும்புவதால் காலகண்டீ. 27. நிஜ சல்லாப மாதுர்ய விநிர்பர்த்ஸிதகச்சபீ - தன்னுடைய பேச்சின் (குரலின்) இனிமையினால் கச்சபீ எனப்படும் ஸரஸ்வதி தேவியின் வீணையையும் வென்றவள். ஆதிசங்கரரும் தன்னுடைய ஸௌந்தர்ய லஹரியில் (66 ஸ்லோகம்) சொல்லுகிறார். (முன்னும் பார்த்தோம்.) 299. நாதரூபா - சப்த வடிவானவள். 901. நாதரூபிணீ - நாத ரூபமாக இருப்பவள்.

சக்தியின் தோற்றத்தின்போது சிவத்தில் ஏற்படும் அசைவினால் ஏற்படுவது நாதம். இதுவே பிரணவம். பிரணவத்தின் சிரோபாகத்துக்கு நாதம் என்ற பெயருண்டு. இதுவே சக்தி ஸ்வரூபம். சிரோபாகம் என்பது 'ஓ' என்ற அட்சரத்தின் மேல்பாகமாகிற வளைந்த கோடு. வீணையின் நரம்பை அசைத்தவுடன் நாதம் உண்டாவது போல, சிவத்தில் துடிப்பு ஏற்பட்டவுடன் நாதம் எழுகிறது. 741. ரம்பாதி வந்திதா - ரம்பை, ஊர்வசி முதலிய அப்ஸரஸ் ஸ்த்ரீகளால் வணங்கப்பட்டவள். வளைக்கை என்பதை வலக்கை என்று கொண்டு அபயமுத்திரை காட்டும் கை என்றும் சொல்லலாம்.

செல்வந்தர்கள் பணத்தை சேர்த்துக் கொண்டு இருந்தாலும், 'இன்னும் பணம் வேண்டும்' என்று எண்ணுவது போல, அருளாளர்கள் 'இறைவன் காப்பாற்றுவான்' என்ற உறுதியுடன் இருந்தாலும், மீண்டும், மீண்டும் அன்னையிடம் பிரார்த்திப்பார்கள்.

'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை' - திருக்குறள்.

'யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக்கடவேன்' - மாணிக்க வாசகர்.

'ஓண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய், ஒக்க அடைக்கும் போது உணரமாட்டேன் புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன், பூம்புகலூர் மேவிய புண்ணியனே' - அப்பர்.

சென்ற பாட்டில் அம்பிகை பிறவிப் பிணியினின்றும்

அன்பர்களைக் காப்பாள் என்று சொன்னவர் இந்தப் பாட்டில் மரணத் துன்பத்தினின்றும் காப்பாள் என்ற எண்ணத்தை நமக்குத் தருகிறார்.

749. ம்ருத்யுதாரு குடாரிகா - மரணம் என்ற மரத்தை வெட்டும் கோடாலியாகத் திகழ்பவள். ம்ருத்யு - மரணம்.

மனிதன் பிறக்கும்போதே மரணம் நிச்சயப்படுத்தப்படுகிறது. காலம் செல்லச் செல்ல மரணம் நெருங்கிக் கொண்டே இருக்கிறது. எப்போது மரணம் நேரிடுமோ என்ற 'மரண பயம்' அதிகரிக்கிறது. இதன் காரணம் - மரணத்திற்குப் பின் நம் கதி என்ன ஆகும் என்று அறியாதது தான். ஆனால், 'நான் அம்பாளை உபாஸிக்கிறேன். என் பாபங்கள் நசித்து விட்டன. முக்தி கிடைக்காமல் மறுபிறவி எடுத்தாலும் அதில் புண்ய கர்மாக்களின் பலனையே அனுபவிப் பேன்' என்ற மனப்பான்மை இருந்தால் மரண பயம் ஏற்படாது.

சங்கீதத்தின் அதிஷ்டான தேவதையான சங்கீத சியாமளை அம்பிகையின் அம்சமே. ('பண் களிக்கும் குரல் வீணையும்...' 'பண் அளிக்கும் சொல் பரிமள யாமளைப் பைங்கிளியே')

மஹா சதுஷ்ஷஷ்டி கோடி யோகினீ கண ஸேவிதா - 64 கோடி யோகினீ கணங்களால் ஸேவிக்கப்பட்டவள். இவர்கள் என்றும் 25-வயதுடைய பெண்கள்.

இந்தப் பாடல் மூலம் நமக்கு, அபிராமி பட்டர், சொல்வது :- இப்பிறவி எடுத்ததின் பலன் இனி பிறவாமல் இருக்க. (இதையே முன்னும் 'பிறப்பறுக்க', 'பிணிக்கு மருந்தே' என்று அழகாகச் சொன்னார்.) இதற்குரிய முயற்சியில் இடைவிடாது ஈடுபட வேண்டும். இனி பிறவாமல் இருக்க அருள வேண்டும். இறக்கும்போது துணை நிற்க வேண்டும் என்று அன்னை அபிராமியிடம் வேண்டிக்கொண்டே இருக்க வேண்டும்.

## 50. அன்னை அபிராமியின் சில திருநாமங்கள்

*நாயகி, நான்முகி, நாராயணி, கைநளின பஞ்ச*
*சாயகி, சாம்பவி, சங்கரி, சாமளை, சாதி நச்சு*
*வாய் அகிமாலினி, வாராகி, சூலினி, மாதங்கி என்று*
*ஆயகியாதி உடையாள் சரணம் அரண் நமக்கே.*

**(அம்பிகையை நேரில் தரிசிக்க)**

| | |
|---|---|
| நாயகி | எல்லாவற்றுக்கும் தலைவி |
| நான்முகி | நான்கு முகங்களை உடையவள் |
| நாராயணி | நாராயணீ. (தேவியே விஷ்ணு என்ற புருஷ வடிவத்தில் தோன்றினாள்) |
| கை நளின பஞ்ச சாயகி | (தனது வலது) திருக்கரத்தில் தாமரை முதலிய ஐந்து மலர் அம்புகளை தரித்தவள் |
| சாம்பவி | சம்புவின் மனைவி, |
| சங்கரி | சுகத்தை (ஹிதம்) செய்பவள் |
| சாமளை | கருமை படர்ந்த பச்சை நிறத்தையுடைய ச்யாமளா |
| சாதி நச்சு வாய் அகி | விஷத்தை வாயிலே உடைய |
| மாலினி | நல்ல பாம்பை மாலையாக தரித்தவள் |
| வாராகி | பன்றி முகம் உடையவள் (விஷ்ணு. வராக அவதாரம் எடுத்தார்) சக்தி, சிவன், விஷ்ணு - ஒன்றே. (அபேதம்) |
| சூலினி | சூலத்தை உடையவள் |
| மாதங்கி | மதங்க முனிவரின் புதல்வி (இசை பாடும் மதங்கர் குலத்துப் பெண்ணாகவும் கொள்ளலாம்) |
| என்று ஆய | இவ்வாறாகிய |
| கியாதி உடையாள் | கீர்த்தியை உடையவளாகிய |
| சரணம் | அபிராமியின் பாத கமலங்கள் |
| அரண் நமக்கே | நமக்கு பாதுகாப்பாகும். |

எல்லோருக்கும், எல்லாவற்றிற்கும் தலைவி, நான்கு முகங்களையுடையவள், நாராயணீ, கையில் ஐந்து புஷ்ப பாணங்களை (தாமரை, மாம்பூ, அசோகம், முல்லை, நீலோத்பலம்) உடையவள். சம்புவின் மனைவி, சங்கரி, சாமளை, நஞ்சை வாயிலே கொண்ட நல்ல பாம்பை மாலையாக உடையவள், வாராகி, சூலினி, மாதங்கி என்று இவ்வாறு பல உருவங்களும், பெயர்களுமுடைய, கீர்த்தியுடைய அபிராமி அன்னையின் திருவடிகள் நமக்கு பாதுகாப்பாகும்.

முன்னும் காப்பு செய்யுளில் 'சீர் அபிராமி அந்தாதி' என்றார்.

(க்யாதி - கீர்த்தி, புகழ். சரணம் - திருவடி, அரண் - பாதுகாப்பு.)

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தில்

849. உத்தாம வைபவா - கட்டுக்கடங்காத பெருமை உள்ளவள். 848. உதாரகீர்த்தி - பெரும் புகழுள்ளவள்.

அன்னை தன் சேயை பல பெயர்கள் சொல்லிக் கொஞ்சுவாள். (இன்பம் அடைவாள்) அதுபோல, சேயான அபிராமி பட்டர் தன் தாயாரான அபிராமி அன்னையை பல நாமாக்களில் துதி பாடி எல்லையற்ற இன்ப அனுபவத்தில் அமைந்த பாடல் இது. இவ்வாறு அமைந்த திருநாமங்கள் யாவும் பக்தர்கள் பல காலம் சொல்லிச் சொல்லி இன்புறுவதற்காக உருவாகியது. அருளாளர்களின் அரிய பண்பு இது.

இறைவியின் திருநாமங்கள் எண்ணிலடங்கா. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம், லலிதாத்ரிசதீ, லலிதா அஷ்டோத்திரம் என்பவை அன்னையின் திருநாமங்களின் வரிசைகளே.

அபிராமிபட்டர் ஒரு சிறந்த தேவி உபாஸகர். ஸ்ரீவித்யா உபாஸகர். தினமும் தவறாது ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் பாராயணம் செய்தவர். தேவியை அன்னை அபிராமி வடிவமாகவே எண்ணி, அவளுடன் ஐக்கியமானவர். சிறந்த அநுபூதிமான். உயர்ந்த ஞானி. அபிராமி அந்தாதியில் ஸ்ரீஸஹஸ்ரநாமத்தில் உள்ள பல திருநாமங்களை இணைத்திருக்கிறார். இந்தப் பாடலில் சிலவற்றைச் சொல்லி இன்புறுகிறார். அந்தத் திருநாமங்கள் அன்னையின் இயல்புகளை அழகாகப் புலப்படுத்தும் தொடர்களே.

1. நாயகி : எல்லா உலகங்களுக்கும், பொருட்களுக்கும், தொழில்களுக்கும், உயிர்களுக்கும் தலைவி. மேலான பெருமாட்டி.

199. ஸர்வ ஶக்திமயீ - எல்லா சக்திகளையும் உடையவள். ஸர்வ என்றால் 'அளவிடமுடியாத' என்று பொருள்.

202. ஸர்வேச்வரீ - எல்லாவற்றிற்கும் ஈச்வரீ. எல்லோரையும் நற்கதிக்கு அழைத்துச் செல்பவள் என்பதால் ஸர்வேச்வரீ.

369. பரதேவதா - சிறந்த தேவதையாக இருப்பவள். எல்லோரும் உபாஸிக்க வேண்டிய ஈஸ்வர ஸ்வரூபமாக இருக்கிறாள் என்று பொருள்.

463. ஸீரநாயிகா - தேவர்களுக்குத் தலைவி, ஈஸ்வரீ.

2. நான்முகீ : நான்கு திருமுகங்களோடு அழகாக இருப்பவள்.

505. சதுர்வக்த்ர மனோஹரா - ஸ்வாதிஷ்டானம் அக்னியின் (ஜலத்தின்) இருப்பிடம். ஆகையால் ஆகாயம் முதல் ஜலம் வரையிலுள்ள நான்கு பூத தத்துவங்களை நான்கு முகங்களால் விளக்குகிறார். பொன்னிறத்தில் 'காகினி' என்னும் திருநாமா. (ஒப்பம். "க்ஷிதௌ ஷட்பஞ்சாசத்..." ஸௌ.ல. 14)

264. ஸ்ருஷ்டிகர்த்ரீ - ஸ்ருஷ்டியைச் செய்பவள்.

265. ப்ரஹ்மரூபா - ப்ரஹ்மாவின் வடிவமாயிருப்பவள். படைக்கும் தொழிலைச் செய்யும் ப்ரஹ்மா பரம்பொருளின் வடிவான தேவியின் மாயையினால் வேறுபடுத்திக் காட்டப்பட்ட உருவம்.

3. நாராயணீ (298) - 'நர' என்ற சொல் ப்ரஹ்மத்தைக் குறிப்பது. நாரம் -ஜலம். நாரத்தைத் தன் அயனமாகக் கொண்டவன் - நாராயணன். அவன் சகோதரி - நாராயணீ. சிவனது இடப்பாகத்தில் நாராயணனும் இருப்பதால் 'சங்கர நாராயணன்'. சிவன் - சக்தி விஷ்ணு அதே ரூபம் - அபேதம். ஆகையினால் 'நாராயணன்' என்ற நாமா 'சிவனைக்' குறிக்கும். நரன் - ஜீவன். ஜீவன் முடிவாகப் போய் அடையும் இடம் 'அயனம்'. எனவே நாராயணன் என்றால் சிவனையும் குறிக்கும். அமிர்தத்தை அளிக்க அன்னை மோஹினியாக வடிவெடுத்தது, விஷ்ணுவும் தன் ரூபமே என்பதால் ஆகும். (அயனம் - இருப்பிடம்) ஸுபார்ச்வம் என்னும் க்ஷேத்திரத்தில், தேவிக்கு 'நாராயணீ' என்று பெயர். (பத்மபுராணம்)

4. கைநளின பஞ்ச சாயகி : 11. பஞ்ச தன்மாத்ரஸாயகா. - ஐந்து தன்மாத்ரைகளைப் பாணங்களாக உடையவள். ஸ்தூல ரூபத்தில் அம்பாள் தன் வலது மேல் கையில் ஐந்து விதமான புஷ்பங்களை (தாமரை,செங்கழுநீர், செவ்வல்லி, செவ்வாம்பல், மாம்பூ) அம்புகளாக கொண்டிருக்கிறாள். இவற்றின் குணங்கள் முறையே மகிழ்விப்பது. சுவையூட்டுவது, மயக்குவது, வற்றவைப்பது, மாய்ப்பது. இந்த அம்புகளுக்கு அதிஷ்டான தேவதை-தண்டநாதா என்கிற வாராஹீ.

5. சாம்பவீ - 122. ஶாம்பவீ-சம்புவின் பத்தினி. பக்தர்களுக்கு சுகத்தைத் தருபவர் சம்பூ என்று விஷ்ணுஸஹஸ்ரநாமம், 38-வது நாமாவிற்கு ஸ்ரீ ஆச்சார்யாள் விளக்கம் தருகிறார். சிவபக்தர்களின்

(சாம்பவர்களின்) தாய். நவராத்திரியின் போது, எட்டு வயது பெண்குழந்தையை, 'சாம்பவீ' என்று பெயரிட்டு பூஜை செய்வார்கள். பலன் - ராஜவஸ்யம், துக்க, தாரித்ரிய நாசனம், யுத்தத்தில் வெற்றி.

954. சம்பு மோஹினீ-பரமசிவனை மோஹமடையச் செய்பவள்.

6. சங்கரி-ஶாங்கரீ (126)-சங்கருடைய பத்னீ. ஶம் (சுகம்) ; இதைச் செய்பவர் சங்கரர். அல்லது ஶம் (மங்களம்). இதைக் கையில் கொண்டவர் சங்கரர். அவருடைய சக்திவடிவானவள். ஶாங்கரீ. அன்பர்களுக்கு அருள் தந்து இன்பத்தை உண்டாக்கு பவளாதலின் எம்பெருமாட்டிக்கு இந்தத் திருநாமம் வந்தது.

7. சாமளை -ஶ்யாமாபா (486). பசுமை கலந்த கருப்பு நிறம் உள்ளவள். மேகம் முதலியவற்றில் காணப்படும் கருப்பு நிறம். 16-வயது கன்யைக்கு ஶ்யாமா என்று பெயர். காளிதாஸன் இயற்றிய 'ச்யாமளா தண்டகம்' என்ற நூல் ஒன்று உண்டு. லலிதோபாக்யானத்தில் ஸர்வசம்பத்தையும் விரும்புகின்றவர்கள் அம்பாளை சியாமளையாக தியானம் செய்யவேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது. 'சியாமளா ரூபம்'-அதிக மகிமையுடையதாகக் கருதப்படுகின்றது. சியாமளா தேவிக்கு என்றே தனியான தந்திர சாஸ்திரம் இருக்கின்றது.

கல்வி, கலைகளில் சிறந்து விளங்க நாம் ச்யாமளா தேவியின் ஸ்தோத்திர பாராயணம் செய்து பலன் பெறலாம்.

8. சாதி நச்சு வாய் அகி மாலினி :- சிவனைப் போல, 'அன்னையும்' நாகப்பாம்புகளை மாலையாக (ஆபரணமாய்) தரித்திருக்கிறாள்.

'சோதி படல சூடி காகோடி பணிமதாணி மார்பாளே'-ஒட்டக்கூத்தர்

'நாகபூஷணத்தி அண்டம் உண்ட நாரணி' - (திருப்புகழ்) - அருணகிரிநாதர்.

இலங்கையிலுள்ள நயினா தீவில் எழுந்தருளியிருக்கும் அன்னைக்கு 'நாகபூஷணி' என்ற திருநாமம்.

455. மாலினீ - மாலையை அணிந்திருப்பவள். வடமொழியின் 51 அட்சரங்களின் தேவதை மாலினீ. ஆம்னாய

பூஜையிலும் 'மாலினீ மந்த்ர ராஜம்' என்ற பெயருள்ள மந்த்ரத்தால் பூஜை செய்யப்படுகிறது. ஏழு வயது கன்யை.

9. வாராகி : 76. விசுக்ர ப்ராணஹரண வாராஹீ வீர்ய நந்திதா

விசுக்ரன் (பண்டனின் சேனைத் தலைவன்) என்ற அசுரனின் வதத்தை தேவியின் சேனைத் தலைவியான வராஹீ செய்ததைக்கண்டு தேவி மகிழ்ச்சியடைந்தாள். வி-விரோதமான, சுக்ரம்-ஒளி,வலிமை. ஆத்ம சக்திக்கெதிராகத் தன் சக்தியைப் பயன்படுத்துபவன். விசுக்ரன். அல்லது வி-மிகுந்த சுக்-சோகத்தை ர-கொணர்பவன். க்ரியாசக்தி - வாராஹீ.

விஷ்ணு சக்தி வகையில் ஒன்றாக நிற்பவள் வராகி. பராசக்தி வராகனந்த நாதர் என்பவருக்கு வராகத் திருமுகத்துடன் தரிசனம் தந்தமையின் வராகி என்னும் பெயர் பெற்றாள்.

திரிபுரா சித்தாந்தம் வராகியை முப்பத்திரண்டு செய்யுட்களால் துதிக்கும் 'வராகி மாலை' - என்னும் நூல் ஒன்று தமிழில் உண்டு. சப்த மாதாக்களுக்குள் வராகத் திருமுகத்துடன் உள்ள வராகி என்னும் சக்தியும் உண்டு. துர்கா தேவியைத் துதிப்போர்கள் முதலில் வராகியைத் தொழுது பின் துர்கா தேவியைத் தொழவேண்டும் என்றும் சொல்வர்.

10. சூலினி : சூலாத்யாயுத ஸம்பன்னா (506) - சூலம், பாசம், கபாலம், அங்குசம் - ஆகிய ஆயுதங்களை உடையவள். சிவபெருமானைப் போல அம்பிகையும் முத்தலைச் சூலத்தை ஏந்தியிருக்கிறாள்.

11. மாதாங்கி : மதங்க முனிவரின் குமாரி என்பது ஒரு பொருள். இசைபாடும் மதங்கர் குலத்துப் பெண்ணாகத் தோன்றியதால்-மாதங்கி. 'மதங்கர் குலப்பெண்களில் தோன்றிய எம்பெருமாட்டி' (70) என்று அபிராமிபட்டர் பாடுகிறார்.

'மாதாங்கி வேதஞ்சொல் பேதை நெடு நீலி' - என்பது திருப்புகழ்.

மேற்கூறிய அன்னையின் திருநாமங்கள் அன்னை அபிராமியின் கீர்த்தி, சிறப்பு, புகழ்-இவற்றைப் புலப்படுத்துகிறது. இத்தகைய திருநாமங்களால் கியாதி உடையாள் 'திருவடிகள்' நமக்கு எல்லாவிதமான துன்பங்களையும், அச்சங்களையும் போக்கிப் பாதுகாக்கும் அரணாக அமைந்துள்ளது என்று கூறி அழகாக நிறைவு பெறச் செய்கிறார் அபிராமிபட்டர்.

## 51. அபிராமி அடியார்களுக்கு இறப்பும், பிறப்பும் இல்லை.

*அரணம் பொருள் என்று அருள் ஒன்று இலாத அசுரர் தங்கள்*
*முரண் அன்று அழிய முனிந்த பெம்மானும் முகுந்தனுமே*
*சரணம் சரணம் எனநின்ற நாயகி தன் அடியார்*
*மரணம் பிறவி இரண்டும் எய்தார் இந்த வையகத்தே.*

**(மோகம் நீங்க)**

| | |
|---|---|
| அரண் நம் பொருள் என்று (அரணம்) | (பொன், வெள்ளி, இரும்பாலாகிய) கோட்டைகளே நமது உறுதியான செல்வம் என்று மதித்திருந்த |
| அருள் ஒன்று இல்லாத அசுரர் தங்கள் | இரக்கமே இல்லாத வித்யுன்மாலி, கமலாட்சன், தாரகாட்சன் என்ற மூன்று அசுரருடைய |
| முரண் அன்று அழிய | வலிமையானது அன்று ஒரு நாள் எரிந்து போகும்படி |
| முனிந்த பெம்மானும் | கோபத்தால் சிரித்த சிவபெருமானும் |
| முகுந்தனுமே | திருமாலுமே |
| சரணம் சரணம் என | தஞ்சம், தஞ்சம் என்று |
| நின்ற | அடைக்கலம் புகும்படி எழுந்தருளிய, |
| நாயகி தன் அடியார் | தலைவியாகிய அபிராமி அன்னையின் அடியார்கள் |
| மரணம் பிறவி | இறப்பு, பிறப்பு |
| இரண்டும் | என்னும் இரண்டையும் |
| இந்த வையகத்தே | இவ்வுலகத்தில் |
| எய்தார் | அடைய மாட்டார்கள். |

திரிபுர மதில்களே உண்மையான செல்வம் என்று எண்ணி இரக்கம் சிறிதும் இல்லாத வித்யுன்மாலி, கமலாட்சன், தாரகாட்சன் என்ற மூன்று அசுரர்களுடைய வலிமையும் அன்று ஒருநாள் அழிந்து போகும்படி கோபித்தவனாகிய சிவபெருமானும், திருமாலும் 'நின் திருவடியே எமக்குப் புகல்' என்று கூற, அவர்களுக்கு அருள் புரிந்து கொண்டு நிலையாக எழுந்தருளி யிருக்கும் தலைவியாகிய அபிராமியின் அடியார்கள் இறப்பு, பிறப்பு என்னும் இரண்டையும் இவ்வுலகத்தில் அடையார்கள்.

அம்பிகையைத் திருமாலும், சிவபிரானும் வழிபடுவதை அபிராமிபட்டர் பல பாடல்களில் (14, 25, 56, 60, 74, 92, 97) சொல்லுகிறார்.

அன்னையின் திருவருளால் பிறப்பும், இறப்பும் நீங்கும் என்னும் கருத்தை ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் பல நாமாக்களில் உணர்த்துகிறது. பவாரண்ய குடாரிகா (114), பவநாசினி (175) பவரோகக்னீ (842) ம்ருத்யுமதனி (181), ம்ருத்யுதாரு குடாரிகா (749).

பொன், வெள்ளி, இரும்பு என்னும் மூன்று மதில்களை (கோட்டைகளை) தனித்தனியே உடையவை திரிபுரங்கள். அவற்றுக்குத் தலைவர்களாக இருந்தவர்கள் வித்யுன்மாலி, கமலாட்சன், தாரகாட்சன் என்ற மூன்று அசுரர்கள். மூன்று புரங்களும் வானில் பறக்கும் தன்மையுடையவை. அவற்றைப் பறக்கச்செய்து, திடீரென்று பூமியில் இறங்கச் செய்வர். அவற்றின் கீழ் அகப்பட்டு பல மக்கள் நசுங்கி மடிவார்கள். பிறர் துன்புறுவதைக் கண்டு இன்புறுவது அசுரர் இயல்பு. இவ்வளவு பேர் துன்புற்று இறக்கிறார்களே என்று உள்ளத்தில் இரக்கமும் இல்லை. நெஞ்சில் ஈரமும் இல்லை. அந்த மதில்களே தங்கள் பெருஞ் சொத்தாக எண்ணி இறுமாந்து வாழ்ந்தார்கள்.

கம்பர், இவர்களை, 'இரக்கம் என்றொரு பொருள் இலாத நெஞ்சினர் அரக்கர்' என்பர். மேற்சொன்ன மூன்று அசுரர்களுடைய வலிமையும் அழிந்து போகும்படி சிவன் கோபித்தான். இந்த அசுரர்களை, சிவபெருமான் அடக்க எண்ணி, தன் புன்னகை யாலேயே, அவர்களுடைய வலிமையை, அதாவது முப்புரங்களை எரித்தான். அவர்களை அழிக்கவில்லை. ஏனென்றால் அவர்கள் தங்கள் செயலுக்காக வருந்தி மனம் திருந்தினார்கள். அவர்களைத் தன் பணியாளர்களாக நியமித்தான்.

திரிபுரங்களை அழித்ததினால், 'திரிபுராந்தகன்' என்ற பெயர் அமைந்தது. (சீதைக்குத் தன் கல்யாணப் பரிசாக, தன் புன்னகையைத் தந்தான் 'சிவன்' என்றும், அந்தப்புன்னகை, இராவணனை தன்னிடம் நெருங்க முடியாதபடி கனலாக மாறி சீதைக்கு உதவியது என்றும் கூறுவர்)

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - சிவாராத்யா (406) - சிவபெருமானால் வழிபடப்பெறுபவள் அம்பிகை. (ப்ரம்மாண்ட புராணம்) இவளை தியானித்தும் யோக பலத்தினாலும்,

எல்லாஸித்திகளுக்கும் ஈஸ்வரனாகவும்,அர்த்த நாரீஸ்வரராகவும் ஆனார்.

297. ஹரிப்ரஹ்மேந்த்ர ஸேவிதா : விஷ்ணு, ப்ரம்மா, இந்திரன் முதலியவர்களால் வணங்கப்பட்டவள்.

இவ்வாறு எல்லாக் கடவுளரும், தேவர்களும் அன்னையையே அவள் திருவடியில் பணிந்து, அவளை அடைக்கலம் அடைகின்றனர். அது போலவே இந்த மண்ணில் பிறந்த அடியார்களும் (முன் செய்த புண்ணியத்தினால்) அன்னையிடம் சரணம் என்று அடைக்கலம் புகுகிறார்கள். ஏன் ? எதற்காக ? மக்களுக்கு உண்டாகும் பிறப்பு, இறப்பு என்னும் பிணியிலிருந்து விடுபடுவதற்கே. இது அன்னை அபிராமியின் அருளால் தான் முடியும்.

851. ஜன்ம-ம்ருத்யு-ஜரா-தப்த-ஜன-விஶ்ராந்தி- தாயினீ- பிறப்பு, இறப்பு, மூப்பு இவைகளால் நன்கு கஷ்டப்பட்ட ஜனங்களுக்கு இந்த துக்கங்களைக் களையும், ஓய்வுகளையும் தெளிவான ஆத்ம ஸுகத்தையும் தருகிறவள். மரணத்திற்குப் பின் அடுத்த பிறப்பு வரையில் உள்ள காலம் ஒரு விதமான தற்காலிக ஓய்வு. மறுப்பிறப்பில்லாமல் முக்தி அடைவது நிரந்தரமான ஓய்வு. இரண்டையும் தருபவள் அன்னை அபிராமி.

அன்னை அபிராமியின் அடியார்கள் 'மரணம் பிறவி இரண்டும் எய்தார் இந்த வையகத்தே' என்று அபிராமிபட்டர் சொல்வது- அடியார்கள் என்றும் பொன்றாத (நிலையான) முத்தியை அடைவார்கள் என்பதே.

## 52. அபிராமி அடியார்களின் அடையாளங்கள்.

*வையம் துரகம் மதகரி மாமகுடம் சிவிகை*
*பெய்யும் கனகம் பெருவிலை ஆரம் பிறைமுடித்த*
*ஐயன் திருமனையாள் அடித்தாமரைக்கு அன்புமுன்பு*
*செய்யும் தவம் உடையார்க்குளவாகிய சின்னங்களே.*

**(இம்மையில் பெருஞ்செல்வம் உண்டாக)**

| | |
|---|---|
| வையம் | தேர் |
| துரகம் | குதிரை |
| மதகரி | மதமுடைய யானை |
| மாமகுடம் | சிறந்த கிரீடம் |
| சிவிகை | பல்லக்கு |
| பெய்யும் கனகம் | பொழியும் தங்கம் முதலிய செல்வம் |
| பெருவிலை ஆரம் | விலையுயர்ந்த ஆரங்கள் அனைத்தும் |
| பிறை முடித்த ஐயன் | பிறையைத் திருமுடியில் சூடிய சிவபெருமானின் |
| திருமனையாள் | திரு உடைய அழகுமிக்க பத்தினியாகிய அபிராமியின் |
| அடித்தாமரைக்கு | திருவடித்தாமரைக்கு |
| முன்பு அன்பு செய்யும் | முற்பிறவிகளில் அன்புகொண்டு வழிபாடு செய்த |
| தவமுடையார்க்கு | தவமுடைய அடியார்களுக்கு |
| உளவாகிய | உண்டாகிய |
| சின்னங்களே | அடையாளங்களாம் |

சந்திரனை தலையில் தரித்த பரமசிவனின் மனைவியாகிய அபிராமி அன்னையின் திருவடித் தாமரைகளை முற்பிறவியில் அன்புடன் வழிபட்ட அடியார்கள் யாரெனின் இந்தப் பிறவியில் தேரும், குதிரையும், யானையும், மகுடமும், பல்லக்கும், பெருகும் செல்வமும், விலையுயர்ந்த ஆபரணங்களும் உடையவர்களாக இருப்பவர்களாகும்.

இந்த அடையாளங்கள் உடையவர்கள் மன்னர்கள். ஆகவே மன்னர்களாகப் பிறப்பார்கள் என்பது கருத்து. மறுமையில் வீடு பெறுவதோடன்றி இம்மையில் வளவாழ்வு பெறும் நிலையும் அம்பிகையின் அடியார்களுக்குக் கிடைக்கும்.

அதாவது முன் ஜன்மத்தில் காமியமாக வழிபட்டவர்கள்

அடையும் இகலோக நன்மைகள். திருக்குறளிலும்,

'இலர் பலர் ஆகிய காரணம் நோற்பார்

சிலர்பலர் நோலாதவர்.'- என்று சொல்லப்படுகிறது.

வசதியான வாழ்வு இல்லாத வறியவர்கள் உலகத்தில் பலராக இருப்பதற்குரிய காரணம், தவம் செய்பவர்கள் சிலர் ; தவம் செய்யாதவர்கள் பலர் என்பது அதன் பொருள். நோற்பார் - என்பது தவம் செய்பவரைக் குறிக்கும். தவம் என்பது காட்டுக்குப் போவதல்ல. 'இறைவனிடம் பக்தி கொண்டு நன்னெறியில் நிற்பதும் ஒருவகைத் தவமே' என்று காஞ்சி பரமாச்சாரியார் அடிக்கடி சொல்வர்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்.

685. ராஜ்யதாயினீ - ராஜ்யத்தைக் கொடுப்பவள்.

ராஜ்யம் என்பதால் ஸ்வராஜ்யம் (மோக்ஷம்) வைகுண்டம், கைலாஸம் முதலியவை குறிப்பிடப்படும். அவற்றைக் கொடுப்பவள். பல்வேறு திக்பாலர்கள் ஆகியோரின் பதவிகளை அளிப்பவள் தேவீ. ராஜ்யம் என்னும் பதம் மூன்று வகைப்படும்.

வைராஜ்யம் - ஸ்தூலமாகத் தோன்றும் பொருள்களின் ஸமஷ்டியான அரசு. ஸமஷ்டி ஸூக்ஷ்ம ரூபம் 'ஸ்வராட்' - இதன் அரசு. ஸாம்ராட் - ஸ்தூலம், ஸூக்ஷமம் என்ற பேதம் உண்டாகும் முன் அதற்குக் கராணமானது அவ்யக்தம். இம்மூன்று அரசுகளையும் அருள்பவள்.

692. ஸாம்ராஜ்யதாயினீ - பக்தர்களுக்கு ஸாம்ராஜ்யத்தைக் கொடுப்பவள்.

ராஜசூய யாகம் செய்தவனுக்கும், மன்னர் மன்னர்களாகிய சக்கரவர்த்திக்கும் 'ஸாம்ராட்' என்ற பெயர். ஸாம்ராட்டின் பதவியே ஸாம்ராஜ்யம். இதை அம்பிகை தன் பக்தர்களுக்குத் தருவதால் 'ஸாம்ராஜ்யதாயினி' என்ற திருநாமம் அமைந்துள்ளது.

சுந்தரமூர்த்தி சுவாமிகள், தவத்தைப் பற்றி சொல்லுங்கால்,

'மற்றுப் பற்றெனக்கின்றி நின்திருப்

பாதமே மனம் பாவித்தேன்' - என்று பாடுகிறார்.

எந்தவிதமான பற்றும் இல்லாமல் இறைவனுடைய திருவடியே பற்றாகப்பற்றிக் கொண்டேன். - என்று சொல்லுகிறார்.

அவ்வண்ணமே, உலகியல் இன்பங்களை நாடாமல் (மன்னன் சரபோஜியிடம் மான்யங்களை மறுத்தவர்) அம்பிகையின் திருவடித் தாமரையையே, பற்றாகப் பற்றி வாழ்ந்தவர் அபிராமிபட்டர். அவ்வாறு அவர் பற்றிய பற்றே தவம். அன்னை அபிராமியின் திருவடிகளில் நான் உண்மையிலேயே பித்தனாகி விட்டவன் தான் என்றார் அல்லவா !

"பற்றுக பற்றற்றான் பற்றினை ; அப்பற்றை

பற்றுக பற்று விடற்கு - திருக்குறள் (350)

பற்றில்லாத இறைவனுடைய பற்றை மட்டும் பற்றிக்கொள்ளுதல் வேண்டும். அப்பற்றை பற்றிக் கொள்ளுதலே உலகப்பற்றை விட்டொழிக்க சிறந்த வழி.

சென்ற பாட்டில், 'மரணம், பிறவி எய்தாமல் பேரின்ப வாழ்வை அடைவார்கள் என்று சொன்னவர் ஒருகால் முத்தி கிடைக்காவிட்டாலும் அவர்கள் மறுபடியும் பிறந்தால் சக்கரவர்த்திகளாகப் பிறப்பார்கள் என்கிறார் அபிராமி பட்டர்.

இந்தப் பாட்டில்

அன்னை அபிராமியை வழிபட்டு மூன்று கரணங்களாலும் அன்பு செய்வதும், மண்ணில் உள்ள பொருள்கள் நிலையற்றவை என்பதை உணர்ந்தும், என்றும் நிலையாக இருப்பது இறைவியின் திருவருளே என்பதை புரிந்து கொண்டும், உலகப்பற்றை விலக்கி விட்டு அன்னையின் சரணார விந்தங்களைப் பற்றிக் கொண்டவர்களே சிறந்த தவம் புரிகிறவர்கள் ஆவார்.

இவ்வாறு வாழ்ந்து காட்டியவர் 'அன்னை அபிராமியின்-அபிராமிபட்டர்'

### 53. சின்னஞ் சிறிய மருங்கினில் சாத்திய செய்யபட்டும்.

*சின்னஞ் சிறிய மருங்கினில் சாத்திய செய்யபட்டும்*
*பென்னம் பெரிய முலையும் முத்தாரமும் பிச்சிமொய்த்த*
*கன்னங்கரிய குழலும் கண்மூன்றும் கருத்தில் வைத்துத்*
*தன்னந் தனி இருப்பார்க்கு இது போலும் தவம் இல்லையே*

**(மாயை அகல)**

| | |
|---|---|
| சின்னஞ்சிறிய மருங்கினில் | மிகச் சிறிய இடையில் |
| சாத்திய செய்ய பட்டும் | அணியப்பட்ட சிவந்த பட்டாடையும் |
| பென்னம் பெரிய | மிகப்பெரிய |
| முலையும் | ஸ்தன பாரங்களும் |
| முத்து ஆரமும் | முத்து மாலையும் |
| பிச்சி மொய்த்த | பிச்சிப்பூ (ஒரு வித மல்லிகை) நெருங்கி அமைந்த |
| கன்னங்கரிய குழலும் | மிகக் கருமையான கூந்தலும் |
| கண் மூன்றும் | மூன்று கண்களையும் |
| கருத்தில் வைத்து | தம் உள்ளத்தே த்யானித்து |
| தன்னந்தனி | தனித்திருந்து |
| இருப்பார்க்கு | யோகம் செய்வோர்க்கு |
| இது போலும் | இது போன்ற பயனுடைய |
| தவமில்லையே | தவம் வேறு ஒன்றும் இல்லை. |

தேவியானவள் மிகச் சிறிய தன் திரு இடையிலே சாத்திய சிவந்த பட்டாடையும், மிகப்பெரிய நகிலையும், அங்கே அணிந்த முத்துமாலையையும் பிச்சி மலர் (ஒரு வித மல்லிகை) நெருங்கிய மிகக்கரிய கூந்தலையும், மூன்று கண்களையும் தம் உள்ளத்திலே தியானித்துத் தனித்திருந்து யோகம் செய்வோருக்கு இவ்வாறு தியானிக்கும் செயலையன்றி வேறு பயனுடைய தவம் ஒன்றும் இல்லை.

சென்ற பாட்டில், தவத்தைப் பற்றி சொன்ன அபிராமிபட்டர் இந்தப் பாடலில் த்யானத்திற்கு ஓர் உருவமும் இங்கே தருகிறார். மிக அழகாக அமைந்த பாடலிது !

ஒரு மந்திரத்தை ஜபிக்கும் முன் அந்த மந்திர தேவதையின் தியான சுலோகத்தைச் சொல்லுவது வழக்கம். அந்த சுலோகத்தில் மூர்த்தியின் வருணனை இருக்கும். அந்த வருணணையில் வரும் திருஉருவத்தை தியானித்துக் கொண்டு அந்த மந்திரத்தை ஜபிக்க

வேண்டும். அது தான் அந்த தியான சுலோகத்திற்குப் பயன். அன்னை அபிராமியின் திருக்கோல வருணனை வரும் செய்யுட்கள் தியான சுலோகங்களைப் போல உள்ளத்தில் அன்னையின் வடிவத்தைப் பதித்துக் கொள்ள துணையாக இருப்பவை. அபிராமி அந்தாதி ஒரு மந்திர நூல் அல்லவா !

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தில் அன்னையின் இடை அழகாக வர்ணிக்கப்பட்டுள்ளது. 35. லக்ஷ்யரோமலதா தாரதா ஸமுந்நேயமத்யமா : ரோமவரிசையாகிற கொடிக்கு ஆதாரமா யிருப்பதை (நேரிடையாகக் காணமுடியாததினால்) ஊஹிக்க வேண்டியிருக்கிறதான இடையை உடையவள். உத்தம ஜாதி ஸ்திரீகளுக்கு இடை மிகவும் சிறியதாக இருக்கும்.

360 தனுமத்யா-நுண்ணிய இடையுள்ளவள். காஞ்சிபுரத்தில், பிள்ளையார் பாளையம் என்ற இடத்தில் பில்வேச்வரரின் சக்தியாக தனுமத்யா என்ற பெயரோடு விளங்குகிறாள்.

847. தலோதரீ-மெல்லிய இடையை உடையவள்.

ஆதிசங்கரர், ஸௌந்தர்ய லஹரீயில் (79, 80) அன்னையின் மெல்லிய இடையை காவ்ய ரஸனையுடன் வர்ணிக்கிறார்.

37. அருணாருண கௌஸும்ப வஸ்த்ரபாஸ்வத்கடீதடீ- மிகவும் சிறந்த பட்டாடையால் ப்ரகாசிக்கும் இடையை உள்ளவள். அருண-அருண என்ற இரட்டைச் சொல் மிகவும் சிவந்த என்ற பொருள் உடையது.சூரியோதயத்திற்கு முன்தோன்றும் அவனுடைய தேரோட்டியான அருணனைப் போல் சிவந்தது. கௌஸும்ப வஸ்த்ர என்றால் சிவந்த பட்டாடை. பட்டிற்கு சிவப்பு நிறமேற்ற குசும்பாச் செடியின் சாற்றைச் சேர்ப்பர். எனவே கௌஸும்ப வஸ்திரம். இதை தேவீ தனது இடுப்பில் உடுத்தி யிருக்கிறாள். அருணா - வாக்தேவியின் பெயர் மறைமுகமாகக் கூறப்பட்டதாகத் தோன்றுகிறது.

36. ஸ்தன பாரதலன் மத்யபட்ட பந்தவளித்ரயா :- ஸ்தனங்களின் சுமையினால் முறிந்து போய்விடுமோ என்று தோன்றக்கூடிய இடுப்புக்குப் பட்டை கட்டியது போன்று அமைந்துள்ள மூன்று மடிப்புகளை உடையவள்.

திருப்புகழில், 'த்ரிபுரை செம்பட்டுக் கட்டு நுசுப்பின்திரு' - என்றும்

'பிச்சிமலர்க் கொந்தள பாரை' - என்றும் வரும்.

கூந்தலில் மலர் அணிவது கற்புடை மங்கையருக்கு அழகு. அன்னை நித்ய சுமங்கலி அல்லவா !

185. நீலசிகுரா - கருமை (நீல) நிறத்தால் அழகாகத் தோன்றும் கூந்தலை உள்ளவள். 32. ரத்னக்ரைவேய சிந்தாக லோல முக்தா பலான்விதா-முத்தாரம் அணிந்து இருப்பது. 453. த்ரிநயனா, 477. த்ரிலோசனா, 762-த்ரயம்பகா - 'கண் மூன்றும்' என்பதை குறிப்பது. அன்னையின் திருஉருவத்தை உள்ளத்திலே பதியவைத்து, த்யானிக்க வேண்டும். திருமூலரும்,

'முகத்திற் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்

அகத்திற் கண்கொண்டு பார்ப்பதே ஆனந்தம்' - என்பார்.

870. அந்தர்முக ஸமாராத்யா-உள்நோக்கு உள்ளவர்களால் நன்கு ஆராதிக்கக் கூடியவள். 595. ஹ்ருதயஸ்தா-ஹ்ருதயத்தில் இருப்பவள். (த்யானம் செய்யப்படுபவளாக) 609. தஹராகாச ரூபிணீ- மனிதனுடைய ஹ்ருதயமாகிற ஸூக்ஷ்மமான குகையில் ஆகாச வடிவமாக விளங்குபவள்.

யாருடைய கண்ணிலும் படாமல், யாரையும் கண்ணால் பார்க்காமல் தனியான இடத்தில் இருந்து, அன்னை அபிராமியின் திருவுருவத்தை உள்ளத்தே த்யானிப்பவர்களுக்கு, இதற்கு ஒப்பான தவம் வேறு இல்லை என்கிறார் அபிராமிபட்டர். தியானம் நன்கு நிறைவேறும் போது சமாதி நிலை கைகூடும். இதுவே தவத்தின் பயன். ஆகவே இந்த தியானமே பெரிய தவமாகும்.

## 54. அபிராமியின் பாத கமலங்கள் வறுமையை விரட்டும்.

*இல்லாமை சொல்லி ஒருவர் தம்பாற்சென்று இழிவுபட்டு*
*நில்லாமை நெஞ்சில் நினைகுவிரேல் நித்தம் நீடுதவம்*
*கல்லாமை கற்ற கயவர் தம்பால் ஒரு காலத்திலும்*
*செல்லாமை வைத்த திரிபுரை பாதங்கள் சேர்மின்களே.*

**(கடன் தொல்லைகள் தீர)**

| | |
|---|---|
| ஒருவர் தம்பாற் சென்று | செல்வர் ஒருவரிடம் போய் |
| இல்லாமை சொல்லி | தன்னுடைய வறுமையைக் கூறி |
| இழிவுபட்டு | மானம் அழிந்து |
| நில்லாமை | நில்லாது இருத்தலை |
| நெஞ்சில் நினைகுவிரேல் | உள்ளத்தில் கருதுவீர்களானால், |
| நித்தம் | நாள்தோறும் |
| நீடுதவம் | உயர்ந்த தவத்தை (செய்வதை) |
| கல்லாமை கற்ற | பழகாததையே படித்த |
| கயவர் தம் பால் | இழி குணத்தவரிடம் |
| ஒரு காலத்திலும் | எக்காலத்திலும் |
| செல்லாமை வைத்த | செல்லாத நிலையை, (என்பால் வைத்தருளும்) |
| திரிபுரை பாதங்கள் | திரிபுர சுந்தரியாகிய அன்னை அபிராமியின் திருவடிகளை |
| சேர்மின்களே | இடைவிடாது தியானம் செய்யுங்கள் |

மக்களே, செல்வந்தர் ஒருவரை நாடி உமது வறுமையை எடுத்துரைத்து மானம் அழிந்து போகாமல் இருக்க வேண்டும் என்று நீங்கள் உள்ளத்தில் கருதுவீர்களானால் நாள்தோறும் உயர்ந்த தவத்தை செய்வதை பழகாததையே படித்த இழிந்த குணத்தவரிடம் ஒரு பொழுதும் செல்லாத நிலையை என்பால் வைத்தருளிய திரிபுரசுந்தரியின் திருவடிகளைப் புகலாக அடைவீர்களாக. (இடைவிடாது த்யானம் செய்யுங்கள்)

அன்னை அபிராமியின் திருவடிகளைப் பற்றிக் கொண்டவர்களுக்கு வறுமையே இல்லை. கயவர்களின் சேர்க்கையும் ஏற்படாது.

வறுமை என்பது கொடிது. அதனினும் கொடிது ஒருவரிடம் சென்று தன் நிலைமையைச் சொல்லி யாசிப்பது. நெடியோன்,

நெடுமால் என்று பெயர் பெற்ற நீண்ட வடிவினனாகிய திருமாலே, மகாபலி சக்கரவர்த்தியிடம் மூன்றடி மண்ணை யாசிக்கச் சென்ற போது கூனிக் குறுகி வாமனனாகச் சென்று நின்றான்.

எவ்வளவு உயர்ந்தவனானாலும் ஒருவரிடம் ஒன்றை யாசிக்க வேண்டுமானால் கூனிக் குறுகி நிற்கும் நிலை ஏற்படும்.

இதை, அபிராமிபட்டர், 'நான் திரிபுரசுந்தரியாகிய அன்னை அபிராமியை வழிபட்டு அடிமையானேன். அதனால் கிருபணர் களிடம் செல்லாமல் வாழ்கிறேன். நீங்களும் அவ்வாறு செய்தால் இரக்கவேண்டிய இழிநிலை உங்களுக்கு வராது.'

இன்று உபதேசம் செய்யவரும் பலர் சொல் எடுபடுவ தில்லை. ஏனென்றால் அவர்களே, தங்கள் சொந்த வாழ்க்கையில், அவர்கள் சொல்லும் நெறியில் நின்றதில்லை. ஆனால் அன்னை அபிராமியின் அன்பரும், அடியாருமான அபிராமிபட்டரோ, வாழ்ந்து காட்டிய உதாரண புருஷன் அல்லவா !

சேர்மின்களே - என்பதற்கு இடைவிடாது தியானம் செய்யுங்கள் என்று பொருள் கொள்ள வேண்டும்.

மன்னன் சரபோஜியிடம் மான்யங்களைப் பெற மறுத்தவர். அன்னை அபிராமியின் அடியார்களுக்கு, அன்னையே புகலிடமாக இருக்கும் போது, யாரும் எதையும் செய்யத் தேவையில்லையே !

'வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு

யாண்டும் இடும்பை இல' - என்றார் வள்ளுவர்.

திருநாவுக்கரசர், 'உயிராவணம் இருந்து உற்று நோக்கி

உள்ளக் கிழியின் உருவெழுதி' - என்கிறார்.

உள்ளம் எனும் கிழியிலே த்யானிக்கும் மூர்த்தியை எழுதவேண்டுமாம். மூச்சு கூட விடாமல் இருந்து உற்று நோக்கி அதை எழுத வேண்டுமாம்.

'நான் கண்மூடி மௌனியாகித் தனியே

இருப்பதற் கெண்ணினேன்.' என்பார், தாயுமானவர்.

இது நல்ல வழி. நீங்களும் அந்த வழியில் சென்று பயன் பெறுவீர்களாக, என்று சொல்கிறார் அபிராமிபட்டர்.

## 55. அன்னை அபிராமி - அவ்யாஜ கருணாமூர்த்தி

*மின் ஆயிரம் ஒரு மெய்வடிவு ஆகி விளங்குகின்ற*
*அன்னாள் அக மகிழ் ஆனந்தவல்லி அருமறைக்கு*
*முன்னாய் நடு எங்குமாய் முடிவாய முதல்வி தன்னை*
*உன்னா தொழியினும் உன்னினும் வேண்டுவது ஒன்று இல்லையே.*

**(விருப்பு, வெறுப்பு அற்ற மோன நிலை எய்த)**

| | |
|---|---|
| மின்னாயிரம் | ஆயிரம் (எண்ணிக்கையற்ற) மின்னல்கள் |
| ஒரு மெய் வடிவாகி | திருமேனியின் உருவெடுத்து |
| விளங்குகின்றது | பொழிவுற்று நிற்கின்றது |
| அன்னாள் | அவளே |
| அகமகிழ் | யாவருடைய உள்ளங்களிலும் |
| ஆனந்தவல்லி | ஆனந்த மயமான கொடி போல் இருப்பவள். |
| அருமறைக்கு | அறிவதற்கரியதாக நுட்பமாய் இருக்கும் நான்கு வேதங்களுக்கும் |
| முன்னாய் | முதலான (வேரான) பிரணவமாய் |
| நடுவெங்குமாய் | நடுவிலே எங்குமாய் பரவியிருக்கும் கிளைகளாய் (சாகைகளாய்) |
| முடிவாய | முடிவாக உள்ள உபநிடதங்களாய் |
| முதல்வி தன்னை | இருக்கும் முதற்பொருளாகிய அன்னை அபிராமியை |
| உன்னாது ஒழியினும் | தியானிக்காமல் இருந்தாலும் |
| உன்னினும் | தியானித்தாலும் |
| வேண்டுவது | அவளுக்கு ஆக வேண்டியது |
| ஒன்று இல்லையே | ஒன்றுமேயில்லை. |

அன்னை அபிராமி ஆயிரம் மின்னல்கள் திருமேனியின் உருவெடுத்து விளங்குவது போன்ற கோலத்தை உடையவள்.

தன்னைத் தியானிக்கும் அன்பர்கள் உள்ளத்தே மகிழ்வதற்குக் காரணமான ஆனந்தக் கொடி.

அறிவதற்கரியதாக நுட்பமாக இருக்கும் வேதத்திற்கு முதலாய் (பிரணவமாய்), நடுவிலே எங்குமாகப் பரவியிருக்கும் சாகைகளாய், முடிவாக உள்ள உபநிடதங்களாய் இருக்கும் முதற்பொருளாகிய அபிராமியை தியானிக்காமல் இருந்தாலும், தியானித்தாலும் அவளுக்கு ஆக வேண்டியது ஒன்றுமே இல்லை.

அன்னை அபிராமியை நாம் வழிபட்டு தியானித்து அவள்

கருணையைப் பெறவேண்டும். அதுவே நமக்குப் பெரும் பயன் என்பது கருத்து.

அபிராமிபட்டர், முதல் பாட்டிலேயே, அன்னை அபிராமியை 'மலர்க்கமலை துதிக்கின்ற மின்கொடி' என்று சொன்னார். அவருக்கு அப்படியும் திருப்தி உண்டாகவில்லை. எனவே, 'ஆயிரம் மின்னல்கள்' என்றார். இவ்விடத்து ஆயிரம் என்பதற்கு எண்ணிக்கையற்றது என்றும் பொருள் கொள்ளலாம். ஒரு மின்னலையே நம்மால் பார்க்க முடியாது !

அப்படியிருக்க 'ஆயிரம் மின்னல்கள் ஒன்றாகத் திரண்டு வந்தால் எப்படி நம்மால் காணமுடியும் ? எம்பெருமாட்டி, ஊனக் கண்களால் காணும் வண்ணம் இருப்பவள் அல்ல. உன் முகத்தே தியானம் செய்யும் அன்பர்களுடைய அகக் கண்ணுக்குத் தோன்றுபவள்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தில்

107. தடில்லதா ஸமருசி-மின்னல் போலப் பேரொளியுடன் தேவி விளங்குகிறாள். வேதமும், 'வித்யுல்லேகேவ பாஸ்வரா' என்று சொல்கிறது. (முன்னும் பார்த்தோம்)

870. அந்தர்முக ஸமாராத்யா - உள்நோக்கு உள்ளவர்களால் நன்கு ஆராதிக்கக் கூடியவள். 595. ஹ்ருதயஸ்தா - ஹ்ருதயத்தில் தியானம் செய்யப்படுபவளாக இருப்பவள். 609. தஹராகாஶ ரூபிணீ - மனிதனுடைய ஹ்ருதயமாகிற ஸூக்ஷ்மமான குகையில் ஆகாச வடிவமாக இருப்பவள். (ஆகாசத்தில் தானே மின்னல்கள் தோன்றுமல்லவா !) இதுவே பரப்ரஹ்மம், தேவியாகும். 303. ஹ்ருதயா-பக்தருடைய (முனீஸ்வரர்களுடைய) ஹ்ருதயங்களில் இருப்பவள்.

188. துர்லபா - எளிதில் அடைய முடியாதவள். (யோகிகளால் கூட)

189. துர்கமா - எளிதில் நெருங்க முடியாதவள்.

871. பஹிர்முகஸுதுர்லபா - மனதை விஷயங்களில் அலைய விடுபவர்களுக்கு இவளை அடைவது கஷ்டம் (மிகவும் அரிது)

அபிராமிபட்டர், அபிராமி அந்தாதியின் இரண்டாவது பாட்டில்

'சுருதிகளின் பணையும் கொழுந்தும் பதிகொண்டவேரும்' என்றார். அதையே வேறுவகையில் இங்கு சொல்கிறார்.

வேதத்தைத் தந்தவளும் அவள். வேத உருவமாய் விளங்குபவளும் அவள். வேதத்தின் முதலில் உள்ள பிரணவமே அவள் வடிவம். இடையில் எங்கும் பரவியிருக்கும் சாகைகளும் அவளே. வேதத்தின் இறுதியாகிய உபநிஷதமாக இருப்பவளும் அப்பிராட்டியே.

இத்தகைய பெருமாட்டியை நாம் இடைவிடாது தியானம் செய்யவேண்டும். இதற்கும் நாம் பூர்வ ஜன்ம புண்யம் செய்திருக்கவேண்டும். ஆனால் இதெல்லாம் தெரியாத சில மூட ஜனங்கள், 'தியானம் செய்யாவிட்டால் என்ன ?' என்று கேட்கிறார்கள்.

இதற்கு அபிராமிபட்டர் அழகாக பதில் சொல்கிறார்.

'தியானம் பண்ணாவிட்டால் அவளுக்கு ஒரு நஷ்டமும் இல்லை. தியானம் பண்ணுவதால் அவளுக்கு லாபமும் இல்லை.'

ஆனால் அன்னையோ தன் குழந்தைகள் நல்லவர்களோ அல்லது கெட்டவர்களோ, அதைப் பற்றி கவலைப்படாமல், சிறிதளவும் பட்சபாதமில்லாத கருணை உருவம். அப்பேர்ப்பட்ட 'கருணையே உருவானவள்.' இதையே, 'அவ்யாஜ கருணாமூர்த்தி' (992) என்று ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் போற்றுகிறது.

## 56. அன்னை அபிராமியை அறிந்தவர் இருவர்.

*ஒன்றாய் அரும்பி பலவாய் விரிந்து இவ்வுலகெங்குமாய்*
*நின்றாள் அனைத்தையும் நீங்கி நிற்பாள் என்றன் நெஞ்சினுள்ளே*
*பொன்றாது நின்று புரிகின்றவா இப்பொருள் அறிவார்*
*அன்று ஆல் இலையில் துயின்ற பெம்மானும் என் ஐயனுமே.*

**(யாவரையும் வசீகரிக்கும் ஆற்றல் உண்டாக)**

| | |
|---|---|
| ஒன்றாய் அரும்பி | ஒரு பொருளாகிய பராசக்தியாய் நுட்பமான பொருளாக, மணம் முதலியன பரவாமல் அடக்கி கொண்டு இருக்கும் அரும்பு போல இருந்து, |
| பலவாய் விரிந்து | பிறகு உலகத்தை படைத்தல் முதலிய பல்வேறு திருவிளையாடல்கள் செய்யும் பொருட்டுப் பல்வேறு சக்திகளாக விரிந்து |
| இவ்வுலகு எங்குமாய் | இந்த உலகம் எங்கும் |
| நின்றாள் | அந்தர்யாமியாய் நின்றாள் |
| அனைத்தையும் நீங்கி | ஆயினும் எல்லாவற்றையும் கடந்து |
| நிற்பாள் | நிற்பாள் |
| என்றன் நெஞ்சினுள்ளே | அத்தகைய அம்பிகை, ஒன்றுக்கும் பற்றாத எளியேனுடைய நெஞ்சுக்குள்ளே |
| பொன்றாது நின்று | நீங்காமல் சதா ஸர்வ காலமும் நின்று |
| புரிகின்றவா ! | அருள் புரிவது (என்ன ஆச்சரியம் !) |
| இப்பொருள் அறிவார் | இந்த உண்மையை அறிந்தவர் |
| அன்று | ஊழி காலத்தில் (பிரளயம்) |
| ஆல் இலையில் | ஆலிலை மீது |
| துயின்ற பெம்மானும் | அறிதுயில் கொண்ட பெம்மானாகிய திருமாலும் |
| என் ஐயனுமே | என் தந்தையாகிய சிவபெருமானும் ஆவர். (பிறர் அறிகிலார்) |

ஒரு பொருளாகிய பராசக்தியாய் நுட்பமான பொருளாக, மணம் முதலியன பரவாமல் அடக்கிக் கொண்டிருக்கும் அரும்பு போல இருந்து, பிறகு உலகத்தைப் படைத்தல் முதலிய பல திருவிளையாடல்களை இயற்றும் பொருட்டுப் பல்வேறு சக்திகளாக விரிந்து இந்த உலகம் எங்கும் அந்தர்யாமியாய் நின்றாள். ஆயினும் எல்லாவற்றையும் கடந்தும் நிற்பாள்.

அத்தகைய அம்பிகை ஒன்றுக்கும் பற்றாத எளியேனுடைய நெஞ்சுக்குள்ளே, ஒரு கணமும் மறையாமல் நிலைத்து நின்று

அருள்புரிவது என்ன ஆச்சரியம் ! இந்த உண்மையை அறிபவர்கள், பிரளய காலமாகிய அன்று ஆல் இலையில் யோகத் துயில் கொண்ட பெருமானாகிய திருமாலும் என் தந்தையாகிய சிவபெருமானுமே ஆவர்.

ரிக்வேதம் - 'ஏகம் ஸத் விப்ரோ பஹுதாவதந்தி' - என்கிறது.

முன்னும் அபிராமி பட்டர், 'ஒன்றே, பலவுருவே, அருவே ! என் உமையவளே' (30) என்றார்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தில்

665. ஏகாகினீ - தனித்து இருப்பவள். தன்னைத் தவிர வேறான எந்த ஒரு வஸ்தும் இல்லாமல் தனித்து நிற்பவள். 623. கேவலா - தனித்த வடிவினாள் வேறு எந்த குணமோ தோஷமோ சலக்காமல் தானாக இருப்பவள். கேவலம் என்றால் மிகச்சிறந்தது என்று பொருள். அத்வைதத்தின் தத்வமாக எஞ்சியிருக்கும் ஒரே பொருள். 'கேவலா'. 667. நிர்த்வைதா - இரண்டற்றவள். த்வைத பாவமில்லாதவள். 668. த்வைதவர்ஜிதா -'த்வைதம்' - அதாவது இரண்டாவதான ஒன்று இருக்கும் பாவம் நீங்கியவள். த்வைத பாவம் ஒரு பொய்யான தோற்றம். அது முதலில் இருந்து பிறகு களையப்படுவதல்ல. எக்காலத்தும் முந்தியும் பிந்தியும் எதைக்கொண்டும், ப்ரஹ்ம ஸ்வரூபிணியான அம்பாளைவிட வேறு ஒன்றும் எந்நிலையிலும் இல்லை என்று தீர்மானிக்கப்படுகிறது. 813. மூர்தா - உருவத்துடன் இருப்பவள்.

666. பூமரூபா - அனைத்துமாக இருப்பவள். பூமா-ப்ரஹ்மம், ப்ரஹ்ம வடிவானவள். பூமா-அநேகம் என்ற பொருளும் உண்டு. அவளே எல்லாமாகவும் இருப்பவள்.

824. பஹுரூபா - பல உருவங்கள் உள்ளவள். தேவீ பாகவதம் பின்வருமாறு கூறுகிறது. அவள் எல்லாவற்றிற்கும் மேலானதால் உருவமற்றவள்.

அவள் எல்லா காரியங்களாகவும் இருப்பதால், பல உருவங்கள் உடையவள்.

பண்டாஸுரன் முதலியவர்களை வதம் செய்வதற்காக பல ரூபங்கள் எடுக்கிறாள். அவளுடைய ரூபங்கள் (சரம், அசரம்)

பலவிதம் - தேவர்கள், மனிதர்கள், மிருகங்கள் ஆகையால் பஹுரூபா எனப்படுகிறாள். அன்னை அபிராமி, பரமார்த்தத்தில் ஒருத்தியாக இருந்தாலும், நர்த்தகீ (நடிகை) போல பலவிதமான வேஷங்களைப் போட்டுக்கொண்டு பலவிதமான ரூபங்களுடன் இருக்கிறாள் என்று பல இடங்களில் கூறப்படுகிறது.

401. விவிதாகாரா - பலவிதமான ரூபங்களையுடையவள்.

865. லீலாவிக்ரஹதாரிணீ - லீலையாகவே, முயற்சி இல்லாமலேயே, பல அவதார உருவங்களை தரிப்பவள். 966. - லீலா வினோதினீ - லீலைகளால் சந்தோஷ மடைகிறவள். 814 - அமூர்தா - உருவம் இல்லாதவள்

எம்பெருமாட்டி உலகமே தன்னுடைய உருவாக எங்கும் வியாபித்திருக்கிறாள். உலகமே அம்பிகையின் வடிவமாதலின் 'ஸர்வம் சக்திமயம் ஜகத்' - என்று கூறுவர். 256. விச்வரூபா - விச்வன் என்ற வடிவாயிருப்பவள் அல்லது உலகின் வடிவாயிருப்பவள். நான் பலவாக ஆவேன் என்று தேவி (ப்ரஹ்மம்) நினைத்ததால் உலகம் தோன்றியது. அதனால் உலகமே தேவி வடிவானது.

ஜீவனுக்கு 'பசு' என்று பெயர். 'ச்வா' - என்றால் நாய் - மிகவும் தாழ்ந்ததான ப்ராணி. ஜீவன் இதற்குச் சமமானவன். அவன் தேவியை வணங்குவதால் இந்த 'ச்வ' ரூபத்திலிருந்து விடுபடுகிறான். 'ச்வ' பாவம் அல்லது ரூபகம் 'விகதம்' ஆவதால், விடுபடுவதால், விச்வரூபா என்று தேவி கூறப்படுகிறாள். சுக்லபக்ஷத்து பதினைந்து திதிகளில் சதுர்த்தியாக விளங்குபவள்.

400. வ்யாபினீ - எங்கும் வியாபித்திருப்பவள்

282. ஸஹஸ்ர சீர்ஷவதநா - எண்ணற்ற (ஸஹஸ்ர) தலை மற்றும் அவயவங்களை உடையவள். 283. ஸஹஸ்ராக்ஷீ - எண்ணற்ற கண்களுடையவள். 284. ஸஹஸ்ரபாத் - கணக்கிடலங் காத கால்களையுடையவள். ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்திலும் நாமாக்கள் 226-227 இவ்வாறே சொல்லுகின்றன. 819. ஸர்வாந்தர்யாமிணீ - எல்லோர் உள்ளத்திலும் வ்யாபித்து இருப்பவள். ஸர்வஸ்வரூபி. மேலும் எல்லோருக்குள்ளேயும்

ப்ரவேசித்தும் இருப்பவள் என்றும் சொல்லலாம்.

334. விஶ்வாதிகா - எல்லா உலகங்களையும் விட மேலானவள். 960. லோகாதீதா - லோகங்களுக்கெல்லாம் அப்பால் இருப்பவள்.

இந்த்ர லோகம் முதல் விஷ்ணு லோகம் வரை இருக்கும் லோகங்களை எல்லாம் கடந்ததும், பரமசிவனுடைய ஸ்தானமான மஹாகைலாஸம் என்ற பெயருடைய லோகத்தில் இருப்பவள் என்று அர்த்தம். அங்கு செல்பவர்களுக்கு மறுபிறப்பு கிடையாது. லோகங்களுக்கு - அதாவது ஜீவன்களுக்கு அப்பாற்பட்டவள் என்றும் சொல்லலாம். (ஜீவன்களே இவளிடத்து தானே உண்டாகின்றன.) 961. குணாதீதா - குணங்களுக்கு அப்பாற் பட்டவள். 962. ஸர்வாதீதா - எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டவள்.

'கடவுள்' - என்ற சொல் - எல்லாவற்றையும் கடந்து நிற்பது, எல்லாப் பொருள்களின் உள்ளும் இருப்பது. கட+உள் = கடவுள்.

ஸர்வாந்தர்யாமியாய் உள்ளும், ஸர்வவியாபகனாய் வெளியும் இருப்பவன் என்பதை கடவுள் என்ற பெயர் குறிக்கிறது.

'இயன்ற எல்லாம் பயின்று அகத்தடக்கிய வேதமுதல்வன்' - நற்றிணை.

உலகம் எங்குமாய் விரிந்த விரிவாக உள்ள அன்னை பக்தர்களின் சித்தத்துக்குள் விருப்பத்தோடு எழுந்தருளி நிலையாக நிற்கிறாள். இதைத் தன் சொந்த அனுபவத்தில் அறிந்தவர் (உணர்ந்தவர்) அநுபூதிமானாகிய அபிராமிபட்டர்.

புரிதல் என்பதற்கு செய்தல் என்றும் பொருள் உண்டு. 'என் உள்ளத்திலே மறையாமல் நின்று அவள் திருவிளையாடல் பல புரிகின்றவாறு என்ன வியப்பு' என்கிறார் அபிராமிபட்டர்.

நமக்கு 'ஸர்வேசுவரியாக' விளங்கும் அன்னை ஒரு மனிதனுடைய உள்ளத்தில் வந்து நடம் புரிகிறாள். எப்போதும் மகிழ்ச்சியோடு இருக்கிறாள் என்றால் எளிதிலே நம்பிக்கை உண்டாகாது. அவர் தம் நெஞ்சைப் பிளந்து காட்ட முடியுமா ?!

அவர் இரண்டு மஹாபெரியவர்களை சாட்சியாகக் கூறுகிறார். ஏனென்றால் இந்தப் பெரியவர்கள் இருவரும், என் பரதேவதையை

உபாசித்து தம்முடைய உள்ளத்தை அவளுக்கு சிங்காதனமாகக் கொடுத்தவர்கள் ! அவர்களுக்குத் தான் என் நிலையும் தெரியும் என்று சொல்லாமல் சொல்கிறார். அவர்கள் யார் ?

திருமாலும், சிவபெருமானுமே இந்த இரகசியத்தை, இவ்வுண்மையை, உணர்வார்களாம். உலகமெல்லாம் நீரில் முழ்கிய பிரளயத்தில் ஆல் இலையில் அறிதுயில் புரியும் பெம்மானாகிய திருமால் அந்த யோக நிலையில் தம் உள்ளத்திலே பரதேவதையை நிறுத்தி தியானம் புரிகிறார். அதனால் அவர் உள்ளத்தே நிற்கிறாள் அன்னை. அவர் அறிவார் இந்த உண்மையை.

சிவபெருமானோ தட்சிணாமூர்த்தியாக யோகத்தில் இருந்தபோது அம்பிகையைத் தியானித்து தம் உள்ளத்தில் அவளைப் பிணைத்துக் கொண்டவர்.

ஆகவே அறிதுயில் கூரும் திருமாலும், பரமயோகியாய் வீற்றிருக்கும் சிவபெருமானும் தங்கள் உள்ளத்தில் அம்பிகை பொன்றாது நின்று புரிகின்ற அற்புதங்களை அநுபவிக்கிறவர்கள். அவர்கள் அபிராமிபட்டர் கூறும் உண்மையை அறிவார்கள்.

இதில் மற்றொரு கருத்தும் குறிப்பாகப் புலப்படுகிறது. ஒரு பெண்மணியின் நுட்பமான இயல்பை அவள் பிறந்த வீட்டாரும் கணவருமே அறிவார்கள். திருமால் அன்னையின் சகோதரர். சிவபெருமான் அபிராமியின் கணவர். அவ்விருவருக்கும் அன்னையின் எளிய இயல்பு நன்றாகத் தெரியுமல்லவா !

747. பக்த சித்த கேகி கனா கனா - பக்தர்களுடைய மனம் என்ற மயிலுக்கு ஆனந்தத்தைத் தரும் மேகக் கூட்டமாக இருப்பவள். (ஒ. ஆகாசேன சிகீ - சிவானந்த லஹரீ - 53)

372. பக்தமானஸ ஹம்ஸிகா - பக்தர்களின் மனமாகிய ஏரியில் அன்னப்பறவை போல் விளங்குபவள். ப்ரும்மா, தனது மனதால் கைலாஸ மலையின் உச்சியில் ஒரு ஏரியை (இதில் உள்ள நீர் தூய்மையானது) நிர்மாணித்தார். தூய்மை விரும்பும் அன்னப்பறவைகள் தங்கும் ஏரி. பக்தர்களுடைய தூய மனதை ஏரியாகக் (மனதால் ஏற்பட்டதால் - மானஸ ஸரோவர்) கற்பனை செய்து அம்பாளை அதில் விளங்கும் அன்னப் பறவையாக சொல்லுகிறார்கள் வாக்தேவதைகள்.

## 57. அன்னையின் அடியார்கள் நரஸ்துதி செய்யமாட்டார்

*ஐயன் அளந்தபடி இரு நாழிகொண்டு அண்டம் எல்லாம்*
*உய்ய அறம்செய்யும் உன்னையும் போற்றி ஒருவர் தம்பால்*
*செய்ய பசுந்தமிழ்ப் பாமாலையும் கொண்டுசென்று பொய்யும்*
*மெய்யும் இயம்ப வைத்தாய் இதுவோ உன்றன் மெய் அருளே ?*

**(வறுமை ஒழிய)**

| | |
|---|---|
| ஐயன் | சிவபெருமானாகிய ஏகாம்பர நாதர் |
| அளந்தபடி | அளந்து கொடுத்த |
| இரு நாழி கொண்டு | இரண்டுபடி நெல்லைக் கொண்டு |
| அண்டம் எல்லாம் உய்ய | உலகத்திலுள்ள உயிர்கள் எல்லாம் வாழும்படி |
| அறம் செயும் | முப்பத்திரண்டு அறங்களைச் செய்த |
| உன்னையும் | காமாட்சியாகிய உன்னையும் |
| போற்றி | துதித்துவிட்டு (பாக்களால்) |
| ஒருவர் தம் பால் | (பின்னர்) வேறு ஒருவரிடம் |
| செய்ய பசுந் | செம்மையான, பசிய (புதிய) |
| தமிழ் பாமாலையும் | தமிழ் பாமாலையை |
| கொண்டு சென்று | (அவர் மீது) புனைந்து, கொண்டு போய் |
| பொய்யும், மெய்யும் | இல்லாததையும், இருப்பதையும் கலந்து |
| இயம்ப வைத்தாய் | பாட வைத்தாயே |
| இதுவா உன்றன் | இதுதானா உனது |
| மெய் அருளே ? | திருவருளின் செயல் ? |

பரமேசுவரனாகிய என் தந்தை அளந்து தந்த வண்ணம் இரண்டு படி நெல்லைக் கொண்டு உலகத்திலுள்ள உயிர்களெல் லாம் வாழும்படி அறத்தைச்செய்யும் உன்னையும் பாக்களால் புகழ்ந்து, வேறு ஒரிவரிடத்தில், செம்மையான பசிய தமிழ் பாமாலையைப் புனைந்து கொண்டுபோய் அவரைப் பற்றிய பண்புகளைப் பொய்யும் மெய்யுமாகக் கலந்து பாடவைத்தாயே !

இதுவோ அடியேனுக்கு உன்னால் கிடைக்கும் மெய்யான அருள் ?

பெரியோர்களின் இயல்பு தாம் செய்யாத குற்றங்களையும் தாம் செய்ததாகக் கூறி இரங்குவார்கள். இதை நைச்சியானு சந்தானம் என்பர்.

இப்பாடலில் அபிராமிபட்டரும் இந்தக் கருத்தைச்

சொல்கிறார். ஆனால் அவர் பிறருக்கு உபதேசம் செய்யும் வகையில் அதைச் சொல்லாமல், தாமே அப்படிச் செய்வதாக அந்தக் குற்றத்தை தம்மேல் ஏற்றிக்கொண்டு சொல்கிறார். 'எல்லா அறங்களையும் செய்த உன்னையும் போற்றி வேறு யார் யாரிடமோ போய்த் தமிழ்பாட்டுப் பாடிப் பொய்யும் மெய்யும் புகலும்படி வைத்தாயே ! இது நின் அருளுக்கு அழகாகுமா ?' என்று கேட்கிறார்.

அதாவது, 'அன்னையின் பெருமையை பாடிய வாயினால், நரஸ்துதி செய்யலாமா ?'

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்

959. தர்மவர்தினீ - தர்மத்தை வ்ருத்தி செய்பவள். திருவையாறு என்று சொல்லப்படும் பஞ்சநதக்ஷேத்திரத்தில் 'தர்மஸம்வர்த்தினீ' (அறம் வளர்த்த நாயகி) என்ற பெயருடன் இருப்பவள்.

ஸ்ரீ த்யாகப் பிரம்மம் என்று போற்றப்படும் ஸ்ரீ த்யாகராஜ ஸ்வாமிகளும் நரஸ்துதி செய்யாத மகா பெரிய மகான். ராமனைப் பாடிய வாயினாலே மன்னனைப் பாட மறுத்தவர். அபிராமிபட்டரும் சற்று ஏறக்குறைய அதே காலத்தில் வாழ்ந்தவர். இந்த மகான்கள் காட்டிய பாதையில் நாமும் நம் பயணத்தை மேற்கொண்டு அன்னை அபிராமியின் திருவடித்தாமரையின் நினைவிலேயே நாம் நிற்கவேண்டும்.

இந்தப் பாடல், இன்னொரு முக்கிய கருத்தை உணர்த்துகிறது. மணம் ஆன மகளிர் எவ்வாறு வாழ்க்கை நடத்த வேண்டும் ? தன் கணவன் வருவாய்க்கு ஏற்ப இல்வாழ்க்கையில் அறமும், இன்பமும் உண்டாகும்படி செய்யவேண்டும்.

'மனைத்தக்க மாண்புடையளாகித் தற்கொண்டான்

வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.' என்கிறது குறள். இதனாலேயே இல்லத்தின் தலைவியாகிய பெண்ணுக்கு இல்லாள் என்று பெயர். (இல்லறத்தின் தலைவி)

இறைவனும், இறைவியும் - மனிதர்கள், மனைவி மக்களோடு அன்பும், அறனும் உடைய இல்வாழ்க்கையில் எப்படி

வாழவேண்டுமென்று, குடும்பத்தை உடையவர்கள் போல நடந்து காட்டுகிறார்கள். அம்பிகையும் ஒரு குடும்பத்திற்கு தலைவி எப்படி நடக்கவேண்டுமோ அப்படி நடந்து சதாசிவ குடும்பினியாக விளங்குகிறாள். அவளே அகிலாண்டநாயகி, அறம் வளர்த்த நாயகியாக, ஜகதாம்பிகையாக விளங்குகிறாள்.

காஞ்சிபுரத்தில் பல சிவாலயங்கள் உண்டு. ஒரு கோயிலிலும் அம்பிகை சந்நிதி இல்லை. காமாட்சி ஆலயம் ஒன்றுதான் அம்பிகை திருக்கோயில். அங்கே இறைவன் சந்நிதி இல்லை. காமாட்சி வீற்றிருந்த திருக்கோலத்தில் விளங்குகிறாள். அவளே அரசி ஆதலின் அமர்ந்திருக்கிறாள். ராஜ ராஜேசுவரியாகத் திகழும் அவளே பரதேவதை என்பதைக் காட்டுகிறது.

காஞ்சிபுராண வரலாறு. சிவபெருமான் அன்னையிடம் இரண்டு நாழி (படி) நெல்லைக்கொடுத்து, 'வேண்டிய அறங்களைச் செய்' என்று சொன்னாராம். 'எப்படி செய்வது' என்று கேள்வி கேட்காமல், அன்னை காமாட்சி, அதைக்கொண்டே 32 அறங்களையும் செய்தாளாம்.

62. காமாக்ஷீ - அழகான கண்களை உடையவள். 572. பராமக்தி - மிகச் சிறந்த சக்தி 366. பரா-பக்தர்களுக்கு விசேஷமாக அனுக்ரஹம் செய்பவள். 'பரா' என்ற ஒலி வடிவமாக இருப்பவள். 369. பரதேவதா - உபாஸிக்கவேண்டிய ஈஸ்வர ஸ்வரூபமாக இருப்பவள். மிகச்சிறந்த தேவதை.

திருமூலரும் (திருமந்திரம் – 1068)

"பார்த்திடும் அங்குசபாசம் பசுங்கரும்பு

பார்த்திடும் பூம்பிள்ளை யாகுமாம் ஆதிக்கே" என்று காமாட்சி அன்னையை புகழ்ந்து பாடுகிறார்.

அன்னை அபிராமி அருள் கடலைப் போன்றது. அவள் அன்பர்களுக்கு கேட்காமலேயே கொடுப்பவள். (989. வாஞ்சி தார்த ப்ரதாயினீ அல்லவா !)

அவளுடைய அருளுக்குப் பாத்திரமாகிவிட்டால் எல்லாம் கிடைக்கும். பிறரிடம் போய் இரக்க வேண்டிய நிலை வராது என்று அன்னை அபிராமியின் அன்பர் அபிராமிபட்டர் நமக்கு அழகாக, தெளிவாக புரிய வைக்கிறார் அல்லவா !

## 58. அபிராமியே - பாலா தேவி.

*அருணாம் புயத்தும் என் சித்தாம் புயத்தும் அமர்ந்திருக்கும்*
*தருணாம் புயமுலைத் தையல் நல்லாள் தகைசேர் நயனக்*
*கருணாம் புயமும் வதனாம்புயமும் கராம்புயமும்*
*சரணாம் புயமும் அல்லால் கண்டிலேன் ஒரு தஞ்சமுமே.*

**(பரிபாகம் பெற்ற மன அமைதி உண்டாக)**

| | |
|---|---|
| அருணாம் புயத்தும் | சிவந்த தாமரை மலர் மீதும் |
| என் சித்தாம் புயத்தும் | என்னுடைய இருதயத் தாமரையிலும் |
| அமர்ந்திருக்கும் | வீற்றியிருக்கின்ற |
| தருணாம் புயமுலைத் | தாமரை மொட்டு போல் இருக்கும் தனங்களையுடைய |
| தையல் நல்லாள் | பெண்ணரசியான பாலாவான அபிராமியின் |
| தகை சேர் | அழகு பொருந்திய |
| நயனக் கருணாம் புயமும் | கருணை பொழியும் விழியாகிய தாமரையும் |
| வதனாம் புயமும் | திருமுகத்தாமரையும் |
| கராம் புயமும் | திருக்கரங்களான தாமரையும் |
| சரணாம் புயமும் | திருவடித்தாமரையும் |
| அல்லால் | அல்லாமல் |
| ஒரு தஞ்சமுமே | வேறு ஒரு புகலிடம் |
| கண்டிலேன் | அடியேன் கண்டதில்லை. |

செந்தாமரை மலரிலும் அடியேனுடைய உள்ளத் தாமரையிலும் எழுந்தருளியிருக்கும் தாமரை அரும்பு போன்ற தனங்களையுடைய பாலாம்பிகையாகிய நல்ல அன்னையின் அழகு சேர்ந்த கருணை பிறக்கும் விழியாகிய தாமரையும், திருமுகத் தாமரையும், திருக்கரங்களாகிய தாமரைகளும், திருவடிகளாகிய தாமரைகளும் அல்லாமல், வேறு ஒரு புகலிடத்தையும் அடியேன் கண்டதில்லை.

அபிராமிபட்டர் இந்தப் பாட்டில் அழகான ஒரு தாமரைக் காட்டையே நம் கண் முன் கொண்டு வந்து நிறுத்துகிறார். அவர் தேவி உபாஸகர். ஸ்ரீவித்யா உபாஸகர். ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் தவறாமல் பாராயணம் செய்தவர் அல்லவா !

அதில் 59. மஹாபத்மாடவீஸம்ஸ்த்தா - பெரிய தாமரைக்

காட்டில் வசிப்பவள். இத்தாமரைக் காடு சிந்தாமணிக்ரஹத்தின் நடுவில் உள்ளது. ப்ரஹ்மரந்த்ரத்தில், அதாவது, உச்சி மண்டை ஓட்டுக்குக் கீழே உள்ள (கணக்கற்ற) ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரையில் வசிப்பவள். மஹாபத்மம் என்று ஒரு சிறந்த யானை இனம். அத்தகைய யானைகள் நிறைந்த காடு கஜாரண்யம் எனப்படும் திருவானைக்காக்ஷேத்ரம். அதில் உறைபவள் அகிலாண்டேச்வரீ என்ற பெயர் கொண்ட தேவீ. 105. ஸஹஸ்ராராம்புஜாரூடா - ப்ரஹ்மரந்திரத்திற்கு கீழே உள்ள ஆயிரம் இதழ் தாமரையில் இருப்பவள். 528. ஸஹஸ்ர தள பத்மஸ்தா - ஸஹஸ்ரார கமலத்தில் இருப்பவள். (இங்கு 'யாகுனீ' தேவியாக இருக்கிறாள்.)

'தாமரைக்காடனைய மேனி' என்ற மாணிக்க வாசகரும், 'கருமுகில் தாமரைக்காடு பூத்த' என்று கம்பரும் சொல்லுவர். சரண கமலாலயம் (அருணகிரிநாதர்) 'சரணபங்கேருஹம்,''சரணகமலம்'' (சங்கரர்). 278. பத்மாஸனா - தாமரையில் வீற்றிருப்பவள். ப்ரஹ்மா, ஸரஸ்வதி, லட்சுமி - மூவரும் வீற்றிருப்பது தாமரையின் மேல். இம்மூவரின் வடிவமும் தேவியே தான்.

ப்ரக்ருதிமயமான இலைகளோடும் விக்ருதிமயமான கேஸரங்களோடும் ஸம்வித்தாகிய தண்டோடும் கூடிய தாமரையை பீடமாகக் கொண்டவள். யோக முறையில் கூறப்படும் பத்மாஸனமென்னும் ஓர் இருக்கை வடிவில் இருப்பவள். பக்தர்களுக்கு லட்சுமியை (பத்மத்தை) பங்கிட்டுக் கொடுப்பவள். பத்ம-சூரபத்மன் அவனை ஸம்ஹாரம் செய்தவள். பிந்துவிற்கும் பத்மம் என்று பெயர். அதில் வீற்றிருப்பவள். 'பத்மாஸனா.'

460. நளினீ - தாமரைப் பூ போன்றவள்.

தலையிலிருந்து பாதம் வரை அம்பாளின் எல்லா அவயங்களும் தாமரை போல் இருப்பதால் (அவ்வளவு அழகாக இருப்பதால்) அம்பாளையே தாமரைப் பூவாக வாக்தேவிகள் வர்ணிக்கிறார்கள்.

'வருந்தாவகை என் மனத்தாமரையினில் வந்து புகுந்து இருந்தாள் பழைய இருப்பிடமாக...' என்று சொல்லும் அழகே சிறப்பு !

அதாவது அன்னை அபிராமியின் சொந்த இடம் அவர் மனமென்னும் தாமரை. அவள் உரிமையுடன் வந்து புகுந்து இருந்தாள் - என்கிறார். அன்னை தாமரை மலரின் மேல் உறைபவள். எனவே அபிராமி பட்டரின் மனமும் தாமரையாகிறது.

அபிராமிபட்டர் தான் அந்த மாதிரி சொல்ல முடியும். அவர் அன்னையை அகக் கண்ணால் கண்டவர் அல்லவா !

372. பக்தமானஸ ஹம்ஸிகா. 303. ஹ்ருதயா. 595. ஹ்ருதயஸ்தா - என்ற திருநாமங்கள் அன்னை அன்பர்களின் மனமென்னும் தாமரையில் இருப்பவள் என்று கூறுகிறது. அன்னை 'பக்தர்களின் மனமாகிய ஏரியில் அன்னம் போல் இருப்பாள்'. அன்னம் தாமரை மலரில் தங்கியிருக்கும். இந்த ஏகதேச உருவகம் ரொம்ப அழகு. அன்னம் தூய்மையான பறவை. நீரை பிரித்து பாலை மட்டும் அருந்தும். அதுபோல அன்னை நம் மனதில் உள்ள நல்லவற்றையே மட்டும் எடுத்துக்கொண்டு நமக்கு அருள் புரிவாள் என்று சொல்லலாம் அல்லவா !

ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரை மீது வீற்றிருக்கும் அன்னை என் மனித இதயத்தில் தங்கியிருப்பது என்ன விந்தை ! இது அவளின் கருணைதானே ! என்று அப்பெருமாட்டியின் பெருமையை நினைத்து, நினைத்து உருகுகிறார்.

தருணாம் புயமுலைத் தையல் நல்லாள் - தருணம் - இளமை. தருணாம் புயம்-மொட்டு (தாமரை) அதாவது எல்லா உலகத்தை ஈன்றும், தாமரை அரும்பு போன்ற நகில்களையும், இளமையையும் உடைய கன்னிகையாகவே இருக்கிறாள் அன்னை அபிராமி.

தையல் என்பது பாலாம்பிகை - 'பாலா' - இறைவியின் நாமங்களில் ஒன்று. அபிராமிபட்டரின் பெண்ணின் பெயரும் 'பாலா' என்பது தானே !

(புள்ளிருக்கு வேளூர் என்ற தலத்தில் தையல் நாயகி - பாலாம்பிகை-என்று பெயர்) இதனால் 'தையல்' - இளமை யுடையது என்பது தெளிவாகும். 'தைஇ' - என்றால் அணிசெய்து கொண்டு - அதாவது அலங்காரம் செய்து கொண்டவள் - 'தையல்' எனலாம்.

51. ஸர்வாபரண பூஷிதா - எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்றவள். த்ரிசதீயிலும் 'ஸர்வபூஷண பூஷிதா'.

உலகிற்கு நன்மையே புரிபவளாதலின் - 'நல்லாள்' என்கிறார். கருணை, அருள் என்னும் இரு நகில்களை (தாமரை மொட்டுகள் போல்) கொண்டவள் அன்னை அபிராமி.

தகைசேர் நயனக் கருணாம்புயமும் : அன்னை அபிராமியின் தாமரை போன்ற திருவிழிகள் அழகு பொங்க, தேன் வழியும் தாமரையைப் போல, கருணை வழிகின்றது. தகை - அழகு. எனவே அன்னையின் திருவிழிகள் அழகும் கருணையும் ஒருங்கே உடையது. 247. பத்மநயனா - தாமரை போன்ற கண்களை யுடையவள்.

805. புஷ்கரேக்ஷணா - தாமரை போன்ற கண்களை உடையவள். காதுகள் வரை நீண்ட கண்கள் மிகவும் அழகானவை என்று கருதப்படுகிறது. (ஸௌ.ல. 50. "கவீனாம் ஸந்தர்ப்ப ...")

வதனாம்புயமும் - 924. தரஸ்மேர முகாம்புஜா - தாமரை போன்ற அழகிய திருமுகத்தில் புன் சிரிப்புடன் கூடியவள்.

அடுத்ததாக 'கராம்புயமும்' - என்று அன்னை அபிராமியின் தாமரை போன்ற திருக்கரங்களை வர்ணிக்கிறார். வலதுகை 'அஞ்சேல்' என்கிறது. இடது கை, தன் திருவடிகளைக் காட்டி, 'அன்பா ! என் மகனே ! அந்தரிபாதம் என் சென்னியதே' என்று பாடினாயே, அவை உனக்காகவே வைத்திருக்கிறேன் ! வா மகனே என்று 'அபிராமிபட்டரை' அன்புடன் அழைப்பது போல் இருக்கிறது அல்லவா ! ஆதிசங்கரர், "தாமரைக் கொடிகள் போன்ற நான்கு கைகள்" - என்கிறார். (ஸௌ.ல. 79. ம்ருணாலீ - ம்ருத்வீனாம்)

இப்பாட்டில் நம் உடம்பிலுள்ள ஆறு ஆதாரங்களிலும் வெவ்வேறு இதழ்க் கணக்குகளை உடைய தாமரைகள் இருக்கின்றன. அவ்விடங்களில் அன்னை, வெவ்வேறு கோலங்களில் வீற்றிருக்கிறாள். 514. மூலாதாராம்புஜாரூடா - மூலாதாரம் என்பது குஹ்ய ஸ்தானம். நான்கு இதழ்கள் கொண்ட தாமரை மீது ஐந்து திருமுகங்களோடு அன்னை வீற்றிருக்கிறாள். மூலாதாரம் ப்ருத்வி தத்வத்தின் ஸ்தானம். பஞ்சபூதங்களைக் குறிக்க ஐந்து முகங்கள். ஸாகினீ. (புகைவர்ணம்) 504.

ஸ்வாதிஷ்டானாம் புஜகதா - (குஹ்யத்திலிருந்து நாபிக்கும் மூலதாரத்திற்கும் நடுவில் உள்ளது.) அக்னியின் இருப்பிடம். மஞ்சள் (தங்கம்) நிறம். ஆறு இதழ்களையுடைய தாமரையில் நான்கு திருமுகங்களுடன் 'காகினீ' தேவியாக விளங்குகிறாள். 495. மணிபூராப்ஜ நிலயா - நாபியில் உள்ளது. ஜலத்தின் இருப்பிடம். பத்து இதழ்கள் கொண்ட தாமரை மேல், மூன்று முகங்கள் கொண்ட 'லாகினீ' (சிவப்பு) தேவியாக உள்ளாள். 485. அனாஹதாப்ஜநிலயா - ஹ்ருதயத்துள்ளது. வாயு ஸ்தானம். 12 இதழ்களுடன் கூடிய தாமரை மீது, இரண்டு திருமுகங்களுடன் 'ராகினீ' (ஸ்யாமநிறம்) தேவியாக விளங்குபவள். 475. விசுத்தி சக்ரநிலயா - கழுத்தில் உள்ளது. 16 இதழ்களையுடைய தாமரை மீது ஒரு முகமும், மூன்று கண்களும் கொண்டு (த்ரிலோசனா) 'டாகினீ' தேவியாக இருக்கிறாள். ஆகாசம் சிவப்பு கலந்த வெண்ணிறம் - பாதிரிபூவைப் போல்.

521. ஆக்ஞா சக்ராப்ஜ நிலயா - புருவங்களுக்கு நடுவில். வெண்ணிறமானவள். மனத்தின் ஸ்தானம். இரண்டு இதழ்களைக் கொண்ட தாமரை மேல், ஆறு திருமுகங்களுடன் 'ஹாகினீ' தேவியாக இருக்கிறாள். (மனம் + பஞ்சபூதம் = ஆறுமுகங்கள்). ஸௌந்தர்ய லஹரீயில், 36 முதல் 41 வரை உள்ள ஸ்லோகங்கள் மேற்கூறிய ஆறு சக்கரங்களை விளக்குகின்றன.

'அன்னை அபிராமியின் திருவடித்தாமரைகளே உண்மையான புகலிடம்'

அன்னையின் அன்புக் குரலைக் கேட்ட அபிராமிபட்டர், ஆனந்தத்தில் அழுந்தி, 'சரணாம்புயமும் அல்லால் கண்டிலேன் ஒரு தஞ்சமுமே' என்று இந்தப் பாடலை அழகாகப் பாடி, அவரின் மனமாகிய வண்டு அன்னையின் சரணாம்புயத்தில் படிந்து இன்பத்தேனை உண்ணத் தொடங்கிவிட்டது என்று சொல்லவும் வேண்டுமா ? ! இதுவே அவர் தவத்தின் பயன் !

## 59. ஸ்ரீமாதாவான அபிராமியே - பிள்ளை பிழை பொறுப்பாய் !

*தஞ்சம் பிறிது இல்லை ஈது அல்லது என்று உன் தவநெறிக்கே*
*நெஞ்சம் பயில நினைக்கின்றிலேன் ஒற்றை நீள் சிலையும்*
*அஞ்சு அம்பும் இக்கு அலர் ஆக நின்றாய், அறியார் எனினும்*
*பஞ்சு அஞ்சும் மெல்அடியார் அடியார் பெற்ற பாலரையே.*

**(துர்நடத்தை உள்ள பிள்ளை நல்லவனாக)**

| | |
|---|---|
| ஒற்றை நீள் சிலையும் | நீண்ட தனிவில்லும் |
| அஞ்சம்பும் | ஐந்து அம்புகளும் |
| இக்கு அலர் ஆக | முறையே கரும்பும், மலர்களாக |
| நின்றாய் | உனது திருக்கரங்களில் கொண்டு நின்ற அன்னை அபிராமியே ! |
| ஈது அல்லது தஞ்சம் | இது அல்லாமல் வேறு புகலிடம் (சென்ற பாட்டில் சொன்னபடி) |
| பிறிது இல்லை என்று | இல்லை என்பது அறிந்தும் |
| உன் தவநெறிக்கே | உனக்கே வழிபடும் தவ வழியில் (சகலாகம பத்ததிக்கே) |
| நெஞ்சம் பயில | மனதை பழக்கி வழிபட |
| நினைக்கின்றிலேன் | அடியேன் எண்ணவில்லை. |
| பஞ்சு அஞ்சும் மெல்லடியார் | மிருதுவான பஞ்சை மிதித்தாலும் நோகும் என்று அஞ்சும் மென்மையான பாதங்களை உடைய தாய்மார்கள், |
| அறியார் எனினும் | அறியாமையை உடையவர்களாக இருந்தாலும் |
| பெற்ற பாலரையே | தமது குழந்தைகளை |
| அடியார் | தண்டிக்கமாட்டார். |

நீண்ட தனி வில்லும் ஐந்து அம்புகளும் முறையே கரும்பாகவும் மலராகவும் கைகளில் கொண்டு நின்ற தேவியே ! அன்னை அபிராமியே !

இது அல்லாமல் வேறு பற்றுக்கோடு இல்லையென்று உணர்ந்து, நின்னை வழிபட்டுத் தியானிக்கும் தவவழியில் என் மனத்தைப் பழகும்படி செய்ய அடியேன் எண்ணவில்லை. பஞ்சை மிதிப்பதற்கும் அஞ்சுகின்ற பாதங்களையுடைய தாய்மார்கள் தாம் பெற்ற பிள்ளைகள் அறியாமையை உடையவர்களாக இருந்தாலும் அவர்களை தண்டிக்கமாட்டார்கள்.

(தஞ்சம் - பற்றுக்கோடு, துணை, உபாயம். பயில - பல

காலம் பழக. சிலை - வில். இக்கு - கரும்பு. அலர் - மலர்)

'பொல்லாத சேயெனில் தாய் தள்ளல் நீதமோ புகலிடம் பிறிது முண்டோ' என்பார் தாயுமானவர்.

பெரியவர்கள் எப்போதும் தங்களைத் தாழ்வுபடுத்திப் பேசுபவர். சிறியவர்கள் தங்களைத் தாங்களே உயர்த்திக் கொள்வர்.

'பணியுமாம் என்றும் பெருமை ; சிறுமை

அணியுமாம் தன்னை வியந்து' என்கிறார் திருவள்ளுவர்.

பெரியவர்கள் தங்களைத் தாழ்த்திக்கொண்டு பேசினாலும் உலகம் அதை 'பணிவின் அடையாளமாகக் கருதும்', ஆனால்

சிறியவர்கள் தங்களைத் தாங்களே உயர்வாகப் பேசும்போது, உலகம் அதை 'ஆணவம், அகங்காரம், கர்வம், மமதை...' என்று கொள்ளும். இது கண் கண்ட உண்மை. மேற்கூறியது போல, அபிராமிபட்டரும் தன்னை சிறியேன், பேயேன், வினையேன், நாயேன், நாயிற் கடையனேன் என்று சொல்லிக் கொண்டாலும், அவர் மிகச் சிறந்த அன்பர்.

உலகத்திற்கு ஓர் எடுத்துக்காட்டாக, ஒரு சிறந்த உதாரண புருஷராக வாழ்ந்தவர் என்று எல்லோரும் அறிவர்.

மேலும் அன்னை அபிராமியிடம் அவர் தன்னை சேயாகவே கருதி அவளிடம் அன்பும், உரிமையும் கொண்டு கொஞ்சுபவர். அன்னையிடம் அதட்டிக் கேட்பார். சிலசமயம் அன்னையை மிரட்டுவார். அவர் தன்னைப் பரிபூரணமாக அன்னையிடம் தந்துவிட்டவர். அபிராமி அந்தாதி நமக்குக் கிடைத்த மிகச்சிறந்த பொக்கிஷம். இதற்கு ஈடு, இணை எதுவுமே இல்லை எனலாம்.

எப்படி ஸ்ரீராஜராஜேச்வரி வாக்தேவிகள் மூலமாக, தன் தர்பாரில், ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தை அரங்கேற்றினாளோ, அது போல, அபிராமிபட்டரின் வாயிலாக, மண்ணுலகில் அன்னை அபிராமி செய்த அரிய தோத்திரம் இந்த 'அபிராமி அந்தாதி.'

நாமும், அபிராமி அந்தாதியை தினமும் பாராயணம் செய்து பயன்பெறுவோம்.

முன்னும் அபிராமிபட்டர், 'நடுக்கடலுள் சென்றே விழினும்

கரையேற்றுகை நின் திருவுளமே' என்றார். இங்கு, 'பொல்லாத பிள்ளையாய் இருந்தாலும் மென்மையை (பஞ்சை மிதிப்பதாக இருந்தாலும் அஞ்சுகின்ற மெல்லிய அடியையுடைய பெண்கள்) உடைய தாய்மார்கள், தண்டிக்க மாட்டார்கள்.' என்று மிக நயமாகச் சொல்கிறார். மற்றும் ஓர் இடத்தில், 'வெறுக்கும் தகைமைகள் செய்யினும் தம் அடியாரை மிக்கோர் பொறுக்கும் தகைமை புதியதன்றே' என்பார்.

அதாவது, தான் விரும்பத் தகாத செயல்களைச் செய்தாலும் 'அன்னை அபிராமி' தன்னை தண்டிக்காமல் கரையேற்றுவாள் என்ற பரிபூரண நம்பிக்கை அவருக்கு. ஏனென்றால் அன்னை அபிராமியின் உள்ளம் கருணையின் வடிவமானது. அது இனிமையானது. மிகவும் மென்மையானது. வில்லை - கரும்பாகவும், அம்பை - மலராகவும் கொண்டவள் அல்லவா !

மனத்தை இனிக்கும் கரும்பாக்கி, துய்க்கும் தன் மாத்திரைகளை மலராக்கி ஏந்தும் பெருமாட்டியின் திருக்கோலத்தை நினைத்து தம் மனமும், புலனும் அப்படி ஆக வேண்டும் என்ற அவரின் உன்னத நினைப்பை நாம் உணரமுடிகிறது அல்லவா ! இதனை அடையும் வழி - தவநெறி. இந்த வழியிலே என் நெஞ்சத்தைப் பழக்கவில்லையே' என்று மனமார உருகுகிறார்.

அதாவது பொறிகளின் வழியே மனம் செல்லாமல், அன்னையையே உன்முகமாக நினைத்து உருகி, அவளோடு ஐக்கியமாவது. (தாதாம்யம்) இந்தப் பாடலில், சக்தியை அடையும் சாக்த சமயநெறியைக் காட்டுகிறார் அபிராமிபட்டர்.

## 60. அபிராமியின் சொல் பாலினும் இனிது.

*பாலினும் சொல் இனியாய் பனி மாமலர்ப் பாதம் வைக்க*
*மாலினும் தேவர் வணங்க நின்றோன் கொன்றை வார்சடையின்*
*மேலினும் கீழ்நின்று வேதங்கள் பாடும் மெய்ப்பீடம் ஒரு*
*நாலினும் சாலநன்றோ அடியேன் முடை நாய்த்தலையே !*

**(மெய்யுணர்வு தோன்ற)**

| | |
|---|---|
| பாலினும் சொல் இனியாய் | பாலைக்காட்டிலும் இனிய சொல்லை உடையவளே ! |
| பனி மாமலர்ப் பாதம் | குளிர்ச்சியுடைய அழகிய தாமரை மலர் போன்ற நின் திருவடிகளை |
| வைக்க | வைத்து அருள, |
| மாலினும் தேவர் | திருமாலும் மற்றும் எல்லா தேவர்களும் |
| வணங்க நின்றோன் | வணங்கும்படி நின்ற சிவபிரானது |
| கொன்றை | கொன்றை மாலை அணிந்த |
| வார் சடையின் மேலினும் | நீண்ட சடையின் மேலிடத்தைக் காட்டிலும், |
| கீழ்நின்று | பீடமாகக் கீழே அமர்ந்து |
| வேதங்கள் பாடும் | வேதங்கள் பாடுகின்ற |
| மெய்ப்பீடம் ஒரு | உண்மையான பிரணவ பீடங்கள் |
| நாலினும் | நான்கைக் காட்டிலும், |
| அடியேன் | அடியேனுடைய |
| முடை | நாற்றமுடைய |
| நாய்த் தலை | நாய்த் தலையைப் போன்ற தலையானது |
| சால நன்றோ | மிகவும் நல்லதாகக் கருதினாயோ ! ? |

பாலைக் காட்டிலும் இனிய சொல்லை உடையாய் ! குளிர்ச்சியுடைய அழகிய தாமரை மலர் போன்ற நின் திருவடிகளை வைத்தருள,

திருமாலும் மற்றும் உள்ள தேவர்களும் வணங்கும்படி நின்ற சிவபிரானது கொன்றைக் கண்ணியை அணிந்த நீண்ட சடையின் மேலிடத்தைக் காட்டிலும்,

கீழே நின்று கொண்டு வேதங்கள் பாடுகின்ற உண்மையான பிரணவ பீடங்கள் நான்கைக் காட்டிலும்,

அடியேனுடைய நாற்றமுடைய நாய்த்தலையைப் போன்ற தலையானது மிகவும் நன்றோ ?

அபிராமிபட்டர் எப்போதும் தாயின் திருவடிகளையே நினைந்து உருகுவார், அதைப் பற்றிப் பேசுவார், பாடுவார், மலர்களால் அர்ச்சிப்பார். அதாவது ஒரு கணமும் அவர் மனம் அந்த திருவடித்தாமரைகளை விட்டு வேறு எங்கும் செல்லாது. அப்பேர்ப்பட்ட பக்தர். அவரின் மூச்சும், நாடித்துடிப்பும் - எல்லாமே அன்னையின் திருவடிகளில் அடங்கும்.

இதன் காரணமாகவே, அன்னை அபிராமி, தனது திருவடிகளை அவர் சென்னியின் மேல் வைத்து அவரை 'அடியார்' ஆக்கினாள். அவர் தன்னை (அபிராமிபட்டர் - 'முடைநாய்த் தலையே. முடை - புலால் நாற்றம்) இழிவுபடுத்திக் கூறினாலும், அன்னைக்குத் தெரியாதா ? அவருடைய தூய அன்பும், பற்றும் ! அன்னை அவருடைய அன்பர்களிடம் பெருங்கருணை கொண்டவள், மிக்க எளியவள். தன் சேய்களுக்காக எது வேண்டுமானாலும் செய்யத் தயங்க மாட்டாள்.

அன்னையின் திருவடிகளை, 'பனிமா மலர்ப்பாதம்' என்று அழகாக வர்ணிக்கிறார் அபிராமிபட்டர். தன் அன்பர்களின் 'சென்னியின்' மேல் வைக்கும்போது அவர்கள் இன்புறும் வகையில் குளிர்ச்சியுடைய மலராக, மென்மையாக, மிருதுவாக இருக்க வேண்டும் என்ற கருணை உள்ளம் கொண்டவள் அல்லவா ! அன்னை அபிராமி ! (முன்னும், நின்பாத மென்னும் வாசக்கமலம்.." என்றார்).

அவளுடைய சொல் பாலைக் காட்டிலும் இனிமையானதல்லவா ! (சேய்கள் இவ்வுலகத்தில் பிறந்தவுடன் முதலில் அருந்துவது 'தாய்ப்பால்' தானே !) முன்னும், 'பண் அளிக்கும் சொல் பரிமள யாமளைப் பைங்கிளியே !' என்றார். பின்னும், 'பண் களிக்கும் குரல் வீணையும்...' என்பார்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில்,

27. நிஜ ஸல்லாப மாதுர்ய விநிர் பர்த்ஸித கச்சபீ : என்பதை முன்னும் பார்த்தோம்.

இறைவன் தலைமீது இருக்கும் கொன்றை மாலையே (ப்ரணவம்) தேவியின் சொரூபம் என்று முன்னும் பார்த்தோம்.

அம்பிகை எழுந்தருளியிருக்கும் சிந்தாமணி கிருகத்தின் நான்கு திசைகளிலும் நான்கு வாயிற்படிகளாக நான்கு வேதங்கள் இருக்கின்றன. அம்பிகையை அடைவதற்கு 'படிகளாக' வேதங்கள் உதவுகின்றன. இதனையே காஞ்சிப் பெரியவரும் சொல்வார். அதாவது 'நாம் வேதம் சொன்ன வழியில், வாழ்க்கை நடத்தவேண்டும்' என்று ! அம்பிகையை அணுக முடியாமல் வேதங்கள் ஏங்குகின்றன. கருணை உள்ளம் கொண்ட அன்னை அபிராமி, அவ்வப்போது, அப்படிகளின் மேல் இறங்கி, ஏறி வருவாள். இதையே, பின்னும் அபிராமிபட்டர், 'அழகுக்கு ஒருவரும் ஒவ்வாதவல்லி, அருமறைகள் பழகிச் சிவந்த பாதாம் புயத்தாள்...' என்பர். ஏற்கனவே சிவந்த பாதங்கள் - அம்பிகைக்கு. அவை வேதங்கள் மேல் ஏறி, இறங்குவதால் இன்னும் சிவப்பாகின்றன.

வேதங்களால் பாடப்படுகின்ற - ஸ்தூலப் பிரணவ பீடம், சூட்சுமப் பிரணவ பீடம், காரணப் பிரணவபீடம், மகா காரணப் பிரணவபீடம் - இந்த நான்கிலும் அம்பிகை திருவடியை வைத்து நிற்கிறாள்.

எத்தனையோ அருமையான இடங்கள் இருந்தும், தன்னுடைய 'சேய்' இருக்கும் இடம் என்று கருதி, அழுக்கு படிந்த இடமாய் இருந்தாலும் அங்கு வந்து 'தாய்' நிற்பது போல, என்னுடைய அன்னை அபிராமி அடியேனுடைய தலையில் திருவடி வைத்தாள் - என்று ஆனந்தத்தில் திகழ்கிறார்.

## 61. அன்னை அடியேனை ஆட்கொண்ட பேறு

*நாயேனையும் இங்கு ஒரு பொருளாக நயந்து வந்து*
*நீயே நினைவின்றி ஆண்டுகொண்டாய் நின்னை உள்ள வண்ணம்*
*பேயேன் அறியும் அறிவு தந்தாய் என்ன பேறு பெற்றேன்*
*தாயே மலைமகளே செங்கண்மால் திருத் தங்கைச்சியே !*

**(மாயை அகன்று உண்மை உணர்வு உண்டாக)**

| | |
|---|---|
| தாயே | அன்னை அபிராமியே ! |
| மலைமகளே | பர்வதராஜன் புத்திரியே ! |
| செங்கண் மால் | தாமரை மலர் போன்ற சிவந்த கண்களையுடைய திருமாலின் |
| திருத் தங்கைச்சியே | அழகிய தங்கையே ! |
| நாயேனையும் | நாயினும் கடையனான என்னையும் |
| ஒரு பொருளாக | நின் அருளுக்கு தகுதி வாய்ந்தவனாக |
| நயந்து | திருவுள்ளம் கொண்டு விரும்பி |
| நீயே இங்கு வந்து | நீயே இங்கே வலிய வந்து. |
| நினைவின்றி | சிறிதும் சிந்திக்காமல் |
| ஆண்டு கொண்டாய் | அடியேனை அடிமை கொண்டாய் |
| நின்னை உள்ள வண்ணம் | உன்னை உள்ளவாறு, |
| பேயேன் | பேய் போன்ற அறிவற்றவனான அடியேனுக்கு |
| அறியும் அறிவு | அறியும் மெய்ஞ்ஞானத்தை |
| தந்தாய் | அருளினாய் ! |
| என்ன பேறு | அடியேன் எத்தகைய பாக்கியத்தை |
| பெற்றேன் ! | அடைந்தேன் ! |

அடியேனுடைய தாயே ! மலையரசனாகிய இமவான் புத்திரி ஆகிய பார்வதியே, சிவந்த கண்களையுடைய திருமாலின் அழகிய தங்கையே !

நாய் போன்ற என்னையும், நின் அருளுக்குரிய பொருளாகத் திருவுள்ளங் கொண்டு விரும்பி, நீயே இங்கே வலிய வந்து, என்னுடைய நிலையைப் பற்றி எண்ணாமல், அடியேனை ஆட்கொண்டாய். (அடிமையாக்கிக் கொண்டாய்)

அத்தோடு நில்லாமல், உன்னை உள்ளவாறு, அறிவற்ற வனான (பேயேன்) எனக்கு அறிகின்ற மெய்ஞ்ஞானத்தையும் கொடுத்து அருளினாய்!

எவ்வளவு பாக்யம் அடியேன் செய்தவனாக இருக்க

வேண்டும் !

தன்னை ஆட்கொண்ட அன்னை அபிராமியின் கருணையை எண்ணி, எண்ணி, வியக்கிறார் அபிராமிபட்டர் ! அவர் அவதார புருஷர் அல்லவா!

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்

634. சைலேந்த்ரதநயா - மலையரசனின் மகள். இமவான் மலைகளுக்கரசன். அவன் மகளானதால் பார்வதீ, ஹைமவதீ, கிரிஜா - என்ற பெயர்கள். மலை ஜடமானது. தேவி சைதன்யமே வடிவானவள். ஜடப்பொருளான மலைக்கும் பெருமை சேர்க்கும் வகையில் அதிலிருந்து சைதன்யத்தை வெளிபடுத்தியவள்.

280. பத்மநாபஸஹோதரீ - பத்மநாபனான விஷ்ணுவின் உடன் பிறந்தவள்.

தாமரையைத் தொப்புளில் (நாபியில்) தோற்றுவித்ததினால் விஷ்ணுவுக்குப் பத்மநாபன் என்று பெயர். மார்க்கண்டேய புராணம் தேவியின் சங்கல்பத்தால் மூன்று இரட்டையர் தோன்றினர் என்று கூறுகிறது. தங்க நிறமான ப்ரம்மாவும், லட்சுமியும் ஒரு ஜோடி. நீலநிறமான விஷ்ணுவும், அம்பிகையும் ஒரு ஜோடி. வெண்மை நிற சிவனும், ஸரஸ்வதியும் ஒரு ஜோடி. இவர்கள் நிறங்கள் முக்குணமாயின.

காஞ்சியில், ப்ரம்மாவின் தவத்தினால், தேவீ தன் சகோதரனான விஷ்ணுவுடன் ஆவிர்பவித்தாள் என்றும் ஒரு வரலாறு உண்டு. பார்வதியே, அடுத்த அவதாரத்தில் ஸுபத்ரையாக, க்ருஷ்ணனின் சகோதரியாகத் தோன்றியதாக ப்ரஹ்ம புராணத்தில் கூறப்பட்டிருக்கிறது.

அபிராமிபட்டர் இந்தப்பாட்டில் தன்னை நாயேன், பேயேன் என்று தாழ்த்திச் சொல்வது, அவருடைய தன்னடக்கத் தையும், எளிமையையும் காட்டுகிறது. நாயேன் - நாய் ஏன் இழிந்தது ? தான் உண்டதை கக்கினால் மீண்டும் அதனையே உண்ணும் இயல்புடையது. மற்ற விலங்குகளில் இதைக் காண முடியாது. நாம் நாயைப் போன்றவர்கள். 'பட்டறி, கெட்டறி, பத்தெட்டு இறுத்தறி' - என்பார்கள். நாம், நம் அநுபவத்தினால், இன்ன செயல் தீமையை,

துன்பத்தைத் தருவது என்று தெரிந்தும் மறுபடியும் அந்தத் தீய செயலையே செய்யப் புகுகிறோம். இந்த வகையில் கக்கியதை உண்ணும் நாய்க்கு ஒப்பாக இருக்கிறோம்.

பேயேன் :- திருவள்ளுவர், 'உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து அலகையா வைக்கப்படும்' - என்றார்.

அதாவது, 'சான்றோர் - கடவுள் உண்டு, பிறப்பு-இறப்பு, சொர்க-நரகம் என்று சொல்லும் உண்மைகள் இல்லை என்று சொல்பவன் எவனோ, அவனே உலகத்தில் கண்கண்ட பேய்.' அபிராமிபட்டர், 'பெரியவர்கள் சொல்லியவற்றை அறிந்து கொள்ளாமல் இருந்த எளியேனை நீ ஆண்டு கொண்டாய்' - என்ற குறிப்பில் தன்னை 'பேயேன்' என்கிறார். அதாவது, பக்குவப்படாத நிலையில் இருந்த என்னையும் நீ ஆட்கொண்டு பேரின்பம் தந்தாயே, தாயே ! இத்தகைய பேறு யார் பெற்றார் ? - என்று வியக்கிறார்.

உண்மையில் உலகத்திலுள்ள உயிர்க்கூட்டங்கள் இறைவனை நோக்கிச் செய்கின்ற பக்தியைக் காட்டிலும் இறைவனுக்கு அவர்கள் பால் உள்ள அருள் அளவிடமுடியாதது. மிகச்சிறந்தது.

இறைவன், அருள் என்னும் மூட்டையை முதுகில் சுமந்து கொண்டு, சுமைதாங்கியை (யாராவது அருளைப் பெற வரமாட்டார்களா - அன்பர்கள்!) தேடிக்கொண்டு அலைகிறான். அதாவது சுமைதாங்கி என்று குறிப்பிட்டது - அன்பர்களை.

அதுபோல, அன்னையும், தன் கருணையையும், அருளையும் தன் நகில்களில் கொண்டுள்ளவள். பால்கொடுக்க முடியாதபோது பால்கட்டிக்கொண்டு துன்புறும் தாயைப்போலத் தவிக்கிறாள். அதனால் அவளே, சேயைத்தேடி, வலிய வந்து தன் அருளைத் தருகிறாள். இவ்வாறு இறைவனும், இறைவியும் தன் அருளைத் தந்திட துடிப்புடன் இருக்கும்போது, இந்த அரிய வாய்ப்பைத் தவற விடலாமா ? அதை நாமும் பெற, இப்போதே இறைப்பணியை ஆரம்பிப்போம்.

## 62. அன்னையின் கரும்பு வில்லும், மலரம்பும் என் சிந்தையில்

*தங்கச் சிலை கொண்டு தானவர் முப்புரம் சாய்த்து மத*
*வெங்கட் கரிஉரி போர்த்த செஞ்சேவகன் மெய்யடையக்*
*கொங்கைக் குரும்பைக் குறியிட்ட நாயகி கோகனச்*
*செங்கைக் கரும்பும் மலரும் எப்போதும் என் சிந்தையதே.*

**(எத்தகைய அச்சமும் அகல)**

| | |
|---|---|
| தங்கச் சிலை கொண்டு | பொன் மயமான மேருமலையை வில்லாகக் கொண்டு |
| தானவர் முப்புரம் | அசுரர்களுடைய முப்புரங்களையும் |
| சாய்த்து | சாம்பலாகும்படி எரித்து |
| மதவெங்கட் கரி | மதம் பொருந்திய வெம்மையான கண்களையுடைய யானையின் |
| உரி போர்த்த | தோலை உரித்து போர்த்துக் கொண்ட |
| செஞ்சேவகன் | சிவந்த, சிறந்த வீரனாகிய சிவபெருமான் |
| மெய்யடையக் | திருமேனி முழுவதிலும் |
| கொங்கைக் குரும்பை | தன்னுடைய நகிலாகிய குரும்பை |
| குறியிட்ட நாயகி | அடையாளம் இட்ட தலைவியாகிய காமாக்ஷி அம்மையின் |
| கோகனகச் | தாமரை மலர் போன்ற |
| செங்கைக் | சிவந்த திருக்கரங்களில் ஏந்திய |
| கரும்பும் | கரும்பு வில்லும் (இக்ஷு-கோதண்டம்) |
| மலரும் | மலர் அம்புகளும் |
| எப்போதும் | எப்போதும் |
| என் சிந்தையதே | என் உள்ளத்தில் வாசம் செய்வன. (என் உள்ளத்தை விட்டு ஒரு கணமும் அகலுவதில்லை.) |

மேரு மலையாகிய பொன் வில்லைக் கையில் ஏந்தி, அசுரர்களுக்குரிய மூன்று புரங்களையும் அழித்து, மதம் பொருந்திய கொடுமையையுடைய யானையின் தோலைப் போர்த்திய செவ்விய வீரனாகிய சிவபெருமான் திருமேனி முழுவதிலும் தன்னுடைய நகிலாகிய குரும்பை அடையாளம் வைத்த காஞ்சி காமாட்சி என்னும் அபிராமியின் தாமரை மலரை போன்ற சிவந்த கையிலுள்ள கரும்பு வில்லும். மலர் அம்புகளும் எக்காலத்திலும் என் மனத்திற்குள்ளே இருப்பனவாகும்.

அபிராமி அன்னையே பரப்ரஹ்ம சொரூபிணியான பராசக்தி என்ற சித்தாந்தத்தை உடையவராதலால், அபிராமிபட்டர், காஞ்சி

காமாட்சியும் அவளே என்று கூறுகிறார். அபிராமி அந்தாதியின் 2-ம் பாடலில்... 'திரிபுர சுந்தரியாவது அறிந்தனமே' என்றார். பின்னும் 'என் உமையவளே', 'மகிடன் தலைமேல் அந்தரி' (துர்கா) 'மனோன்மணி' இன்னும் 'நாயகி, நான்முகி, நாராயணி....' 'சிவகாமசுந்தரி' 'பயிரவி, பஞ்சமி, பாசாங்குசை...' என்று பல திருநாமங்களில் அன்னை அபிராமியையே அவர் காண்கிறார்.

திருக்கடவூர் அபிராமியின் திருஉருவத்தில் கரும்பு வில்லும், புஷ்ப பாணங்களும் இல்லை. அவற்றிற்கு பதிலாக அபயவரத ஹஸ்தங்களே இருக்கின்றன. அது போன்றே பாசாங்குசங்களுக்கு பதிலாக அக்ஷமாலையும், தாமரை மொட்டுகளும் இருக்கின்றன. ஆயினும் அபிராமிபட்டர் இந்த மூர்த்தியிலேயே தேவியின் எல்லா உருவங்களையும் காண்கிறார். முந்தின பாட்டில் 'நின்னை உள்ள வண்ணம் அறியும் அறிவு தந்தாய்' என்றார். அபிராமியே சகல சக்தி பேதங்களும் என்பதைக் கூறுகின்றார்.

சிவபெருமான் கையில் இருக்கும் வில் - மேருமலை.

அன்னையின் கையில் இருக்கும் வில் - இனிய கரும்பு.

காஞ்சிபுரத்திற்குத் தனியே ஒரு புராணம் உண்டு. அங்கே எழுந்து அருளியிருக்கும் ஏகாம்பர நாதர் மணல் லிங்கம். - அதாவது பிருதுவித்தலம் - பஞ்சபூதத் தலங்களில் ஒன்று. ஸ்ரீகாமாட்சி அன்னை மணலால் லிங்க உருவம் அமைத்து பூஜை செய்து வந்தாள் என்றும், அப்போது 'கம்பா நதி' பெருக்கெடுத்து ஓடிவர அச்சத்தினால் சிவலிங்கப் பெருமானை அணைத்தாள் என்றும், அவ்வாறு அணைத்தபோது எம்பெருமாட்டியின் தனத்தின் வடுவும், வளைத்தழும்பும் இறைவன் மேல் அமைந்தன என்றும் புராணம் கூறும். இதனால், 'முலைத் தழும்பர்' 'வளைத் தழும்பர்' என்று சிவனுக்கு நாமங்கள். அன்பினால் சிவபெருமானைத் தழுவிய போது அவனுடைய திருமேனி முழுவதும் அம்பிகையின் நகில்கள் பட்டன. இந்த அற்புதமான வரலாற்றை எண்ணி அபிராமிபட்டர் பாடும் பாடல் இது ! 62. காமாக்ஷீ - அழகிய கண்களையுடையவள்.

அன்னை காமாட்சி, காஞ்சிபுரத்தில் ராஜராஜேசுவரியாக, திரிபுரசுந்தரியாக, சிங்காதனத்தில் வீற்றிருக்கும் மஹா ராணியல்லவா !

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் - 2. ஸ்ரீ மஹாராக்ஞீ - சிறப்பு மிக்க பேரரசி 3. ஸ்ரீமத்ஸிம்ஹாஸனேச்வரீ - சிறந்த சிங்காதனத்தில் அமர்ந்து உலகை அடக்கி ஆள்பவள்.

சிவபெருமான் முப்புரங்களை அழித்து, அந்த அசுரர்களைத் தன் திருத்தொண்டில் ஈடுபடுத்தினான். என்னே அவன் கருணை !

இது போலவே, யானை வடிவில் இருந்த கஜாசுரனை அட்டு, அதன் தோலை உரித்துப் போர்த்துக்கொண்டான். அதனால் கிருத்திவாசன் - என்ற நாமம்.

கஜாசுர வதம் - திருமந்திரம் (344) - திருமூலர்

''முத்தீக் கொளுவி முழங்கெரி வேள்வியுள்

அத்தி யுரியர னாவது அறிகிலர்

சத்தி கருதிய தாம்பல தேவரும்

அத்தீயின் உள்ளெழுந்தன்று கொலையே'' (344)

யானை வடிவான கஜாசுரன் சிவனை எதிர்க்க, சிவபெருமான் அவனை அழித்து அவன் தோலைப் போர்த்தி தேவர்களுக்கு அருள் புரிந்தான். (அட்ட வீரச் செயலுள் ஒன்றாகும். தலம் - வழுவூர். மாயூரத்தின் வடக்கே - 25 கி.மீ.)

கருத்து : இறைவன் யானை போன்ற காரிருளைக் கிழித்து வேள்வியினின்றும் எழுந்த ஜோதி போல் விளங்கினான் என்பது.

திரிபுர சங்காரம் நடந்த தலம் - திருவதிகை வீரட்டம். கஜாசுரனை வதம் செய்த தலம் - தாருகாவனம் - வழுவூர் வீரட்டம்.

'அட்டவீரட்டம்' - சிவபெருமான் ஆற்றிய எட்டு வகையான வீரச்செயல்கள் நடந்த தலங்கள். (செஞ்சேவகம் - வஞ்சியாது எதிர்நின்று கொல்லும் வீரம். கரி - யானை, உரி - தோல்)

ஸௌந்தர்ய லஹரீ - 74வது ஸ்லோகத்தில், ''ப்ரதாப - வ்யாமிச்ராம் புரதமயிது : கீர்த்திமிவ தே ।'' என்று ஆதிசங்கரர் சிவபெருமானின் வீரத்தை அழகாக கவிநயத்தோடு கூறுகிறார். அதாவது, கஜாசுரனைப் பரமசிவன் கொன்ற பின் அவன் தலையில் இருந்த முத்துக்கள் எடுக்கப்பட்டு தேவிக்கு மாலையாக்கப்பட்டன. (தேவி தன் கணவனின் வீர பிரதாபத்தைப் பெருமையுடன் தன்

மார்பகத்தின் மேல் மாலையாக அணிந்திருக்கிறாள். பதியின் புகழே பத்னிக்கு மாலையல்லவா !)

சிவபெருமானை - யோகியாக நினைப்பவர்களுக்கு இங்கு அவன் ஒரு தலை சிறந்த மாவீரனாக, அபிராமிபட்டர், புரிய வைக்கிறார். அவன் வீரத்தில் கருணையும் உண்டு. அன்னையோ 'அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி...' நம் பண்டைய வரலாறுகளில் காதலும், வீரமுமே - வாழ்க்கையின் அடிப்படையாகப் பேசப்படுகின்றது.

அன்னையின் கரும்பு வில்லும் புஷ்ப பாணமும் தன் சிந்தையில் எப்போதும் இருப்பதால் மனமும், இந்திரியங்களும் செயல் அடங்கின என்று மறைமுகமாகச் சொல்லுகிறார் அபிராமி பட்டர். மனமும், இந்திரியங்களும் அடங்கி பூஜை செய்வது தான் "காம கலா த்யானம்." இது தான் ஸ்ரீ வித்யையின் முக்கிய அம்சமாகும். அபிராமி பட்டர் தலைசிறந்த ஸ்ரீ வித்யா உபாசகரல்லவா !

## 63. அன்னை அபிராமியே - ஆறு சமயங்களுக்கும் தலைவி.

*தேறும்படி சில ஏதுவும் காட்டி முன்செல் கதிக்குக்*
*கூறும் பொருள் குன்றிற் கொட்டும் தறிகுறிக்கும் சமயம்*
*ஆறும் தலைவி இவளாய் இருப்பது அறிந்திருந்தும்*
*வேறும் சமயம் உண்டு என்று கொண்டாடிய வீணருக்கே.*

**(நல்லறிவு உண்டாக)**

| | |
|---|---|
| குறிக்கும் சமயம் ஆறும் | ஷண் மதங்கள் (காணாபத்யம், சைவம், சாக்தம், வைணவம், கௌமாரம், சௌரம்) என்று சொல்லப்பட்ட ஆறு மதங்களுக்கும் |
| தலைவி இவளாய் | பராசக்தியே (அபிராமியே) தலைவி |
| இருப்பது அறிந்திருந்தும் | என்பதை அறிந்தும் |
| வேறும் சமயம் | வேறு சமயம் |
| உண்டு என்று கொண்டாடிய | இருப்பதாகக் கருதி அவற்றைப் பின்பற்றும் |
| வீணருக்கே | வீண் பொழுது போக்கும் அறிவிலிகளுக்கு, |
| தேறும்படி | அவர்கள் கடைத்தேறும் படி |
| சில ஏதுவும் காட்டி | சில மேற் கோள்களைக் கூறி |
| முன்செல்கதிக்கு | இனிச் செல்லுகிற நற்கதிக்கு |
| கூறும் பொருள் | (உபாயம் இது) என்று சொல்லும் உண்மைப் பொருள், |
| குன்றிற் கொட்டும் தறி | குன்றின் மேல் அடிக்கும் மரத்தாலான ஆப்புக்களைப் போன்றவையாகும். |

ஷண்மதங்கள் என்று சொல்லப்பட்ட ஆறுமதங்களுக்கும் 'அன்னை அபிராமியே' தலைவி என்பதை அறிந்தும் வேறு சமயம் இருப்பதாகக் கருதி அவற்றைப் பின்பற்றும் வீண்பொழுது போக்கும் அறிவிலிகளுக்கு அவர்கள் கடைத்தேறும்படி, சில முகாரந்தங்களைக் கூறி, அவர்கள் அடைய இருக்கும் நற்கதிக்கு மூலமான சாக்தாகமங்களைக் கூறுதல் மலையை உடைக்க ஒரு மரக்கட்டையைப் பயன்படுத்துவது போலாகும்.

'அபிராமி சமயம் தான் தலைசிறந்தது. இதுவே நமக்கு முக்தியை அடையும் வழியைக் காட்டும்' - என்று ஆணித்தரமாக அடித்துச் சொல்கிறார் அபிராமிபட்டர். பின்னும் 'அபிராமி சமயம் நன்றே' - என்பார்.

சமயங்கள் (ஷண்மதங்கள்) ஆறு :-

சூரியனை முழுமுதற் கடவுளாகக் கொண்ட சௌரம்.

கணபதியை தனித் தலைமைக் கடவுளாகக் கொண்ட காணாபத்தியம்.

முருகனை முன் நிறுத்துவதாகிய கௌமாரம்.

சக்தியைப் பரதேவதையாக வழிபடும் சாக்தம்.

விஷ்ணுவைத் தலைவனாகக் கொண்டு வழிபடும் வைஷ்ணவம்.

சிவபெருமானைப் பரம்பொருளாக வைத்து வழிபடும் சைவம்.

இந்த ஆறு சமயங்களையும் ஆதி சங்கரர் வரையறைப் படுத்தி அமைத்தார். இவை எல்லாமே, தமக்கு பிரமாணமாக வேதத்தையே மேற்கோள் காட்டும் இயல்பை உடையன. ஆதலின் இவை யாவும் வைதிக சமயங்கள். இவற்றை 'ஊழ்கொண்ட சமயம்' (முறையாக அமைந்த சமயங்கள்) என்று கம்பன் பாடுவான்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்

201. ஸத்கதிப்ரதா - நல்ல கதியை வழங்குபவள். 202. ஸர்வேச்வரீ - எல்லாவற்றிற்கும் ஈச்வரீ 203. ஸர்வமயீ - எல்லாமாயிருப்பவள். 204. ஸர்வமந்த்ரஸ்வரூபிணீ - எல்லா (7 கோடி) மந்த்ரங்களின் வடிவானவள். 205. ஸர்வயந்த்ராத்மிகா - எல்லா யந்திரங்களின் வடிவமாயிருப்பவள். யந்த்ரங்கள், வழிபடும் தேவதையின் சக்தியை தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் கோடுகளின் வடிவானது. 206. ஸர்வதந்த்ரரூபா - எல்லா தந்த்ரங்களுமே தன் உருவமாய்க் கொண்டவள்.

மேற்கூறிய நாமாக்கள் 'அன்னை அபிராமியே' - எல்லா வற்றிற்கும் 'தலைவி' என்பதைப் புலப்படுத்துகிறது அல்லவா !

442. குமார கண நாதாம்பா - முருகனுக்கும் கணபதிக்கும் தாய். மாரனை (மன்மதனை) பழிக்கும் அழகு உடையவனாதலின் முருகனைக் குமாரன் என்பார்கள். (குத்ஸிதோ மாரயேந) 275. பானு மண்டல மத்யஸ்த்தா - சூர்ய மண்டலத்தின் நடுவில் இருப்பவள். அம்பாளை சூர்ய மண்டலத்தின் நடுவில் இருப்பவளாகத்

தியானித்து வழிபடுவது ஒரு முறை. 267. கோவிந்தரூபிணீ - கோவிந்தன், அதாவது, விஷ்ணுவின் வடிவானவள். சைவத்தின் பரம்பொருளாகிய சிவபிரானுடைய அருளே வடிவானவள் சக்தி.

சிவபிரானுக்கு மனைவியாகவும், தாயாகவும், மகளாகவும் வெவ்வேறு நிலைகளில் விளங்குகிறவள் 'அன்னை அபிராமி'

எனவே, 'அன்னை அபிராமி' - எல்லா சமயங்களுக்கும் தலைவி ! அவளுக்கு ஆறு சமயங்களும் உடன்பாடு. 'நாரணி அறத்தின் நாரி ஆறு சமயத்தி' - திருப்புகழ்.

இவ்வாறு இருக்கும்போது, புதியதாக ஒரு சமயத்தை அமைத்து, அது தான் உய்யும் வழியைக் காட்டுவது என்று சொல்பவர்கள், 'வீணர்கள்' என்கிறார் அபிராமிபட்டர். இவர்களுக்கு எப்படிச் சொல்லினும், அது ஏறாது. (ஏதுக்கள், எடுத்துகாட்டு எதுவும் பயன்படாது). மண் உள்ள இடத்தில் முளை அடித்தால் இறங்கும். பாறையில் அது இறங்குமா ? 'வன்மனப் பாறை கட்கேறுமோ ?' என்பார் அப்பர்.

வீணர்களிடம் நல்ல வழியைப் பற்றி சொல்வது, மலையை உடைக்க ஒரு மரக்கட்டையைப் பயன்படுத்துவது போல் ஆகும். தம்மிடம் வரும் மாணவர்களின் தகுதியைப் பொருத்தே நல்லாசிரியர்களும் அவர்களுக்கு போதிப்பர்.

பக்குவம் உடையவர்களுக்கே உண்மை விளங்கும் என்று சொல்லி, 'எல்லாச் சமயங்களுக்கும் தலைவியான அன்னை அபிராமியை உற்ற துணையாகக் கொள்பவர்களுக்கே நற்கதி கிடைக்கும்.' என்று கூறாமல் கூறுகிறார்.

## 64. அன்னை அபிராமியிடம் மட்டும் அன்பு பூண்டு கொண்டேன்

*வீணே பலிகவர் தெய்வங்கள் பாற்சென்று மிக்க அன்பு*
*பூணேன் உனக்கன்பு பூண்டுகொண்டேன் நின் புகழ்ச்சி அன்றிப்*
*பேணேன் ஒரு பொழுதும் திருமேனி ப்ரகாசம் அன்றிக்*
*காணேன் இருநிலமும் திசை நான்கும் ககனமுமே.*

**(பக்தி பெருக)**

| | |
|---|---|
| வீணே | வீணாக |
| பலிகவர் | உயிர்ப்பலியை ஏற்றுக் கொள்ளும் |
| தெய்வங்கள் பாற்சென்று | தெய்வங்களிடம் போய் |
| மிக்க அன்பு பூணேன் | மிக்க பக்தியைக் கொள்ளமாட்டேன். |
| உனக்கு அன்பு | உனக்கே அன்பை |
| பூண்டு கொண்டேன் | மேற்கொண்டேன் |
| ஒரு பொழுதும் | ஒரு காலத்திலும் |
| நின் புகழ்ச்சி அன்றிப் | நின் புகழையல்லாமல் |
| பேணேன் | வேறு ஒருவர் புகழிலும் விருப்பம் கொள்ளேன் |
| இருநிலமும் | பெரிய பூவுலகத்திலும், |
| திசை நான்கும் | நான்கு திசைகளிலும் |
| ககனமுமே | மேலே உள்ள வானத்திலும் |
| திருமேனி ப்ரகாசம் | நின் திருமேனியின் ஒளியைத் |
| அன்றிக் காணேன் | தவிர வேறு ஒன்றையும் காணேன் |

தாயே ! வீணாக உயிர்பலியை ஏற்றுக் கொள்ளும் புன்சிறு தெய்வங்களிடம் போய் மிக்க பக்தியைக் கொள்ளமாட்டேன். நினக்கே அன்பை மேற்கொண்டேன். ஆதலின் ஒரு காலத்திலும் நின் புகழையல்லாமல் வேறு ஒருவர் புகழிலும் விருப்பம் கொள்ளேன். அடியிலுள்ள பூமியிலும், சுற்றியுள்ள நான்கு திசைகளிலும், மேலே உள்ள வானத்திலும் எங்கும் நின் திருமேனியின் ஒளியையன்றி வேறு ஒன்றையும் காணேன்.

புகழ்ச்சி பேணுதல் - வாக்கின் செயல், ப்ரகாசம் காணுதல் - உடம்பின் செயல், அன்பு பூணுதல் - உள்ளத்தின் செயல்.

மூன்று கரணங்களாலும் அம்பிகையை வழிபடவேண்டும் என்று இந்தப் பாடல் மூலம் நமக்கு உணர்த்துகிறார் அபிராமி பட்டர்.

மேலும் அவரிடம் பொறாமை கொண்ட சிலர், அவரை க்ஷுத்ர தேவதையை உபாசிக்கிறவர் என்றும், வாமாசாரத்தில் ஈடுபட்டவர் என்றும் பேசிப் பழித்தார்கள். மன்னன் சரபோஜியிடமும் இதைத்தான் சொன்னார்கள்.

ஆனால் அபிராமி பட்டரோ பரம சாத்துவிகர். அவர் அன்னை அபிராமி நினைவாகவே வாழ்ந்தார் அல்லவா ! அதனால் மற்றவர்களைப் பற்றியோ அல்லது வேறு எதைப் பற்றியோ நினைக்க வாய்ப்பில்லை. அவர், 'தன்னை அபிராமியின் பித்தன்' என்று சொல்லிக் கொள்வதில் பேரானந்தம் கொண்டவர். பித்து - ஒன்றையே நினைத்து, வேறு எதிலும் மனம் செல்லாமல் இருப்பது.

உலக நினைவு அவருக்கு வந்தபோது, மென்மையே வடிவான லலிதாம்பிகையான அன்னை அபிராமியை வழிபடும் பேறுபெற்ற எனக்கு துர்த்தேவதை மீது மனம் மேவுமா ? என்ன பேதை உலகம் ! - என்ற எண்ணத்தில் எழுந்த பாடல் இது.

தாயினிடம் ஒட்டிக்கொண்டு பாலருந்தும் குழந்தை யார் அழைத்தாலும் (தந்தை உள்பட) உடனே போகாது. அதைப்போலவே அபிராமி பட்டர் அன்னை அபிராமியிடம் அன்பினால் அணைத்துக் கொள்ளப்பட்டவர். அதனால் அவருக்கு 'அன்னை அபிராமியைத் தவிர' வேறு எந்த தெய்வத்தையும், எப்படி வழிபடத் தோன்றும் ? !

அபிராமிபட்டருக்கு, எங்கே பார்த்தாலும் அம்பிகையின் தேசுடைய திருமேனியே தோன்றுகிறதாம். நிலம், திசைகள், வானம் - இவற்றில் அன்னை அபிராமியின் திருமேனிப் பிரகாசம் ஒன்றையே காண்கிறார். பின்னும், 'பார்க்கும் திசைதொறும்...' என்று பாடுவார்.

உள்ளத்தில் அம்பிகையின் தியானமும், உரையில் அவளைப் புகழ்ந்து பேசும் பேச்சும், பார்வையில் எங்கும் அவளைப் பார்த்து வணங்கும் காட்சியும் உடைய உயர்ந்த நிலை. அதாவது மனம், வாக்கு, காயம் - என்ற மூன்று கரணங்களும் அவள் மயமாகிய நிலை. 'ஸர்வம் ப்ரம்ம மயம்' - என்பதைப் போன்றது. முதிர்ந்த பக்தியினால், ஞானமாக மலர்ந்தவர்களுக்கு மட்டுமே ஏற்படும்

நிலை. அத்தகைய நிலையில் இருக்கிறார் அபிராமிபட்டர்.

திருமூலர், திருமந்திரத்தில், 'மரத்தை மறைத்தது...' என்பதைப் பார்த்தோம். அதாவது, யானையை மறந்து அதன் மூலப்பொருளாகிய மரத்தைப் பார்ப்பவன் தச்சன். பஞ்சபூதங்களை மறந்து உண்மைப் பொருளைக் காண்பவன் ஞானி.

ஞானி - நான், நீ - என்று பிரித்துப் பார்க்காமல் ஒன்றாகிவிடுபவன். 'ஞானி' - யார் என்பதை பகவத் கீதை அழகாகக் கூறுகிறது (7.19)

''பஹூனாம் ஜன்மனாமந்தே ஞானவான் மாம் ப்ரபத்யதே

வாஸீ தேவ : ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்ல பா :''

பல பிறப்பு, இறப்புகளுக்குப் பின் ''உண்மை'' அறிந்து என்னிடம் சரணடையும் சான்றோனே ஞானியாவான்.

ஸ்ரீவித்யா உபாஸனையில் தட்சிணாசாரம், வாமாசாரம் - என்று இருவகை. தட்சிணாசாரம் - சத்துவகுண வழிபாடு.

வாமாசாரம் - தாமத குண வழிபாடு.

இதில் 'தட்சிணாசாரம்' என்ற வகைதான் தமிழ்நாட்டில், வழிபடும்முறை. இதுவே நல்லவழி. வாமாசாரம் - வங்காளத்தில் வழிபடும் வகை.

சேரியில் பிறந்த நந்தனார், புலால் உண்பதையும், கள்ளைக் குடிப்பதையும் அறவே வெறுத்தார். தன்னைச் சுற்றியிருந்தவர் களுடைய பழக்க, வழக்கங்களில் அருவருப்புற்ற நந்தனார், நடராசப் பெருமானிடம் பக்திகொண்டு, 'நாளைக்குச் சிதம்பரம் போவேன்' என்று அவர் உள்ளம் முறுகியது. அதனால் அவருக்கு, 'திருநாளைப் போவார்' - என்ற பெயர்.

அபிராமிபட்டர் முக்கரணங்களாலும் 'அன்னை அபிராமியை' வழிபட்டவர்.

## 65. அன்னையின் வல்லபம் - திருமுருக அவதாரம்.

*ககனமும் வானும் புவனமும் காணவிற் காமன் அங்கம்*
*தகனம் முன் செய்த தவப்பெருமாற்குத் தடக்கையும் செம்*
*முகனும் முந் நான்கிரு மூன்றெனத் தோன்றிய மூதறிவின்*
*மகனும் உண்டாயதன்றோ வல்லி நீ செய்த வல்லபமே.*

**(புத்திர பாக்கியம் உண்டாக)**

| | |
|---|---|
| வல்லி | அபிராம வல்லியே ! |
| முன் செய்த | முன் ஒரு காலத்தில் |
| ககனமும் | ஆகாயத்தில் உள்ளவர்களும் |
| வானும் | தேவர்களும் |
| புவனமும் | மனிதர்களும் |
| காண | பார்க்கும்படி |
| விற்காமன் | கரும்பு வில்லைத் தாங்கிய மன்மதனது |
| அங்கம் | உடலை |
| தகனம் செய்த | நெற்றிக்கண்ணால் எரித்த |
| தவபெருமாற்கு | தவமுனிவரான (தட்சிணாமூர்த்தி) சிவபெருமானுக்கு |
| தடக்கையும் | நீண்ட திருக்கரங்களும் |
| செம்முகனும் | சிவந்த முக மண்டலங்களும் (முறையே) |
| முந் நான்கு | பன்னிரண்டும் |
| இரு மூன்றென | ஆறுமாக |
| தோன்றிய | சரவணத்தில் உதித்த |
| மூதறிவின் மகன் | ஞானமே உருவாகிய முருகன் (உண்டானது) |
| நீ செய்த வல்லபமே ! | உன்னுடைய பராக்கிரமம் அல்லவா ! |

அபிராமி வல்லியே ! (கொடி போன்றவளே), ஆகாயம், தேவலோகம், பூலோகம் இவற்றில் உள்ளோர் யாவரும் பார்க்கும்படி, வில்லைத் தாங்கிய மன்மதனது உடலை அக்காலத்தில் நெற்றிக் கண்ணால் எரித்த தக்ஷிணாமூர்த்தியாகி தவமியற்றிய ஜிதேந்திரியரான சிவபெருமானுக்கு, நீண்ட, விசாலமான திருக்கரங்களும், சிவந்த முக மண்டலங்கள் முறையே பன்னிரண்டும் ஆறுமாக உதித்த ஞானமே உருவாகிய குமாரன் உண்டானது உன்னுடைய பராக்கிரமத்தினால் அல்லவா ?

சிவபெருமான் - மலை - கடினமானது. பார்வதி - கொடி - மென்மையானது.

கடினமான மலையை, தன் மென்மையான கொடியினால் சுற்றி, சுற்றியே கரைத்தவள் அல்லவா அன்னை அபிராமி ! இந்த வல்லபம் அவளுக்கே உரித்தானது.

சிவபெருமான் தட்சிணாமூர்த்தியாக ஆழ்ந்த யோகத்தில் இருந்தார். அம்பிகை மலையரசனின் மகள் பார்வதியாகத் தோன்றினாள். சூரபத்மன் என்ற அசுரனின் கொடுமையால், தேவர்கள் அவதியுற்றனர். சிவனுக்கும், பார்வதிக்கும் பிறக்கும் பிள்ளையே சூரபத்மனை சங்காரம் செய்ய ஆற்றல் பெற்றவன் என்று அறிந்தனர்.

ஆனால் சிவனோ, ஆழ்ந்த தவத்தில் உள்ளார். அவரை யோகத்தினின்றும் எழுப்ப, மன்மதனை அனுப்பித்தனர். மன்மதன் மலர் அம்புகளை எய்த, சிவன் தன் நெற்றிக்கண்ணால், யாவரும் அறியும்படி அவனை எரித்தார். (அதாவது அவன் உடலை மட்டும்) பிறகு இரதியின் வேண்டுகோளுக்கு இணங்க, சிவபெருமான் - பார்வதி திருக்கல்யாணம் நடந்து முடிந்த பின், அவள் கண்களுக்கு மட்டும் தெரியும் படியாக, மன்மதன் மறுபடியும் உயிர் பெற்றான். அன்று முதல் 'அநங்கன்' என்று அழைக்கப்பட்டான்.

பார்வதி-பரமேசுவரன் திருமணத்தினால் திருமுருகன் தோன்றினான். காமனைத் தகனம் செய்தமையால், 'காமாரி' - என்று சிவபெருமானுக்குத் திருநாமம்.

காமன் சிவனிடம் வந்து தன் விளையாட்டைக் காட்டினான். ஆனால் சாம்பலாக ஆகிவிட்டான். (காமனை அழித்த காமேச்வரன்.) இவருக்கு பின் எப்படி குழந்தைகள் பிறக்கும் என்று மறுபடியும் தேவர்களுக்கு கவலை ? !

அப்போது தான் தேவி தன் அபரிமிதமான அன்பு கலந்த ஆற்றலை எல்லோருக்கும் புரியவைக்கிறாள் ! தவப்பெருமானை வசப்படுத்தி தன் விருப்பத்திற்கு இசையச் செய்து அதன் விளைவாக ஒரு பிள்ளையையும் தோன்றும்படி செய்துவிட்டாள். அப்பிள்ளை - ஞானத்தின் உருவம்.

சிவபெருமான் - ஐந்துமுகம், பத்துகரங்கள். அம்பிகை - ஒருமுகம், இருகரங்கள் இவை ஒன்று சேர்ந்து ஆறுமுகமாக,

பன்னிருகரங்களுடன் தோன்றினான் குமாரன்.

மன்மதனை எரித்தது - அழித்தல், (சக்தி உடன் இல்லாத போது). குமாரனை தோற்றுவித்தது - ஆக்கல், - (சக்தியுடன் இருக்கும் போது) முதலில் காமதகனம் - பின்பு குஹாவதாரம். இதனை அடுத்து 'முன்' - என்றார். சக்தியில்லாதபோது சம்ஹாரம், சக்தியிருக்கும்போது - ஸம்ஸாரம். குமாரன் - உடல் ஆற்றல் மட்டுமன்றி, ஞானத்தால் முதிர்ந்தவன், ஞானஸ்கந்தன், ஞானபண்டிதசாமி ஆனவர். தந்தைக்கு குருவாய் நின்று உபதேசம் பண்ணியதால் 'ஸ்வாமிநாதன்' - என்று பெயர் பெற்றவன் அல்லவா !

606. - குஹஜன்மபூ - முருகனின் அன்னை. 706. குஹாம்பா - ஸுப்ரமணியனின் தாயார். (குஹன் - முருகன்)

நெற்றிக் கண்ணில் தோன்றிய அக்னியே காமனை எரித்தது. அக்கண்ணில் தோன்றிய பொறிகளே முருகனின் அவதாரத்திற்கு ஆதாரம் ஆயிற்று. நெற்றிக்கண்ணுக்கு அழித்தல், ஆக்கல் என்ற இரண்டு சக்திகளும் உண்டு. இதை ஞானக்கண் என்றும் கூறுவர். ஞானமே காமத்தை எரித்தது. அந்த ஞானமே தனியுருக் கொண்டு முருகனாகத் தோன்றியது ? எல்லாம் அன்னை அபிராமியின் ஆற்றலல்லவா !

தைத்ரீய உபநிஷத் - 'அஸத்வா இதமக்ராஸீத்...'

அதாவது, முதன் முதலில் நாமரூப விசேஷங்களில் விகாரப்படாத, அவ்யக்தமாய், அஸத்தாய் பிரம்மம் இருந்தது. அதை இயக்கியது சக்தியே. அந்த அஸத்துக்கு நான் என்ற அறிவு ஏற்பட்டு, 'ஸத்தானது'.

சக்தி இன்றி சிவன் வழிபடாது. சக்தியின் வல்லபத்தால் அன்றோ நமக்கு. 'திருமுருக அவதாரம்' கிடைக்கப்பெற்றோம். என்னே ! அன்னையின் அருள் !

## 66. அன்னையிடம் அபிராமிபட்டரின் பணிவு.

*வல்லபம் ஒன்று அறியேன் சிறியேன் நின்மலரடிச்செம்*
*பல்லவம் அல்லது பற்று ஒன்று இலேன் பசும்பொற் பொருப்பு*
*வில்லவர் தம்முடன் வீற்றிருப்பாய் வினையேன் தொடுத்த*
*சொல் அவம் ஆயினும் நின் திருநாமங்கள் தோத்திரமே.*

**(கவிபாடும் ஆற்றல் பெற)**

| | |
|---|---|
| பசும்பொற் பொருப்பு | பசும் பொன்மயமான மேருமலையை |
| வில்லவர் | வில்லாக உடைய சிவபெருமான் |
| தம்முடன் வீற்றிருப்பாய் | உடன் அமர்ந்திருக்கும் அபிராமி அம்மையே ! |
| வல்லபம் ஒன்று அறியேன் | ஆற்றல் உனது யாதொன்றும் அறியாதவன் |
| சிறியேன் | சிற்றறிவும், சிறிய ஆற்றலும் உடைய அடியேன் |
| நின் மலரடிச் செம் | நின் திருவடியாகிய செம்மையாகிய |
| பல்லவம் அல்லது | தளிரையல்லாமல் |
| பற்று ஒன்று இலேன் | வேறு ஒரு பற்றும் இல்லாதவன் |
| வினையேன் | தீவினையையுடைய அடியேன் |
| தொடுத்த சொல் | பாடிய இந்த அந்தாதி நூல் |
| அவமாயினும் | வீண் சொற்களே யாயினும் |
| நின் திருநாமங்கள் | இடையிடையே வைத்த நின் திருநாமங்கள் |
| தோத்திரமே | நினது புகழைக் கூறும் தோத்திரங்கள் ஆகும் (அது உன்னால் அங்கீகரிக்கக் கூடியதேயாகும்) |

பசும்பொன் மயமான மேருமலையை வில்லாகப் பிடித்த சிவபெருமானுடன் அமர்ந்திருக்கும் அபிராமி அம்மையே !

எந்த வகையான ஆற்றலையும் அடியேன் அறிந்தவனல்ல. சிற்றறிவும் சிறிய ஆற்றலும் உடைய நான் எங்கும் பரந்து நிற்கும் நின் திருவடியாகிய செம்மையாகிய தளிரை அல்லாமல் வேறு ஒரு பற்றும் இல்லாதவன்.

தீவினையையுடைய யான் அந்தாதியாகத் தொடுத்த சொற்கள் பொருள் இல்லாத வீண் சொற்கள் ஆயினும், இடையிடையே வைத்த நின் திருநாமங்கள் தோத்திரமே ஆகும்.

அபிராமிபட்டர் அன்னை அபிராமியின் புகழைப் பாடுவதில்

எல்லையற்ற இன்பம் காண்பவர். எவ்வளவு பாடினாலும், இன்னும் பாடிக்கொண்டே இருக்கவேண்டும் என்று எண்ணுபவர். இப்படியிருந்தும் அவர் தன்னடக்கத்தினால் தன்னை அறிவேன், சிறியேன், வினையேன் - என்று கூறிக்கொள்கிறார். ஒரு லட்சியவாதிக்குத் தான் செய்வதில் திருப்தி வராது. இன்னும் நன்றாக செய்யவேண்டும் என்று நினைப்பான். தனக்குத் தகுந்த ஞானமும், அறிவும், ஆற்றலும் இல்லை - அன்னையைப் பற்றிப் பாடுவதற்கு என்று நினைத்து மனம் உருகுகிறார்.

ஆனால் அவருக்கு, அவர் பாடிய அந்தாதியில், இடையிடையே அன்னையின் திருநாமங்களை சொல்லியிருப்பது ஞாபகம் வருகிறது. அதனால் சிறிது ஆறுதல் அடைந்து, 'அம்மா ! நான் என் கற்பனையில் தொடுத்த சொற்கள் பயன் அற்றவை. (பொருள் இல்லாத வீண் சொற்களாயினும்) ஆனாலும் ஆங்காங்கே, தொன்று தொட்டு வந்த உன் திருநாமங்களைச் சொல்லியுள்ளேன் அல்லவா ! அதனால் இந்த அபிராமி அந்தாதியை அங்கீகரிப்பாய்' - என்று தேவியிடம் மனம் உருகி நிற்கிறார்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் (732) - நாமபாராயணப்ரீதா

நாம பாராயணத்தால் ப்ரியம் அடைபவள். இந்த ஸஹஸ்ரநாமத்தை தினம் கீர்த்தனம் செய்யும் பக்தனிடம் ஸ்ரீலலிதா தேவியானவள் மிகவும் ப்ரீதியடைந்து அவனது விருப்பங்களை எல்லாம் அளிக்கிறாள். இந்த ஸ்தோத்ரத்தில் உள்ள ஒரு நாமத்தின் பாபத்தைப் போக்கும் சக்திக்குப் போதுமான பாபத்தைச் செய்ய பதினாலு லோகங்களாலும் முடியாது.

அம்பாளின் சொரூப லட்சணத்தை அறியாதவரும், ஸ்ரீ சக்ரபூஜை செய்யாதவரும், ஸ்ரீவித்யா மந்த்ரத்தை குருமூலம் உபதேசம் பெறாதவர்களும் கூட அம்பாளின் நாமாக்களை பாராயணம் பண்ணுவதனாலே சகல விருப்பங்களும் பூர்த்தியாகி இறுதியில் முக்தியும் எய்துகின்றனர்.

555. கலிகல்மஷ நாசினீ :- கலி தோஷத்தைப் போக்குபவள்.

கலியுகத்தில் கெட்ட எண்ணங்கள், செயல்கள் நிரம்பக் காணப்படும். ஆகையால் பாபங்கள் நிறைய இருக்கும். இந்த கலி

தோஷங்களைப் போக்குவதற்கு அம்பாளின் நாமகீர்த்தனமே கதி. நெருப்பை அணைக்க நீர் போல, இருட்டை விலக்க சூர்யோதயம் போல, கலியில் பாபக் கூட்டங்களை சாந்த (சமன)ப்படுத்த, தேவி நாமகீர்த்தனம் ஒன்றே போதும்.

தெரிந்தோ தெரியாமலோ செய்த எல்லா பாபங்களுக்கும் சிறந்த ப்ராயச்சித்தம் அம்பாளின் பாதத்தை நினைப்பது. அபிராமிபட்டர் பற்றியிருப்பது 'அன்னை அபிராமியின் திருவடிமலர்' மட்டுமே. வேறு எந்தப்பற்றும் அவருக்கு இல்லை. இதனையே

'மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருப்
பாதமே மனம் பாவித்தேன்' - என்பது சுந்தரர் தேவாரம்.

மனம் பற்பல பொருள்களைப் பற்றிக்கொள்ளும் சக்தி உடையது. அந்தப் பற்றை விட்டால்தான் ஈடில்லா இன்பம் உண்டாகும். 'அற்றது பற்றெனில் உற்றது வீடு'.

அன்னை அபிராமியின் திருவடிப்பற்று உள்ளத்திலும், அவள் திருநாமங்கள் நாவிலும் இருப்பதனால் இந்தப்பாடல்கள் சிறந்த பக்தி மணமுடைய தோத்திர மாலை ஆயின. இவர் தன்னை தாழ்த்திப் பேசுவதிலிருந்து இவருக்கு இந்தத் தகுதி உண்டு என்பதை நாம் உணர்ந்து கொள்கிறோம்.

## நின் திருநாமங்கள் தோத்திரமே

இந்தப் பாடலை உள்நோக்குடன் படிப்போர்க்கு இதன் ஆழ்ந்த கருத்து புலப்படும். அதாவது, அபிராமி அந்தாதி ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தின் பிரதிபலிப்பு அல்லது சாராம்சம் என்பது மிகத் தெளிவாக விளங்குகிறது. இந்நூலில் பல இடங்களில் அபிராமிபட்டர் ஒரு சிறந்த ஸ்ரீவித்யா உபாசகர், தினமும் தவறாது ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் பாராயணம் செய்து வந்தவர் என்று கூறப்பட்டுள்ளது – இந்தக் கருத்தின் அடிப்படையில் தான்.

எவ்வளவோ ஸஹஸ்ரநாமங்கள் இருந்தபோதிலும், ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்திற்கு மட்டும் தான், ''ஸ்ரீ'' என்ற அடைமொழி உள்ளது என்பதும் குறிப்பிடத்தக்கது. ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் சரியாக 1000 நாமாக்களைக் கொண்டது.

வடமொழி அறியாத தமிழர்களுக்கு, அன்னை அபிராமி, அபிராமிபட்டரின் வாயிலாக அருளிய ஆரம் – அபிராமி அந்தாதி.

## 67. அன்னையை அண்டாதவர் அல்லற்படுவர்.

*தோத்திரம் செய்து தொழுது மின்போலும் நின் தோற்றம் ஒரு*
*மாத்திரைப் போதும் மனத்தில் வையாதவர் வண்மை குலம்*
*கோத்திரம் கல்வி குணம் குன்றி நாளும் குடில்கள் தோறும்*
*பாத்திரம் கொண்டு பலிக்கு உழலா நிற்பர் பார் எங்குமே.*

**(பகைவர்கள் அழிய)**

| | |
|---|---|
| மின்போலும் | மின்னல் கொடி போன்ற |
| நின் தோற்றம் | நினது திருமேனித் தோற்றத்தை |
| ஒரு மாத்திரைப் போதும் | ஒரு க்ஷண நேரமாவது |
| தோத்திரம் செய்து | வாயினால் துதி செய்து |
| தொழுது | உடம்பால் வணங்கி |
| மனத்தில் வையாதவர் | உள்ளத்தால் தியானம் செய்யாதவர் |
| வண்மை | கொடைத் தன்மை |
| குலம் | குடியின் மேன்மை |
| கோத்திரம் | வம்சத்தின் பெருமை |
| கல்வி | தாம் கற்ற கல்வி அறிவு |
| குணம் | நல்லகுணம் முதலியவற்றில் |
| குன்றி | குறைபாடு உடையவராகி |
| நாளும் | தினந்தோறும் |
| பார் எங்கும் | உலகம் முழுவதும் |
| குடில்கள் தோறும் | வீடுகள் தோறும் |
| பாத்திரம் கொண்டு | பாத்திரத்தை கையில் ஏந்திக் கொண்டு |
| பலிக்கு உழலா நிற்பர் | பிச்சைக்காக திரிந்து வருந்துவர். |

அன்னை அபிராமியே ! நின்னை வாயால் துதி செய்து, கையால் தொழுது, மின்னலைப் போலச் சுடர்விடும் நின் திருமேனித் தோற்றத்தை ஒரு கணப் போதாவது மனத்தில் இருத்தித் தியானம் செய்யாதவர், கொடைத்தன்மை, குடிப்பிறப்பு, கோத்திரம், கல்வி, நல்ல குணம் முதலியவற்றில் குறைபாடு உடையவராகி உலகம் முழுவதும் ஒவ்வொரு நாளும் பிச்சைப் பாத்திரத்தைக் கையில் ஏந்திக்கொண்டு குடிசை தோறும் பிச்சைக்காகத் திரிவார்கள்.

முந்தின பாட்டில், அபிராமிபட்டர் அன்னை அபிராமியின் நாம பாராயணத்தின் பெருமையையும், மகிமையையும் இவ்வுலகிற்குப் புரியவைத்தார். இந்தப் பாடலில் 'ஒரு மாத்திரைப் போதும் மனத்தில் வையாதவர்' - என்று சொல்லி, அதன்

விளைவுகளைச் சொல்கிறார். அதாவது ஒரு கணப் போதாவது அன்னையை உள்ளத்திலே நிறுத்தி த்யானம் செய்தாலே, நமக்கு நன்மைகள் ஏற்படும் என்பதை அழகாக எடுத்து உரைக்கிறார்.

அன்னை அபிராமியின் திருக்கோயிலுக்குச் சென்று வலம் வந்து, தரிசித்து, வணங்கி, வாழ்த்துவது 'சரியை' என்னும் வழிபாடு. தானே பூஜை செய்வது 'கிரியை'. மனத்தால் தியானித்து ஒன்றுபடுவது 'யோகம்'. சரியை, கிரியை, யோகம் - இவற்றிற்கு அப்பால் ஏற்படுவது 'ஞானம்' அல்லது தெளிவு. பின் அம்பிகையின் முழுக் கருணைக்கும் ஆளாகலாம்.

தாயுமானவர்,

'விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞானம் நான்கும்

அரும்பு மலர் காய் கனிபோல் அன்றோ பராபரமே' - என்பார்.

அதாவது, சரியை, கிரியை, யோகம், ஞானம் - அரும்பு, மலர், காய், கனி போன்றது.

மனிதர்களாகப் பிறந்த நாம் அன்னை அபிராமியை வாயாரத் துதித்து, அவள் நாமங்களைப் பாராயணம் செய்து, கையினால் தொழுது, உடம்பினால் நமஸ்காரம் செய்து, மின்னல் போன்ற ஒளியையுடைய அவள் திருவடிவத்தை மனத்தில் நிறுத்தி தியானித்தால் (ஒரு கணப் போதாவது) பேரின்பம் பெறுவோம். ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் :- 107. தடில்லதா ஸமருசி - மின்னலைப் போல் பேரொளியுடன் விளங்குகிறாள். 'வித்யுல்லேகேவ பாஸ்வரா' - என்கிறது வேதம். 870. அந்தர்முக ஸமாராத்யா - உள்நோக்கு உள்ளவர்களால் (மனதில் அவளை த்யானிப்பவர்களுக்கு) நன்கு ஆராதிக்கக் கூடியவள்.

871. பஹிர்முகஸுதுர்லபா - மனதை விஷயங்களில் அலைய விடுபவர்களுக்கு இவளை அடைவது கடினம்.

355. ஸம்ஹ்ருதாசேஷ பாஷண்டா (பாகண்டா - என்றும் பாடம் உண்டு) வேதங்களுக்கு மாறான ஆசாரத்தை உள்ளவர்கள் எல்லோரையும் அழிப்பவள். பா - வேதம். அதைக் கண்டிக்கிறவர் பாகண்டர். அப்படிப்பட்ட பாகண்டர்களையும் அழிக்கிறவள்.

## 68. அபிராமியே - சிவகாமசுந்தரி

*பாரும் புனலும் கனலும் வெங்காலும் படர்விசும்பும்*
*ஊரும் முருகு சுவைஒளி ஊறுஒலி ஒன்று படச்*
*சேரும் தலைவி சிவகாமசுந்தரி சீறடிக்கே*
*சாரும் தவம் உடையார் படையாத தனம் இல்லையே.*

**(நிலம், நீர், வீடு, வாசல், தோட்டம் போன்ற செல்வங்கள் பெருக)**

| | |
|---|---|
| பாரும் | நிலமும் |
| புனலும் | நீரும் |
| கனலும் | நெருப்பும் |
| வெங்காலும் | வேகமாகிய காற்றும் |
| படர்விசும்பும் | எங்கும் பரவியுள்ள ஆகாசமும் |
| ஊரும் | (இவற்றினுள்) படர்ந்திருக்கிற |
| முருகு | மணம், வாசனை யாயும் |
| சுவை | சுவை, ரஸமாயும் |
| ஒளி | பிரகாசமாயும் (ரூபம்) |
| ஊறு | ஸ்பர்ஸமாயும் |
| ஒலி | (சப்தம்) ஓசையாயியும் (என்று பஞ்ச தன் மாத்ரைகளாய்) |
| ஒன்று படச் சேரும் | இரண்டறக் கலந்து நிற்கும் |
| தலைவி | எல்லாவற்றிற்கும் மூலகாரணமாகிய தலைவி |
| சிவகாமசுந்தரி | சிவகாம சுந்தரியின் |
| சீறடிக்கே | சிறந்த சிறிய திருவடிகட்கே |
| சாரும் | சரணடைந்த, |
| தவமுடையோர் | தவம் உடைய பக்தர்கள் |
| படையாத | அடையமுடியாத (தமக்கு உரிமையாகப் பெறாத) |
| தனம் இல்லையே | செல்வம் ஏதும் இல்லை. |

நிலம், நீர், நெருப்பு, வேகமாக வீசுகின்ற காற்றும், எங்கும் பரந்திருக்கும் ஆகாயமும், அதனிடத்தில் பரவி இருக்கும் மணமும், சுவையும், ஒளியும், ஸ்பரிசமும், ஒலியும் ஒன்றுபடும்படியாக அவற்றோடு சேர்ந்திருக்கும் எல்லாவற்றிற்கும் மூல காரணமாகிய சிவகாம சுந்தரியின் (அன்னை அபிராமி) சிறிய திருவடிகளைச் சாரும் (பற்றும்) தவம் உடைய பக்தர்கள் தமக்கு உரிமையாகப் பெறாத செல்வம் ஏதும் இல்லை. எல்லாவித பேறுகளையும் பெறுவார்கள்.

சென்ற பாட்டில், 'ஒரு மாத்திரைப் போதும் மனத்தில் வையாதவர்' எல்லா நல்ல குணங்களும் இழிவு பட்டு, தினந்தோறும் வீடுகள் தோறும் பாத்திரம் தாங்கி பிச்சை கேட்டு வருந்துவர் - என்றார் அபிராமிபட்டர்.

இந்தப்பாட்டில் 'அன்னை அபிராமியின் சிறிய திருவடிகளைப் பற்றியவர்களுக்கு பெறமுடியாத செல்வம் ஒன்றும் இல்லை என்று சொல்லி, அவர்கள் எல்லாம் பெறுவர் என்று அழகாகச் சொல்கிறார்.' 'அன்னையின் திருவடிகளே சரணம்' - இதைத் தவிர அன்பர்கள் நாடவேண்டியது ஒன்றும் இல்லை என்பது தெளிவு.

'அன்னை அபிராமியின் திருவடிகளை நாடுபவருக்கு, தேட வேண்டியது ஒன்றும் இல்லை'.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் :- 819. ஸர்வாந்தர்யாமிணீ - எல்லோர் உள்ளத்திலும் வ்யாபித்து இருப்பவள். அல்லது, எல்லா இந்திரியங்களையும் நியமிப்பவள். கட்டளை இடுபவள். 949. பஞ்சபூதேசி - பூமி முதலிய ஐந்து பூதங்களுக்கு ஈஸ்வரி. பஞ்ச பூதங்களின் ஸத்தா ரூபமாக இருப்பவள்.

ஸௌந்தர்யலஹரீ (35), ''மனஸ்த்வம் வ்யோம த்வம்..'' அன்னையே பஞ்ச பூதங்களின் (பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம்) தத்துவமாக இருக்கிறாள் என்று சொல்லுகிறது.

826. ப்ரஸவித்ரீ - எல்லாவற்றையும் படைத்தவள். விசேஷமாக ஆகாயம் முதலிய ப்ரபஞ்சத்தை அல்லது ப்ரஜைகளை ப்ரஸவிப்பதால், ப்ரஸவித்ரீ.

ஆகாயத்தில் ஒலியாகிய தன் மாத்திரை இருக்கிறது. காற்றில் ஒலியும் ஊறாகிய ஸ்பரிசமும், கனலாகிய தேயுவில் ஒலியும், ஸ்பரிசமும், ஒளியும், புனலாகிய அப்புவில் ஒலியும், ஸ்பரிசமும், ஒளியும், சுவையும், பிருதிவியில் (நிலத்தில்) அந்த நான்கோடு கந்தமாகிய தன்மாத்திரையும் சேர்ந்துள்ளது. இதனையே மாணிக்கவாசகர்

*பாரிடை ஐந்தாய் பரந்தாய் போற்றி*
*நீரிடை நான்காய் திகழ்ந்தாய் போற்றி*
*தீயிடை மூன்றாத் திகழ்ந்தாய் போற்றி*

*வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி*
*வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி*

என்று போற்றித் திருவகலில் சொல்கிறார்.

11. பஞ்ச தன்மாத்ரஸாயகா - ஐந்து தன்மாத்ரைகளை பாணங்களாக உடையவள். ஸ்தூல ரூபத்தில் அம்பாள் தன் வலது மேல் கையில் ஐந்து விதமான புஷ்பங்களை அம்புகளாக வைத்துக் கொண்டிருக்கிறாள். இந்த அம்புகளின் ஸூக்ஷ்ம உரு ஐந்து மாத்ரை எனப்படும் ஐந்து குணங்கள். இவை இந்த ஜடமான உலகத்திற்கு மூலப்பொருளாக அமைந்த ஐந்து பூதங்களின் தனக்கென தனித்த குணங்கள். எனவே தன்மாத்ரைகள் என்று பெயர் கொண்டவை.

அபிராமிபட்டர், காப்புச்செய்யுளில், 'தில்லை ஊரர் தம் பாகத்து உமை' என்றார் அல்லவா ! நுட்பமான நிலையில் எல்லாவற்றையும் இயக்கும் மூலசக்தியாகவும், திட்பமான நிலையில், எல்லாத் தலங்களிலும் சிறந்ததாகிய தில்லையில், 'சிவகாமசுந்தரியாக' அன்பர்களுக்கு அருள் புரிகிறாள். சிவபெருமானிடத்தில் அன்புள்ள அழகி என்றும், காதலுக்கு இடமான அழகி என்றும் பொருள் சொல்லலாம்.

அன்னை அபிராமியின் சீறடியை கண்ணால் கண்டு, கையால் தொழுது, உடலால் வணங்கி, வாயால் புகழ்ந்து, மனத்தால் தியானிப்பதே 'தவம்' ஆகும்.

அன்னை அபிராமி, சிவகாமசுந்தரியாக, எழுந்தருளி, தன் பக்தர்களுக்கு எல்லாச் செல்வங்களையும் அளிக்கிறாள் என்று திட்டவட்டமாகச் சொல்கிறார் அபிராமிபட்டர்.

## 69. நல்லன எல்லாம் தருபவள் - அபிராமியே.

*தனம் தரும் கல்விதரும் ஒருநாளும் தளர்வறியா*
*மனம் தரும் தெய்வ வடிவும் தரும் நெஞ்சில் வஞ்சம் இல்லா*
*இனம் தரும் நல்லன எல்லாம் தரும் அன்பர் என்பவர்க்கே*
*கனம் தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே.*

**(ஸகல ஸௌபாக்யங்களும் உண்டாக)**

| | |
|---|---|
| கனம் தரும் | மேகம் போன்ற கரிய நிறமுடைய |
| பூங்குழலாள் | பூவை அணிந்த கூந்தலை உடைய |
| அபிராமி கடைக்கண்கள் | அபிராமி அன்னையின் கடைக்கண்களின் பார்வை |
| அன்பர் என்பவர்க்கே | தன்னுடைய அன்பர்களுக்குத் தான் |
| தனம் தரும் | செல்வங்களைத் தரும் |
| கல்வி தரும் | கல்வியை அளிக்கும் |
| ஒரு நாளும் | எக்காலத்தும் |
| தளர்வறியா | தளர்வை அறியாத |
| மனம்தரும் | நெஞ்சத்தை உண்டாக்கும். |
| தெய்வ வடிவும் தரும் | தெய்வத் தேசு நிரம்பிய வடிவத்தையும் அருளும். |
| நெஞ்சில் வஞ்சம் இல்ல | மனத்தில் வஞ்சகம் இல்லாத |
| இனம் தரும் | நல்லவர்களின் கூட்டத்தைத் தரும் |
| நல்லன எல்லாம் தரும் | நல்லனவாகிய எல்லாவற்றையும் வழங்கும். |

கரியமேகம் போன்று அடர்ந்து கனத்த, இயற்கையாகவே நறுமணம் கமழும், பூவை அணிந்த கூந்தலையுடைய அபிராமி அன்னையின் கடைக்கண்களின் பார்வை, தன்னைத் தவம் செய்யும் அன்பர் என்பவர்களுக்கே,

செல்வம் தரும். கல்வியை அளிக்கும். ஒரு நாளும் தளர்வை அறியாத நெஞ்சத்தைக் கொடுக்கும். ப்ரகாசம் பொருந்திய தெய்வத் தேசு நிரம்பிய வடிவத்தையும் அருளும். கபடு, சூது மனதில் இல்லாத மனைவி மக்கள் போன்ற சுற்றத்தாரையும் நல்லவர்கள் கூட்டத்தையும் தரும். மற்றும் எது, எது நல்லவையோ அவை எல்லாம் நல்கும்.

சென்ற பாட்டில், அபிராமிபட்டர், அன்னை அபிராமி. அன்பர்களுக்கு அனைத்துச் செல்வங்களையும் தருவாள் என்று

கூறினார் அல்லவா ! மண்ணுலகில் வாழும் நம்மைப் போன்ற சாமான்யர்களுக்குப் புரியும் வகையில் இந்தப்பாட்டில் பட்டியல் போல சொல்வதாகக் கொள்ளலாம் !

முக்யமான பலன்களைச் சொல்லி - 'நல்லன எல்லாம் தரும்' என்கிறார். அதாவது இம்மையில் இன்ப வாழ்வும், மறுமையில் தேவலோக இன்பத்தையும், பின் மோட்ச சாம்ராஜ்யத்தையும் (அழியா முத்தி ஆனந்தம்) அன்னை அபிராமி அருளுவாள். பொதுவாக ஒரு நூலைப் பாராயணம் செய்வதனால் உண்டாகும் பயனை, நூலின் இறுதியில் சொல்லுவது வழக்கம். இதற்கு 'பலச்ருதி' என்று பெயர்.

அபிராமி அந்தாதியில் 'நூற்பயன்' என்று கடைசியில் ஒரு பாடல், 'ஆத்தாளை எங்கள் அபிராம வல்லியை.... தீங்கில்லையே' என்று வருகிறது. இருப்பினும் இந்தப்பாடல் அன்பர்கள் அடையும் நற்பயன்களை முழுமையாகச் சொல்கிறது.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தில் 698. ஸர்வார்த்த தாத்ரீ - தன் பக்தர்களுக்கு சகல புருஷார்த்தங்களையும் தருபவள். 'அர்த்த' என்ற சொல்லுக்கு - பொருள் என்ற அர்த்தத்தில் தன் பக்தர்களுக்கு செல்வம் அனைத்தையும் தருபவள் என்றும் கூறலாம்.

590. கடாக்ஷ கிங்கரீ பூத கமலா கோடி ஸேவிதா - கடைக்கண் பார்வையால் இடும் கட்டளைகளை நிறைவேற்றுவதற்காக கிங்கரீகளாக (வேலைக்காரி, ஸேவகிகள்) இருக்கும் கோடிக்கணக்கான லக்ஷ்மிகளால் ஸேவிக்கப்பட்டவள்.

லக்ஷ்மியின் கடைக்கண் பார்வை, ஒரு மாத்திரைப்போது, ஒரு மனிதன் மேல் விழுந்தாலே அவன் மிகுந்த செல்வனாகி விடுகிறான். அப்படி இருக்கும்போது கோடிக்கணக்கான லக்ஷ்மிகள் பணிவிடை செய்யும் அம்பாள் எவ்வளவு உயர்ந்தவள் என்பது கற்பனைக்குக் கூட எட்டவில்லை.

அந்த அம்பாளின் கடைக்கண் பார்வை ஒரு பக்தன் மேல் விழுந்துவிட்டால் கோடிக்கணக்கான லக்ஷ்மிகளும் அவனுக்கு பணிவிடை செய்து விடுவார்கள். எல்லா ஸௌபாக்கியங்களையும் அவன் பெறுவான் என்று சொல்லாமல் சொல்லப்படுகின்றது.

மூகபஞ்ச சதியில், கடாக்ஷசதகத்தில், அம்பாளுடைய கடாக்ஷத்தின் மஹிமை, காவ்ய ரஸனையுடன் சொல்லப்படுகிறது. ஆதிசங்கரரும் ஸௌந்தர்யலஹரீயில் அன்னையின் கடைக்கண் பார்வையின் கருணை, மகிமை பற்றி ஸ்லோகங்கள் ஆறிலும், பதிமூன்றிலும் சொல்கிறார்.

அன்னை திருக்கண்களின் கடாக்ஷம் பற்றி ஸ்ரீ வேதாந்த தேசிகர் ஸ்ரீ ஸ்துதியில் வெகு அழகாகக் கூறுகிறார்.

''ஆர்த்த த்ராண வ்ரதி பிரம்ரு தாஸார நீலாம்பு வாஹை :
அம்போஜாநா முஷஸி மிஷதாமந்த ரங்கைர பாங்கை : ।
யஸ்யாம் யஸ்யாம் திசி விஹரதே தேவி த்ருஷ்டிஸ்த்வதீயா
தஸ்யாம் தஸ்யாமஹமஹமிகாம் தந்வதேஸம்பதோகா : ॥''

பொருள் : தேவியே, வாழ்க்கையில் நொந்து போனவர்களைக் காப்பதையே உன் விரதமாகக் கொண்டவையும், அமுத மழை பொழியும் நீல மேகங்களாகத் திகழ்பவையும், காலையில் மலர்கின்ற கமல மலர்கள் போன்ற உன் திருக்கண்களின் கடாக்ஷம், எந்த திசையிலெல்லாம் சென்று விளையாடுமோ, அங்கெல்லாம் செல்வங்கள் போட்டியிட்டு வெள்ளமிடுகின்றன.

989. வாஞ்சிதார்த்த ப்ரதாயினீ - பக்தர்கள், கேட்கக் கூட வேண்டாம், நினைத்தாலே (அல்லது விரும்பினாலேயே) போதும். அம்பாள் சகலத்தையும் தரும் அன்னை. 351. வாமகேஶீ - அழகான கூந்தலை உடையவள். 185. நீலசிகுரா - கருமை (நீல) நிறத்தால் அழகாகத் தோன்றும் கூந்தலையுடையவள். ஸ்ரீலலிதா த்ரிசதியில் (150) - 'கசஜிதாம்புதா' என்று வருகிறது.

''தளர்வறியா மனம் தரும்'' - என்பது ஜீவர்களைப் பற்றியிருக்கும் தாபத்ரயங்களால் ஏற்படும் தளர்ச்சியைப் போக்கி நல்ல மனம் தருவதாகும். 357. தாபத்ரயாக்னி ஸந்தப்த ஸமாஹ்லாதன சந்த்ரிகா - தாபங்களால் எரிக்கப்படும் ஜீவனை, அம்பாள் தன் கருணையாகிற நிலவினால், அவனுடைய தாபத்தை நீக்கி மகிழ்விக்கிறாள்.

அன்னை அபிராமியின் 'கடைக்கண் பார்வை' - ஒன்றே போதும் நாம் கடைத்தேற !

**70. கண்ணில் கண்டு மனதில் கொண்டேன் - என் அபிராமியை.**

*கண் களிக்கும்படி கண்டுகொண்டேன் கடம்பாடவியில்*
*பண் களிக்கும் குரல் வீணையும் கையும் பயோதரமும்*
*மண் களிக்கும் பச்சை வண்ணமும் ஆகி மதங்கர் குலப்*
*பெண்களில் தோன்றிய எம்பெருமாட்டி தன் பேரழகே.*

**(ஸங்கீதம், ஓவியம் முதலிய கலைகளில் வல்லமை பெற)**

| | |
|---|---|
| கடம்பாடவியில் | கடம்பவிருக்ஷங்கள் நிறைந்த வனத்தில் (மதுரை என்றும் சொல்லலாம்) |
| பண் களிக்கும் குரல் வீணையும் | இராகங்கள், நம்மை விட இனிமையாக இருக்கின்றது என்று கேட்டுக் களிக்கும் குரலோடு வீணையும் |
| கையும் | திருக்கரங்களும் |
| பயோதரமும் | திருத்தனங்களும் |
| மண் களிக்கும் | உலகத்தோர் தரிசித்து மகிழும் |
| பச்சை வண்ணமும் ஆகி | பச்சை நிறமும் ஆக எழுந்தருளி |
| மதங்கர் குலப் பெண்களில் தோன்றிய | யாழ்ப்பாணராகிய மதங்கர் குலத்தில் உதித்த பெண்களில் ஒருத்தியாக திருஅவதாரம் செய்த |
| எம்பெருமாட்டி தன்பேரழகே | எம்பெருமாட்டியாகிய சியாமளா தேவியின் எங்கும் காணாத பேரழகை. |
| கண்களிக்கும்படி | அடியேன் கண்டு களிக்கும்படி |
| கண்டு | தரிசித்துப் பின்பு |
| கொண்டேன் | உள்ளத்தே தியானப் பொருளாகக் கொண்டேன். |

கடம்ப வனத்தில் இன்னிசையால் கனிந்த குரலோடு சுருதி லயமுடைய கச்சபீ என்ற வீணையையும், அதனை ஏந்தி வாசித்துக் கொண்டிருக்கும் திருக்கரங்களும், அவ்வீணை உராயும் திருத்தனங்களும், உலகத்தோர் தரிசித்து மகிழும் பச்சை நிறமும் ஆக எழுந்தருளி, யாழ்ப்பாணராகிய மதங்கர் குலத்தில் உதித்த பெண்களில் ஒருத்தியாகத் திருஅவதாரம் செய்த எம்பெருமாட்டி சியாமளா தேவியின் எங்கும் காணாத பேரழகை, அடியேன் கண்டு களிக்கும்படி தரிசித்து பின்பு உள்ளத்தே தியானப் பொருளாகக் கொண்டேன்.

அபிராமிபட்டர், அன்னை அபிராமியின் எல்லாக் கோலங்களையும் தரிசித்தவர். அவர், புறத்தே விக்கிரக வடிவில்

தரிசித்து, உள்ளே தியானம் செய்து அங்கே உண்மை வடிவில் தரிசித்து இன்புற்றவர். 'அந்தர்முக ஸமாராத்யா' என்று ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் சொல்வதை அவர் அநுபவத்தில் உணர்ந்தவர்.

அன்னை அபிராமி, ச்யாமளா தேவியாகக் கொண்ட திருஉருவைப் போற்றும் இந்தப்பாட்டில் இனிய குரலோடு, வீணையும், அதை தாங்கிய திருக்கரங்களும், தனங்களும் கொண்டு பச்சை வண்ணமாய் மதங்க முனிவரின் புத்திரி மாதங்கியாக அவதாரம் எடுத்த திருக்கோலமாக வர்ணிக்கிறார்.

மகாகவி காளிதாஸன் ச்யாமளா தேவியின் வடிவழகையும், இயல்புகளையும் 'ஸ்ரீ ச்யாமளா தண்டகம்' என்ற நூலில் அழகாக, விரிவாகச் சொல்கிறார். அபிராமி அந்தாதியின் பாடல்கள் (70, 71) ச்யாமளா தேவியை பற்றி அபிராமிபட்டர் அழகாக பாடியிருப்பது வடமொழி தெரியாத தமிழர்களுக்கு ஒரு விருந்தாகும். அபிராமி பட்டர் வடமொழியிலும் வல்லவர் அல்லவா ! ஆதிசங்கரரும் த்யான ஸ்லோகத்தில் மதங்க குமாரியை வணங்குகிறேன் என்கிறார்.

மாணிக்ய வீணாமுபாலாலயந்தீம் மதாலஸாம் மஞ்ஜுல வாக்விலாஸாம் ! மாஹேந்த்ர நீலத்யுதி கோமலாங்கீம் மாதங்ககந்யாம் மநஸா ஸ்மராமி !! – ஸ்ரீ ஶ்யாமளா தண்டகம்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - 48. மஹாலாவண்ய சேவதி - அழகுக்கெல்லாம் ஒரு களஞ்சியம் அல்லது பெட்டகமாயிருப்பவள். அம்பாளின் பேரழகிற்கு ஈடு இணை கிடையாது 27. நிஜஸல்லாப மாதுர்ய விநிர்பர்த் ஸிதகச்சபீ - தன்னுடைய பேச்சின் இனிமையால் கச்சபீ எனப்படும் ஸரஸ்வதி தேவியின் வீணையையும் வென்றவள். ஸௌந்தர்ய லஹரி (66) 'விபஞ்சயா காயந்தீ' - என்ற பாடலில், ஸ்ரீராஜராஜேஸ்வரி தர்பாரில் சரஸ்வதி தேவி வீணை வாசிக்கும்போது, அதை ரசித்த அன்னை 'ஸபாஷ்' என்று வாய்விட்டுக் கூறிபாராட்ட ஆரம்பிக்கும் போதே (அந்த வாக்கின் இனிமையினால்) வெட்கிய ஸரஸ்வதீ தன் வீணையை உறையிலிட்டு மூடினாள் என்று ஆதிசங்கரர் கூறுகிறார். 60. கதம்ப வனவாஸினீ - கதம்ப மரக்காட்டில் வசிப்பவள். கதம்பவனம் (மதுரை) மீனாட்சி.

அன்னை அபிராமியின் அழகை வர்ணிக்க யாராலும் முடியாதல்லவா ! இருந்தாலும் தன் புறக்கண்ணிலும், அகக் கண்ணிலும் கண்ட காட்சியை உலகிற்கு எடுத்துக்காட்ட கொள்ளும் அன்பும், அழகும், அறிவும் கலந்த திருப்பணி இது. அன்னை அபிராமியின் பேரழகைக் கண்ட பேரானந்தத்தில் ஏற்படும் இன்பப்பாடல் இது.

எப்போதும் வேதகானம் செய்யும் சிவபெருமான் கண்டத்தை (இனிய குரல்) வீணைக்கு ஒப்பிட்டு அகநானூறு, 'யாழ்கெழு மணிமிடற்று அந்தணன்' என்கிறது. அம்பிகையின் 'குரல் இனிமை' - வீணையின் இனிய நாதத்தையும் வென்றது. எனவே 'பண்களெல்லாம் களிக்கும்படியான வீணை போன்ற குரலுடையவள்' என்றும் பொருள் கொள்ளலாம்.

486. ச்யாமாபா - பசுமை கலந்த கருப்பு (மேகங்களில் காணும்) நிறம் உடையவள். 16 வயது கன்யைக்கு ஶ்யாமா என்று பெயர். அநாஹதத்தில் (ஹ்ருதயம்) 12 இதழ்கள் கொண்ட தாமரையின் மேல் இரு திருமுகங்கள் கொண்ட 'ச்யாமாதேவி'யாக வீற்றிருக்கிறாள். இருமுகங்கள் - ஆகாசம், வாயு என்ற தத்வங்கள் கண்டுகொண்டேன் - கண்ணில் கண்டு, மனத்தில் கொள்வது.

ஸ்ரீஸரஸ்வதி தேவியின் கடாக்ஷம் பெற்று, கலைகளில் எல்லாம் வெற்றிபெற பசுமை நிறமாகிய ச்யாமளா தேவியை வணங்குவோம். அபிராமிபட்டர், அன்னை அபிராமியைப் பலவிதமான கோலங்களில் கண்ட காட்சியை, நாம் எல்லோரும் காணவேண்டும் என்று செய்யும் இறைப்பணி இது !

## 71. அபிராமி - ஒப்பாரும், மிக்காரும் இல்லா அழகி.

*அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி அருமறைகள்*
*பழகிச் சிவந்த பாதாம்புயத்தாள், பனிமாமதியின்*
*குழவித் திருமுடிக் கோமள யாமளைக் கொம்பிருக்க*
*இழவுற்று நின்றநெஞ்சே இரங்கேல் உனக்கு என் குறையே ?*

**(மனக் குறை தீர்ந்து மகிழ்ச்சி பெற)**

| | |
|---|---|
| இழவு உற்று நின்ற | பிறவிப் பயனை இழந்து |
| நெஞ்சே | வருந்தி நின்ற மனமே ! |
| அழகுக்கு ஒருவரும் | அழகுக்கு வேறு ஒருவரும் |
| ஒவ்வாத வல்லி | ஒப்பே இல்லாத கொடி போன்ற அபிராமி |
| அருமறைகள் | அரிய வேதங்களிலே |
| பழகிச் | பயிலுவதினால் |
| சிவந்த பாதாம் புயத்தாள் | சிவந்த திருவடித்தாமரைகள் உடையவள், |
| பனி மாமதியின் | குளிர்ந்த பெருமை உடைய |
| குழவி | சந்திரனின் பிறையைச் சூடும் |
| திருமுடிக் | திருமுடியை உடைய |
| கோமள யாமளைக் | மெல்லியலாகிய யாமளை என்னும் |
| கொம்பு இருக்க | பூங்கொம்பு நமக்கு வேண்டியவற்றை எல்லாம் அருளி காப்பாற்ற இருக்கும் போது |
| இரங்கேல் | நீ வருந்தாதே ! |
| உனக்கு என் | உனக்கு என்ன |
| குறையே ? | குறை இருக்கிறது ? (ஒன்றும் இல்லை !) |

மானிடனாய் பிறந்ததின் பயனை இழந்து வாடுகின்ற மனமே ! தன் திருமேனி அழகுக்கு வேறு ஒருவரும் ஒப்பே இல்லாத கொடி போன்ற அபிராமி, அரிய வேதங்களின் மேல் உலாவுவதால் சிவந்த திருவடித் தாமரைகளை உடையவள். குளிர்ந்த பெருமை வாய்ந்த அழகிய பிறையைச் சூடும் திருமுடியை உடைய அழகும் இளமையும் கொண்ட யாமளையென்னும் பூங்கொம்பாகிய அவள் நமக்கு வேண்டியவற்றை யெல்லாம் அருளிக் காப்பாற்ற இருக்கும் போது நீ வருந்தாதே ! உனக்கு என்ன குறை இருக்கிறது ? (குறையொன்றும் இல்லை.)

'அபிராமி' - அபரிமிதமான, அளவிட முடியாத அழகுடை யவள். அன்னையை, 'கொடியாகவும், கொம்பாகவும்' வர்ணிப்பது

மிக அழகு ! முன்னும் (பாடல் 22) ''கொடியே, இளவஞ்சிக் கொம்பே...'' என்றார்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம். 48. மஹாலாவண்ய சேவதி. - அழகுக்களஞ்சியம். 868. முக்தா - அழகி. 462. சோபனா - மிக அழகுடையவள். 234. மஹாத்ரிபுரஸுந்தரீ - மஹாத்ரிபுரையாயும், மஹா அழகியாகவும் உள்ளவள். மூவுலகங்களிலும் காணக்கிடைக்காத பேரழகு வாய்ந்தவள். 389 நிருபமா - உவமை இல்லாதவள். ஒரு பொருளுக்கு எது சமமானதோ அதுதான் உவமையாகக் கூறத்தக்கது. அம்பாளுக்குச் சமமாக யாரும் கிடையாது. (இருக்கவும் முடியாதல்லவா) 'ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவர்' - தமிழ் இலக்கியம்.

184. நிஸ்துலா - ஒப்பற்றவள். உவமை சொல்ல எதுவும் இல்லாதவள். ஸௌ.ல. 12 : ''த்வதீயம் ஸௌந்தர்யம்...'' என்ற ஸ்லோகத்தில், ஆதிசங்கரர் அன்னையின் ஸௌந்தர்யத்தை (அழகை), கவி சிரேஷ்டர்கள் ஸரஸ்வதீ வல்லபரான பிரம்மா போன்றவர்கள் கூட ''உன்னுடைய அழகுக்கு உவமை கூறுவதற்கு எப்படி எப்படியோ கற்பனை செய்து பார்க்கிறார்கள். அவர்களால் முடியவில்லை.'' - என்கிறார்.

721. கோமளாங்கீ - அழகிய ம்ருதுவான சரீரத்தை உடையவள். 460. நளினீ - அம்பாளின் அவயவங்கள் எல்லாமே தாமரைபோல் இருப்பதால் அம்பாளையே தாமரைப்பூவாக சொல்லப்படுகிறது.

459. ஸுமுகீ - அழகிய திருமுகம் உடையவள். 461. ஸுப்ரூ - அழகிய புருவங்களை உடையவள். 430. நித்ய யௌவனா - முக்காலத்திலும் மாறாத யௌவனத்துடன் இருப்பவள். 358. தருணீ - எப்பொழுதும் யுவதியாக இருப்பவள்.

437. கோமலாகாரா - மென்மையான வடிவானவள். 972. ஆசோபனா - எங்கும், எப்பொழுதும் அழகானவள்.

காளிதாசன்,'கிம்நஸித்த்யேத் வபு : ச்யாமளம் கோமளம் சந்த்ரசூடான் விதம்' என்ற வாக்கை, தமிழில் இந்தப்பாடலில் காண்கிறோம்.

அபிராமிபட்டர் தமிழர்க்காகச் செய்த அரிய பாடல் இது.

அன்னை அபிராமி, எழுந்தருளியிருக்கும் திருமாளிகை - 'சிந்தாமணி க்ருகம்'. அதைச் சுற்றி நான்கு வாயில்கள் - நான்கு வாயில்களிலும் படியாக விளங்குபவை நான்கு வேதங்கள், அடியார்களுக்கு அம்பிகை அப்படிகளில் இறங்கி வந்து அருள் புரிவாள். அன்பர்களை எதிர்கொண்டு வரவேற்பதில் அன்னைக்கு அவ்வளவு ப்ரியம். அவ்வாறு வேதங்களாகிற படிகளில் இறங்கி, பின் ஏறுவதால் அன்னையின் சிவந்த தாமரைப்பாதங்கள் இன்னும் சிவக்கின்றன. 335. வேத வேத்யா - வேதங்களினால் அறியத்தக்கவள்.

இதனையே, 'அருமறைகள் பழகிச் சிவந்த பாதாம்புயத்தாள்' என்றார் அபிராமிபட்டர்.

தலையிலே பிறையைப் போன்ற அணியைச் சூடுவது மகளிர் மரபு. இங்கு அன்னை 'பிறையையே' தன் முடி மீது சூடியிருக்கிறாள் ! (ஒளிர்மதிச் செஞ்சடையானை)

243. சாருசந்த்ர கலாதரா - அழகிய சந்திர கலையை அணிந்தவள். சாரு - என்ற பதத்திற்கு வளர்வு, தேய்வு இல்லாத என்று பொருள். 241. சாருரூபா - அழகிய உருவமுள்ளவள். த்ரிபுரஸுந்தரி, லலிதா, ஸுந்தரி முதலிய நாமங்களினாலெல்லாம் குறிப்பிடப்பட்ட அதிஸுந்தரமான வடிவை உடையவள்.

242. சாருஹாஸா - அழகிய புன்சிரிப்போடு கூடியவள். 'உன் இனிய புன்சிரிப்பே சந்த்ரன்' - எனப்படுகிறது.

திருக்குறளும் (7) ''தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு அல்லால் மனக்கவலை மாற்றல் அரிது'' - என்கிறது.

இதன் பொருள் :- தனக்கு நிகரில்லாத இறைவனது திருவடியைச் சேர்ந்தவர்க்கல்லாது மற்றையோர்க்கு மனக் கவலையை நீக்குதல் இயலாது.

அன்னை அபிராமியின் அருள்பெற்ற அன்பர்கள் எதற்காகவும் வருந்தவேண்டியதில்லை. அவர்களுக்கு எந்த விதமான குறையும் இல்லை.

## 72. அன்னை அபிராமியே - மீண்டும் அடியேன் பிறந்தால், அது நின் குறையேயாகும்

*என் குறை தீர நின்று ஏத்துகின்றேன் இனியான் பிறக்கின்*
*நின்குறையே அன்றி யார் குறைகாண் இருநீள் விசும்பின்*
*மின் குறை காட்டி மெலிகின்ற நேரிடை மெல்லியலாய்*
*தன் குறை தீர எம்கோன் சடைமேல் வைத்த தாமரையே.*

**(பிறவிப் பிணி தீர)**

| | |
|---|---|
| இருநீள் விசும்பின் | பரந்து நீண்ட வானத்தில் உள்ள |
| மின் குறைகாட்டி | மின்னலுக்கு ஒருகுறையைக் காட்டி |
| மெலிகின்ற | அதனினும் மெலிவு பெறுகின்ற |
| நேரிடை மெல்லியலாய் | நுட்பமான இடையை உடைய மெல்லியலே ! அபிராமியே ! |
| எம்கோன் | எம்முடைய பிரானாகிய சிவபெருமான் |
| தன் குறை தீர | தன்னுடைய குறை தீரும் பொருட்டு |
| சடைமேல் வைத்த | தன் சடை முடியின் மேல் வைத்த |
| தாமரையே ! | நின் திருவடித்தாமரைகளை |
| என் குறை தீர | அடியேனுடைய குறை தீரும் பொருட்டு, |
| நின்று ஏத்துகின்றேன் | தளராமல் நின்று துதித்து வழிபடுகிறேன் (அதனால் நான் இனி பிறக்கமாட்டேன்) |
| இனி யான் பிறக்கின் | ஒரு கால் அடியேன் மீண்டும் பிறந்தால் |
| நின் குறையே | அதற்கு காரணம் உன்னுடைய கருணையின் குறையே யாகும் |
| அன்றி யார் குறை காண் ? | அஃதன்றி வேறு யாருடைய குற்றம் ? |

அகன்று உயர்ந்த வானத்தில் உள்ள மின்னலுக்கு ஒரு குறையைக் காட்டி, அதனின்றும் மெலிவு பெறுகின்ற நுட்பமான இடையையுடைய மெல்லியலே, எம்பிரான் (சிவபெருமான்), தன் குறை தீரும் பொருட்டு, தன் சடை முடியின் மேல் வைத்த நின் திருவடித் தாமரைகளை, அடியேன் குறை தீரும் பொருட்டு தளராமல் நிலையாக நின்று துதித்து வழிபடுகிறேன். (அதனால் நான் இனி பிறக்கமாட்டேன்) ஒருகால் அடியேன் மறுபடியும் பிறந்தால், அதற்குக் காரணம் நீ என்னைப் புறக்கணிக்கும் குறையே யன்றி வேறு யார் குறை ?

அபிராமி அந்தாதியின் 39- வது பாடலில் 'ஆளுகைக்கு உன்றன் அடித்தாமரைகள் உண்டு.. மேல் இவற்றின் மூளுகைக்கு என் குறை. நின் குறையேயன்று...' என்று கூறினார். இங்கு,

இனியான் பிறக்கின் நின் குறையே அன்றி யார் குறைகாண் ?..

என்று கூறுகிறார். அபிராமிபட்டர், 'தாயிடம், நான் முதலில் என் குற்றத்தை ஒப்புக்கொண்டு விட்டேன். பின் உன் திருவடித் தாமரைகளைப் பற்றி அதிலேயே நிலையாக நின்று, மனத்தைத் தளரவிடாது, தவம் செய்தேன் அல்லவா ! இதற்குப் பின்னும் நான் மறு பிறவி எடுத்தால் அது உன்னுடைய கருணையின் குறையேயாகும். வேறு யாரும் பொறுப்பாக முடியாது.' என்று உரிமையுடன் அன்னை அபிராமிடம் சொல்வது போல் இருக்கிறதல்லவா ! என்னே அவரின் 'சேய்-தாய்' உறவு !

(இரு நீள் விசும்பு - நீளம், உயரம் - காட்டியது. நேரிடை - நுட்பமான, இடை. தாமரை - திருவடிகள்) அன்னை அபிராமியின் இடை - மின்னல் தோற்றுப்போகின்ற அளவுக்கு அவ்வளவு மெலிவும், நுட்பமும் உடையது. மெல்லியலாய் - 'மென்மையான தாயே' என்பதைக் குறிக்கும்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தில் 437. கோமலாகாரா - மென்மையான அழகிய வடிவமானவள்.

721. கோமளாங்கீ - அழகிய மிருதுவான சரீரத்தை உடையவள்.

எல்லாம் அம்பிகையின் பொறுப்பு என்று நம்பி அவளைச் சரணம் அடைந்தவர்களுக்கு அவள் அருள் புரிகிறாள்.

அப்பர், 'தன் கடன் அடியேனையும் தாங்குதல். என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்பார்.

191. து : கஹந்த்ரீ - (ஸம்ஸார) துக்கத்தைப் போக்குபவள். 192. ஸுகப்ரதா - சுகத்தை தருபவள். (துக்கம் போனால் மட்டும் போதாது. சுகமும் வேண்டும் அல்லவா !) 195. தோஷ வர்ஜிதா - தோஷம் இல்லாதவள். தோஷம் என்பது - மனம், வாக்கு,செயல் - என்ற மூன்றையும் விருப்பு, வெறுப்பு இவைகளின் ப்ரதிபலிப்பில் கெடுப்பது. விருப்பு, வெறுப்பு இல்லாததால் தேவீ தோஷமற்றவள். தன் பக்தர்களின் தோஷங்களையும் போக்குபவள்.

16. பாபநாசினீ - பக்தர்களின் பாவங்களைப் போக்குபவள்.

743. பாபாரண்யதவானலா - பாபங்கள் என்ற காடுகளைப்

பொசுக்கும் காட்டுத் தீயாக இருப்பவள்.163. மோஹநாசினீ - எல்லாம் ஒன்றே என்ற அறிவை பக்தர்களுக்கு அளிப்பதால் மோஹத்தை அழிக்கிறாள். 175 - பவநாசினீ - ஸம்ஸார பந்தத்தை அழிப்பவள். (ஒ. ''தேஷாமஹம் ஸமுந்தர்த்தா ம்ருத்யுஸம்ஸார - ஸாகராத்'' - கீதை 12.7)

114. பவாரண்ய குடாரிகா - ஸம்ஸாரமாகிய காட்டை சிதைக்க உதவும் கோடரி. 842. பவரோகக்னீ - ஸம்ஸாரம் என்ற நோயை அகற்றுபவள்.

மனிதர்களின் குற்றங்களைப் போக்குகிறவளும் லலிதா என்ற அன்னை அபிராமிதான். 169. க்ரோதஶமனீ - க்ரோதத்தை அடங்கச் செய்பவள்.

ஒவ்வொருவருக்கும் தன் உள்ளேயே காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்று ஆறு எதிரிகள் உள்ளனர். பக்தனுடைய கோபத்தை சமனம் செய்து, அதை அடங்கச் செய்பவள். க்ரோதத்தை (கோபத்தை) அழிப்பவள். (கோபம் - எல்லா நல்ல விஷயங்களையும் - யாகம், ஹோமம், அர்ச்சனை - அழித்து விடும்.) ஸப்தசதி - 'ரூபம் தேஹி ஜயம் தேஹி யஶோ தேஹி த்விஷோ ஜஹி' - என்று 18 முறை ப்ரார்த்திக்கப்படுகிறது. 'த்விஷோ ஜஹி' - காமக்ரோதாதிகளான பகைவர்களை நாசம் செய்யவேண்டும் என்பதும் தாத்பர்யமாகும்.

171. லோபநாசினீ - லோபம் (நல்ல குணங்களை நசித்துவிடும்) என்ற குணத்தை நாசம் செய்பவள். 292. பூர்ணா - எங்கும், எதிலும், எப்போதும் நிறைந்திருப்பவள். 444. புஷ்டி : செழுமையாக, உடல் நிறையுடன் கூடி புஷ்டியாக இருப்பவள். 604. குணநிதி : குணங்களால் நிரம்பிய பொக்கிஷம் போன்றவள்.

'எம்கோனாகிய சிவபெருமானுக்குக் குறையே இல்லை. எப்போதேனும் குறை நேர்ந்தால் அவன் தன் சடைமேல் ஒரு தாமரையைச் சூடிக்கொள்வான். அந்த தாமரையை நான் ஏத்துகின்றேன்' என்று நயமாக அபிராமிபட்டர் அன்னை அபிராமியிடம் சொல்கிறார்!

## 73. அன்னை எமக்கு வைத்த சேமம் - அவள் திருவடிகள்.

*தாமம் கடம்பு படை பஞ்சபாணம் தனுக்கரும்பு*
*யாமம் வயிரவர் ஏத்தும்பொழுது எமக்கென்று வைத்த*
*சேமம் திருவடி செங்கைகள் நான்கு ஒளிசெம்மை அம்மை*
*நாமம் திரிபுரை ஒன்றோடு இரண்டு நயனங்களே.*

**(பெண்களுக்கு கர்ப்ப ப்ராப்தி உண்டாக)**

| | |
|---|---|
| தாமம் கடம்பு | அபிராமி அன்னையின் மாலை - கடம்ப மலர் மாலை |
| படை பஞ்ச பாணம் | ஆயுதம் - ஐந்து மலர் அம்புகள் |
| தனுக் கரும்பு | வில் - கரும்பு |
| வயிரவர் | அவளுடைய மந்திர சாதகர்களாகிய வயிரவர்கள் |
| ஏத்தும் பொழுது | வழிபடும் நேரம் |
| யாமம் | நள்ளிரவு |
| எமக்கென்று | எம்மை ஆட்கொள்ளும் பொருட்டு |
| வைத்த சேமம் | வைத்துள்ள பாதுகாப்பு |
| திருவடி | அவள் திருவடி |
| செங்கைகள் நான்கு | அவள் செம்மையான திருக்கரங்கள் நான்கு |
| ஒளி செம்மை | அவள் திருமேனியின் ஒளி செம்மை (சிவப்பு) |
| அம்மை நாமம் திரிபுரை | அவளுடைய திருநாமம் திரிபுரை |
| ஒன்றோடு இரண்டு நயனங்களே | ஒன்றோடு (நெற்றிக்கண்) இரண்டாகிய அவள் திருவிழிகள் மூன்று. |

அபிராமி அன்னையின் மாலை கடம்பு. ஆயுதம் - ஐந்து மலரம்புகள், வில் - கரும்பு. அவளுடைய மந்திர சாதகர்களாகிய வயிரவர்கள் அவளை வழிபடும் நேரம் நடு யாமமாகிய நள்ளிரவு. எம்மை ஆட்கொள்ளும் பொருட்டு வைத்துள்ள பாதுகாப்பு அவள் திருவடி. அவள் செம்மையான திருக்கரங்கள் நான்கு. அவள் திருமேனியின் ஒளி சிவப்பு. அவளுடைய திருநாமம் திரிபுரை. அவள் திருவிழிகள் ஒன்றோடு (நெற்றிக்கண்) இரண்டாகிய மூன்று.

அபிராமிபட்டர், 'கண் மூன்றும் கருத்தில் வைத்து' (53) என்று சொன்னவர், இங்கு நெற்றிக்கண் - ஞானக்கண்ணின் சிறப்பை நாம் உணருவதற்காக - ஒன்றோடு என்று தனியே

சொல்லி, பின், இரண்டு நயனங்களே என்று அழகாக வர்ணிக்கிறார். ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தில்

453. த்ரிநயனா - மூன்று கண்களை (சூரியன், சந்திரன், அக்னி) உடையவள். இவைகள் மஹா பிந்துவிலிருந்து பிரிந்து வரும் ஏனைய பிந்துக்களின் பெயர்களாகும். 'காமகலா' - ஸ்வரூபம் என்றும் சொல்லலாம். தமிழ் எழுத்து '்ஃ' - ரூபம். 477. த்ரிலோசனா - மூன்று கண்களை உடையவள். திரிமூர்த்திகளின் தாயார் என்றும் பொருள் கொள்ளலாம். "ஸர்வ மங்கல மாங்கல்யே சிவே சர்வார்த்த ஸாதிகே சரண்யே த்ர்யம்பகே கௌரி நாராயணி நமோஸ்துதே" - தேவி மகாத்மியம் என்பதையும் கவனிக்கவும்.

381. ரஹோ யாக க்ரமாராத்யா - ரகஸ்யமான யாக முறையால் வழிபடத்தக்கவள். பூஜை செய்பவர் (தேவியை ஆவாஹனம் செய்வதற்கு முன்பு) தன்னிடம் உள்ள தோஷங்களைக் களைய வேண்டும். இது ரகசியமாகச் செய்வது. ரகசியமான இடத்தில் செய்யத்தக்கது என்று அர்த்தம் இல்லை. தனிமையில், பிறர் அறியாதபடி, தனக்குள் பாவனையாக செய்யவேண்டும்.

382. ரஹஸ்தர்ப்பண-தர்ப்பிதா - ரஹஸ்ய தர்ப்பணத்தால் த்ருப்தி அடைபவள். மந்த்ரத்தின் அர்த்தத்தை நன்கு தெரிந்து கொள்வதே தேவதைக்கு த்ருப்தியைத் தருவதால் இதுவே தர்ப்பணம் எனப்படும். முன் நாமாவில் கூறியபடி தனிமையில் உபாஸிப்பதே ரஹஸ்ய தர்ப்பணம். இதனால் தேவீ த்ருப்தியடை கிறாள். இதன் முக்ய தத்வம் :- இதுவரை வேறாகக் கருதிய 'நான்' - என்பதை ஆஹுதி செய்கிறேன்.

231. மஹாபைரவ பூஜிதா - மஹாபைரவரால் பூஜிக்கப் பட்டவள். பைரவர் என்ற பெயரில் உள்ள - 'ப' - பரணம் - நிரப்புதல் - ச்ருஷ்டியையும், ர - ரமணம் - காப்பாற்றுதலையும் 'வ' - வமனம் - ஸம்ஹாரத்தையும்,அதாவது முத்தொழிலையும் குறிப்பது. இதனால் பரமசிவனுக்கு பைரவர் என்று பெயர். முப்பெருந் தொழில்களைச் செய்வதால் 'மஹாபைரவர்.' பத்ம புராணம் இவர் தேவியை பூஜித்ததாகக் கூறும். சிதக்னி குண்டத்தில், மஹாபைரவர், மஹாயாக க்ரமத்தினால் ஸ்ரீலலிதா தேவியைத் தோன்றும்படி செய்தார். இவர் நள்ளிரவில் தேவியுடன்

தனித்திருந்து, அவளைப் புகழ்ந்து, பூஜை செய்பவர். 785. மார்தாண்டவ பைரவாராத்யா :- மார்தண்ட பைரவரால் பூஜிக்கப் பட்டவள். அதிதியும் கஶ்யபரும் சூர்யமண்டலத்தின் நடுவில் உள்ள பரம்பொருளை வழிபட்டு மகப்பேறு வரம்பெற்றனர். கருவுற்ற அதிதி கடும் வ்ரதத்தை அனுசரித்ததனால் உடல் சக்தி குறைந்த நிலையில் குழந்தை பிறந்து, உயிரற்ற பிண்டமாக வெளிவந்தது. மறுபடியும் அவர்கள் ப்ரார்த்திக்க, சூர்ய சக்தி பெற்று, சூர்யனாக விளங்கியது அந்தக்குழந்தை. இறந்த பிண்டத்திலிருந்து (ம்ருத, அண்ட) உயிர்பெற்றதால் மார்த்தாண்டர். கடும் விரதத்தினால் பிறந்ததால், அந்தக் குழந்தைக்கு பயங்கர தோற்றம் ஏற்பட்டது. அதனால் 'பைரவர்' இவரே அம்பாளின் 12 உபாஸகர்கள் என்று கூறப்படும் பட்டியலில் கூறப்படும் 'சூர்யன்'. இவர், சாயாதேவியுடன், ஸ்ரீபுரத்தில் 22-23வது மதில்களின் நடுவில் உள்ள ப்ரகாரத்தில் அம்பாளை வழிபடுகிறார்.

பயந்த சுபாவம் உடையவர்களின் ஸமூஹம் பைரவம் எனப்படும். அம்பாள் அவர்களைக் காப்பாற்றுகிறாள்.

'துர்கே ஸ்ம்ருதா ஹரஸி பீதிமசேஷஜந்தோ' (தேவீ மஹாத்மியம் 4.17)'

திருமூலரும், ''அன்னை இராஜ இராஜேஸ்வரிக்கு'' - ஒரு அழகான த்யான உருவம் தருகிறார்.

''தாளணி நூபுரஞ் செம்பட்டுத் தானுடை
வாரணி கொங்கை மலர்க்கன்னல் வாளிவில்
ஏரணி அங்குச பாசம் எழில்முடி
காரணி மாமணிக் குண்டலக் காதிக்கே''. (திருமந்திரம் 1049)

அன்னையை பாதாதி கேசமாக வர்ணிக்கிறார். திருத்தாள் களில் சிலம்பும், திருமேனியில் சிவந்த பட்டாடையும், திருமார்பில் கச்சையும், திருக்கரங்களில் மலரம்பு, கரும்பு வில், அங்குசம், பாசம் இவற்றைத் தாங்கியும், திருமுடியில் மாணிக்க மணி கிரீடம், கருநீல மணிக் குண்டலங்கள் காதிலணிந்து காட்சி தருபவள்.

இந்தப்பாடலில் அபிராமிபட்டர், அன்னை அபிராமியைத் த்யானம் செய்ய மற்றும் ஒரு திரு உருவைத் தருகிறார். 'எமக்கு என்று வைத்த சேமம் திருவடி' என்கிறார்.

**74. சொர்க்க போகங்களைத் தருவாள் எங்கள் அன்னை.**

*நயனங்கள் மூன்றுடை நாதனும் வேதமும் நாரணனும்*
*அயனும் பரவும் அபிராமவல்லி அடியிணையைப்*
*பயன் என்று கொண்டவர் பாவையர் ஆடவும் பாடவும் பொன்*
*சயனம் பொருந்து தமனியக் காவினில் தங்குவரே*

**(செய் தொழிலில் தலைமை எய்த)**

| | |
|---|---|
| நயனங்கள் மூன்றுடை | மூன்று திருவிழிகளையுடைய |
| நாதனும் | சிவபிரானும் |
| வேதமும் | வேதங்களும் |
| நாரணனும் | திருமாலும் |
| அயனும் | பிரமதேவனும் |
| பரவும் | புகழ்ந்து பாராட்டும் |
| அபிராமவல்லி | அன்னை அபிராமவல்லியின் |
| அடியிணை | இரண்டு திருவடிகளை |
| பயனென்று கொண்டவர் | முக்தியாகிய பயன் என்று கொண்டு வழிபட்டு தியானிக்கும் அடியவர்கள் |
| பாவையர் | அரம்பை முதலான தேவஸ்திரிகள் |
| ஆடவும், பாடவும் | ஆடிப்பாடி மகிழ்ச்சி ஊட்டவும் |
| பொன் சயனம் பொருந்து | பொன்னாலான மஞ்சத்தில் வீற்றிருந்து |
| தமனியக் காவினில் | பொன்மயமான கற்பக மரங்கள் அடர்ந்த சோலையில் |
| தங்குவரே ? | தங்கி இளைப்பாறுவரே. |

மூன்று அழகிய திருவிழிகளையுடைய சிவபெருமானும், வேதங்களும், திருமாலும், பிரமதேவனும் புகழ்ந்து துதிக்கும் அபிராமவல்லியின் திருவடிகளை, தம் பிறவிப் பயனாகக் கொண்டு, வழிபட்டுத் தியானிக்கும் அடியவர்கள், அரம்பை முதலிய தேவஸ்திரிகள் ஆடிப்பாடி மகிழ்ச்சி ஊட்டவும் பொன்னாலான மஞ்சத்தில் வீற்றிருந்து பொன்மயமான கற்பக மரங்கள் அடர்ந்த சோலையில் தங்கி இளைப்பாறுவரே.

முன்னும், 38-ம் பாடலில், 'பவளக்கொடியில்... அமராவதி ஆளுகைக்கே' - இந்திரலோகப் பதவி அடைய அன்னை அபிராமியை வழிபடுங்கள் என்று 'அபிராமிபட்டர்' சொன்னார் அல்லவா !

இப்பாட்டில், இன்னும் ஓர் அரிய கருத்தை சொல்லுகிறார்.

அன்னையின் அடியார்கள் இந்திர பதவி கிடைத்தாலும், விரும்ப மாட்டார்கள், அவர்கள் அன்னையுடன் ஐக்கியமடைவதையே (முக்தி) விரும்புவர் என்பதாகும்.

(பொன் சயனம் - பொன்னாலாகிய மஞ்சம், படுக்கை. தமனியக்காவினில் - பொன் நிறமான கற்பக மரங்கள் அடர்ந்த பூஞ்சோலை.)

சொர்க்காதி போகங்களும் உலக வாழ்க்கையைப் போன்று அநித்யமானதே. ஆயினும் சாதகர்கள் விரும்பினால், அதையும் அன்னை அபிராமி அளிப்பாள் என்பது கருத்து. வேதத்தின் கர்மகாண்டத்தில் 'நூறு யாகம் செய்தவனே' இந்திர பதவியை அடைவான் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - 213. மஹாபூஜ்யா - பெருமை மிக்க பூஜைக்குரியவள். பூஜிக்கப்பட வேண்டியவர்களாகிய ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரன் முதலியவர்களாலும் பூஜிக்கப்படுபவள். ப்ரஹ்மாண்ட புராணத்தில் அறிந்தும், அறியாமலும் செய்யப்பட்ட எல்லா பாபங்களுக்கும் தேவியின் பாதஸ்மரணமே ப்ராயச்சித்தம் என்று கூறப்படுகிறது. இதனால் மஹாபூஜ்யா.

406 சிவாராத்யா - சிவனால் வழிபடப் பெற்றவள். தேவியை தியானித்தும், யோக பலத்தினாலும் எல்லா ஸித்திகளுக்கும் அதிபதியாக (ஈஸ்வரனாக)வும், அர்த்த நாரீஸ்வரராகவும் ஆனார் என்று ப்ரம்மாண்ட புராணம் சொல்கிறது. 231. மஹாபைரவ பூஜிதா - மஹாபைரவர் (சிவபெருமான்) தேவியை பூஜிக்கிறார்.

929. ஶ்ருதி ஸம்ஸ்துத வைபவா - வேதங்களால் போற்றப் படும் வைபவம் உள்ளவள். ஸம்ஸ்துத - பரிசயம். அவளுடைய மஹிமையை வேதங்கள் அனுபவிக்கின்றன. ஶ்ருதி - நான்கு என்ற எண்ணைக் குறிக்கும். நான்கு விதமாக அனுபவிக்கப்பட்ட மகிமையை உடையவள் என்பது பொருள். அதாவது சரீர புருஷன், சந்த: புருஷன், வேத புருஷன், மஹா புருஷன் என்று அர்த்தம். அம்பாள் - சாந்தி, வித்யா, ப்ரதிஷ்டா, நிவ்ருத்தி என்ற நான்கு சக்திகளின் ஸ்வரூபமாக இருக்கிறாள். எனவே பரமேஸ்வரன் இந்த நான்கு வ்யூஹங்களிலும் நான்கு மூர்த்திகளுடன் கூடியவராக இருக்கிறார். ஸ்வாத்மானந்தத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்.

355. வேத வேத்யா - வேதங்களால் அறியத்தகுந்தவள். வேதங்கள் ஸ்ரீநகரத்தின் (தேவியின் இருப்பிடம்) நான்கு வாயில்களாக இருப்பதால், வேதங்கள் மூலமாகவே தான் அம்பாளை அடையமுடியும். 289. ச்ருதி ஸீமந்த ஸிந்தூரீ க்ருத பாதாப்ஜ தூளிகா - வேதங்கள் ஆகிற ஸ்திரீகளின் முன் வகிட்டில் சிவந்த ஸிந்தூரமாக விளங்கும் தன்னுடைய பாதகமலங்களின் தூளிகளைக் கொண்டவள்.

83. ப்ரஹ்மோபேந்தர மஹேந்த்ராதி தேவஸம்ஸ்துத வைபவா - ப்ரஹ்மா, விஷ்ணு, இந்திரன் ஆகியவர்களால் துதிக்கப்பட்ட பெருமையை உடையவள். 297. ஹரிப்ரஹ்மேந்திர ஸேவிதா - விஷ்ணு, ப்ரம்மா, இந்திரன் ஆகியவர்களால் வணங்கப்பட்டவள். 558. கமலாக்ஷ நிஷேவிதா- தாமரைக்கண்ணனான, மஹா விஷ்ணுவால், ஸேவிக்கப்பட்டவள். திருமால், சிவனை தாமரை மலர்களால் அர்ச்சனை செய்யும்போது,ஒருமலர் குறைந்தது. அதற்கு ஈடாக தன் கண்ணையே எடுத்து அர்சித்தார் என்பது புராணம். சிவனுக்கு செய்யும் பூஜை சக்திக்கும் பொருந்தும் அல்லவா!

அன்னை அபிராமியின் திருவடிகளையே தியானிக்கும் அடியார்கள் 'முக்தியையே' விரும்புவார்கள் என்று அபிராமிபட்டர் தன்னையும் சேர்த்து சொல்கிறார்.

## 75. சொர்க்கம் தந்த அபிராமி முக்தியும் அளிப்பாள்.

*தங்குவர் கற்பக தாருவின் நீழலில் தாயர் இன்றி*
*மங்குவர் மண்ணில் வழுவாப்பிறவியை மால்வரையும்*
*பொங்கு உவர் ஆழியும் ஈரேழ் புவனமும் பூத்த உந்திக்*
*கொங்குஇவர் பூங்குழலாள் திருமேனி குறித்தவரே.*

**(வலிமை மிக்க விதியையும் வெல்ல)**

| | |
|---|---|
| மால்வரையும் | பெரியதான எட்டுத் திக்குகளில் உள்ள மலைகளையும் |
| பொங்கு உவர் ஆழியும் | பொங்குகின்ற உவர்ப்புடைய ஏழு கடல்களையும் |
| ஈரேழ் புவனமும் | பதினான்கு (மேல் ஏழு, கீழ் ஏழு) உலகங்களையும் |
| பூத்த உந்திக் | ஈன்றெடுத்த வயிற்றையும் |
| கொங்கு இவர் பூங்குழலாள் | மணம் பரவியதும், மலரை அணிந்த கூந்தலையும் உடைய |
| திருமேனி குறித்தவர் | அபிராமி அன்னையின் அழகிய திருவுருவத்தை தியானம் செய்யும் அடியார்கள் |
| கற்பகத் தாருவின் | கற்பக விருக்ஷங்கள் அடர்ந்த |
| நீழலில் தங்குவர் | தெய்வ லோகத்தில் தங்குவர். பின் |
| மண்ணில் | இப்பூமியில் |
| வழுவாப் பிறவியை | விடாமல் திரும்பத் திரும்ப வரும் பிறவித்துன்பத்தை |
| தாயரின்றி | இனிமேல் ஒரு தாயார் வயிற்றில் பிறக்காமல் |
| மங்குவர் | மங்கும்படி செய்வர். (அதாவது பிறவி என்பது இல்லை.) |

அட்ட குலாசலங்களையும் (மலைகள்), மேலே கிளரும் உப்புக்கடல் முதலிய ஏழு கடல்களையும், பதினான்கு புவனங்களையும் பெற்றெடுத்த திருவயிற்றையும் மணம் பரவியதும் மலரை அணிந்ததுமாகிய கூந்தலை உடைய அபிராமி அன்னையின் அழகிய திருவுருவத்தை தியானம் செய்யும் அடியார்கள், இந்திர பதவி பெற்று கற்பக மரத்தின் நிழலில் வீற்றிருப்பர். பின்பு, பூமியில் பிறந்து, இறந்து தப்பாமல் வருகின்ற பிறவியைத் தம்மைப் பெறும் தாய்மார் இல்லாமலே, மங்கச்செய்வர். (அதாவது 'முக்தி' எய்துவர்.)

அபிராமிபட்டர், சென்ற பாட்டில்,இந்திர லோகப் பதவி கிடைத்தாலும், அன்னை அபிராமியின் அடியார்கள் அதை விரும்பமாட்டார்கள் என்று சொன்னார் அல்லவா ! இந்தப்பாட்டில் அடியார்களுக்கு இந்திர பதவி, பின்பு முக்தி ஆனந்தம் இரண்டையும் அன்னை அபிராமி அளிப்பாள் என்கிறார்.

அதாவது அடியார்கள் பிறப்பு, இறப்புகளிலிருந்து விடுதலை பெறுவார்கள் என்பதை மிக அழகாகவும், சாதுர்யமாகவும், 'தாயர் இன்றி மங்குவர் மண்ணில் வழுவாப்பிறவியை...' என்றார்.

'தங்குவர்' என்று நயம்பட சொல்கிறார். தங்குதல் - ஒரு இடைக்கால, தற்காலிகமான நிலை. அன்பர்களின் குறிக்கோள் - முக்தி நிலையே. அதனால், வேண்டுமானால் (விரும்பினால்) - சில காலம் இந்திர பதவியில் இருப்பர்.

அதாவது, அன்னை அபிராமி அன்பர்களாகிய தன் குழந்தைகளுக்கு எல்லாவற்றையும் (ஒரு குறையில்லாமல்) தருவாள் என்பதே.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் :-

764. ஸ்வர்கா பவர்கதா - ஸ்வர்க்கத்தையும், மோக்ஷத்தையும் தருபவள். ஸ்வர்க்கம் என்பது புண்ய கர்மாக்களால் சம்பாதிக்கும் சுகம். இது துக்கத்தினால் (சுகத்தை அனுபவிக்கும் போதோ அல்லது பின்னரோ) கலப்படமாவதில்லை. ஆனால் இந்த ஸ்வர்க்க சுகம் நிரந்தரமானதல்ல, புண்யங்களை அனுபவித்து அவைகள் முடிந்துவிட்டால், பிறகு மானுட லோகத்திற்கு வரவேண்டும் என்று ஸ்ரீமத் பகவத் கீதை (9-11) 'க்ஷீணே புண்யே மர்த்ய லோகம் விஶந்தி' என்று கூறுகிறது.

'அபவர்கம்' - என்பது நிரந்தரமான மோட்சம் என்ற சுகம். (முக்தி நிலை) இந்த இரண்டையும் தருபவள்.

ஸ்ரீ தேவி மஹாத்மியம் (11-8)

''ஸர்வஸ்ய புத்தி ரூபணே ஜனஸ்ய ஹ்ருதி ஸம்ஸ்திதே ।

ஸவர்க்கா பவர்க்கதே தேவி நாராயணி நமோஸ்துதே ॥'' - அன்னை அன்பர்களுக்கு ஸ்வர்க்கம், மோக்ஷம் இரண்டும் தருபவள் என்கிறது.

175. பவநாசினீ - ஸம்ஸார பந்தத்தை அழிப்பவள். - பிறவியை அகற்றுபவள்.

அம்பிகை எவ்வுலகத்துக்கும் தாய். அவள் திருவுந்தியில் (வயிற்றில்) மலை, கடல், சதுர்த்தச (பதினான்கு) புவனங்கள் யாவும் தோன்றுகின்றன.

ஏழுகடல் : உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன்.

அஷ்டகுலாசலங்கள் : கைலை, இமயம், மந்த்ரம், விந்தம், நிடதம், ஏம கூடம், நீலகிரி, கந்தமாதனம்.

மேலேழ் உலகம் : பூலோகம், புவர் லோகம், சுலோகம், ஜனலோகம், தபோலோகம், மஹாலோகம், சத்தியலோகம்.

கீழ் ஏழ் உலகம் : அதலம், விதலம், சுதலம், தராதலம், மகாதலம், இரசாதலம், பாதாளம்.

பூத்த உந்தி என்பது 'ஜகஞ்ஜனநீ' - என்ற நாமாவைக் குறிக்கிறது.

'அகில லோகம் ஈரேழும் உதர சோபி தாநாபி கமல வாயினால் மீள உமிழும் நீலி' (110) என்பது தக்கயாகப் பரணி - ஒட்டக்கூத்தர்.

(தாயர்-தாய்மார்கள். தாரு-மரம். உந்தி-நாபி. இங்கு வயிற்றைக் குறித்தது. கொங்கு இவர் - வாஸனை நிரம்பிய பூவுக்கு அடையாளமாகவும் கொள்ளலாம்).

688. ராஜபீடநிவேசித நிஜாச்ரிதா - தன்னை அண்டியவர் களை அரச பீடத்தில் அமர்த்துபவள். அதை வேண்டாமென்றால் அதற்கும் உயர்ந்த பதவிகளையும், ப்ரஹ்ம நிலையையுமே அருள்பவள் அன்னை ஸ்ரீலலிதாம்பிகையாகிய அன்னை அபிராமி.

## 76. அபிராமியே பஞ்ச பாண பயிரவி

*குறித்தேன் மனத்தில் நின்கோலம் எல்லாம் நின் குறிப்பறிந்து*
*மறித்தேன் மறலி வருகின்ற நேர்வழி வண்டுகிண்டி*
*வெறித்தேன் அவிழ்கொன்றை வேணிப்பிரான் ஒரு கூற்றை மெய்யில்*
*பறித்தே குடிபுகுதும் பஞ்சபாண பயிரவியே.*

**(தனக்குரிய பொருள் தப்பாமல் வந்து சேர)**

| | |
|---|---|
| வண்டு கிண்டி | தேனீக்கள் கிளருவதால் |
| வெறித்தேன் | மணம் பொருந்திய தேன் |
| அவிழ் | ஒழுகும் |
| கொன்றை வேணிப் பிரான் | கொன்றை மாலையை அணிந்த சடையை உடையை எம்பிரானாகிய சிவபெருமானது |
| ஒரு கூற்றை | ஒரு பாகத்தை (இடப்பாகத்தை) |
| மெய்யில் பறித்தே | உன் திருமேனியால் ஆக்ரமித்து |
| குடிபுகுதும் | அதில் உன் வாசஸ்தலத்தை ஏற்படுத்திக் கொண்ட, |
| பஞ்ச பாண பயிரவியே | ஐந்து மலர் அம்புகளை ஆயுதமாகக் கொண்ட பைரவியாகின்ற அபிராமியே ! |
| நின் கோலம் எல்லாம் | உன்னுடைய திருமேனியின் கேசாதி, பாத அழகை எல்லாம் |
| மனத்தில் குறித்தேன் | (எனது) மனதில் பதித்தேன் |
| நின் குறிப்பறிந்து | உனது திருவுளக் குறிப்பை அறிந்ததால் |
| மறலி வருகின்ற நேர்வழி | யமன் வருகின்ற தங்கு தடையில்லாத வழியை |
| மறித்தேன் | அடைத்து விட்டேன். |

வண்டுகள் கோதியதனால் மணம் பொருந்தி தேன் கட்டவிழ்ந்து ஒழுகுகின்ற கொன்றை மலரை அணிந்த சடாபாரத்தை உடைய சிவபெருமானுடைய திருமேனியின் ஒரு பாதியைக் கவர்ந்து அங்கே குடிபுகுந்த, ஐந்து மலரம்புகளையுடைய பயிரவியே ! அடியேன் மனத்தில் நின் திருக்கோலம் முழுவதும் தியானித்தேன். (பாதாதிகேசம் முழுவதையும்)

இதன் பயனாக, நின் திருவுள்ளக் குறிப்பை அறிந்து (உன்னுடைய தத்துவத்தை உணர்ந்து) யமன் என் உயிரைப் பறிக்க வருகிற நுணுகிய வழியைத் தடுத்தேன்.

அன்னை அபிராமியைத் தியானம் செய்கிறவர்கள் பிறவித்

துன்பத்தை அடையமாட்டார்கள் என்று சொல்லிய அபிராமிபட்டர், இந்தப் பிறவியில் யமவாதனையும் அவர்களுக்கு இராது என்பதைச் சொல்லுகிறார்.

முன்பாட்டில் பொதுவாகச் சொன்னவர் இப்போது தம்முடைய அநுபவத்தைச் சொல்கிறார். அம்பிகையை 'அர்த்தேசுவர நாரீயாக', இறைவனை ஒரு பாகத்தில் வைத்திருக்கும் அன்னையாகக் கண்டு துதிக்கிறார்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 392. ஸ்ரீ கண்டார்த சரீரணீ - பரமசிவனைப் பாதி உடலாகக் கொண்டவள். இதைத்தான் சாக்த பக்தர்கள் பரமசிவனைத் தனது வலப் பாகத்தில் கொண்டவள். அர்த்தேசுவர நாரீ - என்பர். (ஸ்ரீகண்டன் - பரமசிவன்)

பொதுவாக தேவலோகத்து மலர்களில் வண்டுகள் மொய்ப்பதில்லை. ஆயினும் இறைவன் கருணை கொண்டு தான் அணிந்த கொன்றை மலரில் வண்டுகள் மொய்த்து தேன் உண்ணும்படி செய்திருக்கிறான். கொன்றை மலர் ஓங்காரம் போன்ற வடிவுடையது. அதனைப் பிரணவ புஷ்பம் என்று கூறுவர். காப்புச் செய்யுளிலும் 'தாரமர் கொன்றையும்... சாத்தும் தில்லை ஊரர்' (4) 'கொன்றைவார் சடைமேல் பனிதரும் திங்களும் பாம்பும் பகீரதியும் படைத்த புனிதரும் நீயும்,' (6) 'கொன்றைவார் சடையின் மேலினும்,' (100) 'குழைத்தழுவிய கொன்றையந்தார்...' என்றும் இறைவன் கொன்றையை அணிந்திருப்பதைக் கூறுகிறார் அபிராமிபட்டர்.

பஞ்சபாண பயிரவியே : இங்கு அன்னை அபிராமியை ஐந்து அம்புகளை (மலர் அம்புகள்) தாங்கிய பயிரவியாக அபிராமிபட்டர் வர்ணிக்கிறார். கையில் அம்புகளை வைத்திருந்தாலும் அன்னை ஆண்டவனை வென்றது 'அன்பினால்'. முன்னும், 'மதி சயமாக அன்றோ வாம பாகத்தை வவ்வியதே' (17) என்றார். பின்னும், 'அழியா விரதத்தை அண்டமெல்லாம் பழிக்கும்படி ஒரு பாகங் கொண்டாளும் பராபரையே' (87) என்பார்.

பைரவீ - பைரவருடைய சக்தியானவள். முத்தொழில் புரிபவராதலால் பைரவர் பயங்கரமான வடிவானவர். அவருடைய சக்தி. பயத்தை ஸ்வபாவமாகக் கொண்டவள் பெண். ஸமஷ்டியாகப்

பெண்களுக்கு பைரவம் என்று பெயர். அவ்வடிவமானதால் பைரவீ என்று அழைக்கப்படுகிறாள். 12 வயதுள்ள கன்னிகையாக பூஜிக்கப்படுபவள்.

தன்னை எதிர்ப்போருக்கு பயத்தை உண்டு பண்ணுபவள். பைரவீயைத் தியானிப்போருக்கு எதனாலும், எந்தவித பயமும் இல்லை.

'உன்னுடைய திருக்கோலம் முழுவதையும் என் மனத்தில் தியானித்தேன்.' என்கிறார் அபிராமிபட்டர். அதனால் மனத் தெளிவுபெற்று, உன் தத்துவத்தை உணர்ந்து கொண்டேன். (நின் குறிப்பறிந்து). பின் 'யமபயம்' இல்லாதவனானேன்.

எத்தனையோ பிறவிகளில் முயன்றால் இந்தப் பிறவியில் இப்பேறு கிடைக்கும். 'நூதன விவேகி உள்ளம் நுழையாது. நுழையுமாகில் பூதசன் மங்கள் கோடி புனிதனாம் புருடனாமே' - (கைவல்ய நவநீதம்). அத்தகைய புண்ணிய புருஷர் இந்த மகானுபாவரான அபிராமிபட்டர்.

திருக்கடவூரில், மார்க்கண்டேயனுக்கு அடைக்கலம் தந்து யமனை எட்டி உதைத்தவர் ஆன காலபைரவரே - காலஸம் ஹாரமூர்த்தி. அவரின் இடப்பாகத்தை பறித்துக்கொண்டவள் (வெற்றி பெற்ற அரசனைப் போல) பைரவீ-பயிரவி என்று போற்றப்படும் 'அன்னை அபிராமி.' இவளை வணங்குபவர்க்கு 'யமவாதனை' இல்லை.

அன்னை அபிராமியை அணுகுபவர்க்குப் பிறவித்துன்பம் இல்லை.

## 77. அன்னை அபிராமியின் நான்மறைசேர் திருநாமங்கள்.

*பயிரவி பஞ்சமி பாசாங்குசை பஞ்சபாணி வஞ்சர்*
*உயிரவி உண்ணும் உயர்சண்டி காளி ஒளிருங் கலா*
*வயிரவி மண்டலி மாலினி சூலி வராகியென்றே*
*செயிரவி நான்மறைசேர் திருநாமங்கள் செப்புவரே.*

**(பகைவர்களால் உண்டாகும் அச்சம் நீங்க)**

| | |
|---|---|
| பயிரவி | பைரவரின் சக்தி |
| பஞ்சமி | ஸதாசிவரின் சக்தி |
| பாசாங்குசை | தனது திருக்கரங்களில் பாசம், அங்குசம் தாங்கியவள் |
| பஞ்சபாணி | ஐந்து மலர் அம்புகளை உடையவள் |
| வஞ்சர் உயிர் அவி | வஞ்சகர்களாகிய அசுரர்களின் உயிரை |
| உண்ணும் உயிர் சண்டி | பலியாக உண்ட உயர்ந்த சண்டிகா தேவி |
| காளி | கரிய வடிவம் கொண்ட காளி தேவி |
| ஒளிரும் கலா வயிரவி | ஒளிவிட்டு பிரகாசிக்கின்ற கலைகளையே வைர ஆபரணமாக உடையவள் |
| மண்டலி | பாம்பு ரூபமான குண்டலினீ சக்தி |
| மாலினி | அக்ஷரங்களை மாலையாக தரித்தவள். |
| சூலி | சூலப்படையை கொண்டவள் |
| வராகி | வராகி சக்தி |
| என்றே | என்று (ஓதுவாரின்) |
| செயிர் அவி | குற்றங்களைப் போக்குகின்ற |
| நான்மறை | நான்கு வேதங்களிலும் |
| சேர் | பிரஸ்தாபிக்கப்பட்ட (உள்ள) |
| திருநாமங்கள் செப்புவரே. | திருநாமங்களை உனது உபாஸகர்கள் கூறுவர். |

பயிரவி, பஞ்சமி, பாசாங்குசை, பஞ்சபாணி, அரக்கர்களின் உயிரைப் பலியாகக் கொள்ளும் சண்டி, காளி, கலைகளை ஆபரணமாக உடையவளான வயிரவி, பாம்பு ரூபமான குண்டலினீ சக்தியான மண்டலி, அஷமாலை தரித்த மாலினி, சூலப்படையை யுடைய சூலி, வராகி என்று வேதங்களிலிருந்து உன் திருநாமங் களை உன் அன்பர்கள் சொல்வார்கள். இத்திருநாமங்களால் ஓதுவார்களுடைய குற்றங்கள் (செயிர்கள்) அழியும். (அவியும்)

அன்னை அபிராமியின் திருநாமங்கள் - எண்ணிலடங்கா. ஆயினும் அன்பர்கள் தங்களால் முடிந்தவரை, அவள் திருநாமங் களைத் திரும்பத், திரும்ப சொல்லிக்கொண்டே இருப்பார்கள்.

இதனால் அவர்களுடைய குற்றங்கள் நசித்துவிடும்.

சென்றபாட்டில், அம்பிகைக்கு - 'பயிரவி' - என்ற அழகான ஒரு திருஉருவம் தந்தார். இங்கு அன்னையின் சில திருநாமங்களைச் சொல்கிறார். முன்னும் (66) 'வினையேன் தொடுத்த சொல் அவமாயினும் நின் திருநாமங்கள் தோத்திரமே.' என்றார்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தில் - 276. பைரவீ - சென்ற பாட்டில் பார்த்தோம்.

948. பஞ்சமீ - ஸதாசிவருடைய பத்னீ. ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரன், ஈஸ்வரன், சதாசிவன் என்ற ஐவரில், ஒவ்வொருவரும் அதற்குமுன் சொன்னதை விட உயர்ந்தவர். (ஸூத கீதை) வாராஹீ ரூபமாக இருப்பவள். ப்ராஹ்மீ முதலிய மாத்ரு தேவதைகளில் 5-வது வாராஹீ. பஞ்ச ரத்ன, பஞ்ச கோச தேவதைகளில் கடைசி வாராஹீ. மேலும், பஞ்சமீ என்பது வாராஹீயின் இயற்பெயர்களில் ஒன்று. (தட்சிணாமூர்த்தி ஸம்ஹிதை).

பாசாங்குசை : 8. ராகஸ்வரூப பாசாட்யா 9. க்ரோதாகாராங்கு சோஜ்வலா என்ற இரண்டு திருநாமங்களும் இணைந்து அமைந்தது. அன்னை தனது இடது கீழ்கையில் பாசத்தையும், வலது கீழ்கையில் அங்குசத்தையும் தரித்துள்ளார். (முன்னும் பார்த்தோம்)

பஞ்சபாணி :- 11. பஞ்சதன்மாத்ர ஸாயகா - தனது வலது மேல் கையில் ஏந்தியிருக்கிறாள். தாமரை, மாம்பூ, அசோக மலர், முல்லை, நீலோற்பலம் ஆகிய ஐந்து புஷ்ப பாணங்கள்.

வஞ்சர் உயிர் அவி உண்ணும் உயர் சண்டி - 755. சண்டிகா - கோபம் உள்ளவள். தன்னிடம் பக்தி இல்லாதவர்களிடம் கோபம் கொண்டவள். 7 வயது கன்யா. மஹாகாளீ, மஹாலக்ஷ்மி, மஹாஸரஸ்வதி - இவர்களின் ஸமஷ்டி வடிவத்திற்கு சண்டிகா என்று பெயர். (ஸப்தசதீ)

காளி -751 - மஹாகாளீ - மஹதீயாகவும் (பெரியவளாகவும்) காளியாகவும் இருப்பவள். கருமை நிறம் கொண்டவள்.

காலத்தை முடிவு செய்கிறவள், காலீ / காளீ.

காலனான யமனுக்கும் முடிவு செய்வதால் மஹாகாளீ / காலீ.

உஜ்ஜயினீ பீடத்தில் இருக்கும் சிவனுடைய மூர்த்திக்கு 'மஹாகாலன்' என்று பெயர். அவருடைய பத்னீ - 'மஹாகாளீ'. மஹாகாளீ என்று ஸப்தசதீயின் முதல் சரித்ர தேவதையாகத் துதிக்கப்படுபவள்.

அம்பாளை சிவப்பு நிறமாக வர்ணித்தாலும், உக்ரமான ரூபத்தை எடுக்கும்போது கரு நிறமாகத் தோன்றுகிறாள்.

இதற்கு காஞ்சி பரமாச்சாரியார் அழகான விளக்கம் தருகிறார்.

(தெய்வத்தின் குரல் முதல் பாகம் 763 - 772)

வெள்ளையான சுத்தப்ரஹ்மத்திற்கு மிக, மிக நெருங்கியுள்ள சக்தி என்பதாலும் கருணாமூர்த்தி என்பதாலும் அம்பாளின் நிறம் சிவப்பு என்பதே பொருத்தமாக இருக்கிறது.

சம்ஹாரம் என்பது பெரிய தூக்கம். தூக்கத்தில் எப்படி துக்கக் கலப்பே இல்லாத அமைதி நிலையில் இருக்கிறோமோ, அப்படியே ஸம்ஹரிக்கப்பட்ட ஜீவன் மறுபடியும் ஜன்மா எடுக்கும் வரையில், பலவிதமான கர்ம அனுபவங்களில் இருந்து, அவைகளின் சிக்கல்களிலிருந்து தப்பி, அமைதியில் அமிழ்ந்திருக்கிறது. நமக்குக் கர்மக் கட்டிலிருந்து தற்காலிகமாக விடுதலை தந்து விஸ்ராந்தி தரவே ஸம்ஹாரத் தொழிலைப் புரிகிறார் சிவபெருமான்.

'நான் கர்மா செய்கிறேன்' என்ற அர்த்தத்தை இழந்து விட்ட ஞானிகளே கர்மச் சுழலிலிருந்து நிரந்தரமாகத் தப்ப முடியும். ஆனால் பரமபாபியும் கூடத் தற்காலிகமாகவேனும் இந்த கர்மானுபவத் தொந்தரவிலிருந்து விடுபட்டு விஸ்ராந்தி பெறுவதற்காகப் பராசக்தி மகா கருணையுடன் ஸம்ஹாரத்தை அமைத்திருக்கிறாள்.

லோகத்தைவிட்டால் தான் சஞ்சலங்களிலிருந்து விடுபட்டு மோட்சம் என்கிற நிரந்தர சாந்தியைப் பெற முடியும் என்று உணர்ந்து அமைதியில் இருப்பதே சமாதி நிலை. என்றும் கலையாத சாஸ்வத நிலை. இது பராசக்தியின் 'அனுக்ரஹம்' என்ற ஐந்தாவது தொழிலால் அருளப்படும் நிலை.

இதற்கடுத்த நிலை சாந்தியோடு இருக்கிறோம் என்ற

ப்ரக்ஞையில்லாமலே அப்படி இருக்கிற தூக்க நிலை, ஸம்ஹார நிலை. எனவே அனுக்ரஹத்துக்கு அடுத்தபடியாக ஜீவராசிகளுக்கு மிகவும் ஹிதமான நிலை ஸம்ஹாரம் தான்.

விவசாயத்திலும் முன்பிருந்த பயிரை எடுத்துவிட்டே களை எடுத்து, நிலத்தை உழுது, விதைக்கிறதையும் நினைத்துப் பார்க்கலாம்.

ஸம்ஹாரம் என்பது அடுத்த முறை விதைக்கத் தக்க முறையில் நிலத்தை சீர்படுத்துவது போல், என்று உணர முடியும்.

(என்ன ஓர் எளிமையான, அருமையான விளக்கம் !)

756. சண்டமுண்டாஸுர நிஷூதினீ - சண்டன், முண்டன் என்ற அசுரர்களை அழித்தவள். சும்பன், நிசும்பன் என்ற அசுரர்களின் கூட்டத்தைச் சேர்ந்த சண்டன், முண்டன் என்பவர்களை, அம்பாள் தன் காளீ ரூபத்தால் ஸம்ஹரித்தாள். அதனால் காளிக்கு சாமுண்டா என்ற பெயரை அம்பாள் கொடுத்தாள். - ஸப்த சதீ - அத்தியாயம் 7.27

"யஸ்மாச்சண்டம் சமுண்டம் சக்ருஹீத்வா த்வமுபாகதா ।
தஸ்மாச்சாமுண்டேதி ததோ லோகே க்யாதா தேவி பவிஷ்யஸி ॥"

ஒளிரும் கலா வயிரவி மண்டலி :- 794. கலாமாலா - 64 கலைகளை மாலையாக உள்ளவள் கலா - லாவண்யம், அழகு. மா = சோபை, ப்ரகாசம், ஒளி. லா - கொண்டு வருவது. லாவண்யத் தையும் சோபையையும் உடையவள்.

அம்பாளுடைய எத்தனையோ ஆபரணங்களில், 64 கலைகள் (நாம் மிக உயர்வாகக் கருதுபவை - 'ஆய கலைகள் அறுபத்து நான்கு) - ஓர் ஆபரணம் தான். அதாவது, அம்பாளுக்கு எத்தனையோ பெருமைகள், விபூதிகள், மகிமைகள் இருக்கின்றன என ஒரு கோடி காட்டப்படுகிறது.'

எல்லாக் கலைகளையும் அன்னை இடையில் மேகலையாக அணிந்திருக்கிறாளாம். பரஞ்சோதிமுனிவர், 'மெய்ம் மறையார் கலையனைத்தும் மேகலையா மருங்கசைத்த விமலையம்மா' - என்கிறார் திருவிளையாடற்புராணத்தில் (4:34)

இதனையே, அபிராமிபட்டர். 'விளங்குகின்ற கலைகளாகிய வயிரங்களாலான சிறப்புள்ள வட்டமான மேகலையை அணிந்தவள்' என்னும் பொருள்பட 'ஒளிரும் கலா வயிரவி மண்டலி' - என்று அழகாக வர்ணிக்கிறார்.

மண்டலி :- பாம்பு ரூபமான குண்டலினீ சக்தியானவள்.

110. குண்டலினீ - குண்டலினீ ரூபமாக இருப்பவள். மூன்றரைச் சுற்று குண்டலங்களுடைய பாம்பு போன்ற வடிவமுடையவள். மூன்று சுற்றுகளும் முறையே அ,உ, மகரங்கள். அரைச் சுற்று அர்த்தமாத்திரை. குண்டலினீ ப்ரணவத்தைக் குறிக்கிறது. மூலாதாரத்தில் தூங்கிக்கொண்டிருக்கும் பாம்பு போல் மூச்சு விட்டுக் கொண்டிருப்பவள். ஜீவ சக்தியான இந்த குண்டலினீயின் ஸ்வாஸம் தான் 'ப்ராணன்'. இரு காதுகளையும் நன்கு மூடிக்கொண்டால் இந்த ஸ்வாஸ சப்தம் கேட்கும்.

மாலினி :- 455. மாலினீ - மாலையை அணிந்திருப்பவள். 51 அக்ஷரங்களின் தேவதை மாலினீ. ஏழு வயது கன்யை. ('பாலை' என்றும் கூறுவர்.) 489. அக்ஷமாலாதிதரா - 'அ' முதல் 'க்ஷ' வரையிலுள்ள எழுத்துக்களை (51 மணிகள்) அக்ஷமாலையாக அணிந்தவள். இந்த மாலை ஜபத்திற்கு மிகவும் உபயோகமானது.

சூலி :- 506. ஶூலாத்யாயுத ஸம்பன்னா - சூலம், பாசம், கபாலம், அங்குசம் முதலிய ஆயுதங்களை உடையவள். இந்த நான்கிலும் 'சூலம்' - முக்கியமானது.

வராகி :- விஷ்ணு சக்திகளில் 'வராக' அவதாரத்துக்குரிய, சப்த மாதாக்களில் ஒருத்தி. அம்பிகையின் படைத்தலைவியாக இருக்கும் சக்திக்குத் தண்டினி, தண்டநாதா, வாராகி என்ற பெயர்கள் உண்டு.

செயிர் அவி நான்மறைசேர் திருநாமங்கள் செப்புவரே -

812. பரமந்த்ர விபேதினீ - பர = மிகவும் உயர்ந்த, மந்த்ர = மந்திரத்தை ஜபிப்பவர்கள், அவி = பாபங்கள், பேதினீ = அழிப்பவள். அதாவது, அன்னை தன் பக்தர்களின் பாபங்களை அழிப்பவள்.

அன்னையின் பல திருநாமங்களை நாளும் நாம் பாராயணம் செய்து நன்மை பெறுவோமாக.

## 78. அன்னையின் புன்னகை.

*செப்பும் கனக கலசமும் போலும் திருமுலைமேல்*
*அப்பும் களப அபிராம வல்லி அணிதரளக்*
*கொப்பும் வயிரக் குழையும் விழியின் கொழுங்கடையும்*
*துப்பும் நிலவும் எழுதி வைத்தேன் என் துணைவிழிக்கே.*

**(சகல செல்வங்களையும் அடைய)**

| | |
|---|---|
| செப்பும் | சிமிழும் |
| கனகக் கலசமும் போலும் | தங்கக் கலசமும் போன்ற |
| திருமுலைமேல் | திருத்தனங்களின் மேல் |
| அப்பும் களப | அப்பிய நறுமணம் வீசும் கலவை சந்தனத்தை உடைய |
| அபிராமவல்லி | அபிராமாம்பிகை |
| அணி | அணிந்த |
| தரளக் கொப்பும் | முத்துக் காதணியும் |
| வயிரக் குழையும் | வைரத்திலான தோட்டையும் |
| விழியின் | கண்களின் |
| கொழுங்கடையும் | மதர்த்த பார்வையும் |
| துப்பும் | பவளம் போன்ற இதழையும் |
| நிலவும் | வெண்ணிலவு போன்ற புன்னகையும் |
| எழுதி வைத்தேன் | மனதிலே ஓவியமாகத் தீட்டி வைத்தேன் |
| என் துணை விழிக்கே | என் மனக் கண்ணால் எப்பொழுதும் தரிசித்து களிப்பதற்காக. |

தந்தத்தால் கடைந்த செப்பையும், தங்கத்தாலான கலசத்தையும் போன்ற அழகிய தனங்களின் மேல் சாத்திய கலவைச் சந்தனத்தை உடைய அபிராமவல்லி காதில் அணிந்த முத்து கொப்பும், வயிரக் குழையும், திருவிழியின் செழுமையான காட்சியையும், பவளம் போன்ற இதழ்களும், அவற்றில் மலர்ந்த நிலவு போன்ற புன்னகையும் என் இரண்டு கண்களிலும் எழுதிவைத்தேன்.

இந்தப்பாடல், அபிராமி அந்தாதியின் 78-வது பாடல். அடுத்த பாடல், 'விழிக்கே அருளுண்டு அபிராம வல்லிக்கு...' என்ற பாடலைப் பாடியவுடன் தான் அன்னை அபிராமி தன் தாடங்கம் ஒன்றை (சூரிய, சந்திரர்களே-தாடங்கங்கள்) வானில் வீசி எறிய, அது பூர்ண நிலவாக மாறி, அகிலமெல்லாம் காணும்

'ஜோதியாக'- திகழ்ந்தது.

அபிராமிபட்டர் ஒரு பெரிய அநுபூதிமான் அல்லவா ! அவருக்குத் தெரியும், 'விரைவில் அன்னை அபிராமி பூர்ண சந்திர மண்டலமாகக் காட்சி தரப்போகிறாள்' என்று ! இதை மனதிற் கொண்டு, முன் கூட்டியே இப்பாடலில், 'எழுதிவைத்தேன் என் துணைவிழிக்கே' என்று சொன்னார் போலும் !

முதல் பாடலில், 'அன்னை அபிராமி என்றன் விழுத்துணையே' என்றார்.

(கொப்பு - மேல் காதில் அணிவது. குழை - கீழ் காதில் அணிவது - தாடங்கம் (வடமொழி) துப்பும் - பவளம் போன்ற இதழ்கள். நிலவும் - நிலா போன்று புன்சிரிப்பும்)

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தில் 891. வித்ருமாபா - பவழம் போன்ற காந்தி உள்ளவள். பவழம் போல் சிவப்பானவள். வித் = ஞானம், த்ரும = மரம். ஞான விருட்சமாக ப்ரகாசிப்பவள். ஒரு மரத்திலிருந்து இன்னொரு மரம் உண்டாகிறது. பல சிஷ்யர்களுக்கு, ஸத்குரு உபதேசத்தால், ஞானத்தை அளிக்கிறார். எனவே, ஞானம் = விருட்சமாகிறது. 24. நவவித்ரும்பிம்ப ஸ்ரீந்யக்காரி தசனச்சதா - புதியதான பவழம், கோவைப்பழம் இவற்றின் காந்தியை வெல்லும் அழகான உதடுகளை உடையவள்.

28. மந்தஸ்மித ப்ரபாபூர மஜ்ஜத்காமேச மானஸா - தனது புன்சிரிப்பின் ப்ரவாஹத்தில் காமேசுவரருடைய மனதை முழுகச் செய்தவள். ஸ்மித - என்றால் புன்சிரிப்பு. அதாவது பற்கள் வெளித்தெரியாமல் மெல்ல சிரிப்பது. அதிலும் 'மந்தஸ்மித' என்றால் இன்னும் விசேஷமான மென்மையானது.

242. சாருஹாஸா - அழகிய புன்சிரிப்போடு கூடியவள். 'உன் இனிய புன்சிரிப்பே சந்த்ரன்' என்ற வாக்யம் தேவியின் புன்னகையை வர்ணிப்பதோடு அதிலிருந்து தோன்றும் பரமானந்தத்தைத் தரும் ஒரு ஞான ப்ரமோதத்தையும் குறிப்பிடுகிறது. (குருமூலம்) 924. தரஸ்மேரமுகாம்புஜா - தாமரை போன்ற அழகிய முகத்தில் புன்சிரிப்புடன் கூடியவள். 460. நளினீ - 'அம்பாளை தாமரைப் பூவாக' சொல்லப்படுகிறது.

22. தாடங்கயுகளீ பூததபனோடுப மண்டலா :- சூர்யன், சந்திரன் இவர்களை இரு காதுகளில் தாடங்கங்களாய் (குழை - தோடு) தரித்துக் கொண்டிருப்பவள். ஸுமங்கலிகளுக்குத் தாடங்கம் ஒரு முக்யமான, ஸௌபாக்யமான அணி,

ஸௌந்தர்ய லஹரியில் 'ஹாலஹாலமென்ற கொடிய விஷத்தைச் சாப்பிட்டும் பரமேச்வரன், தன் உயிருக்கு எந்த தீங்கும் ஏற்படாததற்கு அம்பாளின் தாடகங்களின் மஹிமைதான்' - என்று கூறுகிறார் ஆதிசங்கரர். (28) - "ஸுதா மப்யாஸ்வாத்ய".

அன்னை அபிராமியின் அங்கங்களின் பொலிவை அபிராமிபட்டர் கண்டு, கண்டு, குழந்தைக்குரிய நிலையை அடைகிறார் என்று கொள்ள வேண்டும். தாயின் திருமார்பில் குழந்தைக்கு கண் செல்லும். கருணையையும், ஞானத்தையும் கொண்டவை அன்னையின் நகில்கள்.

50. அநவத்யாங்கீ :- குறை ஒன்றும் இல்லாத அங்க அமைப்பை உள்ளவள். சரீரத்தில் பாதாதி கேசாந்தமாகவும், கேசாதி பாதமாகவும் எந்த ஒரு குறையும் இல்லாத அங்க அமைப்பு காண்போருக்கு ஆனந்தத்தை அள்ளி வழங்குகிறது.

அம்பிகையின் திருவுருவத் தியானச் சிறப்பினால் அவளுடைய திருவுறுப்புகள் கண்ணிலே வந்து நிற்கின்ற அநுபவம் மிகச் சிறந்தது. மிகச் சிறந்த பக்தர்களே இந்த அநுபவத்தை அடைந்தவர்கள்.

அபிராமிபட்டர் அத்தகையவர் என்று சொல்லவும் வேண்டுமோ !

## 79. அபிராமியே - உன் விழிக்கு அருளுண்டு.

*விழிக்கே அருள் உண்டு அபிராம வல்லிக்கு வேதம் சொன்ன*
*வழிக்கே வழிபட நெஞ்சு உண்டு எமக்கு அவ்வழி கிடக்கப்*
*பழிக்கே சுழன்று வெம்பாவங்களே செய்து பாழ் நரகக்*
*குழிக்கே அழுந்தும் கயவர் தம்மோடு என்ன கூட்டு இனியே ?*

**(கட்டுகளில் இருந்து விடுபட)**

| | |
|---|---|
| விழிக்கே அருளுண்டு | அபிராமி தேவியின் கண்களில் எனக்கு வழங்க அருள் இருக்கின்றது. |
| அபிராமவல்லிக்கு | அபிராமவல்லிக்கு |
| வேதஞ் சொன்ன | வேதங்கள் கூறும் |
| வழிக்கே | ஆகம மார்க்கத்தில் |
| வழிபட நெஞ்சுண்டு | பூஜை செய்ய (என் உறுதியான) மனமும் இருக்கின்றது. |
| எமக்கு அவ்வழி கிடக்க | இந்த மாதிரியான மார்க்கம் எனக்கு இருக்கும் போது |
| பழிக்கே சுழன்று | பழிக்கப்படும் காரியங்களில் அழுந்தி |
| வெம்பாவங்களே செய்து | கொடும் பாவங்களைச் செய்து |
| பாழ் நரகக் குழிக்கே | பாழும் நரகக்குழியில் |
| அழுந்தும் | வீழ்ந்து வருந்த இருக்கின்ற |
| கயவர் தம்மோடு | கீழ்கடையான மனிதர்களோடு |
| இனி என்ன கூட்டு | நமக்கு என்ன சகவாசம் ? |

அன்னை அபிராமியின் திருவிழிகளில் எமக்கு வழங்க திருவருள் இருக்கிறது. அபிராம வல்லிக்கு வேதம் கூறும் மார்க்கத்திலே பூஜை செய்ய எமக்கு மனம் இருக்கின்றது.

இந்த நல்ல வழி இருக்க, பழிச் செயல்களிலே உழன்று திரிந்து, கொடும் பாவங்களைச் செய்து, அதன் பயனாகப் பாழான நரகக் குழியிலே அழுந்த இருக்கும் இழிந்தவர்களோடு இப்போது எமக்கு என்ன உறவு இருக்கிறது ?

(அத்தகையவர்களின் கூட்டு வேண்டவே வேண்டாம் - என்பதே)

இந்தப் பாடல் 'அபிராமி அந்தாதியின்' - மகுடம் போன்றது. அபிராமிபட்டர் இந்தப் பாடலை பாடியவுடன் தான், அன்னை அபிராமி தன்னுடைய காதிலிருந்து தாடங்கம் ஒன்றை வானில் வீசி எறிய, அது பூர்ண சந்திர மண்டலமாக (பௌர்ணமியாக)

உலகங்கள் பூராவும் ஜகஜ் ஜோதியாய் ஜொலித்தது.

அபிராமி அந்தாதியின் 3-ம் பாடலில், 'வெருவிப் பிறிந்தேன் நின் அன்பர் பெருமை எண்ணாத கரும நெஞ்சால் மறிந்தே விழும் நரகுக்குறவாய மனிதரையே' என்று தெளிவாக, அபிராமிபட்டர் கூறியதை நினைத்துப் பார்க்கவும்.

அதாவது 'சத்ஸங்கமே' (அடியார்களின் கூட்டமே) நாம் சேர்ந்திருக்க வேண்டிய இடம். கெட்ட சகவாசம் நம்மைக் கெடுத்தது அல்லாது நம்மை படுகுழியில் தள்ளிவிடும். அதிலிருந்து மீளவே முடியாது.

இதனையே இராமலிங்க வள்ளலார், 'ஒருமையுடன் நினது திருவடி மலர் நினைக்கின்ற உத்தமர் தம் உறவு வேண்டும் ; உள் ஒன்று வைத்துப் புறம் ஒன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்' - என்றார். ஔவைப் பாட்டியும், 'சேரிடம் அறிந்து சேர்' - என்று சொன்னாள்.

ஒருவரும் அறியாமல் தீய செயலை ஒருவன் செய்தால் அவன் பழியிலிருந்து தப்பிக்கலாம். ஆனால் அதனால் ஏற்படும் பாவத்திலிருந்து தப்பவே முடியாது. பழியும், பாவமும் செய்கிறவர்கள் இம்மையிலும் துன்புறுவார்கள். மறுமையிலும் நரக வாழ்வை அடைவார்கள். அந்த நரகத்தில் நெடுங்காலம் அழுந்திக் கிடப்பார்கள். இத்தகைய கொடிய பாவங்களைச் செய்யும் கயவர்கள் எளிதில் மீண்டு வர முடியாதபடி நரகக்குழியிலே அழுந்திக் கிடப்பார்கள்.

'இத்தகையவர்களுடைய 'கூட்டு' எதற்கு ? அவர்களுக்கும் நமக்கும் என்ன சம்பந்தம் ?' என்று கேட்கிறார் அபிராமிபட்டர். (கயவர் - இழி குணமும், இழிசெயலும் உடையவர்கள்)

அபிராமிபட்டர், அன்னை அபிராமியின் அடியார்களுடன் சேர்ந்து இருப்பதால், வேதம் சொன்ன வழிக்கே வழிபட நெஞ்சு உண்டு 'எமக்கு' - என்று தன்னைச் சார்ந்த பக்தர்களைச் சேர்த்தே சொல்கிறார்.

இவர்கள் செல்லும் வழி, - 'வேதநெறி' - இவர்கள் பெறுவது அன்னை அபிராமியின் அருள். அது அளவிலா ஆனந்தம்

அளிக்கும். இந்தப்பாடல் உலகில் நாம் வாழவேண்டிய முறையை அழகாக, எளிமையாகச் சொல்லுகிறது.

உலகில் வாழவேண்டிய முறை எது ? அறம், பொருள், இன்பம், வீடு அனைத்தையும் அந்த அந்த காலங்களில் அடையும் வழியை நமக்கு அறிவிப்பது வேதம். (சமயம் ஆறும் அன்னை அபிராமியே தலைவி) வேதத்தைத் தந்தவள் அன்னை அபிராமியே!

'இறைவி எப்படி அநாதியோ அப்படியே வேதமும் அநாதி'

அன்னை அபிராமியை எண்ணி அறம் செய்து (செய்ய வேண்டியதைச் செய்து, விலக்க வேண்டியதை விலக்குவது), அவள் அருளால் பொருள் ஈட்டி, (பொருள் என்பது அறவழியில் ஈட்டுவது), அவளை மறவாமல் மனைவியோடு வாழ்ந்து, நல் மக்களைப் பெற்று இன்பத்துடன் கூடி வாழ்ந்தால், அந்த அருளே நமக்கு 'வீடு' (முக்தி) என்னும் பேரின்ப வாழ்வைக் கொடுக்கும். இதற்கு வழிகாட்டியாகவும், துணையாகவும் நமக்கு உதவுவது 'வேதம்'. இவ்வாறு இந்த நல்ல வழி இருக்க, வேறு எதுவும் வேண்டாம் என்கிறார் 'அபிராமிபட்டர்'

## 80. அன்னையின் கருணையால் விளைந்த வியப்பு

*கூட்டிய வா என்னைத் தன் அடியாரில் கொடிய வினை*
*ஓட்டிய வா என்கண் ஓடியவா தன்னை உள்ள வண்ணம்*
*காட்டிய வா கண்ட கண்ணும் மனமும் களிக்கின்றவா*
*ஆட்டிய வா நடம் ஆடகத் தாமரை ஆரணங்கே.*

**(பெற்ற மகிழ்ச்சி நிலைத்திட)**

| | |
|---|---|
| ஆடகத்தாமரை ஆரணங்கே | பொற்றாமரை மலரில் வீற்றிருக்கும் பெண் தெய்வமான அபிராமி அன்னையே ! |
| என்னைத் தன்னடியாரில் கூட்டிய வா | அடியேனையும் தனது அடியார்களோடு சேர்த்ததும், |
| கொடிய வினை ஒட்டிய வா | எனக்கு வர இருந்த கொடிய வினையை போக்கியதும், |
| என் கண் ஓடியவா | என்னை நாடி விரைந்து வந்து அருளியதும், |
| தன்னை உள்ள வண்ணம் காட்டிய வா | தனது உண்மையான அருள் வடிவத்தை காண்பித்து அருளியதும், |
| கண்ட கண்ணும் மனமும் | அந்த அற்புதக் காட்சியைக் கண்ட எனது கண்ணும், மனமும் |
| களிக்கின்ற வா | எல்லையற்ற மகிழ்ச்சியில் களிக்கின்றதும் |
| நடம் ஆட்டிய வா ! | ஓர் அரிய நாடகத்தை, என்னை ஒரு பாத்திரமாக வைத்து,நீ நடத்திக் காட்டியது ! என்ன வியப்பு ! |

பொற் தாமரையில் வீற்றிருக்கும் பெண் தெய்வமான அழகிய அன்னை அபிராமியே !

என்னையும் பொருட்படுத்தி உன் அடியாரோடு ஒருவனாகச் சேர்த்துக் கொண்டதும் எனக்கு வர இருந்த பேராபத்தைப் போக்கியும், அருள் புரிய என்னிடம் ஓடிவந்ததும், தன் திருக்கோலத்தை உள்ளபடியே காட்டியும், இந்த அற்புதக் காட்சியைக் கண்ட என் கண்ணும் மனமும் ஆனந்த மேலீட்டால் மகிழ்கின்றவாறும், என்னை வியாஜ்யமாக வைத்துக்கொண்டு இவ்வாறு ஓர் அரிய நாடகத்தை ஆடிக் காட்டியவாறும், என்ன வியப்பு!

இந்தப்பாடல், அன்னை அபிராமி, (தன் அன்பர் அபிராமி பட்டர் சொன்னவாறு) பௌர்ணமியாகக் காட்சி தந்தவுடன்,

வியப்பில் மூழ்கி, பேரானந்தப் பரவசமடைந்து, அபிராமிபட்டர் உள்ளத்திலே தோன்றிய பாடல்.

அடியார்களுக்காக அன்னை அபிராமி எது வேண்டுமா னாலும் செய்வாள். 'நம்பினோர் கெடுவதில்லை' - பழமொழி.

கூட்டிய வா என்னைத் தன் அடியாரில் - அன்னை அபிராமி தன்னைத் தன் அடியார்களில் ஒருவனாக ஏற்றுக்கொண்டு விட்டாள் என்ற பேரானந்தம். இதுவே என் பிறவிப்பயன் என்ற தெய்வீக உணர்வு.

கொடிய வினை ஓட்டிய வா - என் மேலும், எனக்கு வர இருந்த கொடிய வினையைப் போக்கினாயே ! என்னே உன் அருள் !

என் கண் ஓடியவா - நீயே என்னை நாடி என்னிடத்தில் விரைந்து வந்தாய். முன்னும், 'நின் பாதம் என்னும் வாசக்கமலம் தலைமேல் வலிய வைத்து ஆண்டு கொண்டாய்' (32), 'நயந்து வந்து நீயே நினைவின்றி ஆண்டு கொண்டாய் நின்னை உள்ள வண்ணம் பேயேன் அறியும் அறிவு தந்தாய்...' (61) என்றார்.

இதன் தத்துவம் என்னவென்றால், அன்னை அபிராமி அன்பர்களின் அன்புக்காக ஏங்குகிறாள். சேய் தன்னை நோக்கி வரும் வரை அவள் காத்திருக்க மாட்டாள். அவளே ஓடிச்சென்று தன் சேயைத் தூக்கிக் கொள்வாள். அவள் உலக மாதா அல்லவா ! இதைத் தான் ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் முதல் நாமாவிலேயே வெளிப்படுத்துகிறது.

1. ஸ்ரீ மாதா - சிறப்பு மிகுந்த அன்னை.

- காஞ்சி பரமாச்சாரியரும் அடிக்கடி இதையே சொல்வார். 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' (ஔவைப்பாட்டி) நம்மைப் பெற்ற (இப்பூவுலகில்) தாயை தெய்வமாக நினைக்க முடியுமானால், தெய்வத்தை நாம் தாயாகக் கொள்வது மிகவும் எளிதானது ! அவள் அகிலாண்டத்தையும் பெற்ற தாய் அல்லவா !

என்னால் இதுவரை மனத்தில் தியானம் செய்து வைத்திருந்த உன் திருக்கோலத்தை 'தன்னை உள்ள வண்ணம்' - காட்டினாள் என்கிறார், அபிராமி பட்டர்.

இந்த அற்புதக் காட்சியைக் கண்ட கண்களும், நெஞ்சமும் பேரானந்தத்தில் மூழ்கின. (இதற்கு எல்லை இல்லை). முன்னும் (19) 'வெளிநின்ற நின் திருமேனியைப் பார்த்து என் விழியும் நெஞ்சும் களி நின்ற வெள்ளம் கரை கண்டதில்லை.' என்றார்.

அன்னையின் அளவு கடந்த கருணையால் ஏற்பட்ட வியப்பு ! 326. கருணா ரஸ ஸாகரா - கருணைக்கடல். கருணை என்ற ஜலத்தோடு கூடிய சமுத்திரம் போல் அம்பாள் இருக்கிறாள். 197. ஸாந்த்ர கருணா - (அளவிடமுடியாத) கருணை உள்ளவள். 581. தயாமூர்த்தி - தயை வடிவினள். 992. அவ்யாஜ கருணாமூர்த்தி - பட்சபாதமில்லாத கருணை உருவம். அப்படி கருணையே உருவானவள்.

ஒரு கணம், அபிராமிபட்டர் தம் மனக்கண்ணில் நினைத்துப் பார்க்கிறார். தன்னிடம் மன்னன் சரபோஜி கேட்ட கேள்வியும், தான் சொன்ன பதிலும், அதனால் தன்னை 'அபிராமி அந்தாதியை'ப்பாட வைத்ததையும் எண்ணி, எண்ணி வியப்பில் மூழ்குகிறார்.

இதெல்லாம் அன்னை அபிராமி தன்னை வைத்து ஆடிய நாடகம் என்று அறிந்து ஆனந்தத்தில் திளைக்கிறார். இறுதியில் 'ஆடகத் தாமரை ஆரணங்கே' - ('ஸஹஸ்ராரத்தில் இருக்கும் ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரை மீது அமர்ந்திருப்பவளே') என்று சொல்லி பாட்டை பக்திப் பரவசமாக நிறைவு பெறச் செய்கிறார்.

## 81. அன்னையின் பரிவாரங்கள்.

*அணங்கே அணங்குகள் நின் பரிவாரங்கள் ஆகையினால்*
*வணங்கேன் ஒருவரை வாழ்த்துகிலேன் நெஞ்சில் வஞ்சகரோடு*
*இணங்கேன் எனது உனது என்று இருப்பார் சிலர் யாவரொடும்*
*பிணங்கேன் அறிவு ஒன்று இலேன் என் கண் நீ வைத்த பேர் அளியே !*

**(நன்னடத்தை உண்டாக)**

| | |
|---|---|
| அணங்கே ! | அன்னை அபிராமியே ! |
| அணங்குகள் | பெண் தெய்வங்கள் |
| நின் பரிவாரங்கள் | உன் பரிவாக யோகினிகள், |
| ஆகையினால் | அவர்களின் துணை எனக்கு இருக்கும் காரணத்தினால், |
| ஒருவரை வணங்கேன் | வேறு எவரையும் வணங்க மாட்டேன் |
| வாழ்த்துகிலேன் | வாழ்த்தவும் மாட்டேன் |
| நெஞ்சில் வஞ்சகரோடு | மனதில் சூது உடையவர்களோடு |
| இணங்கேன் | தொடர்பு கொள்ளேன் |
| எனது உனது என்றிருப்பார் | தம் உடமையெல்லாம் நின்னுடையதே என்று இருக்கும் |
| சிலர் யாவரொடும் | சில ஞானிகள் யாவரோடும் |
| பிணங்கேன் | விரோதம் கொள்ளேன். |
| அறிவொன்றிலேன் | புற அறிவு சிறிதும் இல்லாதவனாகி விட்டேன் |
| என் கண் | (இவையாவும்) என் மீது |
| நீ வைத்த பேரளியே | நீ வைத்த பெருங் கருணையே ! |

அன்னை அபிராமியே ! பெண் தெய்வங்கள் உன் பரிவார யோகினிகள். அவர்களின் துணை எனக்கு இருக்கும் காரணத்தால், எவரையும் நான் துதி செய்து வணங்கமாட்டேன். மனத்தில் சூது உடையவர்களோடு கூட்டுறவு வைத்துக் கொள்ளமாட்டேன். சில அன்பர்கள் 'தன்னுடைய உடமைகள் எல்லாம் நின்னுடையதே' என்று உனக்கே அர்ப்பணம் செய்துவிட்டு அமைதியாக இருப்பார்கள். அத்தகைய ஞானிகளுடன் சேர்ந்தே இருப்பேன். யான் புற லௌகீக அறிவு சிறிதும் இல்லாதவன் ஆகிவிட்டேன். இவையெல்லாம் அடியேனிடம் நீ வைத்த பெருங் கருணையின் பலனேயாகும்.

இந்தப்பாடல் அபிராமிபட்டரை ஒரு சிறந்த ஸ்ரீவித்யா உபாஸகராக நமக்குக் காட்டுகிறது. இங்கு அணங்குகள் - என்று

பெண் தெய்வங்களை, அதாவது, அம்பாளை வணங்கும் தேவதைகளை, பரிவாரங்கள் என்று குறிப்பிட்டு அவர்களின் துணை எனக்கு இருப்பதால் நான் யாரையும் வணங்கமாட்டேன், வாழ்த்தமாட்டேன் என்று பொருள் கொள்வதே 'சக்தி வழிபாட்டிற்கு' பொருந்தும்.

மன்னன் சரபோஜியை வணங்காததின் காரணம் இப்போது புரிகிறதல்லவா !

ஸ்ரீசக்ரத்தில் ஒன்பது ஆவரணங்கள் உள்ளன. ஆவரணம் என்பது - மறைப்பு, வேலி, மதில், கோட்டை - என்று பொருள்படும்.

ஸ்ரீசக்ரத்துக்குத் தனியாக பூஜா விதானம் உள்ளது. ஒவ்வொரு ஆவரணத்திலும் உள்ள தேவதைகளையும், ஸித்தியையும், சக்ரேஸ்வரியையும் ஆராதிக்க வேண்டும். அவர்களின் அனுமதியுடன் அடுத்த ஆவரணத்திற்குச் செல்லவேண்டும்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தில்

237. மஹா சதுஷ் ஷஷ்டி கோடி யோகினீ கண ஸேவிதா :- அறுபத்தி நான்கு கோடி யோகினீ கணங்களால் ஸேவிக்கப்பட்டவள்.

ஸ்ரீசக்ரத்தில் சதுரச்ரத்தில் (பூபுரத்தில்) நடுரேகையில் ப்ரகடயோகினீகளாக விளங்குபவர் - ப்ராஹ்மீ, மாஹேச்வரீ, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹீ, மாஹேந்த்ரீ, சாமுண்டா, மஹாலக்ஷ்மி - என எட்டு மாத்ருகா தேவிகள். இவர்கள் ஒவ்வொருவருக்கும் 8 யோகினிகள் பரிவார தேவதைகளாக உள்ளனர். இவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு கோடி பரிவார கணங்கள். ஆக 8×8 =64 கோடி யோகினிகள். இவர்களால் பணிவிடை செய்யப்படுகிறவள் தேவீ.

'மஹா' என்ற சொல்லுக்கு ஒன்பது என்று பொருள். மஹா சதுஷ்ஷஷ்டி கோடி என்றால், 9×64 = 576 கோடி தேவதைகள்.

ஸ்ரீசக்ரத்தின் ஒவ்வொரு ஆவரண சக்ரத்திலும் 64 கோடி யோகினிகள். ஒன்பது ஆவரணங்களில் 576 கோடி யோகினிகள்.

இவர்களால் ஸேவிக்கப்பட்டவள் தேவீ.

'அறிவொன்றிலேன்' - என்பதற்கு தன்னை அறிவில்லாதவன் என்று தன்னடக்கமாய்ப் பொருள் கொள்வதை விட அபரஞானம் நீங்கி பரஞானம் பெற்றவர் என்று கொள்வது சிறந்தது.

'ஸத்சங்கத்வே நிஸ்ஸங்கத்வம்' (பஜகோவிந்தம் - 9) என்பது ஆசார்ய பகவத்பாதரின் வாக்கு. நிஸ்ஸங்கத்வம் - சேர்வற்றுப் போதல் என்னும் நிலைக்கு முதலில் 'ஸத்ஸங்கத்வம்' அதாவது நல்லவர்களுடன் சேர்வதே வழி. நல்லோருடனும், நல்லவைகளுடனும் சேர்வதே, தீயவைகளுடனும் தீய விஷயங்களுடனும் சேர்க்கையை அற்றுப் போகச் செய்ய முதற்படி.

அபிராமி அந்தாதியில் வரும் முக்கிய கருத்துக்களில் ஒன்று ஸத்ஸங்கம்.

'தள்ள வேண்டியது கயவர் நேசம்

கொள்ள வேண்டியது அன்னையின் திருவடித்தாமரைகள்'

அன்னை அபிராமியின் திருவருளே அவளை வணங்கவும், சாது சங்கத்தைப் பெறவும் துணை செய்யும் என்பது அபிராமிபட்டரின் அருள்மொழி. இந்த அருள் உரையை நாம் கடைபிடித்து நற்கதி அடைவோமாக !

## 82. அன்னையின் அரிய ஆற்றல்

*அளியார் கமலத்தில் ஆரணங்கே அகிலாண்டமும் நின்*
*ஒளியாக நின்ற ஒளிர் திருமேனியை உள்ளுதொறும்*
*களியாகி அந்தக் கரணங்கள் விம்மிக் கரை புரண்டு*
*வெளியாய் விடின் எங்ஙனே மறப்பேன் நின் விரகினையே !*

**(கவன சக்தி பெருக)**

| | |
|---|---|
| அளியார் கமலத்தில் ஆரணங்கே | வண்டுகள் மொய்க்கும் தாமரை மலரில் வீற்றிருக்கும் அபிராமி அன்னையே ! |
| அகிலாண்டமும் நின் ஒளியாக நின்ற | சகல அண்டங்களும் உனது ஒளிமிக்க தேஜஸ்ஸாகவே இருக்கும் |
| ஒளிர் திருமேனியை உள்ளுதொறும் களியாகி அந்தக் கரணங்கள் | உனது தேஜோமயமான திருமேனியை மனதில் த்யானிக்கும் போது பேரானந்தம் அடைந்து மனம், புத்தி, சித்தம், அஹங்காரம், உள்ளம் என்ற |
| விம்மி கரை புரண்டு | உட்கருவிகள் யாவும் பூரித்து தத்துவமாகிற கரைகளை உடைத்துக் கொண்டு, அப்பாற் சென்று |
| வெளியாய் விடின் | குணம், குறி, காலம், நாமம், ரூபம் முதலிய அற்ற பரவெளியாகிவிட்டால் |
| நின் விரகினை எங்ஙனே மறப்பேன் ? | உன் சாமர்த்தியத்தை எவ்வாறு மறக்க முடியும் ? |

வண்டுகள் மொய்க்கும் தாமரையில் வீற்றிருக்கும் அன்னை அபிராமியே, அண்டங்கள் அனைத்தும் உனது தேஜஸ்ஸாகவே இருக்கும் உனது தேஜோமயமான திருமேனியை மனதில் அனுசந்தானம் (த்யானிக்கும்) செய்யும் போதெல்லாம் பேரானந்தம் அடைந்து மனம், புத்தி, சித்தம், அஹங்காரம், உள்ளம் என்ற உட்கருவிகள் யாவும் பூரித்து, தத்துவமாகிற கரைகளை உடைத்துக் கொண்டு அப்பால் சென்று குணம், குறி, காலம், நாமம், ரூபம் முதலிய அற்ற பரவெளியாகி விட்டால் உன் சாமர்த்தியத்தை (விரகினை) எவ்வாறு மறக்கமுடியும் !

அபிராமிபட்டர், சென்ற பாட்டில், தன் புற அறிவு நீங்கினதைக் (அறிவு ஒன்று இலேன்) கூறி, இந்தப்பாட்டில்

உள்ளறிவு முற்றி பரஞானத்தால் அண்டம் முழுவதும் அன்னை அபிராமியாகவே பார்த்து அந்த அனுபவத்தில் திளைத்துத் தானும் தத்துவம் கடந்து பரவெளியில் தாதாம்யம் அடைந்த 'ஜீவன் முக்தி' நிலையைக் கூறுகின்றார். நாமும் இப்பாடலைப் படிக்கும் போது பூரிக்கின்றோமல்லவா !

ஒளவை பாட்டியும், தன் விநாயகர் அகவலில், 'வாக்கும் மனமும் இல்லா மனோலயம் தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்து...' என்பார்.

பரவெளி - இதையே பாழென்றும் சூன்யமென்றும் சொல்வர்.

'முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய்'

முன்னும், 'வெளிநின்ற நின் திருமேனியைப் பார்த்தென் விழியும், நெஞ்சும் களிநின்ற வெள்ளம் கரைகண்டதில்லை...' (19) என்றார் அபிராமிபட்டர்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 12. நிஜாருண ப்ரபாபூர மஜ்ஜத் ப்ரஹ்மாண்ட மண்டலா -

தன்னுடைய சிகப்பான காந்தியின் ப்ரவாஹத்தினால் ப்ரஹ்மாண்டங்கள் உடைய மண்டலங்களை முழ்கச் செய்தவள்.

நமது பூமண்டலம், ஆகாச மண்டலம், நக்ஷத்ர மண்டலம் - இவை எல்லாம் சேர்ந்து ஒரு ப்ரஹ்மாண்டம். இதைப்போல் பலகோடிமண்டலம் கொண்டது ப்ரஹ்மாண்ட மண்டலம். இவை எல்லாவற்றையும் தன்னுடைய செம்மையான கதிர்களைப் பரப்பி அந்த செவ்வொளியிலே மூழ்கடிக்கிறாள்.

இதையே, ஸௌந்தர்ய லஹரீ, 18-வது ஸ்லோகம்

"தனுச் சாயா பிஸ் - தே தருண - தரணீ ஸ்ரீ ஸரணிபிர் -

திவம் ஸர்வா - முர்வீ - மருணிமனி மக்னாம் ஸ்மரதிய:"

-சொல்கிறது.

தன்னுடைய செவ்வொளியினாலேயே உலகங்கள் தனியே காணப்படுகின்றன. பிறகு அதே ஒளியிலேயே அவற்றை மூழ்கடித்து தேவியின் செவ்வொளி மட்டுமே விளங்குகிறது.

த்யான யோகத்தில் 'ஜாக்கிரத்தில்' சொப்பனம் போல் அம்பிகையின் வடிவ தரிசனம் கிடைக்கிறது. அப்போது இன்பம் உண்டாகிறது. மனம் விரிந்து அம்பிகையின் அகண்ட வடிவத்தைக் காண்கிறது. இன்பம் மிகுதியாகிறது. அந்த நிலை தீவிரமானால் மனம் இல்லாமற் போகிறது.

ஜாக்கிரத்தில் - சுஷுப்தி நிலை வருகிறது. அப்போது உண்டாகும் ஆனந்தம் அளவற்றது. கருவி, கரணங்கள் கழன்ற நிலை அது. ஒரே பரவெளியில் ஒளியே ஆனந்தமாய் எல்லாவற்றையும் தனக்குள் கரைத்துக் கொள்ளும் நிலை அது. அங்கே ஆத்மானந்தம் பராம்பிகையோடு அத்விதீயமாக ஒன்றிய அநுபவம், பிரம்மானந்த அநுபவம் ஏற்படுகிறது.

இத்தகைய நிலையே நிர்விகல்ப சமாதி. அதாவது,

அம்பிகையின் திருவுருவம் த்யானித்தல், தேஜோமயமான வடிவத்தால் உள்ளம் நிரம்புதல், அந்த ஒளி வடிவிலே ஒன்றாய் கலந்து எல்லாம் மறந்த ஆனந்த நிலை.

அபிராமிபட்டர் இத்தகைய நிலையை அடைந்தவர். மிகவும் அல்லற்பட்டு பலகாலம் பயின்று பெற வேண்டிய இன்பத்தை, எளிய முறையில் அடைய, அன்னை அபிராமி வழிகாட்டினாளே என்பதை நினைத்து அபிராமிபட்டர் வியக்கிறார். அன்னை அபிராமியின் கருணையை நினைத்து உருகுகிறார்.

'தாயே, நீ எனக்குக் காட்டிக் கொடுத்த இந்த உபாயத்தை (விரகினை) நான் எவ்வாறு மறக்க முடியும்.' என்று கண்களில் நீர் ததும்ப சொல்கிறார்.

## 83. அபிராமி அடியாருக்கு இந்திர பதவியும் அருளுவாள்.

*விரவும் புதுமலர் இட்டுநின் பாத விரைக்கமலம்*
*இரவும் பகலும் இறைஞ்ச வல்லார் இமையோர் எவரும்*
*பரவும் பதமும் அயிராவதமும் பகீரதியும்*
*உரவும் குலிசமும் கற்பகக் காவும் உடையவரே.*

**(ஏவலர் பலர் உளவாக)**

| | |
|---|---|
| நின் பாத விரைக் கமலம் | உனது நறுமணம் பொருந்திய தாமரைத் திருவடிகளை |
| விரவும் புதுமலர் இட்டு | மணம் மிக்க பல வகை புதிய மலர்களைக் கொண்டு |
| இரவும், பகலும் | இரவு பகல் எந்நேரமும் |
| இறைஞ்ச வல்லார் | வழிபட வல்லவர்கள், |
| இமையோர் எவரும் | தேவர்கள் யாவரும் |
| பரவும் | போற்றிப் புகழ்கின்ற |
| பதமும் | பதவியையும் |
| அயிராவதமும் | வெள்ளை யானையையும் |
| பகீரதியும் | ஆகாய கங்கையையும் |
| உரவும் குலிசமும் | வலிமையுடைய வஜ்ஜிராயுதப் படையும் |
| கற்கபகக் காவும் | கற்பகச் சோலையையும் |
| உடையவரே | உடைய இந்திரரே யாவர். |

அன்னை அபிராமியே ! பலவகை வண்ணமும் வடிவும் மணமுடைய புதிய மலர்களை அர்ச்சனை செய்து நின்னுடைய திருவடியாகிய மணத்தையுடைய தாமரைகளை இரவும் பகலும் வணங்கும் வன்மையுடைய அன்பர்கள், இப்பிறவிக்குப்பின், தேவர்கள் யாவரும் புகழும் பதவியையும், அயிராவதமான வாகனத்தையும் (ஐராவதம் என்ற நான்கு கொம்புகளை உடைய வெள்ளை யானையையும்), ஆகாய கங்கையையும், வலிமையுடைய வஜ்ராயுதப்படையையும், கற்பகச் சோலையையும் உடைய இந்திரராக ஆவார்கள்.

வேதத்தில் கர்ம காண்டத்தில், நூறு யாகங்கள் செய் பவர்கள்தான் இந்திர பதவியை அடையமுடியும் என்பர். ஆனால் இங்கு, அபிராமிபட்டர் காட்டும் வழி எளிதானது. அதாவது அன்னை அபிராமியை வாக்கு, காயம், மனம் - என்ற மூன்று கரணங்களாலும் வழிபடுவதே. பக்தி வகைகளில், அன்று மலர்ந்த

புதுமலர்களால் தேவியின் திருவடிகளை அர்ச்சிப்பது என்பதும் ஒன்றாகும். கை மலரை அர்ச்சிக்க, வாய் திருநாமத்தைச் சொல்ல, மனம் அந்தத் திருவடியில் ஈடுபடவேண்டும்.

'தகட்டிற் சிறந்த கடம்பையும் நெஞ்சையும் தாளிணைக்கே புகட்டி..' என்று கந்தர் அலங்காரம் சொல்கிறது.

அடியேனைப் பெற்ற, இவ்வுலகத் தாயாரான ஸ்ரீமதி. கமலம்மாவிற்கும் அம்பிகைக்கு அழகிய நறுமணமுள்ள புது மலர்களைக் கொண்டு, அலங்கரித்து, அர்ச்சனை செய்வதில் எப்போதும் கொள்ளை ஆசை. எவ்வளவு மலர்கள் கொண்டு பூஜித்தாலும், அவர்களுக்கு த்ருப்தி இராது. அவர் ஸ்ரீ சிதாநந்த நாதர் அவர்களின் சிஷ்யை ஆவார். ஸ்ரீவித்யா உபாஸகர். வெகு எளிமையாக வாழ்ந்தவர். அன்னதானம் செய்வதில் அயராதவர்.

அப்பரும், 'நகமெலாம் தேயக் கையால் நான் மலர் கொய்து' - என்பர். 'பூ நாளும் தலை சுமப்ப' - என்று திருஞானசம்பந்தர் பாடுவார்.

இந்திரராக வாழ்வார் - என்று சொல்லி, அப்பதவியின் அருமை, பெருமைகளை அழகாக எளியோருக்கும் புரியும் படி சொல்கிறார் அபிராமிபட்டர்.

அயிராவதம் - வெண்ணிறம் வாய்ந்த யானை. நான்கு தந்தங்கள் உடையது. அது நடந்து வந்தால் கைலாச பர்வதமே கால் பெற்று நடப்பது போல் இருக்கும்.

'வெள்ளி மலை எனவே, கால் வாங்கி நிற்கும் களிற்றான்,' - கந்தர் அலங்காரம். பகீரதி :- ஆகாச கங்கை. தேவ மகளிர் நீராடும் புனிதம் பெற்றது. அந்த ஆறு இந்திரனுக்குச் சொந்தமானது.

வஜ்ராயுதம் - உடல்-உள்ளம் வலிமைபெற்ற இந்திரனின், இரும்பையும் அறுக்கும் வலிமை பெற்ற ஆயுதம்.

கற்பகக் காவும் - ஐந்து கற்பக மரங்கள் உடைய சோலை. கற்பக மரம் - கேட்டதைத்தரும்.

அன்னை அபிராமியின் மணமுள்ள திருவடித்தாமரையை புதுமலர் இட்டு, இரவும் பகலும் மூன்று கரணங்களாலும் வழிபடும் அன்பர்கள் இந்திரராக வாழ்வார்.

## 84. அன்னை அபிராமி அடியார்களுக்கு இனி பிறவி இல்லை.

*உடையாளை ஒல்கு செம்பட்டுடையாளை, ஒளிர் மதிச்செஞ்*
*சடையாளை வஞ்சகர் நெஞ்சடையாளைத் தயங்கு நுண்ணூல்*
*இடையாளை எங்கள் பெம்மான் இடையாளை இங்கு என்னை இனிப்*
*படையாளை உங்களையும் படையாவண்ணம் பார்த்திருமே.*

**(சங்கடங்கள் தீர)**

| | |
|---|---|
| உடையாளை | அண்டங்கள், அடியார்கள் எல்லா வற்றையும் தனது உடைமையாகக் கொண்ட அபிராமி அன்னையே ! |
| ஒல்கு செம்பட்டுடையாளை | சிவந்த பட்டாடையை மேலே உடையாகக் கொண்டவளை |
| ஒளிர்மதிச்செஞ்சடையாளை | ப்ரகாசிக்கின்ற சந்திரனை தனது செம்மையான கூந்தலில் தரித்தவளும் |
| வஞ்சகர் நெஞ்சடையாளை | கபடு உள்ள மனதையுடையவர்களை அணுகாதவளை |
| தயங்கு நுண் நூல் | மிகவும் மெல்லிய நூலை விட |
| இடையாளை | மெல்லிய இடையை உடையவளை |
| எங்கள் பெம்மான் | எங்கள் தலைவராகிய சிவபெருமானின் |
| இடையாளை | இடப் பக்கத்தில் இருப்பவளை |
| இங்கு என்னை இனிப் | அடியேனை இவ்வுலகில் இனி மேல் |
| படையாளை | பிறக்கும் படி செய்யாதவளை |
| உங்களையும் | உலகீரே ! நீங்களும் |
| இனிப் படையா வண்ணம் | இனிமேல் உலகில் பிறக்காமல் இருக்க |
| பார்த்து இருமே ! | இந்த ரூபத்தை பார்த்து மனதில் தியானம் செய்யுங்கள் |

எல்லாவற்றையும் தன் உடமையாகக் கொண்ட பரமேசுவரியை, தளர்ந்து அசையும் செந்நிறமுள்ள பட்டாடையை அணிந்தவளை, விளங்குகின்ற சந்திரனை அணிந்த செம்மையான (அழகான) சடை (கூந்தல்) உடையவளை, விளங்கும் நுண்ணிய நூல் போன்ற இடையை உடையவளை, எங்கள் பரமேசுவரனிட மாகிய வாமபாகத்தில் இருப்பவளை, இவ்வுலகில் என்னை இனி மேல் உடலெடுத்து வரும்படி படையாதவளை (செய்யாதவளை), உங்களையும் படையாத வண்ணம், அவள் திவ்ய தரிசனத்தை உள்ளும் புறமும் செய்து, அமைதியாக இருங்கள்.

அன்னை அபிராமியைத் தியானம் செய்கிறவர்கள் பிறவித் துன்பத்தை அடையார்.

பக்தர்களுக்கு தம்முடைய உபாசனா மூர்த்திகளிடம் உள்ள உறுதியான நம்பிக்கைக்கு ஈடும் இல்லை. இணையும் இல்லை. அப்பர் சுவாமிகளும், பிரகலாதனும் அப்பேர்ப்பட்டவர்க‌ 'அஞ்சுவது யாதொன்றும் இல்லை, அஞ்ச வருவதும் இல்லை' என்றார் அப்பர்.

சென்ற பாட்டில் அன்பர்களுக்கு இந்திரபதவி கிடைக்கும் என்று சொன்ன அபிராமிபட்டர் இந்தப்பாட்டில் 'முக்தியும்' கிடைக்கும் என்கிறார்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 736. முக்திதா - முக்தி அளிப்பவள். 737. முக்தி ரூபிணீ - முக்தியையே ரூபமாக உடையவள். ஆத்ம ஸ்வரூபம் அக்ஞானத்தால் மறைக்கப்படுகிறது. அந்த அஞ்ஞானம் போனவுடன் ஆத்ம ஸ்வரூபம் தெரிந்து ஸ்வாத்மானந்தம் ஏற்படுகிறது. இதுவே முக்தி அல்லது மோக்ஷம். இந்த ஆத்ம ஸாக்ஷாத்கார ஆத்மானந்த ரூபமாக அம்பாள் இருக்கிறாள்.

49. ஸர்வாருணா - தன்னுடைய சரீரம், வஸ்த்ரம், ஆபரணம், புஷ்பம், காந்தி எல்லாமே சிவந்த நிறமாயுள்ளவள்.

அபிராமி அந்தாதியின் முதல் பாடலிலேயே, அபிராமிபட்டர், அன்னை அபிராமியை சிவப்பாகவே வர்ணித்தார் அல்லவா !

37. அருணாருண கௌஸும்ப வஸ்த்ர பாஸ்வத்கடீதடீ - மிகவும் சிவந்த பட்டாடையால் ப்ரகாசிக்கும் இடையை உள்ளவள்.

111. பிஸதந்து தனீயஸீ - தாமரைத் தண்டில் இருக்கும் நூல் போல் மிக மெல்லியவள். 243. சாருசந்த்ரகலாதரா - அழகிய சந்த்ர கலையைத் தரித்தவள்.

ஒளிர்மதிச் செஞ்சடையாளை :- இங்கு இரண்டு விதமாகப் பொருள் கொள்கின்றனர்.

1) செம்மையான, அதாவது, அழகான கூந்தலை உடையவளை.

2) அன்னை அபிராமி, சில சமயங்களில், பூதங்களுக்குத் தலைவியாக நிற்கும் போது சிவபெருமானைப் போலச் சிவந்த சடையை உடையவளாகத் தோன்றுவாள். அங்கே சந்திரனை அணிந்திருப்பாள். செஞ்சடையில் வெள்ளைப் பிறை பளிச்சென்று தோன்றும்.

திருமூலரும், தனது திருமந்திரத்தில் (1138, 1194) அன்னையை "சடாதரி" என்று வர்ணிக்கிறார். (சடாதரி – விரிந்த சடைமுடியுள்ளவள்).

பின்னும் (பாடல்–1217), "பாகம் பராசக்தி பைம்பொன் சடைமுடி" என்பர்.

இறைவனுக்கும், இறைவிக்கும் - ஸ்வாமி, ஸ்வாமினி என்பர். தமிழில் உடையான், உடையாள் என்று கூறுவர். உடையாளை-ஆன்மாக்களை தன்னுள் உடையவளை, வஞ்சகர் நெஞ்சு அடையாளை - அம்பிகையின் இயல்பைச் சொல்லும் வாயிலாக வஞ்சகம் இல்லாத நெஞ்சத்தோடு அவளை வழிபடவேண்டும் என்ற அறிவுரையை மறைமுகமாகச் சொல்கிறார் அபிராமிபட்டர்.

847. தலோதரீ - மெல்லிய இடையை உடையவள். 35. லக்ஷ்யரோமலதா தாரதா ஸமுந்நேய மத்யமா - ரோம வரிசையாகிற கொடிக்கு ஆதாரமாயிருப்பதை நேரிடையாகக் காண முடியாததினால் ஊஹிக்க வேண்டியிருக்கிறதான இடையை உடையவள்.

'பார்த்திருமே' - என்று சொல்லி அபிராமிபட்டர், அழகாக, ஆழ்ந்த பொருளுடன் நிறைவுப் பெறச் செய்கிறார். பார்த்து+இரும். புறக்கண்ணில் பார்த்து, அகக்கண்ணில் அன்னை அபிராமியின் திருவுருவத்தை நிறுத்தினால் சலனமற்ற இருப்பு உண்டாகும். இதைத் தான் 'இரும்' என்றார்.

இந்த நிலை வந்த பிறகு நிச்சயமாக அன்னையின் அருளமுத அநுபவம் கிடைக்கும். இதற்குப் பின் அன்னை அபிராமி அவர்களை இனிமேல் இந்த உலகில் பிறக்கும்படி செய்ய மாட்டாள்.

## 85. பார்க்கும் இடம் எல்லாம் தெரிவது அபிராமியே !

*பார்க்கும் திசைதொறும் பாசாங்குசமும் பனிச்சிறை வண்டு*
*ஆர்க்கும் புதுமலர் ஐந்தும் கரும்பும் என் அல்லல் எல்லாம்*
*தீர்க்கும் திரிபுரையாள் திருமேனியும் சிற்றிடையும்*
*வார்க் குங்கும முலையும் முலை மேல் முத்து மாலையுமே.*

**(துன்பங்கள் நீங்க)**

| | |
|---|---|
| பார்க்கும் திசை தொறும் | அடியேன் எத்திசை நோக்கினாலும் காண்பது |
| பாசாங்குசமும் | பின் இரண்டு கைகளில் தாங்கிய பாசமும், அங்குசமும், |
| பனிச் சிறைவண்டு ஆர்க்கும் | (முன் இரண்டு கைகளில்) தாங்கிய குளிர்ந்த சிறகினை உடைய வண்டுகள் மொய்க்கும் |
| புதுமலர் ஐந்தும் | புதிய மலர்களாகிய ஐந்து கணைகளும் |
| கரும்பும் | கரும்பு வில்லும், |
| என் அல்லல் எல்லாம் | என்னுடைய துன்பங்களை எல்லாம் |
| தீர்க்கும் | துடைக்கும் |
| திரிபுரையாள் | திரிபுர சுந்தரியின் |
| திருமேனியும் | அழகிய மேனியும் |
| சிற்றிடையும் | சிறிய இடுப்பும் |
| வார்க் குங்கும முலையும் | கச்சையுடைய குங்குமக் குழம்பு பூசிய திருமுலைகளும் |
| முலை மேல் | அம் முலைகளின் மேல் |
| முத்து மாலையுமே. | (அணிந்த) முத்தாலாகிய மாலையுமே. |

அடியேன் எத்திசை நோக்கினாலும் என் முன் நின்றருள்வது திரிபுரசுந்தரி. தன் பின் இரு கரங்களில் தாங்கிய பாசமும், அங்குசமும், முன் கைகளில் தாங்கிய குளிர்ச்சி பெற்ற சிறகுடைய வண்டுகள் சப்திக்கின்ற அன்றலர்ந்த புஷ்பங்களாலான ஐந்து அம்புகளும், கரும்பு வில்லும், என் துன்பங்களை எல்லாம் துடைக்கும் திரிபுரசுந்தரியின் அழகிய திருமேனியும், சிறிய இடையும், கச்சையுடைய குங்குமக்குழம்பு பூசிய நகில்களும், அவற்றின் மேல் அணிந்த முத்துமாலையும் ஆகும்.

சென்ற பாட்டில், அபிராமிபட்டர், முதலில் புறத்தே அன்னை அபிராமியின் விக்கிரக வடிவம் கண்டு, பிறகு அகக் கண்ணிலும், தியானத்தினால் கண்டார். மறுபடியும், அந்த பேரானந்தத்தில்

இருந்து, புறத்தேயும் அவருக்கு அந்தக் காட்சி தெரிகிறது. எங்கு பார்த்தாலும் அன்னை அபிராமி, அவருக்கு திரிபுரசுந்தரியாகக் காட்சி தருகிறாள். (பகவான் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர் அப்படி அன்னையின் தரிசனத்தைப் பெற்றவர்). முன்னும், அபிராமி அந்தாதியின் இரண்டாவது பாடலிலேயே,... 'திரிபுரசுந்தரியாவது அறிந்தனமே' என்று பாடினார் அல்லவா ! ஆதி சங்கரரும் ஸௌந்தர்யலஹரீ 7-வது ஸ்லோகத்தில் (க்வணத் காஞ்சீ - தாமா) அம்பாளை இப்படியே வர்ணித்த தோடல்லாமல், இந்த ரூபமே தன் முன் தோன்ற வேண்டுமென்று பிரார்த்திக்கிறார்.

நம் தமிழ்நாட்டு ஸ்தலங்களிலே, காஞ்சிபுரம் ஒன்றில் மட்டும் இந்த ரூபத்தில் காமாக்ஷியம்மை அமர்ந்திருக்கிறாள். அம்பாளின் அருள்பெற்ற சாதகர் எங்கு பார்த்தாலும், எதைப் பார்த்தாலும் அம்பாளாகவே காண்பார்கள் என்பதற்கு ஒரு எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

முந்தின பாட்டில் கூறப்பட்டது முக்தி நிலைக்கு சாதனமாக உருவ த்யானம். இப்பாட்டில் அதனால் அடைந்த காட்சியைக் கூறுகின்றது.

திருக்கடவூரில் எழுந்தருளியிருக்கும் அபிராமி அன்னையின் திருவுருவில் பாசாங்குசமும், புஷ்ப பாணமும் கரும்பு வில்லும் இல்லையாயினும் அபிராமிபட்டர் தனது பாவனாத்ராட்யத்தால் அன்னை அபிராமியை திரிபுரசுந்தரியாக ஆலயத்தில் தரிசித்த தோடல்லாமல் பார்க்குமிடமெங்கும் அவளையே பார்க்கிறார்.

பகவத் கீதையில் (6-30) பகவான் கிருஷ்ண பரமாத்மா- அர்ச்சுனனுக்கு சொன்னது. "யோ மாம் பஷ்யதி ஸர்வத்ர ஸர்வம் ச மயிபஷ்யதி தஸ்யாஹம் ந ப்ரணஷ்யாமி ஸ ச மேந ப்ரணஷ்யதி"

'எவன் எங்கும் என்னையே காண்கின்றானோ எல்லாப் பொருள்களையும் என்னிடத்தே காண்கின்றானோ அவனுக்கு நான் அழியமாட்டேன் ; எனக்கு அவன் அழியமாட்டான்'

## 86. அன்னையே ! காலன் வரும் போது காப்பாயாக !

*மால் அயன் தேட மறைதேட வானவர் தேட நின்ற*
*காலையும் சூடகக்கையையும் கொண்டு கதித்த கப்பு*
*வேலை வெங்காலன் என் மேல் விடும் போது வெளிநில் கண்டாய்*
*பாலையும் தேனையும் பாகையும் போலும் பனிமொழியே !*

**(ஆயுத பயம் நீங்க)**

| | |
|---|---|
| பாலையும் | (உடலுக்கு உணவாகும்) பாலையும் |
| தேனையும் | (இருதயத்திற்கு உறுதி தரும்) தேனையும், |
| பாகையும் போலும் | (நாவிற்கு ருசி தரும்) வெல்லப் பாகையும் போன்று |
| பனி மொழியே | இனிய சொல்லையுடைய அபிராமி அன்னையே ! |
| கதித்த | மேலோங்கிய |
| கப்பு வேலை | திரிசூலப் படையை |
| வெங்காலன் | கொடிய யமன் |
| என் மேல் விடும் போது | அடியேன் மீது ஏவும் போது, |
| மால், அயன் தேட | திருமால், பிரம்மா இருவரும் தேட |
| மறை தேட | வேதங்களும் தேட |
| வானவர் தேட | விண்ணவர்களும் தேடிக் காணாத, |
| நின்ற காலையும் | அமைந்த திருவடிகளையும் |
| சூடகக் கையும் கொண்டு | வளையல்கள் அணிந்த திருக்கரங்களையும் கொண்டு |
| வெளி நில் கண்டாய் | என் முன் தோன்றும்படி வெளிவந்து நிற்க வேண்டும். |

பால், தேன், பாகு இவற்றை ஒத்த இனிய, மென்மையான மொழியை உடைய அன்னை அபிராமியே !

கொடிய காலன் தன்னுடைய, மேல் எழுந்த மூன்று கிளைகளை உடைய திரிசூலப்படையை, அடியேன் மீது ஏவும் போது,

திருமாலும், பிரம்மனும், வேதங்களும், தேவர்களும் தேடிக் காண முடியாத நின் திருப்பாதங்களையும், வளையல்கள் அணிந்த நின் திருக்கரங்களையும் கொண்டு என்முன் தோன்றும் படி வெளிவந்து நிற்கவேண்டும்.

குழந்தைகள் தன் தாயினிடத்தில் ஏதாவது வேண்டிக் கேட்கும் போது, நேரிடையாகச் சொல்லாமல், தன் தாயைப் பல வார்த்தைகளாலும் புகழ்ந்து பாராட்டி பின் சுற்றிவளைத்து மறைமுகமாகக் கேட்கும். அது தாயிடம் கொண்ட உரிமை. அதாவது எது கேட்டாலும் இல்லையென்று சொல்லாமல் தரும் கருணை உள்ளம் படைத்த தாயும் இதைப் புரிந்து கொண்டு, சிரித்துக்கொண்டே, சேய் கேட்டதைத் தருவாள்.

இதைப்போலவே அபிராமிபட்டரும் நயம்பட, அன்பு கலந்த உரிமையோடு அன்னை அபிராமியிடம் தன் விண்ணப்பத்தை வைக்கிறார்.

நின்ற காலையும் சூடகக் கையையும் கொண்டு :- திருக்கடவூர் காலசங்கார க்ஷேத்திரம். பக்த மார்க்கண்டேயருக்காக, காலனை காலால் எட்டி உதைத்தவர் காலகாலன்.

அதாவது சிவபெருமான் காலனுக்கு காலனானார் - காலகாலர். அவர் எட்டி உதைத்தது 'இடது காலால்' - அதற்கு உரியவள் அன்னை அபிராமியல்லவா ! (சிவபெருமானின் இடப்பாகத்தைப் பற்றிக் கொண்டவள் அல்லவா !) அதனால் அபிராமிபட்டர், அன்னையின் அந்தத் திருவடியை நினைக்கிறார்.

சூடகக்கையையும் என்று சூசகமாகச் சொல்லுவது, அன்னை அபிராமி தன் திருக்கரங்களில் வளையல்கள் அணிந்திருக்கிறாள் ! (முன்னும் 21-ம் பாட்டில் 'மங்கலை... வருணச் சங்கலை செங்கை...' என்றார்.) அந்த ஒலி நமக்கு அபயமாகும்.

காலன் எப்போது வருவான் என்று யாருக்கும் தெரியாது ! ஆகையினால் அவன் வரும்போது நீ வந்து என் முன்னால் நிற்கவேண்டும். நீ வந்து விட்டாய் என்று உன் வளைகளின் இனிய ஓசையினால் நான் அறிந்துகொண்டு பயமில்லாமல் இருப்பேன் என்று அழகாக, நயத்துடன் சொல்கிறார் அபிராமிபட்டர்.

அன்னை அபிராமியின் திருவடிகள் :- திருமால், ப்ரும்மா, வேதங்கள், தேவர்கள் தேடியும் அவர்கள் கண்ணுக்கு புலப்படவில்லை. ஆனால் அன்பர்களுக்கு எளியது அது. (தேடி என்றதால் தேடினார்களே அன்றி காணவில்லை என்பது குறிப்பு)

இங்கு அன்னை அபிராமியின் திருவாய்ச் சொல்லை 'பாலையும் , தேனையும், பாகையும் போலும் பனிமொழியே' என்றார். முன்னும் 15-ம் பாடலில், 'பண் அளிக்கும் சொல் பரிமள யாமளைப் பைங்கிளியே,' 70-ம் பாடலில், 'பண் களிக்கும் குரல்...' என்றார். அன்னையின் திருவாய் மொழி அவ்வளவு இனிமையாக, மென்மையாக உள்ளது. பால் உடலுக்கு உணவு. (காயம்). தேன்- இதயத்திற்கு உறுதி தரும் (மனம்), பாகு(வெல்லம்) நாவிற்கு ருசி தரும் (வாக்கு) - என்ற கருத்தை அழகாகச் சொல்லுகிறது.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில், 181. ம்ருத்யுமதனீ - பக்தர்களுக்கு மரணம் இல்லாமல் செய்பவள். 522. ஸர்வ ம்ருத்யு நிவாரிணீ - எல்லாவித மரணங்களையும் தடுப்பவள். 749. ம்ருத்யு தாரு குடாரிகா :- மரணம் என்ற மரத்தை வெட்டும் கோடாலியாக இருப்பவள். 851. ஜன்ம-ம்ருத்யு-ஜரா-தப்த-ஜன-விச்ராந்தி-தாயினீ - பிறப்பு, இறப்பு, மூப்பு - ஆகியவைகளால் அல்லல்படும் ஜனங்களுக்கு, அவற்றினின்று ஓய்வுகளையும் ஆத்ம சுகத்தையும் தருபவள் லலிதாவாகிய அபிராமி.

முன்னும் (14-ம் பாட்டு) 'பாரில் உன்னைச் சந்திப்பவர்க்கு எளிதாம் எம்பிராட்டி நின் தண்ணளியே' என்றார். இதைப் போலவே, 'தாயின் திருவடிகளைக்' காண்பது அன்பர்களுக்கு எளிது என்று சொல்லாமல் சொல்கிறார் அன்னை அபிராமியின் அன்பர் அபிராமிபட்டர்.

## 87. அன்னை அபிராமி - பரா, அபரா, பராபரை.

*மொழிக்கும் நினைவுக்கும் எட்டாத நின் திருமூர்த்தம் என்றன்*
*விழிக்கும் வினைக்கும் வெளிநின்றதால் விழியால் மதனை*
*அழிக்கும் தலைவர் அழியா விரதத்தை அண்டம் எல்லாம்*
*பழிக்கும்படி ஒரு பாகம் கொண்டு ஆளும் பராபரையே !*

**(செயற்கரிய செயல்களை செய்து புகழ்பெற)**

| | |
|---|---|
| விழியால் | நெற்றிக்கண்ணால் |
| மதனை | மன்மதனை |
| அழிக்கும் | எரித்து சாம்பலாக்கிய |
| தலைவர் | சிவபெருமான் (மேற்கொண்ட) |
| அழியா விரதத்தை | என்றும் கெடாத யோக நியமத்தை |
| அண்டமெல்லாம் | உலகங்கள் எல்லாம் |
| பழிக்கும்படி | பழிக்கும்படி |
| ஒரு பாகம் கொண்டு | அவரது இடப்பாகத்தை ஆக்ரமித்து |
| ஆளும் | அவரை ஆளுகின்ற |
| பராபரையே ! | பரையாயும், அபரையாயும், பராபரை யாயும் இருக்கும் அபிராமி அன்னையே ! |
| மொழிக்கும் | வாக்குக்கும் |
| நினைவுக்கும் | மனதிற்கும் |
| எட்டாத | எட்டமுடியாத |
| நின் மூர்த்தம் | உன்னுடைய திருவடிவம் |
| என்றன் விழிக்கும் | என் கண்ணுக்கும் |
| வினைக்கும் | என்னால் செய்யப்படும் பூஜோபாஸனை களுக்கும் (இரங்கி) |
| வெளி நின்றது | வெளிப்பட்டு நின்றது. (ஆச்சரியமே !) |

தம்முடைய நெற்றிக்கண்ணால் மன்மதனை அழிக்கும் தலைவராகிய சிவபெருமானுடைய, மன்மதனாலும் அழியாத தவ விரதத்தின் தன்மையை பறித்துக் கொண்டு ஆட்சிசெய்யும் மேலான பொருளுக்கும் மேலான பொருளாய் நிற்பவளே, வாக்கால் சொல்லும் சொல்லுக்கும், மனத்தால் நினைக்கும் நினைப்புக்கும் எட்டாமல் உள்ள நின்னுடைய அழகிய தெய்வத் திருவடிவம் அடியேனுடைய கண்களுக்கும் அடியேன் செய்த பூஜையாகிய கிரியைக்கும் வெளிப்படையாகத் தோன்றி நின்றது பெரும் வியப்பே ! (இது நின் பெருங் கருணையால் நிகழ்ந்ததன்றோ!)

முன்னும், (17-ம் பாட்டு), 'அதிசயமான வடிவுடையாள்...

மதிசயமாக அன்றோ வாமபாகத்தை வவ்வியதே' என்றார் அபிராமிபட்டர்.

அதாவது அன்னை அபிராமி சிவபெருமான் இடபாகத்தை, தானே ஆக்ரமித்துக் கொண்டாள் (வெற்றி பெற்ற அரசன் போல) என்று பொருள்.

இதனால் அன்னையின் அன்பர்கள் அவளை, 'அர்த்தேசுவர நாரீ' என்பர். 65-ம் பாட்டிலும், 'ககனமும்... வல்லி நீ செய்த வல்லபமே' என்பார் அபிராமிபட்டர்.

அம்பிகையின் ஆற்றலுக்கு அடங்காதவர் யாரும் இல்லை என்பதும், பெருங்கருணையால் அன்பர்களுக்கு அவள் காட்சி தருவாள் என்பதும் இந்தப்பாடல் மூலம் நமக்கு உணர வைக்கிறார் அபிராமிபட்டர்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில்

415. மனோ வாசா மகோசரா - மனதுக்கும், வாக்குக்கும் எட்டாதவள்.

'யதோ வாசோ நிவர்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ' (தைத்தீரிய உபநிஷத் 2-9-1) - வேதமும் 'அதை எட்டாமல், வாக்குகள் மனதுடன் திரும்புகின்றன.'

விஷ்ணு புராணத்தில், 'யாதீத கோசரா வாசாம் மனஸாம் சாவிசேஷணா ।

ஞானிஞான பரிச்சேத்யா வந்தே தாமீஸ்வரீம் பராம் ॥'

என்று ப்ரகலாதன் கூறுவதாக உள்ளது. அதாவது, வாக்கிற்கும் மனதிற்கும் அப்பாற்பட்ட ஈஸ்வரியை, எவளை ஞானிகளின் ஞானத்தால் மட்டுமே அறிய முடியுமோ, அந்த ஈஸ்வரியை வணங்குகிறேன்.

790. பராபரா :- பர, அபர. பராபர என்ற சொற்களால் குறிக்கப்படும் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபமாக இருப்பவள்.

பர - அன்னியன், அபர - தன்னைச் சேர்ந்தவன் ; விரோதி, நண்பன் - என்று அர்த்தம். ப்ரஹ்மம் இவ்விரு ரூபங்களாக இருப்பதை ஸ்ரீமத் பகவத்கீதை கூறுகிறது.

'நமே த்வேஷ்யோஸ்தி நப்ரிய :' (9-29)

பர = சிறந்தது, மேலானது. அபர = தாழ்ந்தது. இவ்விரு நிலைகளிலும் ப்ரஹ்மம் இருப்பது, பரம் = பிந்தியது-சக்தி. அபரம் - முந்தியது - சிவன்.

ஸாமரஸ்ய ஸம்பந்தத்தால் ஏற்படும் (சக்தியுடன் கூடிய சிவன்) ஸ்வரூபம் பராபரம். அம்பாளின் பூஜை பரம் = அத்வைத பாவத்துடன் பூஜிப்பது. (எப்படிச் செய்தாலும்), அபரம் = ஸ்ரீசக்ர பூஜை. பராபரம் = பலவித மூர்த்திகளையும் விக்ரகங்களையும் பூஜிப்பது. திருக்கடவூர் அன்னை அபிராமியின், விக்ரஹ வழிபாட்டில் அளவற்ற பற்று கொண்டவரானாலும், இங்கு 'அவள்' - 'வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாத பரம்பொருள்' என்பதை அபிராமிபட்டர் வலியுறுத்துகிறார்.

முக்கிய கருத்து :- பராபரம்-சக்தியும் சிவனும் சேர்ந்து அர்த்தநாரீயாக இருக்கும் திருக்கோலம். இதையே 792. ஸாமரஸ்ய பராயணா (சிவனுடன்) ஸமமான, ஏற்றத் தாழ்வு இல்லாத சிறந்த நிலையை உடையவள்.

809. பராத்பரா :- மேலானதற்கும் மேலானவள். எல்லோரிலும் சிறந்தவர்கள் என்று சொல்லப்படும் ப்ரம்மா, விஷ்ணு, ருத்திரர் - இவர்களை விடச் சிறந்தவள்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் (198), ஸ்ரீ லலிதா த்ரிசதீ (236) அன்னையை "ஸமானாதிக வர்ஜிதா" என்று கூறுகிறது. அதாவது, அன்னை "ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவள்".

ஸ்வேதாஸ்வதர உபநிஷத் (VI-8)

"ந தத் ஸமஸ் சாப்யதிகஸ் ச த்ருஶ்யதே"– என்கிறது.

'அன்னை அபிராமியே' - எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருள் - பராபரை.

## 88. அம்மா - தரம் அன்று இவன் என்று என்னை தள்ளிவிடாதே.

*பரம் என்று உனை அடைந்தேன் தமியேனும் உன் பத்தருக்குள்*
*தரம் அன்று இவன் என்று தள்ளத்தகாது தரியலர் தம்*
*புரம் அன்று எரியப் பொருப்பு வில் வாங்கிய போதில் அயன்*
*சிரம் ஒன்று செற்றகையான் இடப்பாகம் சிறந்தவளே !*

**(அம்பிகையின் அருள் எப்போதும் பெற)**

| | |
|---|---|
| தரியலர் தம் | பகைவர்களுடைய (அசுரர்களின்) |
| புரம் அன்று எரியப் | முப்புரங்களும் எரிந்து சாம்பலாகும்படி |
| பொருப்பு வில் | மேருமலையாகிய வில்லை |
| வாங்கிய | நாணேற்றி வளைத்தும், |
| போதில் அயன் | தாமரையில் வீற்றிருக்கும் பிரம்மனின் |
| சிரமொன்று | தலைகளில் ஒன்றை |
| செற்ற | கிள்ளிய |
| கையான் | கையை உடைய சிவபெருமானின் |
| இடப்பாகம் | இடது பக்கத்தில் |
| சிறந்தவளே | சிறந்து விளங்கும் அன்னை அபிராமியே ! |
| தமியேனும் | எந்தத் துணையும் இல்லாத தனியனாகிய அடியேனும் |
| பரமென்று | நீயே சகலத்திற்கும் அப்பாற்பட்ட பரப்ரம்மம் என்று உணர்ந்து |
| உனை அடைந்தேன் | உன்னையே சரணமாக அடைந்தேன் |
| உன் பத்தருக்குள் | உன்னுடைய பக்தருக்குள் |
| தரம் அன்று இவன் என்று | வைக்கத் தகுதியற்றவன் இவன் என்று |
| தள்ளத் தகாது | தள்ளி விடுவது உன் கருணைக்கு ஏற்றதாகாது. |

பகைவர்களுடைய மூன்று புரங்களும் அந்த நாளில் எரியும் பொருட்டு மேரு மலையாகிற வில்லை வளைத்ததும், தாமரைப் பூவில் இருக்கின்ற பிரமனுடைய தலை ஒன்றைத் துணித்ததும் ஆகிய கைகளையுடைய சிவபெருமானின் இடது பக்கத்தில் சிறந்து விளங்கும் அன்னை அபிராமியே ! வேறு துணை யாரும் இல்லாத தனியனாகிய அடியேனும் நீயே எல்லோரினும், எல்லாவற்றிற்கும் மேலான 'பரம்பொருள்' என்று உணர்ந்து, 'உன்னையே சரண் அடைந்தேன்.' உன்னுடைய சிறந்த பக்தருக்குள் வைக்கத் தகுதியற்றவன் இவன் என்று கருதி தள்ளிவிடுவது உன் கருணைக்குப் பொருத்தமற்றதாகும்.

சிவபெருமான் மேரு மலையாகிய வில்லை வளைத்து, ஆதிசேஷனை நாணாகக் கொண்டு, திருமாலை அம்பாகக் கொண்டு திரிபுரங்களை அழிக்கப் புறப்பட்டபோது, திருமாலுக்கு 'தன்னால் அசுரர்கள் அழியப் போகிறார்கள்' என்ற அகங்காரம் வந்தது. அதனால் (இதை எண்ணி) சிவபெருமான் அம்பை எய்தாமல் தன் புன்முறுவலாலேயே திரிபுரங்களை எரித்தான்.

பிரமனுக்கு ஆதியில் ஐந்து தலைகள் இருந்தன. சிவபெருமானுக்கும் ஐந்து தலைகள் :- தத்புருஷம், வாமதேவம், சத்யோஜாதம், ஈசானம், அகோரம். பிரமன், 'எனக்கும் சிவனைப் போல் ஐந்து தலைகள் உள்ளன. நானும்-அவனும் சமானம்' என்று அகந்தை கொண்டான். சிவபெருமான், பிரமனின் நடுத்தலையைக் கிள்ளி எறிந்தான். பிரமனுடைய அகங்காரம் ஒழிந்தது.

இவ்வாறு இரண்டு பராக்கிரமச் செயல்களைச் செய்த திருக்கரத்தை உடைய சிவபெருமானின் இடப்பாகத்தில் சிறந்து விளங்குகிறாள் அன்னை அபிராமி.

அன்னை அபிராமியே எல்லோருக்கும் மேலான 'பரம்பொருள்' என்று உணர்ந்து, அவளிடம் சரண் புகுந்தால் தான் 'முக்தி நிலை' அடைய முடியும் என்பதை அறிந்த அபிராமிபட்டர். 'உன்னைச் சரண் அடைந்தேன்' என்கிறார்.

என்னைத் தாங்கும் சுமைதாங்கி நீயே ; உனக்கே நான் பாரம் என்று வந்து புகுந்தேன் - என்றும் பொருள் கொள்ளலாம்.

தாயுமானவரும், 'வானமாய் நின்றின்ப மழையாய் இறங்கிஎனை வாழ்விப்ப துன்பரங்காண்' - என்கிறார்.

அப்பரும், 'தன் கடன் அடியேனையும் தாங்குதல், என் கடன் பணி செய்து கிடப்பதே' என்று இறைவனிடம் விண்ணப்பிக்கிறார்.

அன்பினால் கசிந்து உருகும் பெரியவர்களாகிய அடியார்கள், 'தங்களை' எப்போதும் தாழ்வாக நினைத்தாலும் இறைவன் நம்மைக் கைவிடமாட்டான் என்ற நம்பிக்கையில் இருப்பார்கள்.

அத்தகைய மனநிலையில் உறுதியோடு இருந்தவர் அபிராமிபட்டர். அல்லும் பகலும் (எந்நேரமும்) அன்னை அபிராமியையே மனதில் கொண்டவரல்லவா !

## 89. அன்னையுடன் அன்பன் ஐக்கியமாதல்.

*சிறக்கும் கமலத்திருவே நின் சேவடி சென்னி வைக்கத்*
*துறக்கம் தரும் நின் துணைவரும் நீயும் துரியம் அற்ற*
*உறக்கம் தரவந்து உடம்போடு உயிர் உறவு அற்று அறிவு*
*மறக்கும் பொழுது என்முன்னே வரல் வேண்டும் வருந்தியுமே.*

(யோக சித்தி பெற)

| | |
|---|---|
| சிறக்கும் கமலத்திருவே | சிறப்பான ஸஹஸ்ரார கமலத்தில் வீற்றிருக்கும் சிறந்த செல்வமான அபிராமியே, |
| துறக்கம் தரும் | விண்ணுலகப் பதவியைத் தரவல்ல |
| நின் துணைவரும் நீயும் | நின் கணவரான சிவபெருமானும் நீயும் |
| உடம்போடு உயிர் | உடலுக்கும் உயிருக்கும் உள்ள |
| உறவு அற்று | சம்பந்தம் அறுந்து, |
| துரியமற்ற உறக்கம் | (என் த்யான சமாதியில்) சுழுத்தி |
| தரவந்து | நிலைக்கும் மேலான துரிய நிலையும் கடந்த துரியாதீதம் அளித்து |
| அறிவு மறக்கும் பொழுது | எனது அறிவு புறப்பற்று, அகப்பற்று நீங்கி தற்போதம் இழக்கும் சமாதி நிலையிலே |
| நின் சேவடி சென்னி வைக்க | உனது திருப்பாதங்களை அடியேனுடைய தலை மீது வைத்தருள |
| வருந்தியுமே | வருந்தினாலும் பொருட்படுத்தாது |
| என் முன்னே | அடியேன் முன்னே எழுந்தருளிக் |
| வரல் வேண்டும் | வந்து காட்சி கொடுக்க வேண்டும் |

சிறப்பான ஸஹஸ்ரார கமலத்தில் இருக்கும் செல்வியாகிய அபிராமி அன்னையே !

துறக்கம் என்ற சொர்க்காதி போகத்தைத் தரவல்ல நின் கணவரும் நீயும் என் தியான சமாதியில் என் உடலுக்கும் உயிருக்கும் இருக்கும் சம்பந்தம் நீங்கி, சுழுத்தி ஸ்தானத்திற்கும் மேலான துரிய நிலையும் கடந்த (துரிய மற்ற), துரியாதீதமான ஐந்தாவது அவஸ்த்தையை அளித்து, நின் திருவடியை என் சென்னியின் மேல் பொருந்திட, நின் திருவடி வருந்தியாவது வருதல் வேண்டும்.

ஸஹஸ்ரார கமலத்திலிருக்கும் சந்த்ர கலா மண்டபத்தில் 25-வது தத்துவமான சதாசிவத்தோடு கலந்து 26-வது தத்துவமான ஸாதாக்ய தத்துவமாகின்றான் சாதகன். இந்த நிலையை அடையும்

போது அம்பாளோடு தாதாம்யம் ஆகிவிடுகின்றான். தாதாம்யம் அடைவதைத் தான் உருவகமாக 'சேவடி சென்னி வைக்க' என்று கூறுகிறார் அபிராமிபட்டர். (அன்னை அபிராமியுடன் ஐக்கியம் ஆனவர் அல்லவா !)

25- தத்துவங்கள் :- பஞ்ச பூதங்கள், பஞ்ச தன்மாத்ரைகள், பஞ்ச ஞானேந்திரியங்கள், பஞ்ச காமேந்திரியங்கள், மனஸ்,மாயா, சுத்த வித்யா, மஹேச்வரர், ஸதாசிவர்,

இந்த 25 தத்துவங்களைக் கடந்து, பரப்ரஹ்ம சொரூபிணியான அம்பாள் சிவனுடன் ஸாமரஸ்ய பாவமடைந்து 26-வது தத்துவமான 'ஸாதாக்ய' தத்துவமாய் இருக்கிறாள். இந்த ஸாதாக்யம் தான் 'துரியா தீத அநுபவம்' - என்கிறார். ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் இதை அழகாக சொல்கிறது.

257. ஜாகரிணீ - விழிப்பு நிலையில் ஜீவனின் வடிவாயிருப் பவள். ஜாகரம் - விழிப்பு. ஜீவனின் வடிவாயிருப்பவள். (ஜீவனின் பெயர் - விச்வரூபா) 258. ஸ்வபந்தி - கனவு நிலையில் ஸுக்ஷ்ம சரீராபிமானியான ஜீவனாயிருப்பவள். 259. ஸுப்தா - ஸுஷுப்தி நிலையில், அதாவது உறக்கத்தில் விளங்கும் (தைஜஸன்). ஜீவனின் ஸ்வரூபமாயிருப்பவள். (தமிழில் 'சுழுத்தி' என்பர்)

அவஸ்தைகள் :- ஐந்து. அவை பின்வருமாறு :

ஜாக்கிரம் - விழிப்பு நிலை - உடம்பும், மனமும் தொழிற்படும். ஸ்வப்னம் - கனவு நிலை - உள்ளம் மட்டும் செயல்படும். சுழுத்தி - உறக்க நிலை - உடம்பு, மனம் இரண்டும் செயல்படாது. துரியம் - மயக்கம் போன்ற நிலை. துரியாதீதம் - இதற்கும் அப்பாற்பட்டது.

ஸுஷுப்தி என்னும் உறக்க நிலையில் மூன்று அநுபவங்கள் உள்ளன. அஞ்ஞானம் (ஒன்றும் தெரியாத நிலை), அஹம்தா (நான் என்ற வேறுபட்ட நினைப்பு), ஸுகம் : நன்கு தூங்கியவன். 'நான் சுகமாகத் தூங்கினேன். நான் ஒன்றையும் அறியவில்லை' என்று விழித்தபின் அந்த அனுபவத்தைக் கூறுகிறான். இந்நிலையில் அவனுக்கு ப்ராக்ஞன் என்று பெயர். இவ்வடிவும் தேவியே. இதுவே ஸமஷ்டியில், அதாவது எல்லா ஜீவர்களும் சேர்ந்த நிலையில் ஈசுவரன் என்ற பெயர் கொண்டவர். அவ்வடிவாயும் இருப்பவள்.

262. துர்யா :- நான்காவது நிலையிலுள்ள ஜீவனாக இருப்பவள். விழிப்பு, கனவு, உறக்கம் - என்ற நிலைகளையும், அவைகளில் விளங்கும் விச்வன், தைஜஸன், ப்ராக்ஞன் என்னும் மூன்று ஜீவபேதங்களையும் பகுத்து அறிந்து தெளிவதனால் உண்டாவது 'சுத்த வித்யை' என்னும் தத்வம். இந்த (நான்காம்) நிலைக்கு துரீயம் என்று பெயர். அதனால் தேவிக்கு 'துரீயா' என்று பெயர்.

இந்நிலையில் ஜீவனுக்கு மஹாகாரண சரீராபிமானி என்று பெயர். ஜீவர்களின் ஸமஷ்டியில் துர்யா எனப்படும்.

இந்த நான்காவது நிலையில் ஏற்படும் ஆனந்தம் இந்நிலை தான் உண்மையென்றும் மற்ற மூன்றும் உண்மையல்ல வென்றும் தோன்றும். இந்நிலையை அடைந்த ஜீவனுக்கும் மற்ற மூன்று நிலைகளும் இருந்து கொண்டு தானிருக்கும். ஆனால் அவன் அவைகளால் பாதிக்கப் படமாட்டான்.

ஸதாசிவமென்ற ஸ்வரூபம் ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரன் முதலானவர்களுக்கு மேற்பட்டவராக இருப்பது போல் ஸரஸ்வதி, லட்சுமி, பார்வதி என்ற மூவருக்கும் மேற்பட்டவளாக மஹாமாயா என்ற துரீயஸ்வரூபமானவள் என்று ஸௌந்தர்ய லஹரீயில் கூறப்பட்டுள்ளது. (97. "கிராமாஹுர் - தேவீம்")

263. ஸர்வாவஸ்த்தா விவர்ஜிதா - எல்லாவிதமான நிலை களுமற்றவள்.

மேற்சொன்ன நான்கு நிலைகளும் தாண்டியது 'துரியாதீதம்.' இது ஒரு நிலை என்று கூறப்படுவதில்லை. நான்காவதைக் கடந்தது. ஜீவன், நான்கு அவஸ்தைகளைக் கடந்ததும், பரம் பொருளுடன் (தேவியுடன்) ஐக்கியமாகிவிடுவதால் அவனுக்கு எந்த நிலையுமில்லை.

மற்றும் இந்த நிலையில் ஸமஷ்டி, வ்யஷ்டி என்ற வேறுபாடு இல்லை. இதை ஒரு நிலை என்று கூறுவதும் சரியில்லை. இது விளக்க முடியாதது. வாக்கிற்கும், மனதிற்கும் எட்டாதது. அனுபவத்தினால் மட்டுமே அறியப்படவேண்டும். அவ்வாறு அறிந்தவர் தான் அநுபூதிமானாகிய அபிராமிபட்டர்.

## 90. அன்னை அபிராமி - என் மனத்தாமரையில்.

*வருந்தாவகை என் மனத்தாமரையினில் வந்து புகுந்து*
*இருந்தாள் பழைய இருப்பிடமாக இனி எனக்குப்*
*பொருந்தாதொரு பொருள் இல்லை விண்மேவும் புலவருக்கு*
*விருந்தாக வேலை மருந்தானதை நல்கும் மெல்லியலே !*

**(பிரிந்த தம்பதியர் ஒன்று சேர)**

| | |
|---|---|
| விண்மேவும் புலவருக்கு | வானுலகத்தில் வாழும் தேவர்களுக்கு |
| விருந்தாக | விருந்தாக |
| வேலை மருந்தானதை | பாற்கடலில் தோன்றிய அமுதத்தை |
| நல்கும் மெல்லியலே | வழங்கிய மென்மையான அபிராமியே ! |
| வருந்தாவகை | அடியேன் நின்னை நாடித் தேடிவந்து வருந்தாதபடி |
| என் மனத்தாமரையினில் | என் இருதய கமலத்தில் |
| வந்து புகுந்து | தானே எழுந்தருளி புகுந்து |
| பழைய இருப்பிடமாக | அதுவே பழைய இருப்பிடமாக |
| இருந்தாள் | எண்ணும்படி வீற்றிருந்தாய் ! |
| இனியெனக்கு | இனி மேல் எனக்கு |
| பொருந்தா தொரு | கைவராத பொருள் (செல்வம்) |
| பொருள் இல்லை. | ஒன்றும் இல்லை. |

வானுலகத்தில் வாழும் தேவர்களுக்கு விருந்தாகப் பாற்கடலில் தோன்றிய அமுதத்தை வழங்கிய கோமளையாகிய அபிராமி, அடியேன் தன்னை நாடித் தேடி வந்து வருந்தாதபடி என் இருதய கமலத்தில் தானே எழுந்தருளிப் புகுந்து, அதுவே பழைய இருப்பிடமாக எண்ணும்படி வீற்றிருந்தாள். இனிமேல் எனக்குக் அடைய வேண்டிய பொருள் ஒன்றும் இல்லை. (அடியேன் அடைய முடியாத பேறு ஒன்றும் இல்லை).

அன்னை அபிராமி அநாதி காலமாக ஒளி வளர் தாமரையில் வீற்றிருப்பதனால், அவளை ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் 278. பத்மாஸனா - தாமரைப் பூவில் வீற்றிருப்பவள் எனக் கூறுகிறது. இப்போது அபிராமிபட்டரின் 'மனது' - என்னும் தாமரையையே ஆசனமாகக் கொண்டு விட்டாள்.

இதில் உள்ள ஓர் அரிய கருத்து :- தன்னை மனதிலே, அல்லும் பகலும் (எந்நேரமும்) த்யானம் பண்ணுபவர்களின் மனமே

- அன்னை அபிராமிக்குத் தாமரையாகிறது. அவள் எப்படி வந்தாள் ? - அன்பர் வருந்தாவகையில் தன் பழைய இருப்பிடமாக அதிகாரத்துடன் வந்து, புகுந்து இருந்தாள் என்கிறார் அபிராமிபட்டர். தாய், தன் சேய், எந்த இடத்தில் இருந்தாலும் (அந்த இடத்தைப் பொருட்படுத்தாது) உடனே சென்று அணைத்துக் கொள்வாள். உலகத்தாயே இவ்வாறு செய்யும் போது, அன்னை அபிராமியோ அகிலாண்டத்திற்கும் அன்னை அல்லவா ? அவள் ஒரு கருணைக்கடல் ஆயிற்றே ! அதனால், அன்பர்களுக்காக என்ன வேண்டுமானாலும் செய்பவள் ஆயிற்றே !

அன்னை அபிராமியே தன் இதயத்தாமரையில் வந்துவிட்டாள் ! இனிமேல் எனக்கு அடையவேண்டிய பேறும், பொருளும் ஒன்றும் இல்லை என்று மன நிறைவோடும், பெருமிதத்துடனும் கூறுகிறார் அபிராமிபட்டர் !

திருமந்திரம், ''அடுக்குத் தாமரை ஆதி இருப்பிடம்...'' (1144) என்று சொல்லுகிறது. அதாவது, ஆதியாகிய சக்தி இருக்கும் இடம் ''மனமாகிய'' தாமரை. திருவாசகம், 'வேண்டத் தக்கது அறிவோய் நீ' என்று கூறுகிறது.

மிகச் சிறந்த போக வாழ்வைப் பெற்றிருக்கும் இந்த்ராதி தேவர்களுடைய குறையைப் போக்க மோகினியாக வந்து பாற்கடலில் தோன்றிய அமுதத்தை வழங்கினவள் அல்லவா ! (அமரர்களுக்கு இறவாத் தன்மையளிக்கும் ஔஷதம் ஆதலால் அமுதத்தை-மருந்து என்றார்)

முன்னும், 24-ம் பாடலில், '...அமரர் பெரு விருந்தே' என்றார்.

'அமரர் வாழ்வு வாழ்வாக அவுணர் வாழ்வு பாழாக அருளும் மோகினியாக அமுதபானம் ஈவாளே' (107) - தக்கயாக பரணி.

562. மோஹினீ - மயக்குபவள், மோஹமடையும்படி செய்பவள். பாற்கடலைக் கடையும் போது, மஹாவிஷ்ணுவானவர் அம்பாளை அபேத பாவனையுடன் தியானித்து மோஹினீ ரூபத்தை எடுத்ததை இங்கு குறிப்பிடப்படுகிறது. ஸௌந்தர்ய லஹரீ 5-வது ஸ்லோகம், (ஹரிஸ் - த்வா - மராரத்த்ய) இதைச் சொல்கிறது.

(புலவர் - தேவர், வேலை-கடல், மருந்து - அமுதம்

மெல்லியல் - மெல்லிய இயல்புடையவள்)

721. கோமளாங்கீ - அழகிய, ம்ருதுவான சரீரத்தை உடையவள் 437. கோமலாகாரா - மென்மையான வடிவமுடையவள்.

ஒரு சாக்த விளக்கம் :

சாக்தோபாஸனையில் குண்டலினீயை மேலே கொண்டு போகும் சாதனையை அடைந்தவர்கள், ஸஹஸ்ராரத்தில் கொண்டு போக முடியுமானாலும் பழக்கமாக அனாஹத (இருதயம்) சக்ரத்திலேயே வைத்து தியானம் செய்வது மரபு.

மேலும் இருதயமே ப்ரம்மத்தின் இருப்பிடம் என்று வேதம் கூறுகின்றது. ஆகையால் அது பழைய இருப்பிடமாகக் கூறப்பட்டுள்ளது.

595. ஹ்ருதயஸ்தா - ஹ்ருதயத்தில் இருப்பவள். ப்ரபஞ்சத்திற்கு வித்து ஹ்ருதயம். 303. ஹ்ருத்யா - பக்தர்களுடைய (முனீஸ்வரர்களுடைய) ஹ்ருதயங்களில் இருப்பவள்.

தேவர்களின் தலைவனான இந்திரனும் அன்னையை தம் இதயத்தில் வசிப்பதாக வணங்குகிறான்.

"க்ரீடாதே லோக ரசநா ஸகாதே சிந்மய : சிவ

ஆஹா ரஸ்தே ஸதாநந்த ; வாஸஸ்தே ஹிருதயம் மமா" - (கேந உபநிஷத் கதை)

பொருள் : அன்னையே ! இந்த உலகப் படைப்பு உமக்கு விளையாட்டு. உமது நண்பன் மகாதேவன். உமக்கு உணவு ஆனந்தமே. தாம் வசிக்கும் இடமோ அடியேனது இதயக் குடில்.

அன்னை அபிராமியை சதா ஸர்வ காலம் த்யானித்து அதனால் அவள் தன் 'மனமெனும்' தாமரையிலே வீற்றிருக்கச் செய்த பாக்கியம் பெற்றவர் அபிராமிபட்டர்.

## 91. அபிராமியின் அடியார்க்கு அடியார் அடையும் பேறு.

*மெல்லிய நுண் இடை மின் அனையாளை விரிசடையோன்*
*புல்லிய மென்முலை பொன் அனையாளைப் புகழ்ந்து மறை*
*சொல்லிய வண்ணம் தொழும் அடியாரைத் தொழும் அவர்க்குப்*
*பல்இயம் ஆர்த்து எழ வெண்பகடு ஊரும் பதம் தருமே.*

**(அரசாங்க காரியங்களில் வெற்றி ஏற்பட)**

| | |
|---|---|
| மெல்லிய நுண்ணிடை | மென்மையான நுண்ணிய இடை உடைய |
| மின்ன னையாளை | மின்னல்போல் பிரகாசிக்கும் திருவுரு உடையாளை |
| விரி சடையோன் புல்லிய | விரிந்த சடை உடைய சிவபெருமானால் ஆலிங்கனம் செய்யப்பட்ட |
| மென் முலைப் | மென்மையான தன பாரங்களை உடைய அபிராமியை, |
| பொன்னனை யாளை | பொன்னிறம் உடையாளை, |
| புகழ்ந்து | வாயினால் புகழ்ந்து |
| மறை சொல்லிய | வேதங்கள் சொல்லும் |
| வண்ணம் | முறைப்படி |
| தொழும் அடியாரைத் | வழிபடும் பக்தர்களை |
| தொழும் அவர்க்கு | தொழும் அடியவர்களுக்கு |
| பல் இயம் | பல வாத்தியங்களும் |
| ஆர்த்து எழ | ஒலித்து, ஓசை எழுப்ப |
| வெண் பகடு | வெள்ளை யானையாகிய ஐராவதத்தின் மேல் ஏறிவரும் |
| ஊரும் | |
| பதம் தருமே | இந்திரப் பதவியை அருள்வாள் |

மென்மையான நுண்ணிய இடை, மின்னலைப் போல உள்ள அபிராமி அன்னையை, விரித்த சடையை உடைய சிவபிரான் அன்புடன் தழுவிய மென்மையான நகில்கள், பொன்னைப் போன்ற பொலிவுடையனவான இருக்கும் அம்பிகையை, வாக்கினால் புகழ்ந்து,வேதம் சொல்லிய முறைப்படி உபாஸனை செய்து விளங்கும் பக்தர்களை அணுகித் தொழும் அடியவர்களுக்குப் பல வாத்தியங்களும் முழங்கிக் கிளர, வெள்ளை யானையாகிய ஐராவதத்தின் மேல் ஏறிவரும் இந்திர பதவியை அவள் அருள்வாள்.

அதாவது அன்னை அபிராமி, தன் அடியார்க்கு அடியார்க்கும், மேலான பதவியை அருளுவாள் என்கிறார் அபிராமிபட்டர்.

சாக்த வழிபாட்டில், முக்யமாக, ஸ்ரீ வித்யா பூஜையில் குரு -

சிஷ்ய பரம்பரை மிகவும் முக்யமானது.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் - 725. தக்ஷிணாமூர்த்தி ரூபிணீ. தேவியே குரு வடிவாக இருக்கிறாள். அவளே ஆதி குரு. அவளே தான், அவளுக்கு சிஷ்ய பரம்பரையை (நம் குரு வரையிலும்) தோற்றுவிக்கிறாள்.

ப்ரம்மா, விஷ்ணு - இவர்களுக்கு உபதேசிக்கும் சிவனுடைய ரூபம் தக்ஷிணாமூர்த்தி. மிக எளியமுறையில் அரிய கருத்தை உபதேசிக்கும் திறமை உள்ளதால் (தக்ஷிணா - ஸாமர்த்தியம், திறமை) தக்ஷிணாமூர்த்தி எனப்படுவர். இவருடைய மந்திரம், தந்த்ர சாஸ்த்ரங்களில் ப்ரசித்தமானது. தேவி அந்த தக்ஷிணாமூர்த்தி ரூபத்தில் இருப்பவள். 603. குருமூர்த்தி - குரு ரூபிணீ - "தேவி, மந்திரம், குரு" - மூன்றும் ஒன்றாக பாவித்து (அபின்னமாய்) உபாசிக்க வேண்டும். ஒப்பம் :- "தேசிக ரூபணே தர்சிதாப்யுதயாம்" - நவரத்னமாலா ஸ்தோத்ரம் - காளிதாஸன்.

சிவனும்,சக்தியும் மூன்று விதமாகத் தோன்றுகிறார்கள்.

(அ) இருவரும் தனித்தனி உருவங்களாகக் காணப்படுவது.

(ஆ) இருவரும் சேர்ந்த அர்த்தநாரீ ஸ்வரூபம்.

(இ) ஒருவரில் மற்றவர் அடங்கி இருக்கும் வடிவம். காமாக்ஷியின் வடிவில் சிவன் அடங்கி இருக்கிறார். தக்ஷிணாமூர்த்தி வடிவில் அம்பாள் அடங்கியுள்ளாள்.

அபிராமிபட்டர், நம்மைப் போன்ற எளிய மக்களுக்காக சொல்லும் அறிவுரையாக அமைந்துள்ளது இந்தப் பாடல். நமக்கு வேத நெறி தெரியாது. இருப்பினும் வேதம் ஓதும் பெரியவர்களைப் பணிந்தால், நாமும் கொஞ்சம், கொஞ்சமாக நல்ல வழிக்கு வந்து விடுவோம். வேதத்தை தந்தவளே- அன்னை அபிராமி அல்லவா !

அடியாரைத் தொழும் அடியார்களுக்கே, அன்னை அபிராமி இந்திர பதவி தருகிறாள் என்றால், அன்னையை அல்லும் பகலும் தியானிக்கும் அடியார்களுக்கு 'அழியாமுக்தி ஆனந்தத்தை' தருவாள் என்று சொல்லவும் வேண்டுமா ? !

## 92. முதல் தேவர் மூவர் போற்றும் அன்னை அபிராமி.

*பதத்தே உருகி, நின் பாதத்திலே மனம் பற்றி உன்றன்*
*இதத்தே ஒழுக அடிமை கொண்டாய் இனியான் ஒருவர்*
*மதத்தே மதிமயங்கேன் அவர் போன வழியும் செல்லேன்*
*முதல் தேவர் மூவரும் யாவரும் போற்றும் முகிழ் நகையே !*

(மனப்பக்குவம் உண்டாக)

| | |
|---|---|
| முதல் தேவர் மூவரும் | முதல் தேவர்களாகிய ப்ரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவரும், |
| யாவரும் | மற்றும் எல்லோரும் |
| போற்றும் | வணங்கித் துதிக்கும் |
| முகிழ் நகையே | அரும்பிய புன்னகை உடைய அபிராமி அன்னையே ! |
| பதத்தே உருகி | நல்ல பக்குவம் பெற்று அந்தப் பக்குவத்தில் என் உள்ளம் உருகி, |
| நின் பாதத்திலே | நின் திருவடியில் |
| மனம் பற்றி | பற்று கொண்டு |
| உன்றன் இதத்தே ஒழுக | நின் திருவுள்ளத்திற்கு உவப்பான நெறியிலே ஒழுகும்படி |
| அடிமை கொண்டாய் | அடியேனை ஆட்கொண்டாய் |
| இனி யான் | ஆதலின் அடியேன் இனி மேல் |
| ஒருவர் மதத்தே | வேறு ஒருவர் சமயக் கோட்பாடுகளில் |
| மதி மயங்கேன் | அறிவைச் செலுத்தி மயங்க மாட்டேன் |
| அவர் போன வழியும் | அவர்களுடைய வழிகளிலும் |
| செல்லேன் | போக மாட்டேன். |

முதல் தேவர்களாகிய மும்மூர்த்திகளும் மற்றவர் யாவரும் (எல்லா உலகத்தோரும்) வணங்கித் துதிக்கும், அரும்பிய புன்னகையையுடைய அபிராமி அன்னையே ! நல்ல பக்குவம் பெற்று அந்தப் பக்குவத்தில் என் உள்ளம் உருகி நின் திருவடியில் பற்று கொண்டு, நின் திருவுள்ளத்திற்கு உவப்பான நெறியிலே ஒழுகும் படி அடியேனை ஆட்கொண்டாய். ஆதலின் அடியேன் இனிமேல் வேறு ஒருவர் சமயக் கொள்கையைப் பெரிது என்று எண்ணி அறிவு கலங்கமாட்டேன். அந்தச் சமயத்தினர் ஒழுகும் வழியிலும் போகமாட்டேன்.

அநந்ய பக்தியே சிறந்தது - என்று நமக்குத் தரும் அறிவுரை, இந்தப் பாடல்.

அன்னைஅபிராமியையே எப்பொழுதும் தன் மனத்திலே தியானித்து அவள் அருளை அடைந்தவர் அபிராமிபட்டர்.

தெய்வ வழிபாட்டில் ஒருமைப்பாடு மிக அவசியம். எல்லா வடிவங்களிலும் ஒரே கடவுள் தாம் இருக்கிறார் என்றாலும் குறிப்பிட்ட மூர்த்தியை இடைவிடாமல், சதா சர்வ காலமும், உபாசனை செய்தால் தான் பயன் கிடைக்கும் (பூமிக்கு அடியில் எங்கே வெட்டினாலும் நீர் வருமானாலும் குறிப்பிட்ட ஓரிடத்தில் விடாமல் வெட்ட வேண்டும்.)

'ஒன்றே நினைத்திருந்தேன் ; ஒன்றே துணிந்தொழிந்தேன் :

ஒன்றே என் உள்ளத்தினுள் அடைத்தேன்' - என்று காரைக்கால் அம்மையார் சொல்கிறார். 'பலமரம் கண்ட தச்சன் ஒரு மரமும் வெட்டான்' - பழமொழி.

அபிராமிபட்டர் ஒரே மரத்தைக் கண்டவர் - அதுதான் அன்னை அபிராமி.

'எச்சமயம் கொண்டீர் அச்சமயமாகி யாங்கே மாதொரு பங்கறார் தாம் வருவர்' என்பது சித்தியார் வாக்கு. நம் சமயத்திலே நாம் நிற்க வேண்டும். நம் கண் முன்னே அபிராமி அன்னையாக நின்று அன்பு சொரியும் போது நாம் மற்ற தாயை ஏன் நாட வேண்டும் ? 'கனியிருப்பக் காய் கவர்ந்தற்று' - குறள்.

நாம் பெற்ற அன்னை எப்பேர்ப்பட்டவள் ? பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், வானவர், தானவர், முனிவர்கள் வணங்கித் துதிக்கும் பெருமாட்டி அல்லவா ? அன்னையின் கட்டளைக்காக காத்துக் கிடப்பவர்கள்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்

407. சிவாராத்யா - சிவனால் வழிபடப் பெற்றவள்.

83. ப்ரஹ்மோபேந்த்ர மஹேந்ராதி தேவஸம்ஸ்துதவைபவா - ப்ரஹ்மா, விஷ்ணு, இந்த்ரன் முதலிய தேவர்களால் துதிக்கப்பட்ட பெருமையுள்ளவள். 607. தேவேஶீ - ப்ரஹ்மா, விஷ்ணு, சிவன் முதலிய தேவர்களுக்கெல்லாம் ஈசுவரி. 155. நிரீஶ்வரா - எல்லாவற்றிற்கும் தலைவி. அவளுக்கு மேல் ஒருவரும் இல்லை. அம்பிகையின் திருவோலக்கம் - அன்னை அபிராமி, ஸ்ரீ

ராஜராஜேச்வரியாக தர்பாரில் வீற்றிருக்கிறாள். ஸ்ரீ லக்ஷ்மீ, ஸ்ரீ சரஸ்வதி இருவரும் சாமரம் வீசுகின்றனர். ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன் நின்று ஏவல் கேட்பார்கள். அவர்களுக்குப் பின்னே இந்திரன் கை கட்டி வாய் புதைத்து நிற்பான். வருணன், வாயு, அக்னி யாவரும் பணிந்தபடி இருப்பார்கள். துவாத சாதித்தியர்கள், ஏகாதச ருத்திரர்கள், அஷ்டவசுக்கள், அசுவினி தேவர்கள் யாவரும் அன்னையின் ஏவலர் குழுவில் நிற்பார்கள்.

இப்படி எல்லாத் தேவரும் போற்றும் பெருமாட்டி அவள். அவளுடைய திருவருளையே பலமாகப் பெற்றவர்கள் அத்தேவர்கள். திருமூலரும், இந்தக் கருத்தினை, ''ஆமயன் மால் அரன் ஈசன் சதாசிவன் தாமடி சூடிநின்று எய்தினர் தம்பதம்...'' என்று திருமந்திரத்தில் (1208) கூறுகிறார்.

முதல் தேவரும் (மூவரும்) வேறு தேவர்கள் யாவரும் போற்ற, தன் புன்முறுவலால் அவர்களுக்கு அருள்பாலிக்கிறாள் அன்னையாகிய பரமேசுவரி அபிராமி.

'அவளின்றி அணுவும் அசையாது' - என்றே வாழ்ந்தவர் அபிராமிபட்டர். ''தன்னை பக்குவப்படுத்தி, தன் பாதத்திலே மனத்தை பதிய வைத்து, தனக்கு ஹிதமான நெறியிலே நிலை நின்று ஒழுக என்னை அடிமையாக்கிக் கொண்டாய். எல்லாவற்றிற்கும் காரணமாய் இருப்பவள் நீயே'' என்று அன்னை அபிராமியிடம் அன்பினால் உருகுகிறார். ('நினைந்துருகும் அடியாரை' என்பார் அப்பர்)

அன்னை அபிராமி சமயம் தான் மனிதருக்கு 'முக்தி' தரும் அறநெறி.

## 93. அன்னையின் இயல்புகள் - நம் அறிவாற்றலுக்கு அப்பால் !

*நகையே இஃது இந்த ஞாலம் எல்லாம் பெற்ற நாயகிக்கு*
*முகையே முகிழ் முலை மானே முது கண் முடிவுஇல் அந்த*
*வகையே பிறவியும் வம்பே மலைமகள் என்பதும் நாம்*
*மிகையே இவள் தன் தகைமையை நாடி விரும்புவதே.*

**(உள்ளத்தே உண்மை ஒளி உண்டாக)**

| | |
|---|---|
| இந்த ஞாலமெல்லாம் | இந்த உலகங்களை எல்லாம் |
| பெற்ற நாயகிக்கு | ஈன்று அருளிய அபிராமிக்கு |
| முகில் முலை முகையே | அரும்புகின்ற முலை, தாமரை மொட்டு போன்றது என்றும் |
| முதுகண் மானே | முதிர்ந்த அவள் கண்கள் மான் போன்று மருட்சி உடையவை என்றும் |
| நகையே இஃது | கூறுதல் சிரிப்புக்கு இடமாம். |
| முடிவு இல் | அவளுக்கு முடிவும் இல்லை |
| அந்த வகையே | அந்த முறைப்படியே |
| பிறவியும் | பிறவியும் இல்லை. |
| நாம் | (அப்படி இருக்க) நாம் |
| மலை மகள் என்பதும் வம்பே | அவளை மலையரசன் மகள் என்று கூறுவதும் வம்பு தான் |
| இவள் தன் தகைமையை | இவளுடைய இயல்புகளை |
| நாடி விரும்புவது | ஆராய்ந்து பார்க்க விழைவது |
| மிகையே. | நம் அறிவாற்றலுக்கு மிஞ்சிய செயலாகும். |

இந்த உலகங்களை எல்லாம் ஈன்று அருளிய பரமேசுவரியாகிய அன்னை அபிராமிக்கு அரும்பிய நகில் - தாமரை அரும்பு ; அருளால் நிரம்பி முதிர்ந்த கண் - மருட்சியைப் பெற்ற மான் கண். இவ்வாறு கூறுதல் சிரிப்புக்கு இடமாம்.

அவளுக்கு முடிவும் இல்லை. அந்த முறைப்படியே பிறவியும் இல்லை. அப்படி இருக்க அவளை மலைக்கு மகள் என்று கூறுவது வீணே ;

இங்ஙனம் அவளுடைய இயல்புகளை ஆராய்ந்து பிறகு விரும்புவது என்பது நம் அறிவாற்றலுக்கு மிஞ்சிய செயலாகும்.

இவளுடைய உண்மை சொரூபத்தை நாடி விரும்புவது, ஆராய்ந்து பார்க்க விழைவது நம்மை மீறிய முயற்சியேயாம்.

மேலும் அபிராமிபட்டர் - "ஒன்றே பல உருவே, அருவே", என்று சொன்னார் அல்லவா ! அவர் இப்போது அடைந்த நிலை - அருவத்திற்கும் அப்பால் மனதில் அன்னை அபிராமியை ஜோதியாகக் கண்டவர்.

தன்னை, சென்ற பாட்டில், சர்வேசுவரியாகிய அன்னை அபிராமியின் அடிமை என்ற சொன்ன அபிராமிபட்டர், ஒரு கணம் யோசிக்கிறார். அவள் இயல்புகளின் வர்ணனைகள் ஒன்றுக்கு ஒன்று முரண்பாடாக இருப்பதைப் பார்த்து அவருக்கே சிரிப்பு வருகின்றது போலும் ! 'நகையே இஃது...' என்று அழகாக ஆரம்பிக்கிறார் !

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்

285. ஆப்ரஹ்ம கீடஜனனீ - ப்ரஹ்மா முதல் புழு பூச்சி வரை உள்ள எல்லா ஜீவன்களையும் ஈன்றவள். கீடம் - நுண்ணிய கிருமி. ப்ரஹ்மாவிற்கும் புழுவிற்கும் பெருத்த வேறுபாடு இருந்தாலும், தாயான தேவி எல்லா பிறப்புகளிடமும் ஒரே மாதிரியான அன்பு உடையவள். ப்ரஹ்மாவை படைத்தது, தேவியின் படைக்கும் சக்தி. பின் அவர் மற்ற ஜீவன்களைப் படைக்கிறார்.

620. அநேக கோடி ப்ரஹ்மாண்ட ஜனனீ - பலகோடி ப்ரஹ்மாண்டங்களை ஈன்றெடுத்தவள்.

934. விச்வமாதா - உலகங்களுக்கெல்லாம் அன்னை.

பல குழந்தைகள் பெற்ற தாய்மாருக்கு நகில்கள் தளர்ந்து போவது இயற்கையல்லவா ! ஆனால் அகிலாண்டத்திற்கும் அன்னையான அபிராமி பெருமாட்டிக்கு நகில்கள் தாமரை அரும்பு போல் இருக்கின்றன - என்று சொல்வது நகையல்லவா !

முதிர்ச்சி பெற்ற மகளிர் கண்களில் சலனம் இராது. ஆனால் அவை மான் கண்ணைப் போல் இருக்கிறதாம் !

561. ம்ருகாக்ஷீ - மான் விழியாள். மானின் கண்கள் ஓரிடத்தில் நிலைக்காமல் மருட்சியுடன் அலைந்து கொண்டே இருக்கும். (ஆபத்து வந்தால் தப்பி ஓட). அன்னையும் தன் பார்வை எல்லா பக்தர்கள் மேலும் விழட்டும் என்பதற்காக தன் கண்களை இவ்வாறு அலையச் செய்து கொண்டிருக்கிறாள்.

358. தருணீ - எப்பொழுதும் யுவதியாக இருப்பவள்.

அன்னை அபிராமி - 'அநாதி' - பிறப்பும் இல்லை, முடிவும் இல்லை. ஆதியும் இல்லை - அந்தமும் இல்லை. அவள் நித்தியமாக உள்ளவள். அவள் அழிவற்றவள்.

தன்னைப் போற்றும் பக்தர்களை பிறவியென்னும் கடலைக் கடக்கும் படி செய்பவள்.

866. அஜா - பிறக்காதவள். 143. நிருபப்லவா - அழிவில்லாதவள். 136. நித்யா - எப்பொழுதும் இருப்பவள். 180. நிர்நாஸா - முடிவற்றவள். 174. நிர்பவா - உத்பத்தி இல்லாதவள். (இதுவும் ப்ரஹ்மத்தின் ஓர் அடையாளம்) 951. ஶாஶ்வதீ (சரஸ்வதீ) - எப்பொழுதும் இருப்பவள். 634. சைலேந்த்ரதநயா - மலையரசனின் மகள் - மலைமகள். 246. பார்வதீ - பர்வதராஜனான ஹிமவானின் குமாரி.

அன்னை அபிராமியை 'தாய்' என்று சொல்லி, பின்பு அழியாத கன்னி என்பதும் முரண்பாடல்லவா ! இதையே, தாயுமானவரும்,

'அகிலாண்டம் ஈன்ற அன்னையை பின்னையும்
கன்னியென மறைபேசும் ஆனந்த ரூப மயிலே' - என்பார்.

அம்பிகை மேனைக்கும், இமயாசல அரசனுக்கும் மகளாகத் திரு அவதாரம் செய்தாள். அன்னை வயிற்றில் பிறக்கவில்லை. ஒரு தாமரை மலரில் சிறுபெண் குழந்தையாக எழுந்தருளியிருந்தாள். தன் விருப்பப்படி உருவம் கொள்ளும் பேரருள் உடையவள் என்று சொல்லவும் வேண்டுமா ? ! (ப்ரஹ்மாவைப் படைத்து, படைக்கும் தொழிலை அவருக்குக் கொடுத்ததும் அவள் தானே !)

ஆகவே அவள் பிறந்தாள் என்று சொல்வது பிழை. மலைக்கு மகளாக அவதரித்தாள். தாய், தகப்பனுக்கு மகளாகத் தோன்றியவள் என்று நினைக்கும்படி இருக்கிறது 'மலைமகள்' - என்ற திருநாமம். இது வம்பாகத் தோன்றுகின்றதல்லவா ? !

அன்னை அபிராமியின் குணங்களை, இயல்புகளை ஆராய்ந்து, அவற்றுக்கு எல்லாம் பொருத்தமோ, காரணமோ

கண்டுபிடித்து அறிவது நம்மால் இயலாத காரியம். மேலே மூன்று செய்திகளைப் பார்த்தோம். இன்னும் இதுபோல எவ்வளவோ !

'அவள் ஒன்றாய் இருப்பாள், பலவாக விரிவாள். அருவமாய் இருப்பவள்'

'அவள் சங்கரனார் மனை மங்கலம், என்றும் அழியாத கன்னி'

'அவள் எல்லாவற்றையும் பேசுகிறவள், பேச்சு கடந்த தனிமோன நிலை அவள்'

அதையெல்லாம் ஆராய்ந்து அறிவது ஆகாத காரியம். அது நம் சக்திக்கு அப்பாற்பட்டது. மிகையான செயல். செய்ய வேண்டாதது. 'மிகையே, இவள், தன் தகைமையை நாடி விரும்புவதே' - என்கிறார் அபிராமிபட்டர்.

554. அசிந்த்யரூபா - மனதுக்கு எட்டாத, சிந்திக்க முடியாத ரூபமுடையவள். 139. நிர்குணா - ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்கள் இல்லாதவள். 413. அபரமேயா - அளவிட முடியாதவள். 398. அவ்யக்தா - வெளிப்படையாகத் தெரியாதவள். (ப்ரஹ்மம் படைக்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்படும் போது மாயையானது அடையும் ரூபம் 'அவ்யக்தம்' - எனப்படும்.)

மேற்கூறிய திருநாமங்கள், அவள் இயல்புகள் நம் அறிவாற்றலுக்கு அப்பாற்பட்டவை என்பதை அறிவுறுத்துகின்றன.

முதலில், 'நகையே இஃது' என்று ஆரம்பித்த, அபிராமிபட்டர், அன்னை அபிராமியின் ஆற்றல்களை ஆராய்வது அதிகப் பிரசங்கித்தனம் என்று நமக்கு தெளிவாகச் சொல்லுகிறார்கள். 'மிகையே' - என்று அழகாக முடிக்கிறார்.

அம்பிகையின் உருவத்தோற்றமும், செயலும் இயல்புகளும் முரண்பாடு உடையவையாகத் தோன்றுகின்றன என்று சமத்காரமாகச் சொன்னார்.

அன்னை அபிராமியின் சொரூப லக்ஷணத்தைப் பற்றி எண்ணாமல் அன்பர்கள் - அவள் வழிபாட்டில் - அதாவது அவள் திருவடிகளைப் பற்றி, அதையே மனதில் நினைத்து, நினைத்து உருகுவதே சரியான வழிபாடாகும் என்று சொல்லாமல் சொல்லுகிறார் அபிராமிபட்டர்.

## 94. அன்னையின் சந்நிதியில் அனைவரும் பித்தராவரே.

*விரும்பித் தொழும் அடியார் விழிநீர் மல்கி, மெய் புளகம்*
*அரும்பித் ததும்பிய ஆனந்தம் ஆகி அறிவு இழந்து*
*சுரும்பிற் களித்து மொழி தடுமாறிமுன் சொன்ன எல்லாம்*
*தரும் பித்தர் ஆவர் என்றால் அபிராமிசமயம் நன்றே !*

**(மனநிலை தூய்மையாக, பைத்தியம் தெளிய)**

| | |
|---|---|
| விரும்பித் தொழும் | உன் மீது பேரன்பு பூண்டு ஆசையுடன் வழிபடும் |
| அடியார் | அடியவர்கள் |
| விழி நீர் மல்கி | கண்களில் நீர் பெருகி |
| மெய் புளகம் அரும்பித் | உடம்பெல்லாம் மயிர்கூச்சு எறிய |
| ததும்பிய ஆனந்தமாகி | பொங்கி வரும் ஆனந்த மயமாக நின்று |
| அறிவு இழந்து | தற்போதம் இழந்து |
| சுரும்பிற் களித்து | தேனை உண்ட வண்டு போல மயங்கி, |
| மொழி தடுமாறி | (அப்பால்) வார்த்தை குழறி, |
| முன் சொன்ன எல்லாம் | முன்பு சொன்னவை யாவும் |
| தரும் | பொருள் உடையனவாகத் தருவதற்கு |
| பித்தர் ஆவர் என்றால் | காரணமான பித்து உடையவர் ஆனாலும் |
| அபிராமி சமயம் | அன்னை அபிராமியை வழிபடும் மார்க்கம் |
| நன்றே | நல்லதே ! (சிறந்ததே !) மிக்க அழகே ! நல்லதே ! ('நல்லது தான் போ' என்று சேய் - தாயிடம் கூறுவது போல் உள்ளது அல்லவா !) |

தன்னிடம் அன்பு செய்து விரும்பி வழிபடும் அடியவர்கள் கண்களில் நீர்மல்க, உடம்பெல்லாம் மயிர்க்கூச்சு எறிய, பொங்கி வரும் ஆனந்தமயமாக நின்று, ஜீவபோதத்தை (தற்போதம்) இழந்து, தேனை உண்ட வண்டு போல மயங்கி, அப்பால் வார்த்தை குழறி, முன் சொன்னவை யாவும் பொருள் உடையனவாகத் தருவதற்குக் காரணமான பித்தை உடையவராவர் - என்றால் அப்படிச் செய்யும் அவ்வடியார்களின் வழிபாட்டு நெறியாகிய 'அபிராமி சமயம்' - நன்றே - நன்மையையே உடையது.

மேற்சொன்னவாறு, பித்து பிடித்த நிலையில் தான், அபிராமிபட்டர், சரபோஜி மன்னனிடம் 'பௌர்ணமி' - என்று

சொன்னார். அன்பர் சொன்ன சொல்லைச் செயலாகச் செய்தாள். அன்னை அபிராமி.

பித்து என்பது ஒன்றையே நினைத்திருப்பது. அச்சமயத்தில் வேறு ஒன்றும் மனதில் படாது, வேறு எண்ணமும் இராது.

அதாவது, ஒன்றையே பற்றாகக் கொண்டு, பற்றி இருப்பது. அத்தகைய ஆனந்த அநுபவத்தில் முழ்கிக் கிடந்தவர் தான் அபிராமிபட்டர்.

அறிபவன், அறிவு, அறியப்படும் பொருள் என்ற மூன்றும் நழுவிய நிலையை 'திரிபுடிரகிதம்' என்பர். அது தான் எல்லாம் மறந்த, அழியாத ஆனந்த நிலை. இந்நிலை அன்னை அபிராமியின் உபாசனையினாலே தான் கிடைக்கும். இதை 'அபிராமி சமயம் நன்றே' என்று ஆணித்தரமாக, அடித்துச் சொல்கிறார் அபிராமிபட்டர். (ஏகாரம் - தேற்றம்)

'அன்னை அபிராமியின் அடியார்கள் ஆனந்த அநுபவம் அடைவார்கள்'

அபிராமிபட்டர் அன்னை அபிராமியை விரும்பித் தொழும் அடியார்களின் நிலையை (மெய்ப்பாடுகளை) நமக்கு இனம் காட்டுகிறார் இப்பாடலில். உடம்பிலே தோன்றும் அறிகுறிகள் என்பதுவே மெய்ப்பாடு என்பதற்குப் பொருள். அதாவது அது 'மெய்' (உடல்) படும்-பாடு என்று பொருள் கூறலாம்.

பக்தி என்பது ஒரு குணம். அதற்குரிய மெய்ப்பாடுகள் சில உண்டு. அவற்றை மற்றும் பல பெரியவர்கள் சொல்லியிருக் கிறார்கள். முதல் அடையாளம் - விழிநீர் மல்கல். அன்னை அபிராமியை வழிபடும் உண்மை அன்பர்கள் உருகுவார்கள். (பதத்திலே உருகி என்றார் முன்னும்) அந்த உருக்கத்தின் விளைவாக எழுவது கண்ணீர்.

தாயுமானவர் - 'உடல் குழைய என்பெலாம் நெக்குருக விழிநீர்கள் ஊற்றென வெதும்பி யூற்ற... அன்பினால் உருவி விழிநீர் ஆறாக' என்பர். பின்பு, உடம்பெல்லாம் மயிர் கூச்செறியும். அதை புளகாங்கிதம் என்பார்கள். புளகம் போர்த்தல் என்றும் கூறுவர்.

மாணிக்கவாசகரும் - 'மெய் தான் அரும்பி விதிர் விதிர்த்துன்

விரையார் கழற்குஎன்கை தான் தலை வைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பியுள்ளோம்' - என்று சொல்வர்.

அவ்வாறு ஆனந்தக் கடலுள் ஆழ்ந்த பிறகு அறிவு செயல்படாது. ஆனந்த உணர்வு என்னும் மயக்கத்தில் எல்லாம் மறந்து நிற்கும் நிலை தோன்றும். ஜீவபோதம் இராது. இதனையே, 'எல்லாம் அற என்னை இழந்த நிலம்' என்பார் அருணகிரிநாதர். வண்டு தேனைக் குடித்து மயங்கி நிற்பது போன்ற நிலை அது. வண்டு மலரைத் தேடி வரும்போது ஆரவாரத்துடன் பறந்துவரும். மலரில் அமரும் போது ரீங்காரம் செய்யும். தேனை உண்ணத் தொடங்கிய பிறகு, அதன் இசை நின்று விடும். அநுபவம் வரும் போது மோனநிலை உண்டாகிவிடும். அன்பர்களும் இன்பத்தின் ஆழ்ந்த நிலையில் நின்று, பின் மீளும்போது பேசும் பேச்சு எல்லாம் வெறும் பேச்சு அல்ல. அவர் வாக்கிலே எது வந்தாலும் அது பலிக்கும். அதற்கு அன்னையே தான் பொறுப்புடையவள் ! இவர்கள் பித்தர் போல இருப்பார்கள். இவர்களைச் சத்திய சங்கல்பர்கள் என்பார். மெய்ஞ்ஞானிகள் மறந்து ஒன்றைச் சொல்லிவிட்டாலும் அது பலித்து விடுமாம்.

இத்தகைய சிறந்த பக்தர்களில் 'அபிராமிபட்டரும் ஒருவர்' என்று சொல்லவும் வேண்டுமா ? ! அன்னையே அன்பரின் சொல்லை செயலாக்கினாள் அல்லவா !

## 95. அன்னையிடம ஆத்ம சமர்ப்பணம்.

*நன்றே வருகினும் தீதே விளைகினும் நான் அறிவது*
*ஒன்றேயும் இல்லை உனக்கே பரம் எனக்கு உள்ள எல்லாம்*
*அன்றே உனது என்று அளித்துவிட்டேன் அழியாதகுணக்*
*குன்றே அருட்கடலே இமவான் பெற்ற கோமளமே !*

**(மன உறுதி பெற)**

| | |
|---|---|
| அழியாத குணக் குன்றே | என்றும் அழிவில்லாத குணமலையே ! |
| அருட் கடலே ! | கருணை நிறைந்த சமுத்திரமே ! |
| இமவான் பெற்ற | பர்வதராஜன் பெற்ற |
| கோமளமே ! | மெல்லியலே (அபிராமியே !) |
| எனக்கு உள்ள வெல்லாம் | எனக்கென்று உடைமையாய் இருந்த எல்லாவற்றையும் |
| அன்றே | என்னை நீ ஆட்கொண்ட அந்த க்ஷணத்திலேயே |
| உனதென்று | உன்னுடையனவென்று |
| அளித்து விட்டேன் | சமர்ப்பித்து விட்டேன். |
| நான் அறிவது | நான், எனது என்று நினைக்கக் கூடியது |
| ஒன்றேயும் இல்லை | ஒன்றும் இல்லை. |
| நன்றே வருகினும் | நன்மையே வந்தாலும் |
| தீதே விளைகினும் | தீமையே விளைந்தாலும் |
| உனக்கே பரம் | அவற்றால் ஏற்படும் விளைவுகள் யாவும் உனது பாரமேயன்றி என்னுடையதல்ல ! |

என்றும் அழிவற்ற குணமலையே, கருணா சமுத்திரமே, பருவதராசன் பெற்ற மெல்லியலே ! நன்மையே வந்தாலும், தீமையே விளைந்தாலும் அவற்றை அடியேன் சிறிதும் அறிவதில்லை.

எல்லாம் உனக்கே பாரம். எனக்கு உள்ள உடல், பொருள், ஆவி எல்லாவற்றையும் என்னை நீ ஆட்கொண்ட போதே உன்னுடையனவென்று சமர்ப்பித்து விட்டேன். இனி எனக்கு ஏது கவலை ?

இம்மண்ணுலக வாழ்க்கையில், நாம் எல்லோரும் வேண்டுவது இன்ப மயமான, கவலையே இல்லாத வாழ்வு. இதற்கு ஓர் எளிமையான, அருமையான வழியை நமக்கு முன்னோடியாக நின்று காட்டுகிறார் அன்னை அபிராமி ஆட்கொண்ட அன்பர்,

அடியார் அபிராமிபட்டர்.

அந்த வழி யாது ? இதோ காண்க !

நமக்கு உடைமையான எல்லாவற்றையும் அன்னை அபிராமியிடம் சமர்ப்பித்து விட வேண்டியது. அவ்வாறு செய்து விட்டால், பின் நம்மை எதுவும் பாதிக்காது. நாம் ஓர் ஊருக்கு சுற்றுலா செல்கிறோம். நம் உடைமைகளை எல்லாம் அங்கு ஒரு பாதுகாப்போனிடம் கொடுத்து விட்டால், பிறகு நாம் கவலையின்றி ஊரைச் சுற்றிப் பார்க்கலாம் அல்லவா ! காரின் சொந்தக்காரன், தானாக வண்டியை ஓட்டும் போது, பல விதமான நெருக்கடிகளை சமாளிக்க வேண்டும். இதனால் தளர்ச்சியும் ஏற்படும். அதுவே ஒரு ஓட்டுநரை அமர்த்தினால் ; பின் இருக்கையில் அமர்ந்து கொண்டு பாட்டு கேட்டுக் கொண்டோ, பத்திரிகை படித்துக் கொண்டோ, தோத்திரங்கள் சொல்லிக் கொண்டோ தான் செல்லும் சாலையைப் பற்றி சிந்தியான்.

அதுபோலவே, அன்னை அபிராமியிடம் நம் வாழ்வை நடத்தும் பொறுப்பைக் கொடுத்து விட்டால் நமக்கு ஏது கவலை ? தாயின் இடுப்பில் உள்ள சேய் எதைப்பற்றியும் அறியப் போவதில்லை. கவலைப்படப் போவதில்லை.

அதுபோலவே அபிராமிபட்டரும் அன்னை அபிராமியிடம் சேயாக இணைந்தவர்.

அபிராமி அந்தாதி முழுவதும் தாய்-சேய் என்ற பாவனை (பாவம்) தவழ்ந்து விளையாடுகின்றதல்லவா !

அபிராமி பட்டருக்கு, அன்னை அபிராமியின் புகழ்பாடுவது - பேரின்பம் தருவதால் - அடிக்கடி அவள் குணங்களைப் பற்றி அன்புடன், உரிமையுடன், பெருமையுடன் பாடுவார், பேசுவார். தேவியின் அன்பர்களுக்கு தங்கள் அன்னையின் புகழ்பாடுவது ஒரு இன்றியமையாத பணி.

நாமும் நம் அன்னை அபிராமியின் புகழையே பாடுவோம்.

அன்னை அபிராமி - அருட்கடல்

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம். 604. குணநிதி - குணங்களால் நிரம்பிய பொக்கிஷம் போன்றவள். 326. கருணா ரஸ ஸாகரா -

கருணைக் கடல். 197. ஸாந்த்ர கருணா - மிகுந்த கருணை உள்ளவள். 581. தயாமூர்த்தி - தயை வடிவினள். 992. அவ்யாஜ கருணாமூர்த்தி - பக்ஷபாதமில்லாத கருணை உருவமானவள்.

இமவான் பெற்ற கோமளமே !

634. சைலேந்த்ர தநயா - மலையரசனின் மகள். 246. பார்வதீ - ஹிமவான் குமாரி.

721. கோமளாங்கீ - அழகிய மிருதுவான சரீரத்தை உடையவள்.

437 . கோமலாகாரா - மென்மையான, அழகிய, மிருதுவான வடிவமுடையவள்.

திருவாசகத்திலும்

*'அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்*
*குன்றே அனையாய் என்னை ஆட்கொண்ட போதே கொண்டிலையோ,*
*இன்றோர் இடையூறெனக்குண்டோ எண்டோள் முக்கண் எம்மானே*
*நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே'*

அபிராமிபட்டர் அபிராமி அந்தாதியைப் பாடப் போவதற்கு முன்னால், 'நன்றே வருகினும் தீதே விளைகினும் நான் அறிவது ஒன்றேயும் இல்லை. உனக்கே பரம்' என்று மனதில் அன்னையை த்யானித்தார். அன்னையின் அருளால் அபிராமிபட்டரின் வாயிலாக நமக்குக் கிடைத்தது, 'அபிராமி அந்தாதி.'

**96. அபிராமியை தொழுவார் ஏழு உலகங்களுக்கும் அரசராவார்.**

*கோமளவல்லியை அல்லியந் தாமரைக் கோயில் வைகும்*
*யாமள வல்லியை ஏதம் இலாளை எழுதரிய*
*சாமள மேனிச் சகலகலா மயில் தன்னைத் தம்மால்*
*ஆமளவும் தொழுவார் எழு பாருக்கும் ஆதிபரே.*

**(எங்கும் தலைமையும் புகழும் பெற)**

| | |
|---|---|
| கோமள வல்லியை | மெல்லிய கொடி போன்ற அபிராமியை |
| அல்லியந் தாமரைக் | அக இதழ்கள் உடைய தாமரையாகிற |
| கோயில் வைகும் | ஆலயத்தில் எழுந்தருளி இருக்கும் |
| யாமள வல்லியை | யாமளாகமத்தில் புகழால் படர்ந்து இருக்கும் கொடி போன்றவளை |
| ஏதம் இலாளை | குற்றம் இல்லாதவளை |
| எழுதரிய | ஓவியத்தில் எழுதுதற்கு அரிய |
| சாமள மேனிச் | சாமள நிறம் பொருந்திய |
| சகல கலா மயில் தன்னை | சகல கலைகளுக்கும் தலைவியாகிய மயில் போன்றவளை |
| தம்மால் ஆம் அளவும் | தனது சக்திக்கு உகந்த மட்டும் |
| தொழுவார் | வழிபட்டு உபாசிப்பவர்கள் |
| எழு பாருக்கும் | ஏழு உலகங்களுக்கும் |
| ஆதிபரே | அரசர்களாவார்கள். |

பூந்தாது நிறைந்த அக இதழ்கள் உடைய தாமரையைத் தன் ஆலயமாகக் (இருப்பிடமாகக்) கொண்டு வீற்றிருக்கும் அழகும் மென்மையும் சேர்ந்த இளங்கொடி போன்றவளாயும், ருத்ரயாமளம் எனப்படும் சாக்ததந்திர சாஸ்திரத்தின் கொடி போன்றவளாயும், அழிவு இல்லாதவளாயும், ஓவியத்தில் எழுதுதற்கு அரிய சாமள நிறம் உடையவளாயும், சகல கலைகளுக்கும் அதிஷ்டானமாய் மயில் போன்ற சாயல் உடையவளாயும் அம்பாளைத் தம்மால் இயன்ற அளவும் (தன் சக்திக்கு உகந்தபடி) தொழுபவர்கள் (உபாஸிப்பவர்கள்) ஏழு உலகங்களுக்கும் அரசர் ஆவர்.

அபிராமிபட்டர், சென்ற பாட்டில், 'எனக்குள்ள வெல்லாம் அன்றே உனதென்று அளித்து விட்டேன்,' என்று சொன்னார் அல்லவா ! அவரைப் போல, எல்லாவற்றையும் அர்ப்பணித்து விட்டு, மற்றவர்கள் அன்னையை வழிபட முடியாதே ! அதற்கு என்ன செய்வது ? என்று யாரும் கவலைப்பட வேண்டாம்.

தம்மால் முடிந்த அளவு (தன் சக்திக்கு உகந்தபடி) அன்னையிடம் அன்பு கொண்டு தொழுதாலே போதும். அன்னை அபிராமி அவர்களுக்கு ஸாம்ராஜ்ய பதவியையே ! (ஏழு உலகங்களுக்கும் அரசராக) அளிப்பாள் என்கிறார் அபிராமிபட்டர்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 815. அநித்யத்ருப்தா :-

நிலையில்லாத, அழியக்கூடிய பொருள்களால் செய்யப்படும் வழிபாட்டிலும் திருப்தியை அடைகிறாள். பொருளின் விலையோ, மதிப்போ முக்கியமில்லை. பக்தி ஒன்றே முக்கியம். குசேல உபாக்யானத்திலும், கண்ணப்ப நாயனார் சரித்திரத்திலும் இதுவே தெளிவாக்கப்படுகிறது.

அவளைத் தவிர உலகில் பாக்கி எல்லாம் அநித்ய மானவையே. அப்படி அநித்யமான பொருள்களால் உபசரிக்கப் பட்டாலும், (நித்யமான) திருப்தியை அடைபவள்.

566. நித்ய த்ருப்தா :- திருப்தியுடன், மன நிறைவுடன் உள்ளவள். அவள் பூர்ணமானவள். எந்தப் பொருளும் தேவை என்ற நிலை கிடையாது. ஆகையால் எப்போதும் மன நிறைவுடன் உள்ளவள். ஸாஸ்வதமான, நித்யமான, ஸ்வரூபானந்தத்தால் திருப்தியுடன் இருக்கிறாள்.

''பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோமே பக்த்யா ப்ரயச்சதி

ததஹம் பகத்யுப ஹ்ருத மஶ்னாமி ப்ரயதாத்மன:'' - என்கிறது, பகவத் கீதை (9.26).

ஒரு தாய்க்கு வெவ்வேறு பருவத்திலுள்ள குழந்தைகள் பலர் இருக்கிறார்கள். அந்தக் குழந்தைகளில் சிலர் நல்ல வேலையில் இருப்பார்கள். சிலர் சாதாரண நிலையில் இருப்பார்கள். தாய்க்கு பல விதமான பொருட்களை தத்தம் சக்திக்கேற்றவாறு அக்குழந்தைகள் தங்கள் அன்பின் பரிசாக வாங்கித் தருவார்கள். தாயானவள் அப்பண்டங்களின் உயர்வு, தாழ்வு பார்க்காமல் அவற்றைப் பெற்றுக்கொண்டு அவர்களை ஆசீர்வதிப்பாள். இது மண்ணுலகத் தாய் செய்வது.

687. ராஜத்க்ருபா - கருணையே வடிவாக ப்ரகாசிப்பவள்.

அன்னை அபிராமியோ 'கருணைக் கடல்'. அவள் தன் சேய்

என்ன கொடுத்தான், எது கொடுத்தான் என்று பார்க்க மாட்டாள். எது கொடுத்தாலும் (அன்பாக), அதை ஏற்றுக்கொண்டு அதைப்போல பன்மடங்கு செய்வாள். அக்காலத்தில் 'அரச பதவி' உயர்ந்த, எண்ணிப் பார்க்க முடியாத பதவி. அதையும் தருவாள் எப்படி ? ஏழு உலகங்களுக்கும் அதிபதியான சக்ரவர்த்தி பதவியை.

அபிராமிபட்டர், அன்னையின் குணங்களைச் சொல்ல ஆரம்பிக்கும் போது, அவள் அழகான திருக்கோலத்தை வர்ணிக்கத் தவறமாட்டார். அவளைத் தாமரைக் கோயிலில் குடிகொண்டிருக்கும் 'யாமளவல்லி'யாகச் சொல்லுகிறார். யாமளாகமம் என்பது அம்பிகையின் பெருமையைக் கூறுவது. அந்த ஆகமத்தில் படர்ந்திருக்கும் கொடி போல இருக்கிறாள் அன்னை. "பரவுவன யாமளமோ," "யோக யாமளத்தினாள்" - என்பார் ஒட்டக்கூத்தர். அவளை ஓவியமாக எழுதரிய திருமேனி உடையவள். அப்பிராகிருதமான அவள் பேரழகை எந்த ஓவியனால் எழுத முடியும் ?

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் 236. சதுஷ்ஷஷ்டிகலாமயீ - 64 கலைகளின் வடிவாயிருப்பவள். 327 கலாவதீ - கலைகளுடன் கூடியவள். 328. கலாலாபா - கலைகள் வடிவான பேச்சை உடையவள். கலா என்பதற்கு 'கலை' என்றும், 'மயில் கலாபம்' என்றும் பொருள் உண்டு. சகல கலைகளும் மயில் தோகை விரிவது போல காட்சி அளிக்கின்றன.

ஔவைப்பாட்டி 'இயல்வது கரவேல்' என்று சொன்னாள். அது எல்லாச் செயலுக்கும் பொருந்தும்.

2. ஸ்ரீ மஹா ராக்ஞீ - சிறப்பு மிக்க பேரரசி. 692. ஸாம்ராஜ்யதாயினீ - பக்தர்களுக்கு ஸாம்ராஜ்யத்தைக் கொடுப்பாள். 688. ராஜ பீடநிவேசித நிஜாச்ரிதா - தன்னை அண்டியவர்களை அரச பீடத்தில் அமர்த்துபவள். 685. ராஜ்யதாயினீ - ராஜ்யத்தைக் கொடுப்பவள்.

அன்னை அபிராமிக்கு அன்பர்களின் 'அன்புதான்' -பிரதானம்.

## 97. அன்னை அபிராமியின் - அடியார்கள்.

*ஆதித்தன் அம்புலி அங்கி குபேரன் அமரர் தம் கோன்*
*போதிற் பிரமன், புராரி, முராரி, பொதிய முனி*
*காதிப்பொருபடைக்கந்தன், கணபதி, காமன் முதல்*
*சாதித்த புண்ணியர் எண்ணிலர் போற்றுவர் தையலையே.*

**(புகழும் தர்மமும் வளர)**

| | |
|---|---|
| ஆதித்தன் | சூரியன் |
| அம்புலி | சந்திரன் |
| அங்கி | அக்கினி |
| குபேரன் | குபேரன் |
| அமரர் தம் கோன் | தேவராஜனாகிய இந்திரன் |
| போதிற் பிரமன் | தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் |
| புராரி | திரிபுரங்களை எரித்த சிவபிரான் |
| முராரி | முரனை அழித்த திருமால் |
| பொதிய முனி | பொதிய மலையில் இருக்கும் முனிவராகிய அகத்தியர் |
| காதிப் பொருபடைக் கந்தன் | பகைவரை மோதிப் போர் செய்யும் வேலாயுதத்தை உடைய முருகன் |
| கணபதி | வினாயகக் கடவுள் |
| காமன் முதல் | மன்மதன் முதலாகச் |
| சாதித்த | சாதனை செய்து |
| புண்ணியர் | நலம் பெற்ற புண்யவான்கள் |
| எண்ணிலர் | எண்ணில் அடங்காதவர்கள் |
| போற்றுவர் தையலையே ! | அன்னை அபிராமியையே துதித்து வழிபடுபவர்கள் |

சூரியன், சந்திரன், அக்கினி, குபேரன், தேவராஜனாகிய இந்திரன், தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன், திரிபுரங்களை அழித்த சிவபிரான், முரனை அழித்த திருமால், பொதியமலையில் இருக்கும் முனிவராகிய அகத்தியர், பகைவரை மோதிப் போர் செய்யும் வேலாயுதத்தை உடைய முருகன், கணபதி, மன்மதன் முதலாகச் சாதனை செய்து நலம்பெற்ற புண்ணியவான்கள் எண்ணில் அடங்காதவர்கள். (அதாவது பூஜிக்காதவர்களே இல்லை)

இவர்கள் எல்லோரும் வணங்குவது இளமையுடன், எல்லா அலங்காரங்களுடன் திகழும் 'பாலாம்பிகை' என்னும் அன்னை

அபிராமியையே !

இதுவரை பல பாடல்களில் அன்னை அபிராமியை த்யானித்து வழிபடுவோரின் பலன்களைச் சொன்னார். இந்தப் பாடலில் அவரை வணங்கும் சான்றோர்களின் திருநாமங்களை அழகாக ஒரு பட்டியல் போலத் தருகிறார்.

அன்னையின் மந்திரத்திற்கு 'ஸ்ரீ வித்யை' என்று பெயர். ஸ்ரீ வித்யையில் பல நிலைகள் உள்ளன. அவை முக்கியமாக பாலை, பஞ்சதசீ, ஷோடசீ எனப்படும். அம்பாளை ஒன்பது வயது கன்னிப்பெண்ணாக பாவித்தல் பாலாத்ரிபுரஸுந்தரியின் உபாஸனை. இதற்கு உண்டான மந்த்ரங்களே சற்று விரிவடைந்து மற்ற இரு நிலைகளையும் அடைகிறது.

பஞ்சதசீ மந்த்ரம் 12 விதமாகும். ஒவ்வொரு ரிஷியும் கண்டுபிடித்த மந்த்ரமும் ஒரு விதமான பஞ்சதசீ மந்த்ரமாகும். அவர்கள் பின்வரும் பெயர் கொண்டவர். மனு, சந்த்ரன், குபேரன், லோபாமுத்ரா, மன்மதன், அகஸ்தியர், அக்னி, சூர்யன், இந்த்ரன், ஸ்கந்தன்,சிவன், க்ரோத பட்டாரகர், (துர்வாஸர்) இவர்களைத் தவிர நந்திகேஸ்வரர், ஹரி, யமன் இவர்களுடைய மந்த்ரங்களும் இருப்பதாகத் தெரிகிறது.

பஞ்சதசீ மந்த்ரங்களில் மிகவும் ப்ரபலமானவை, மன்மதன் கண்டறிந்த காதி வித்யையும் ('க' என்ற எழுத்தில் தொடங்குவது), லோபா முத்ரை கண்டுபிடித்த ஹாதி வித்யையும். ('ஹ' என்ற எழுத்தில் தொடங்குவது).

இவ்விரண்டிலும் காதிவித்யையே மிகவும் பழக்கத்தில் இருப்பது. இது உயர்ந்தது என்றும் கூறுவார்கள். ஸ்ரீ லலிதா த்ரிசதியில் காதி வித்யையே அனுசரித்து நாமாக்கள் இருப்பதும், மஹா ஷோடஸீ மந்த்ரத்தில் காதிவித்யையே மற்ற பீஜங்களுடன் சேர்க்கப்பட்டிருப்பதும் முக்கிய காரணங்கள் ஆகும்.

'மனு : சந்த்ரக் குபேரச்ச முத்ரா ச்ச மன்மத :
அகஸ்திரக்னி : ஸுர்யச்ச இந்த்ர : ஸ்கந்த சிவஸ்ததா
க்ரோதபட்டாரகோ தேவ்யா த்வாதசாமீ உபாஸகா :'

அபிராமிபட்டர் மனு, துர்வாசர், லோபாமுத்ரா என்னும்

மூவருக்கு பதிலாக பிரமன், திருமால், கணபதி என்னும் மூவரைச் சொல்கிறார். அபிராமிபட்டர் 'காதிவித்யையை' அனுசரித்தவர் என்று, 'லோபா முத்ரா' பெயர் இல்லாததால் நாம் அறிய முடிகிறது.

அபிராமிபட்டர் இவ்வாறு 12 பெயர்களை சொல்லி விட்டு 'சாதித்த புண்ணியர் எண்ணிலர் போற்றுவர் தையலையே' என்று அழகாக முடிக்கிறார். அவருக்குத் தெரியாதா, என்ன ! அன்னை அபிராமியை வணங்காதவர் எங்கும் இல்லை என்று !

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் 627. த்ரி ஜகத்வந்த்யா - மூன்று லோகங்களிலும், மூன்று லோகங்களாலும் வணங்கப்படுபவள்.

தையலையே - என்பது இங்கு பாலாம்பிகை அல்லது பால திரிபுரஸுந்தரியை நினைப்பூட்டுகிறது. அபிராமிபட்டர் ஒரு சிறந்த தேவி உபாசகர், ஸ்ரீ வித்யா உபாஸகர் என்று யாவரும் அறிவர்.

ஸ்ரீவித்யா உபாசனையில் முதல் நிலை - ஒன்பது வயது கன்னிப் பெண்ணான 'பாலா' உபாசனை அல்லவா ! அபிராமி அந்தாதியின் இரண்டாவது பாட்டிலேயே, 'திரிபுரசுந்தரி ஆவது அறிந்தனமே' என்றார் அல்லவா !

3-ம் பாட்டில்,'அறிந்தேன் ! எவரும் அறியாமறையை !' என்கிறார். அதாவது, 'ஸ்ரீ வித்யா' மந்திரத்தை - பஞ்சதசீ என்னும் மந்திரம். மறை என்ற சொல்லுக்கு அதிகாரியில்லாதவர்களுக்கு மறைக்கப்பட்டது என்று பொருள் கொள்ள வேண்டும். இந்த வித்யா மந்திரத்தை மிக ரகசியமாக வைத்துக் காப்பாற்ற வேண்டும். குரு - சிஷ்ய பரம்பரை மூலமாகவே அடைய வேண்டும். தொல்காப்பியத்தில், 'நிறைமொழி மாந்தர் ஆணையிற்கிளந்த மறைமொழி தானே மந்திரம் என்ப' என்று கூறப்படுகிறது.

இந்த உபாசனை ஸாமான்யமான தபஸ்ஸினால் கிடைக்கக் கூடியதில்லை. எவன் ஒருவனுக்கு மறு ஜன்மம் இல்லையோ அவனுக்குத் தான் கிடைக்கும்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் 'அம்பாளை' வணங்குபவர்களின் பட்டியலை அழகாகச் சொல்கிறது.

1. ஆதித்தன் - பானு மண்டல மத்யஸ்த்தா - சூர்ய மண்டலத்தின் நடுவில் இருப்பவள். அனாஹத சக்ரத்தை

'பானுமண்டலம்' என்று சொல்வதுண்டு. அதில் உறையும் குண்டலினீ வடிவானவள். (275)

2. அம்புலி - சந்த்ர மண்டல மத்யகா (240) - சந்த்ர மண்டலத்தின் மத்தியில் இருப்பவள். சிரஸில் உள்ள ஸஹஸ்ரார கமலத்தில் எப்போதும் பூர்ணமான கலைகளை உடைய சந்த்ர மண்டலம் இருப்பதாகச் சொல்லப்படும். அந்தச் சந்த்ர மண்டலத்தின் நடுவில் விளங்குபவள் தேவீ.

'சந்த்ர மண்டலமே ஸ்ரீசக்ரம் என்பது ரஹஸ்யம்.' ஸ்ரீவித்யா ஸந்த்யாவந்தனத்தில் (ஸாயங்காலம்) அம்பாளை சந்திர மண்டலத் திலிருப்பவளாகத் தியானிக்க வேண்டும்.

239. சந்த்ர வித்யா - (239) -சந்த்ரனால் உபாஸிக்கப்பட்ட ஸ்ரீவித்யா வடிவானவள்.

3. அங்கி 352. வஹ்னி மண்டல வாஸினீ - அக்னி மண்டலத்தில் வசிப்பவள். அக்னி மண்டலம் மூலாதாரத்திலும் பரமாகாசத்திலும் இருப்பதாகச் சொல்லப்படும். வஹ்னி - என்றால் நெருப்பு, 'மூன்று' என்ற எண்ணையும் குறிக்கும். மூன்று - அக்னி, சூர்ய, சந்திர மண்டலங்களில் வசிப்பவள்.இவை முறையே மூலாதாரம், அனாஹதம், ஸஹஸ்ராரம். மூன்று மண்டலங்கள் என்பது பஞ்சதசீயின் மூன்று கூடங்களையும் குறிக்கும்.

அன்னை ஸ்ரீலலிதாவாகிய அபிராமி அக்னி, சூர்யன், சந்திரன் - என்னும் மூன்று சுடர்களுக்கும் நடுவில் இருந்து ஒளிர்கிறாள் என்பதை அறிகிறோம்.

அக்னிதேவன், சூர்யன், சந்த்ரன் மூவரும் அன்னை அபிராமியை வழிபட்டமையால் அவளுக்கு இருப்பிடமாக விளங்கும் பேற்றினைப் பெற்றார்கள் ! அபிராமிபட்டர், 'வருந்தா வகை என் மனத் தாமரையினில் வந்து புகுந்து இருந்தாள்' என்று முன்னும் சொன்னார். அதாவது அன்பர்களின் மனத் தாமரையில் மகிழ்ச்சியுடன், மனநிறைவுடன் வந்து தங்குகிறாள் அன்னை அபிராமி !

4. குபேரன் - ராஜராஜார்சிதா (305) - ராஜராஜனால் உபாஸிக்கப்பட்டவள். குபேரனுக்கு ராஜராஜன் என்று ஒரு பெயர்

உண்டு. அம்பாளுடைய சிந்தாமணி கிரஹத்தை சுற்றியிருக்கும் ப்ராகாரங்களில், 14-15 ப்ரகாரங்களுக்கு நடுவில் மணிபத்ரன் என்ற யக்ஷகணங்களுடன் குபேரன் இருந்து கொண்டு, அம்பாளை உபாஸிப்பதாகச் சொல்லப்படுகிறது.

684. ராஜராஜேஸ்வரீ - குபேரனுக்கும் ஈஸ்வரி. ராஜராஜர்களுக்கும் ஈஸ்வரி. திக்பாலர்களுக்கும், ப்ரஹ்மா, விஷ்ணு, சிவன் - எல்லோருக்கும் ஈஸ்வரி.

'அமரர் தம் கோன் (இந்திரன்), போதில் பிரமன், புராரி, முராரி'.

83. ப்ரஹ்மோபேந்தர மஹேந்ராதி தேவஸ்ம்ஸ்துத வைபவா - ப்ரஹ்மா, விஷ்ணு, இந்த்ரன் முதலிய தேவர்களால் துதிக்கப்பட்ட பெருமையுள்ளவள். 297. ஹரிப்ரஹ்மேந்த்ர ஸேவிதா - விஷ்ணு, ப்ரஹ்மா, இந்த்ரன் முதலியவர்களால் வணங்கப்பட்டவள்.

ஸ்ரீநகரத்தின் நடுவிலுள்ள சிந்தாமணி க்ருஹம் தேவியின் இருப்பிடம். இதைச் சுற்றியிருக்கும் 18, 17 வது ப்ராகாரங்களின் நடுவில் விஷ்ணுவும், 17-16 வது ப்ரகாரங்களின் மத்தியில் ப்ரஹ்மாவும், 15-14 வது ப்ராகாரங்களின் நடுவில் இந்திரன் முதலான திக்பாலர்களும் இருந்து கொண்டு தேவியை எப்போதும் த்யானம் செய்து கொண்டிருக்கிறார்கள்

558. கமலாக்ஷ நிஷேவிதா - தாமரைக் கண்ணனான மஹாவிஷ்ணுவால் விசேஷமாக ஸேவிக்கப்பட்டவள். மஹாவிஷ்ணு இந்த்ர நீலமய ரூபமுடைய அம்பாளை எப்போதும் ஆராதிக்கிறார். அதனால் தன் பதவியை அடைந்தார் என்று பத்மபுராணம் கூறுகிறது. மஹாவிஷ்ணு பரமேசுவரனை தாமரை மலர்களால் அர்ச்சித்தார். அப்பொழுது ஒரு தாமரை குறைந்ததால், தன் அழகிய கண்ணையே எடுத்து அர்சித்தார் என்ற கதை நினைவிருக்கும். சக்தியும், சிவனும் அபேதம் என்பதால் இந்த ஆராதனையை தேவிக்கும் என்றும் நினைக்கலாம்.

திரிபுரங்களை அழித்த புராரியாகிய சிவபெருமான் அம்பிகையை போற்றுவதை அபிராமிபட்டர் பல இடங்களில் சொல்லியிருக்கிறார்.

231. மஹாபைரவ பூஜிதா - மஹாபைரவரால் பூஜிக்கப் பட்டவள். 406. சிவாராத்யா - சிவனால் வழிபடப் பெற்றவள். ப்ரஹ்மாண்ட புராணத்தில் ஸித்திகளுக்கும் அதிபதியாகவும் (ஈஸ்வரனாகவும்), அர்த்த நாரீஸ்வரர் ஆகவும் ஆனார் என்று சொல்லப்படுகிறது. சிவனால் உபாஸிக்கப்பட்ட, நான்கு கூடங்களுள்ள ஒரு மந்திர ஸ்வரூபமாக இருப்பவள்.

பொதியமுனி - தாபஸாராத்யா (359) - தபஸ்விகளால் (அகத்தியர் முதலிய முனிவர்கள்) போற்றும், துதிக்கும், ஆராதிக்கும் அன்னை. தாப+ஸார+ஆத்யா என்று பிரித்து, தாபத்திற்கு ஆதிகாரணமான ஸம்ஸாரத்திற்கு ஸார பூதமானதால் விசேஷமாக த்யானம் செய்யப்படுகிறவள்.

காதிப் பொருபடைக் கந்தன். கணபதி.

442. குமார கண நாதாம்பா முருகனுக்கும், கணபதிக்கும் தாய், மாரனை (மன்மதனை) பழிக்கும் அழகு உடையவனாதலால் முருகனைக் குமாரன் (குத்ஸிதோ மார : யேந) என்பார்கள். மன்மதனை நெற்றிக் கண்ணால் எரித்தபின், பிறந்த பிள்ளை யல்லவா முருகன் ! எந்தக்கண் மன்மதனை எரித்ததோ, அந்தக் கண்ணில் இருந்து தோன்றிய ஞானப் பொறிகள் (ஆறு) தானே, ஆறுமுகமாக, அகிலமும் போற்றி ஆனந்தமடையச் செய்தது !

காமன் :- ஸ்ரீ வித்யோபாஸகர்களில் காமன் முக்கியமான இடத்தை வசிக்கிறவன். ஸ்ரீவித்யையில், தொடங்கும் எழுத்தின் வேறுபாட்டால் காதி வித்யை, ஹாதி வித்யை என்று இருவகை உண்டு. அவற்றில் காதி வித்யைக்கு ரிஷி காமராஜனாகிய மன்மதன்.

375. காமபூஜிதா - மன்மதனால் பூஜிக்கப்பட்டவள்.

அம்பாள் உபாஸனையில் முக்கியமான 12 பேரில் மன்மதனும் ஒருவர். ஸௌந்தர்யலஹரீயில் ஸ்லோகங்கள் 5-ம், 6-ம் இதைக் குறிப்பிடுகின்றன.

அம்பாளையும், சிவனையும் சேர்த்து வைத்து குமாரோத்பத்தி யாவதற்காகவே மன்மதன் சிவன் மேல் மலர்க்கணையைத் தொடுத்தான். தன் சரீரத்தையும் இழந்தான். சரீர த்யாகம் செய்து

தன்னைச் சிவனுடன் சேர்த்து வைத்த நன்றியுணர்வால் காமனுடைய வழிபாட்டை ஏற்று அவனுக்கு எல்லாப் பெருமை களையும் தருகிறாள். மன்மதனைப் போலவே தானும் கரும்பு வில்லையும், மலர் அம்புகளையும் ஏந்தி இருக்கிறாள். - அன்னை அபிராமி.

586. காமஸேவிதா - மன்மதனால் உபாஸிக்கப்பட்டவள். காம : என்பது சரீரம் இல்லாத மன்மதனைக் குறிக்கும். (அநங்கன்)

காம : என்பவர் மஹாகாமேஸ்வரர். அவரால் உபாஸிக்கப் பட்டவள்.

மஹா காமேஸ்வரரும், காமேஸ்வரியும் மாறி, மாறி குருவாகவும், சிஷ்யராகவும் இருந்து பரஸ்பரம் உபதேசம் செய்து கொண்டது மந்த்ர சாஸ்த்ரங்களில் கூறப்படுகிறது. மேலும், த்ரிசதீ ஸ்தோத்திரத்தை இருவருமே சேர்ந்து கூறியது, த்ரிசதியின் பூர்வ பாகத்திலிருந்து தெளிவாகிறது.

647. லோபாமுத்ரார்ச்சிதா - லோபாமுத்ரையினால் பூஜிக்கப் பட்டவள். லோபாமுத்ரை அகஸ்தியரது பத்னீ. பேதங்களை உணர்த்தும் நாம ரூபங்களை பொய் என்று அறிந்து அவற்றில் அபிமானத்தை விட்டவள் என்பதால், 'லோபா'. முத்ரா என்பதால் ஆனந்தத்தைப் பெற்றவள். தன்னுடைய பக்தர்களில் முக்கியமானவள் என்று அம்பாளாலேயே த்ரிசதியில் சொல்லப் பட்டிருக்கிறது. ''பதன்யஸ்ய லோபா முத்ராக்யா மாம் உபாஸ்தே அதிபக்தித: ॥''

லோபா முத்ரா வித்யை என்னும் ஹாதி வித்யையால் ('ஹ' என்னும் எழுத்தில் தொடங்குவது) உபாஸிக்கப்படுபவள். ரிஷி, மந்திரம், தேவதை- அபேதம். ஆகையால் அம்பாளுக்கே 'லோபாமுத்ரா' என்று பெயர். லோபாமுத்ரையாகவே அர்சிக்கப் படுகிறவள். கடமையை, காலந்தவறாது செய்யும் காலனாகிய யமதர்மராஜாவும் ஸ்ரீ வித்யா உபாஸகர்களில் ஒருவர்.

238. மநுவித்யா - மநுவினால் உபாசிக்கப்பட்ட வித்யையா யிருப்பவள். ஆதியில் ஸ்ரீவித்யை பன்னிரண்டு பேர்களால் உபாசிக்கப்பட்டதாக கூறப்படுகிறது. அவர்களுள் 'மனு' முதலில் கூறப்படுவர். அவர் கண்டு பிடித்த ஸ்ரீ வித்யாமந்த்ர

ரூபிணியாயிருப்பவள் தேவி.

636. கந்தர்வஸேவிதா - விசுவாஸு முதலிய தேவலோகப் பாடகர்களான கந்தர்வர்களால் ஸேவிக்கப்பட்டவள். ஹாஹா, ஹூஹூ என்ற இரு கந்தர்வர்களின் ஸங்கீதத்தினால் மகிழ்விக்கப் படுவதாக அநேகமாக எல்லா தேவதைகளின் நாம ஸ்தோத்திரங்களில் குறிப்பிடப்படுவதிலிருந்து கந்தவர்களின் ஸங்கீதம் எல்லாப் பூஜைகளிலும் ஒரு முக்ய அம்சம்.

"ஹாஹா ஹூஹூ முகஸ்துத்யா" - லலிதா த்ரிசதீ. (177)

64. தேவர்ஷிகண ஸங்காத ஸ்தூயமானாத்மவைபவா - தேவர்கள், ரிஷிகள் இவர்களுடைய கூட்டங்களால் ஸ்தோத்ரம் செய்யப்பட்ட வைபவத்தோடு கூடியவள். விபு - எங்கும் இருப்பவள். அதன் சிறப்பு 'வைபவம்'. எங்கும் நிறைந்து இருந்தால் தான் சட்டென உதவ முடியும். எல்லாமாக இருப்பதால் தான் எதையும் தர முடியும். 'ஸங்காத' - பலவிதமாக துதிக்கப்படுபவள்.

அம்பாளுடைய பரரூப ஸம்பந்தமான அர்த்தம் - ஸர்வ வ்யாபியாயும் ஸமஸ்த அநுபவத்தோடு கூடியதும், ஸர்வ விதத்திலும் ப்ரேமாஸ்பதமானதும் (ஸத், சித், ஆநந்த ரூபம்) ஆன சைதன்ய ஸ்வரூபமே ஆத்மா. இதுவே தேவியின் அபின்னமான வடிவம்.

'ஸதாநந்த பூர்ண : ஸ்வாத்மைவ பரதேவதா லலிதா' (பாவனோபநிஷத்) இந்த ஸ்வரூபமே தேவ, ரிஷி கணங்களால் துதிக்கப்பட்டது.

825. புதார்சிதா - அறிவாளிகளால் பூஜிக்கப்படுபவள். ஸ்ரீமத் பகவத் கீதையில் (7-16) 'துன்பத்திலிருப்பவன், ஞானம் வேண்டுபவன், செல்வம் வேண்டுபவன், ஞானீ ' என்ற நான்கு விதமான நபர்கள் ஆண்டவனை (அம்பாளை) பூஜிப்பதாக சொல்லப்படுகிறது. இவர்களுள் ஞானீ - எல்லோருக்கும் தலைசிறந்தவன். அவன் எல்லாவற்றையும் கடந்த நிலையில் இருந்தாலும் லோக க்ஷேமத்திற்காக உபாஸனை செய்கிறான்.

423. த்விஜ வ்ருந்த நிஷேவிதா :- த்விஜர்களுடைய கூட்டங்களால் நன்கு ஸேவிக்கப்பட்டவள். அதாவது ப்ராஹ்மணர்,

க்ஷத்திரியர், வைஸ்யர் என்ற இரு பிறப்பாளர்களால் நன்றாக - த்யானம் செய்யப்பட்டு உபாஸிக்கப்படுகிறவள். (தாயாரிடமிருந்து ஒரு பிறப்பு, பிறகு, அறிவதற்கான காயத்ரீ மந்த்ரத்தை உபநயனம் என்ற சடங்கின் போது பெறுவது இரண்டாவது பிறப்பு)

ஸந்த்யா தேவியை ஸதா காலமும் த்விஜர்கள் உபாஸிக்க வேண்டும். அவளே, 'ரேணுகா' என்று ரேணுகா புராணம் கூறுகிறது.

290 ஸகலாகம ஸந்தோஹசுக்தி ஸம்புடமௌக்திகா : 'ஸகலாகம' என்று கூறியதால் எல்லோராலும் வணங்கத்தக்கவள் என்று சொல்லப்பட்டது.

412. சிஷ்ட பூஜிதா - சிஷ்டர்களால் ஆராதிக்கப்படுபவள்.

411. சிஷ்டேஷ்டா - சிஷ்டர்களை விரும்புபவள். சிஷ்டர்களால் விரும்பப்படுபவள். 545. புலோமஜார்சிதா - புலோமரின் புத்ரியான இந்த்ராணியால் அர்ச்சிக்கப்பட்டவள். 741. ரம்பாதிவந்திதா - ரம்பை, ஊர்வசீ முதலிய அப்ஸரஸ் ஸ்த்ரீகளால் வணங்கப்பட்டவள்.

237. மஹா சதுஷ்ஷஷ்டி கோடியாகினீ கணஸேவிதா - 64 கோடி யோகினீ கணங்களால் ஸேவிக்கப்பட்டவள்.

965. பாலா - பால த்ரிபுரஸுந்தரியாக, குமாரியாக இருப்பவள். சிறுமி போல் லீலைகளில் (விளையாட்டுகளில்) ஆசைப்படுவதால் அம்பிகைக்கு 'பாலா' என்று பெயர்.

இவ்வாறு எல்லா உலகங்களிலும், எல்லோராலும் ஸேவிக்கப்பட்டவள் எங்கள் அன்னை அபிராமி என்று பெருமிதத்தோடு கூறுகிறார் அபிராமிபட்டர். அவரின் புதல்விக்கு 'பாலா' என்ற பெயர்.

## 98. அன்னை அபிராமி - வஞ்சகர் நெஞ்சடையாள்.

*தை வந்துநின் அடித்தாமரை சூடிய சங்கரற்குக்*
*கைவந்த தீயும் தலை வந்த ஆறும் கரந்ததெங்கே*
*மெய்வந்த நெஞ்சின் அல்லால் ஒருகாலும் விரகர் தங்கள்*
*பொய் வந்த நெஞ்சில் புகல் அறியா மடப் பூங்குயிலே !*

**(வஞ்சகர் தொல்லை நீங்க)**

| | |
|---|---|
| மெய் வந்த நெஞ்சின் | உண்மையும், நேர்மையும், சீலமும் |
| அல்லால் | உடைய அடியார்களின் உள்ளத்தில் அல்லாது |
| ஒருகாலும் | எக்காலத்தும் |
| விரகர் தங்கள் | வஞ்சகர்களின் |
| பொய் வந்த நெஞ்சில் | பொய் நிரம்பிய உள்ளத்தில் |
| புகல் அறியா | குடி கொள்ளக் கருதாத |
| மடப் பூங்குயிலே ! | இளமையும், அழகும் நிறைந்த குயில் போன்றவளே |
| நின்னடித் தாமரை | உன்னுடைய திருவடிக் கமலங்களை |
| தைவந்து | வருடி |
| சூடிய சங்கரற்குக் | தன் தலையில் சூடிக் கொண்ட சங்கரருக்கு |
| கை வந்த தீயும் | கையில் அணிந்த தீயும் |
| தலை வந்த ஆறும் | சடையில் சூடிய கங்கையும் |
| கரந்ததெங்கே ? | எங்கே ஒளித்து வைத்தார் ? |

உண்மையான உணர்வு பொருந்திய அன்பர்களுடைய உள்ளத்தில் அல்லாமல் வஞ்சகர்களுடைய பொய் நிரம்பிய உள்ளத்தில் ஒரு காலும் புகுதலை அறியாத இளமையையுடைய பூங்குயில் போன்ற தாயே ! அன்னை அபிராமியே ! நின்னுடைய பாதத் தாமரைகளை நின் ஊடலைத் தணிக்கும் பொருட்டு வருடி, அதனால் ஊடல் நீங்காமையை அறிந்து, பிறகு அந்தப் பாதத் தாமரைகளை வணங்கித் தலைக்கு அணியாகச் சூடிய சங்கரனுக்கு அப்போது கையில் இருந்த தீயும், தலையில் இருந்த மாற்றாளாகிய கங்கா நதியும் ஒளிந்து கொண்ட இடம் எங்கே ?

கள்ளங் கபடு, சூது வாது தெரியாது - குழந்தைக்கு. அந்தக் குழந்தை தன் தாயிடம் உரிமையோடு எதையும் கேட்கும். (ஆனால் எந்தக் குழந்தையும் தந்தையிடம் தைரியமாகப் பேசாது அல்லவா !)

அன்னை அபிராமியின் அருளும், கருணை-அல்லாது வேறு ஒன்றும் தெரியாத 'சேயாகத்', தாயிடம் கேள்வி கேட்கிறார். அபிராமி பட்டர். ஆம், அவரைத் தவிர வேறு யாருக்கு உண்டு இந்த உரிமை !

ஆதிசங்கரர் ஸௌந்தர்யலஹரீயில் (86) (ம்ருஷா க்ருத்வா..) "ஊடலில் பரமசிவன் பார்வதியை வணங்குவது, மன்மதனுக்கு வெற்றி என்று மிக நயமாகச் சொல்லுகிறார்."

மனைவி ஊடுவதும், கணவன் அவள் ஊடலைத் தணிப்பதற்கு நயந்து பேசுவதும், பணிவிடை செய்வதும் வழக்கம்.

அம்பிகையின் ஊடலைத் தணிக்கும் பொருட்டு இறைவன் அவளை நெருங்குகிறான். அன்னை சயனித்திருக்கிறாள். அவள் காலை மெல்ல வருடியும் ஊடல் தீரவில்லை. அவள் திருவடித் தாமரைகளைத் தன் தலையில் அணிந்து கொள்கிறான்.

அறையில் நிகழும் செயல் இரகசியமானதுதான் என்றாலும் அந்தரங்கம் அறிந்த குழந்தைக்கு அது தெரிகிறது. அன்னையின் சேய் தானே அபிராமிபட்டர் !

இறைவனேயாயினும், அன்னையை வணங்கும்போது, தன் கையில் ஏந்திய 'தீயையும்,' தலையில் தாங்கிய 'கங்கையையும்' நீக்கி விட்டே, அவளை அணுகினார். அவ்வாறு இருக்க தங்கள் வஞ்சகத்தை பிறர் அறியா வண்ணம் மறைத்து, தம்மை சாமர்த்தியசாலிகளாகப் போலி வேடம் பூணும் வஞ்சகர் நெஞ்சில் எப்படிப் புகுவாள், என்றும் அழியாத இளமையையுடைய பூங்குயில் போன்ற என் அன்னை அபிராமி என்று அழகாகக் கேள்வியாய் கேட்கிறார், அன்னையின் பக்தர் அபிராமிபட்டர் !

த்ரிசதியில் - 'லப்த பாப மனோதூரா' (265) என்று கூறப்படுகிறது. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் - 'துஷ்ட தூரா (193) - துஷ்டர்களால் அடைய முடியாதவள்' என்கிறது.

சிவனும் சக்தியும் தெய்வத்தம்பதிகள். அவர்கள் உலகத் தாருக்கு எடுத்துக்காட்டாக, எப்படி கணவன் - மனைவியுமாக இணைந்து வாழவேண்டும் என்பதை உணர்த்தும் பாடல் இது! அன்னை இறைவன் தந்த நெல்லைக்கொண்டு அறம் வளர்க்கிறாள் (காஞ்சிபுரம்). கற்பொழுக்கத்தின் சிறப்பு அம்சமாகிய ஊடலையும் கொள்கிறாள்.

அம்மையப்பன் காட்டிய வழியில் நாமும் செல்லுவோமாக !

### 99. அன்னையின் குழை - அரனின் காப்பு.

*குயிலாய் இருக்கும் கடம்பாடவியிடைக் கோலஇயல்*
*மயிலாய் இருக்கும் இமயாசலத்திடை வந்து உதித்த*
*வெயிலாய் இருக்கும் விசும்பில் கமலத்தின் மீது அன்னமாம்*
*கயிலாயருக்கு அன்று இமவான் அளித்த கனங்குழையே.*

**(அருள் உணர்வு வளர)**

| | |
|---|---|
| கயிலாயருக்கு | கயிலாயத்தை தமது இருப்பிடமாகக் கொண்ட சிவபெருமானுக்கு |
| அன்று | அக்காலத்தில் |
| இமவான் | பருவத ராஜன் |
| அளித்த | திருமணம் செய்து கொடுத்த |
| கனங்குழை | கனத்த அல்லது பொன்னால் ஆகிய குழையை உடைய அபிராமி அன்னை |
| கடம்பாடவியிடை | கடம்பவனத்தில் |
| குயிலாய் இருக்கும் | குயிலாக விளங்குவாள் |
| இமயாசலத்திடை | இமயமலையில் |
| கோல இயல் | அழகும் நல்லியல்பும் பொருந்திய |
| மயிலாய் இருக்கும் | மயிலாக இருப்பாள் |
| விசும்பில் | வானத்தில் |
| வெயிலாய் இருக்கும் | உதயசூரியன் போன்று இருப்பாள் |
| கமலத்தின் மீது | தாமரை மலரின் மீது |
| அன்னமாம் | அன்னமாக இருப்பாள் |

கைலாசபதியாகிய பரமேசுவரனுக்குப் பழைய காலத்தில் இமாசல அரசன் திருமணம் செய்து கொடுத்த, கனமான பொற் குழையை அணிந்தவளாகிய, அன்னை அபிராமியே !

கடம்பவனத்தில் குயிலாக வீற்றிருப்பாள். இமய மலையில் அழகும் நல்லியல்பும் உடைய மயிலாக உலாவிக்கொண்டிருப்பாள். வானத்தில் வந்து உதயமாகும் கதிரவனாக ஒளி பரப்பிக்கொண்டு இருப்பாள். நினைப்பாரது உள்ளக் கமலத்தின் மேல் அன்னமாக எழுந்தருளியிருப்பாள்.

சேயைத் தேடி தாய் வருவதைப் போல அன்னை அபிராமி, தன் உயர்ந்த இருப்பிடத்தில் இருந்து, தன் அன்பர்களின் மனத்தில் தானாகவே வந்து வாசம் புரிவாள் என்று அழகாகச் சித்தரிக்கும் பாடல் இது ! அபிராமிபட்டர், இவ்வுலகில் வாழும் மனிதர்களை

அன்னை அபிராமி ஆட்கொள்ள தானே வருவாள் என்று தன் சொந்த அனுபவத்தைச் சொல்லும் கவிநயம் பொருந்திய பாடலாக அமைந்துள்ளது.

'ஆன்மா இறைவனை தேடாமல், இறைவனே ஆன்மாவைத் தேடி வரும்'. அத்தகைய கருணை உள்ளம் படைத்தவள் அன்னை அபிராமி என்கிறார் அபிராமிபட்டர். மிகச் சீரிய கருத்தல்லவா !

அன்னை, தேவர்களைக் காக்கும் பொருட்டு இமாசல அரசன் மகளாக, பார்வதியாக திரு அவதாரம் எடுத்தாள். சூரஸம்ஹாரம் செய்யும் பொருட்டு திருமுருகன் பிறக்க வேண்டுமல்லவா ! பழங்காலத்தில் சிவபிரானுக்கு பார்வதி தேவியை இமவான் தாரை வார்த்து அளிக்க, அப்பெருமானை அவள் மணந்து கொண்டாள். அம்பிகை தன் காதில் பொன்னாலான கனத்த குழையை அணிந்திருக்கிறாள். தாடங்கத்தின் (குழையின்) மகிமையை ஆதிசங்கரர் கூறியதை முன்னும் பார்த்தோம். (ஸௌ.ல. 28)

ஸுமங்கலிகளுக்கு தாடங்கம் (குழை) ஒரு மிகச்சிறந்த ஸௌபாக்யமான அணி. 967. ஸுமங்கலீ 970. ஸுவாஸினீ - மிகவும் மங்களமானவள். சோபமான அதிகமான மங்களத்தை உடையவள். பதி உயிருடன் இருப்பதால், ஸுமங்கலீ, ஸுவாஸினீ என்ற பெயர்களை உடையவள். பதியுடன் கூடி வாழ்பவள். பதியுடன் வாழ்வதே பெண்களுக்குப் சிறப்பு, ஸுவாஸம். அப்படி மங்களமாக வாழ்பவர்களே நல்ல ஆடைகளை (வாஸாம்ஸி) அணிய முடியும்.

'மங்களம் என்பது ப்ரஹ்மத்தைக் குறிக்கும்'

அன்னை அபிராமி (ஸ்ரீ லலிதாம்பிகை) வீற்றிருக்கும் அழகான இருப்பிடத்தைப் பின்வரும் நாமாக்கள் வர்ணிக்கின்றன.

55. ஸுமேரு மத்ய ச்ருங்கஸ்த்தா - மேரு பர்வத்தின் நடுவில் இருக்கும் சிகரத்தில் இருப்பவள். ஸுமேரு என்னும் தங்கமலை உலகைத் தாங்கும் ஆதாரமாயுள்ளது. இதன் நடுவில் ஒரு முக்கோணம் போல் மூன்று சிகரங்கள் உள்ளன. அதன் நடுவே அவற்றை விட உயர்வாக நான்காவதாக ஒரு சிகரம் உள்ளது. தேவி உறையும் 'ஸ்ரீ நகரம்' இச் சிகரத்தில் இருக்கிறது.

56. ஸ்ரீமந் நகர நாயிகா - ஸ்ரீநகரத்தின் நாயகி. ஸ்ரீநகரமென்பது ஸ்ரீமத்லக்ஷ்மீவித்யா நகரமென்னும் தேவியின் இருப்பிடம். அதன் அதிபதி.

57. சிந்தாமணி க்ருஹாந்தஸ்த்தா - சிந்தாமணிகளால் நிர்மிக்கப்பட்ட வீட்டில் இருப்பவள். மனம் நினைப்பதைத் தந்து அருளும் ரத்னம் சிந்தாமணி. பல சிந்தாமணி ரத்னங்களைக் கொண்டு அமைக்கப்பட்ட மாளிகை சிந்தாமணி க்ருஹம். அதில் வசிப்பவள். தேவியின் மந்த்ராக்ஷரங்களும் சிந்தாமணி எனப்படுகின்றன. அவைகளில் இருப்பவள் : பீஜாக்ஷரங்களையே உறைவிடமாகக் கொண்டவள்.

59. மஹாபத்மாடவீ ஸம்ஸ்த்தா - பெரிய தாமரைக்காட்டில் வசிப்பவள். இத்தாமரைக் காடு சிந்தாமணி க்ரஹத்தின் நடுவில் உள்ளது.

60. கதம்பவனவாஸினீ - கதம்ப மரக்காட்டில் வஸிப்பவள். சிந்தாமணி க்ருஹத்தைச் சுற்றி ஒரு பெரிய மணிமண்டபம். அதனைச் சுற்றி கடம்ப மரக்காடு. அதில் வசிப்பவள்.

ஸ்ரீ புரத்தில் 25 தத்வங்களின் வடிவாய் உலோகங்கள், ரத்னங்கள் இவற்றாலான 25 மதில்கள் இருப்பதாய் சொல்லப் பட்டிருக்கிறது. அவைகளில் தங்கம், வெள்ளி இரு மதில்களுக்கு நடுவில் கடம்பவனம் இருக்கிறது. மதுரை க்ஷேத்திரத்திற்கு கடம்பவனம் என்று பெயர். அங்கு மீனாக்ஷியாக உறைபவள் மந்த்ரீணீ என்ற மஹா சியாமளா.

இந்தக் கதம்பவனம் இருக்கும் இடம் ஒரு தீவு. அதற்கு மணித்வீபம் என்று பெயர். அதனைச் சுற்றி கற்பகக் காடு இருக்கிறது. இவை யாவும் அமுதக்கடலின் நடுவே அமைந்துள்ளன. (ஒ. "ஸுதா - ஸிந்த்தோர். மத்த்யே" ஸௌ.ல. 8)

பைரவயாமளம் :- அமுதக் கடலின் நடுவில் ஒரு மணிமண்டபம் உண்டு. இது கற்பக வனத்தினிடையே கதம்ப மரங்கள் அடர்ந்த இடத்தின் நடுவில் உள்ளது. அங்கே சிந்தாமணிக் கிரகம் என்ற திருக்கோயிலில் அம்பிகை இருக்கிறார்.

ஸ்ரீ லலிதா த்ரிசதி : கதம்ப கானனாவாஸாயை நம :

காளிதாஸர் : காதம்ப காந்தார வஸப்பிரியே

ஆதி சங்கரர் : ''உபநிஷேதுத்யான கேலிகல கண்டீம்'', 'ஆகமவிபின மயூரீம்'

ஸ்ரீ லலிதா த்ரிசதி : ஹம்ஸ மந்த்ரார்த்த ரூபிண்யை நம : அன்னம் (173)

ஹ்ரீங்கார பாஸ்கர ருச்யை நம : சூரியன் (207)

ஹ்ரீங்காரோத்யான கேகின்யை நம : மயில் (212)

இத்தகைய கதம்பவனத்தின் நடுவே அன்னை அபிராமி எழுந்தருளியிருக்கிறாள். அங்கு குயிலைப் போல, நல்ல அருமையான மரங்களின் நடுவில் வாழும் அம்பிகையாகத் தோற்ற மளிக்கிறாள். அம்பிகையின் குரல் மிகவும் இனிமையானது. (குயிலின் குரலைப் போல). காட்டின் நடுவே வசிப்பதாலும், இனிய குரலை உடையவள் ஆனதாலும் குயிலாக உருவகம் செய்கிறார் அபிராமிபட்டர்.

அன்னை - கதம்பவனக்குயில்.

27. நிஜ சல்லாப மாதுர்ய விநிர்பர்த்ஸித கச்சபீ - தன்னுடைய குரலின் இனிமையினால் கச்சபீ எனப்படும் ஸரஸ்வதி தேவியின் வீணை ஒலியை வென்றவள். (இதை முன்னும் பார்த்தோம்).

'குயிலாய்' இருப்பது - அன்னை அபிராமியின் நாதவடிவம் 299. நாதரூபா - சப்த வடிவானவள். 901. நாத ரூபிணீ - நாதரூபமாக இருப்பவள்.

ஒலி தோன்றுவதில் பரா, பச்யந்தீ, மத்யமா, வைகரீ என்று நான்கு நிலைகள் உள்ளன. கடைசி நிலையிலான வைகரீ என்ற வடிவு தான் நாம் கேட்கும் ஒலியின் ஸ்வரூபம்.

அன்னை இமாசலத்தில் அவதாரம் செய்தாள் 'பார்வதியாக' அல்லவா ! அங்கே அவள் இளம் பெண்ணாக ஆடிப் பாடித் திரிந்து விளையாடும் திருக்கோலத்தை மயில் தன் தோகையை விரித்து அழகாக ஆடுவது போன்ற வனப்புடன் விளங்கினாள் என்று அருமையாக, அழகாக வர்ணிக்கிறார், அபிராமிபட்டர். மயில்

அழகான பறவை. பச்சை நிறமும், மென்மையும், அழகிய நடையும் உடையது. அழகன் முருகனின் வாகனமல்லவா ! மலையின்மேல் மயில் வளர்வது இயல்பு. அதுபோல, பார்வதி பச்சை நிறத்துடன், மெல்லியலாய், மெத்தென்ற நடையை உடையவள். அவள் இமயத்து மயில்.

அன்னை அபிராமி திரிபுர சுந்தரியாக, ஸ்ரீ இராஜ ராஜேசுவரியாக ஸ்ரீபுரத்தில், கடம்பவனக் காட்டின் நடுவில் சிந்தாமணிக்ரஹத்திலிருந்து சற்று இறங்கி பூவுலகத்தின் இமயமலையில் பார்வதியாக அவதாரம் செய்தாள். இதோடு நிற்கவில்லை. யாவரும் காணும்படியாக வானில் சூரியனாக ஒளிர்விடுகிறாள். ஒளிதருகின்ற சுடர்கள் யாவுமே அவளுடைய திருவுருவங்களே.

275. பானு மண்டல மத்யஸ்த்தா - சூரிய மண்டலத்தின் நடுவில் இருப்பவள். 'உதிக்கின்ற செங்கதிர்...' என்று தானே அபிராமி அந்தாதியை ஆரம்பிக்கிறார் அபிராமிபட்டர். சூர்ய மண்டலத்தில் தெரியும் ஹிரண்மயனான புருஷன் பரமேச்வரன் என்று கூறுகிறது 'ய ஏஷோ அந்தராதித்யே ஹிரமண்ய : புருஷோ ருத்ராதே'. அதே மூர்த்தியை தேவியாகக் கூறுகிறது இந்த நாமம். அனாஹத சக்ரத்தை பானுமண்டலம் என்று சொல்வதுண்டு. அதில் உறையும் குண்டலினீ வடிவானவள்.

404. பக்த ஹார்த தமோபேத பானுமத்பானு ஸந்ததி :-

பக்தர்களின் இதயத்தில் இருக்கும் இருளைப் போக்கும் சூரிய கிரணங்களின் (கதிர்கள், சுடர்கள்) வரிசையாக இருப்பவள். பானு - என்றால் கிரணம். பானுமான் - என்றால் சூரியன். பக்தர்களின் மனதை சூழ்ந்திருக்கும் அஞ்ஞானம் இருட்டென்றும் அதை அம்பாள் போக்குவதால் ஸூர்யனுக்கு ஒப்பாகவும் கூறப்படுகிறது.

முன்னும், 'சூழும் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்றதே' என்றார் அபிராமிபட்டர். (47)

அதோ ! வந்து விட்டாள் ! அன்னை அபிராமி ! அன்பர்களின் இதய கமலத்தை இருப்பிடமாகக் கொள்ள ! என்னே !

அன்னையின் கருணை ! எப்படி வந்தாள் ? பெண் அன்னம் போல மெதுவான, நளினமான நடையுடன் வந்தாள் எங்கள் அன்னை. எங்கோ பறக்கும் அன்னம் தனக்குரிய இடத்தைக் கண்டுபிடித்து களிப்புடன் வீற்றிருப்பதைப் போல, அன்னை அபிராமி, மிக உயர்ந்த இடத்திலிருந்து, படிப்படியாக இறங்கி, பக்தர்களின் இதய கமலத்தில், அவர்கள் வருந்தாவகையில், அன்னம் போல வந்து அமருகிறாள். (தானே வலிய வந்து என்றார் அன்னையின் அன்பர் அபிராமிபட்டர்.)

காட்டில் குயில், மலையில் மயில், வானில் சூர்யன், கமலத்தில் அன்னம். இவ்வாறு அபிராமிபட்டர் சொல்நயமும், பொருள் வளமும் கொண்டு பாடியது அவர் அன்னை அபிராமியால் ஆட்கொண்ட அன்பர் என்று புரிகிறதல்லவா !

47 மராளீ மந்தகமனா - பெண் அன்னம் போல மெதுவான, அழகிய, லலிதமான நடையை உடையவள்.

இதே கருத்து ஸௌந்தர்ய லஹரீ (ஸ்லோகம் 91) - ''பதந்யாஸ க்ரீடாபரிசய..'' அழகாகச் சொல்லுகிறது. அம்பாளின் அரண்மனையில் வசிக்கும் அன்னப்பறவைகள், அவருடைய நடையைப் பார்த்து அவ்வாறே நடக்கப் பழகுகின்றன. தேவியின் பாதரஸங்களின் மென்மையான ஒலி அவைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பது போல் அமைகின்றது.

372. பக்தமானஸ ஹம்ஸிகா - பக்தர்களின் மனமாகிய ஏரியில் அன்னப் பறவை போல் விளங்குபவள். (ஒ.ஸௌ.ல. 38. ''ஸமுன்மீலத்'')

ஸ்ருஷ்டி கர்த்தாவான ப்ரஹ்மா தன் மனத்தால் ஓர் ஏரியை நிர்மாணித்தார். அது கைலாஸ மலையின் உச்சியில் இருக்கிறது. அதன் நீர் மிகவும் தூய்மையானது. எப்பொழுதும் தூய்மையையே விரும்பும் அன்னப்பறவைகள் (கணக்கிடலங்கா) அங்கு வசிக்கின்றன. அவை எங்கு சென்றாலும், மழைக் காலத்தில் அந்த ஏரிக்கே திரும்பி வந்து விடுகின்றன என்று வர்ணிக்கப் பட்டிருக்கிறது.

பக்தர்களுடைய தூய்மையான மனதை இந்த ஏரியாகக்

கற்பனை செய்து, அம்பாளை அதில் விளங்கும் அன்னப் பறவையாகச் சொல்கிறார்கள் இந்த நாமாவில். (மனதால் நிர்மாணிக்கப்பட்டதால்) 'மானஸ ஸரோவர்' என்று கூறப்படுகிறது.

816. முனி - மானஸ - ஹம்ஸிகா - (சிறந்த) முனிகளுடைய மனதாகிய ஸரஸில் (ஓடையில்) அன்னப்பறவை போல ஸஞ்சரிப்பவள்.

இந்த நாமாவையே, முனி - மான - ஸஹம்ஸிகா என்ற விதமாகப் பிரித்து பொருள் சொல்லலாம்.

அதாவது முனீஸ்வரர்கள் செய்யும் மரியாதை, பஹுமானம் இவைகளால் சந்தோஷமடைந்து, ஹம்ஸகம் = கஜ்ஜை (சதங்கை - பாத கொலுஸு) அணிந்த நர்த்தகீ (நடனமாடுபவள்) போல் ந்ருத்யம் செய்பவள். அதாவது தன் பக்தர்களான முனீஸ்வரர்களை சந்தோஷம் அடையச்செய்து, அதன்மூலம் தான் சந்தோஷம் அடைகிறாள் என்று கருத்து.

பரத்துவம் :- யாவருக்கும் புலனாகாமல் எங்கோ இருக்கும் ஸ்ரீபுரத்தில், எல்லா மூர்த்திகளுக்கும் தலைவியாக, எல்லாத் தொழில்களுக்கும் காரணபூதையாக, ஸ்ரீ இராஜராஜேசுவரி எழுந்தருளியிருக்கிறாள்.

விபவத்துவம் :- தேவர்கள் வேண்டுகோளுக்கு இணங்கி ஒரு குமாரனைத் தோற்றுவிக்கத்தானே இமாசலராஜன் குமாரியாகத் தோன்றினாள். (5. தேவகார்ய ஸமுத்யதா - தேவர்களின் பணிக்காக முனைந்தவள்.)

பிராகிருத சம்பந்தி :- உலகத்தவருக்கு அநுக்கிரகம் செய்ய சூரியனாக எழுந்தருளி நலம் செய்கிறாள். அவள் லீலையைச் சொல்கிறது.

966. லீலா விநோதினீ - லீலைகளால் சந்தோஷமடைகிறவள்.

965. பாலா - பாலா த்ரிபுரஸுந்தரியாக, குமாரியாக இருப்பவள். சிறுமி போல லீலையில் (விளையாட்டில்) ஆசைப்படுவதால் அம்பிகைக்கு 'பாலா' என்ற பெயர்.

அந்தர்யாமித்துவம் :- உபாஸகர்களின் உள்ளக்கமலத்தில்

உறைபவள். 870. அந்தர்முக ஸமாராத்யா - உள்நோக்கு உள்ளவர்களால் நன்கு ஆராதிக்கக் கூடியவள்.

595. ஹ்ருதயஸ்தா - ஹ்ருதயத்தில் இருப்பவள். ஹ்ருதயத்தில் த்யானம் செய்யப்படுபவளாக இருப்பவள்.

303. ஹ்ருத்யா :- பக்தர்களுடைய (முனீஸ்வரர் களுடைய) ஹ்ருதயங்களில் இருப்பவள். மனதிற்கு இதமானவள், ரமணீய மானவள்.

அம்பாளைக் குயிலாகவும், மயிலாகவும், இளம் வெயிலாகவும், அன்னமாகவும் சொன்னது என்னவெனில் குயிலில் நாதமும், மயிலில் பிரணவாகார உருவமும், வெயிலில் பிரகாசமும் இருப்பதோடு கமலம் என்று சொல்லப்பட்ட மூலாதார கமலத்திலே - 'ஹம்ஸ' என்ற அஜபா மந்திரமாகவும் இருக்கிறாள் என்பதாம்.

குயில் - கருநிறமும், மயில் பச்சை நிறமும், வெயில் சிவப்பு நிறமும், அன்னம் - வெண் நிறமும் என்பதை

529. ஸர்வ வர்ணோபசோபிதா - எல்லா வர்ணங்களுடனும் ப்ரகாசிக்கிறவள் என்பதை நினைவூட்டுகிறது.

இந்த பாட்டின் திரண்ட கருத்து - அம்பாள் முதலில் நாதவடிவமாய் இருந்து, பிரணவமாக மாறி சூரியன் போல் பிரகாசித்து அஜபா மந்த்ரமாகவும் இருக்கிறாள் என்பது.

அவள் இருக்கும் இடங்கள் கடம்பாடவி, இமயமலை, ஆகாயம், கமலம்.

294. புவனேச்வரீ :- பதினான்கு புவனங்களுக்கும் ஈச்வரியாக இருப்பவள். புவனம் - பூமி, ஸ்வர்கம், ஜலம் என்ற பலபொருள்களும் உண்டு. இவை எல்லாவற்றிற்கும் தலைவி ஆனவள். 'ஹ்ரீம்' என்னும் மாயா பீஜத்திற்கு புவனேச்வரீ பீஜம் என்று பெயர். அதற்கு தேவதையானவள்.

'ஹ' - ஆகாசத்தையும், 'ர' - நெருப்பையும், 'ஈ' - ஜலத்தையும் குறிப்பது. இவற்றைப் படைத்து உலகத்தை தோற்றுவித்தாள் என்பதால் புவனேச்வரீ.

அபிராமிபட்டர், முன்னும், 'பூத்தவளே ! புவனம் பதினான்கையும் பூத்தவண்ணம் காத்தவளே....' என்றார்.

**100. அன்னை எப்போதும் இருப்பது அபிராமிபட்டரின் நெஞ்சில்.**

*குழையத் தழுவிய கொன்றையந்தார் கமழ் கொங்கைவல்லி*
*கழையைப் பொருத திருநெடுந்தோளும் கருப்பு வில்லும்*
*விழையப் பொரு திறல் வேரியம் பாணமும் வெண்ணகையும்*
*உழையைப் பொரு கண்ணும் நெஞ்சில் எப்போதும் உதிக்கின்றவே.*

**(அம்பிகையின் சொரூபத்தை எப்போதும் அகத்தே காண)**

| | |
|---|---|
| குழையத் தழுவிய | அன்று சிவபெருமான் குழையும்படி தன் திருக்கரங்களால் இறுக அணைத்து கொண்டதால் |
| கொன்றையந்தார் கமழ் | இறைவனுடைய கொன்றை |
| கொங்கை வல்லி | மாலை உராய்ந்து அதன் மணத்தைக் கொண்ட தனபாரங்களை உடைய கொடி போன்ற அபிராம வல்லியின் |
| கழையைப் பொருத | மூங்கிலை வென்ற |
| திருநெடுந்தோளும் | அழகிய நீண்ட தோள்களும் |
| விழையப் பொரு திறல் | அன்னையிடம் பொருந்துதற்கு விருப்பத்தை உண்டாக்க வல்லமை வாய்ந்த |
| வேரியம் பாணம் | தேனையுடைய அழகிய மணம் கமழும் புஷ்ப பாணங்களும் |
| வெண்ணகையும் | வெண்மையான புன்முறுவலும் |
| உழையைப் பொரு | மான் கண்ணை ஒத்த |
| கண்ணும் | கண்களும் |
| நெஞ்சிலே | என் உள்ளத்திலே |
| எப்போதும் | எக்காலத்தும் |
| உதிக்கின்றவே | தோன்றியிருக் கொண்டே இருக்கிறது. |

அம்பிகை சிவபெருமானைக் குழையத் தழுவினதால் அவர் சாத்தியிருந்த கொன்றை மாலையின் நறுமணத்தைத் தன் தனங்களில் கொண்ட அபிராம வல்லியின் மூங்கிலைப் பழிக்கும் நீண்ட தோள்களும், கரும்பு வில்லும், அன்னையுடன் பொருந்துதற்கு விருப்பத்தை உண்டாக்கும் தேன் சிந்தும் மணம் கமழும் புஷ்பபாணங்களும், வெண்முத்துக்கள் போன்ற பற்கள் சற்றுத் தெரியும்படி புன்னகை புரியும் வதனமும், அவ்வதனத்தில், மான் கண்ணை ஒத்த கண்களும் எக்காலத்திலும் என் நெஞ்சில் தோன்றிக் கொண்டேயிருக்கின்றது.

இது அபிராமி அந்தாதியின் 100-வது பாடல். இத்துடன் அபிராமி அந்தாதி நிறைவு பெறுகிறது. 'உதிக்கின்ற' என்று முதல் பாடலை ஆரம்பித்து 'உதிக்கின்றவே' என்னும் சொல்லோடு 'மண்டலியாக' முடிக்கிறார்.

அன்னை அபிராமி தன் தலை சிறந்த பக்தரான அபிராமிபட்டர் வாயிலாக இம்மண்ணுலகில் வாழ்வோருக்கு அருளிய அரிய பிரசாதம், பொக்கிஷம் இது என்று சொல்லவும் வேண்டுமோ ? !

முக்கியமாக வடமொழி சிறிதும் தெரியாத தமிழர்களுக்கு, ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம், ஸௌந்தர்ய லஹரீ இவற்றின் சாராம்சமாக விளங்குகிறது 'அபிராமி அந்தாதி'. காஞ்சிப் பெரியவர், 'அபிராமி அந்தாதி பாராயணம் செய்வோர்க்கு வேறு எதுவும் தேவை யில்லை,' என்று சொல்லியதை இங்கு நினைவுபடுத்துகிறோம்.

அபிராமி அந்தாதியை எப்போதும், எங்கும், எந்நிலையிலும் சொல்வோருக்கு 'மறுபிறவி' இல்லை என்று சொல்லவும் வேண்டுமோ ? !

அந்தாதி இலக்கணம் :- ஒரு பாட்டின் ஈற்றிலுள்ள எழுத்தோ, சொல்லோ, சீரோ, அசையோ அடுத்த பாட்டின் தொடக்கமாக அமைவது.

மண்டலித்தல் :- அந்தாதியின் முதற்பாட்டின் முதலும், இறுதிப்பாட்டின் இறுதியும் ஒன்றாக வருவது. இறுதியையும் முதலையும் இணைத்தால் இந்தப் பாமாலை வட்ட மாலையாகத் தோன்றும். இதைத் தான் 'மண்டலித்தல்' என்று சொல்வர்.

மேலும் 'உதிக்கின்ற செங்கதிர்' - என்று சூர்யனை (அதாவது அன்னை அபிராமியை மனதிற்கொண்டு) சொல்லி ஆரம்பிக்கிறார்.

முத்துப் போன்ற பற்கள் சிறிதே வெளியில் தோன்றச் சிரிக்கும் மகளிரின் முறுவலை, 'வெண்ணகை' என்பர். மாணிக்க வாசகர் 'முத்தன்ன வெண்ணகையாய்' (திருவெம்பாவை), அப்பர் 'தவளவெண்நகையாள்' (தேவாரம்) என்பர்.

நிறைவு பெறும் இப்பாடலில் 'வெண் நகையும்' - என்று சந்திரனை (அன்னை அபிராமியை மனதிற் கொண்டு) சொல்லி

நிறைவு பெறச் செய்கிறார்.

என்ன அழகு ! என்ன அற்புதம் ! ஈடு , இணையற்ற தோத்திர நூல் இது !

'அபிராமி அந்தாதி' - ஏற்பட்டதற்கு மூல காரணம் பௌர்ணமியாகிய சந்திர மண்டலம் என்று சொல்லலாமல்லவா !

காலையில் கதிரவனாக எழுந்து அருளி, உலகத்தின் இருளையும், அதில் உறைவோர்களின் மனத்தே உள்ள இருளையும் அகற்றி, இரவில் சந்திரனாகக் காட்சி தந்து குளிர்ந்த சுகத்தை புறத்திற்கும், அகத்திற்கும் அளிக்கும் அன்னை அபிராமியின் 'கருணையை' அளவிட முடியுமோ ? ஸஹஸ்ராரம் என்பது சந்திர மண்டலந்தானே !

சந்திர மண்டலமே - ஸ்ரீ சக்ரம் என்பது ரஹசியம்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் சூர்ய, சந்திரர்களை - ஸ்ரீ லலிதாம்பிகையின் கண்களாகவும், ஸ்தனபாரங்களாகவும், தாடங்களாகவும் வர்ணிக்கிறது.

மன்மதபாணம் - இச்சையை உண்டாக்கும்.

தேவியின் மலர் அம்புகள். இச்சையை உடைக்கும்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் அம்பாளின் கண்களின் அழகை பலவிதமாக வர்ணிக்கின்றது.

18. வக்த்ர லக்ஷ்மீ பரிவாஹசலன் மீனாபலோசனா - முகத்தின் அழகாகிய வெள்ளத்தில் ஓடும் மீன்களை யொத்த கண்களையுடையவள். தேவியின் கண்கள் பக்தர்களைக் கனிவுடன் பார்ப்பதாலேயே அவர்களை உய்விக்கின்றன. இதனால் அவளுக்கு மீனாக்ஷி (இங்கு மீனாபலோசனா) என்ற பெயர். (மதுரை)

62. காமாக்ஷீ - அழகான கண்களையுடையவள். கா-ஸரஸ்வதீ, மா-லக்ஷ்மீ. இவர்களைக் கண்களாய்க் கொண்டவள். (காஞ்சிபுரம்)

936. விசாலாக்ஷீ - விசாலமான, நீண்ட கண்களை உள்ளவள். காதுவரை நீண்ட கண்கள் அழகானவை எனப்படும். (வாராணஸி)

த்ரிசதியில் (7) - கமலாக்ஷீ - மலர்ந்த தாமரைப் பூவின் இதழ் போன்ற கண்களை உடையவள். கடைக்கண் பார்வையால் அருள், பொருள் இரண்டும் தருபவள்.

த்ரிசதியில் (103) - 'ஹரிணேக்ஷணா' - மான் விழியாள் .

247. பத்மநயனா - தாமரை போன்ற கண்களையுடையவள்.

308. ராஜீவலோசனா - மான், மீன், தாமரஸ புஷ்பம் போன்ற கண்களையுடையவள்.

332. வாம நயனா - அழகான கண்களையுடையவள். வாமம் - அழகு, நயனம் - கண் 561. ம்ருகாக்ஷீ - மான் விழியாள். மானின் கண்கள் ஓரிடத்தில் நிலைத்து நிற்காது. அதுபோலவே அம்பாளின் கண்களும், 'தன் கனிவுடன் கூடிய க்ருபை' எல்லா பக்தர்கள் மேலும் விழட்டும் என்று அலைந்து கொண்டிருக்கின்றன. 601. தராந்தோளித தீர்காக்ஷீ - சிறிது சலிக்கும் காது வரை நீண்ட கண்களை உடையவள். தேவியின் கண்களுக்கு தீர்க்கமான பார்வையுண்டு. (பக்தர்களை ரட்சிப்பதற்காக).

805. புஷ்கரேக்ஷணா - தாமரை போன்ற கண்களை உடையவள். புஷ்கர - ஜலம், உலகங்களை மூழ்க வைத்த ஜலம். உலகைத் தோற்றுவிப்பதற்காக அதனிடத்தில் (ஈக்ஷணா) கண் பார்வை உள்ளவள்.

ஶ்ருதியில்,

''தானி வா ஏதானி சத்வார்யம் பாம்ஸி

தேவாமனுஷ்யா : பிதரோ ஸுரா : ॥''

காஞ்சிபுரத்தில் அன்னை அபிராமி காமாக்ஷியாக ஏகாம்பர நாதரை ஆலிங்கனம் செய்த போது, இறைவன் அணிந்த 'கொன்றை' மாலை, அன்னையின் நகில்களில் பட்டு குழைந்ததாம். அந்த நறுமணமும் நகில்கள் மேல் சேர்ந்து விளங்க, அன்னை இரு கனிகளைக் கொண்ட கொடி போலக் காட்சி தருகிறாள்.

'முகை வாய்த்த முலைபாயக் குழைந்த நின் தார்' - கலித்தொகை. (68.14)

34. நாப்யாலவால ரோமாலி லதா பலகுசத்வயீ -

தொப்புளாகிற பாத்தியிலிருந்து கிளம்பிய உரோம வரிசையான கொடியில் பழங்கள் போல் தோன்றுகிற இரு ஸ்தனங்களை உடையவள்.

காப்புச் செய்யுளில், 'தாரமர் கொன்றையும்' என்று ஆரம்பித்த அபிராமிபட்டர், 100-வது (நிறைவுபெறும்) பாடலிலும் அதை நினைவு கொண்டு கொன்றையந்தார் என்பது அருமை ! கொன்றைப் பூ - பிரணவத்தைக் குறிக்கும். சிவபெருமான் அணைத்ததனாலே அம்பிகையின் நகில்களில் அந்த கொன்றை மாலையின் மணம் வீசுகிறதாம்.

தேவியின் திருத்தோள்கள், மூங்கிலின் வழுவழுப்பை விட மிக சன்னமானது. அம்பிகை துர்க்கையாகப் பச்சை வண்ணத்தோடு இருக்கும் போது வடிவாலும் வண்ணத்தாலும் அவள் தோள்கள் மூங்கிலைப் போல் இருக்கும்.

*'அளவே வடிவொப்ப தன்றியே பச்சை*
*இளவேய் நிறத்தாலும் ஒக்கும் - துளவேய்*
*கலைக்குமரி போர் துளக்கும் கார் அவுணர் வீரம்*
*தொலைக்கும் அரி ஏறுகைப்பாள் தோள்.' - பழம் செய்யுள்.*

அன்னை அபிராமியை உபாஸிப்பவர்கள் மூன்று கரணங்களாலும் அவளை வழிபடுவார்கள். புறக்கண்களிலே அன்னையின் திருவுருவத்தைக் கண்டு, கண்டு களிப்பதோடு நில்லாமல், அந்த உருவத்தை உள்ளத்தே வைத்து தியானித்து இன்புறுவார்கள். இவ்வாறு பல காலம் அவர்கள் தவறாது, இடைவிடாது தியானம் செய்து பழகியதால் அன்னையின் திருவுருவம், சலனமின்றி, அலையில்லாத தண்ணீரில் கீழே உள்ள பொருள்களை காணுவது போல, தெளிவாகத்தெரியும்.

நாமும் அவ்வாறு நீண்ட நாட்கள், மேற்சொன்ன முறையில் 'தியான அப்பியாசம்' பழக வேண்டும். திருக்கோயில்களுக்குச் சென்று நம் கண்களால் அன்னையின் திருக்கோலத்தை தரிசனம் செய்து, வாயாரப் புகழ்ந்து, அவள் திருநாமங்களைச் சொல்லி, கையால் தொழுது பின் நம் காயத்தால் (உடலால்) நமஸ்காரம் செய்யவேண்டும். அக்கோயில்களிலிருந்து அவரவர் வீட்டிற்குத் திரும்பும்போது, அன்னையின் அந்தத் திருக்கோலத்தை

உள்ளத்திலே பதிய வைக்கவேண்டும். வீடு திரும்பிய பின், அன்னையின் அந்தத் திருஉருவத்தை அப்படியே மனதில் வைத்து தியானம் செய்யவேண்டும்.

'சின்னஞ்சிறிய மருங்கினில்....கண் மூன்றும் கருத்தினில் வைத்துத் தன்னந்தனியிருப்பார்க்கு இது போலும் தவமில்லையே' (53) என்று அபிராமிபட்டர் சொன்னார் அல்லவா ! அது போல நாமும் 'தவத்தை' மேற்கொள்ள வேண்டும். இவ்வாறு பழகிக்கொண்டே வந்தால் நிச்சயமாக, கொஞ்ச காலம் கழித்து நாம் எந்நிலையிலும், எந்நேரத்திலும், அன்னை அபிராமியின் திருவுருவத்தை புறக்கண், அகக்கண் இரண்டிலும் காணும் பேறு பெறலாம். அன்னை அபிராமி அன்பர்களின் அன்பிற்காக ஏங்குகிறாள் என்றே சொல்லலாம்.

அபிராமிபட்டர் முன் செய்த புண்ணியத்தினாலும், இப்பிறவியில் இடைவிடாது செய்த பயிற்சியினாலும் அந்த நிலையை அடைந்தவர். நனவிற் கனவு போல, விழித்திருக்கும் நிலையிலேயே கண்ணை மூடியவுடன் அன்னை அபிராமியைத் தரிசிக்கும் பக்குவம் பெற்றவர். அதனால் தான் மன்னன் சரபோஜி வந்ததும் தெரியாது, சென்றதும் தெரியாது அவருக்கு ! நம் மண்ணின் தவப்புதல்வர் அவர். சிறந்த அநுபூதிமான்.

ஸ்ரீ இராஜராஜேச்வரி தர்பாரில் எட்டு வாக்தேவதைகள் (வசினீயைத் தலைவியாக கொண்டு), அம்பாளின் ஆணையின் பேரில், ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் அரங்கேறியது போல, அன்னை அபிராமியும் அபிராமிபட்டர் மேல்கொண்ட அன்பினாலும், ப்ரியத்தினாலும், கருணையினாலும் அவர் வாயிலாக அபிராமி அந்தாதியை இம்மண்ணுலகில் அரங்கேறச் செய்தாள் என்று சொல்வதில் எந்தத் தவறும் இல்லையே ! ('உலகுக்கு அபிராமி என்னும் அருமருந்தே !' என்றார் அல்லவா !)

சகுண உபாஸனையிலிருந்தே நிற்குண உபாஸனைக்குச் செல்ல வேண்டும் என்பதே நம் சமயத்தின் கொள்கை. விக்ரஹ ஆராதனை ஒரு படியேயன்றி முடிந்த முடிவல்ல. தியானத்தின் பெருமை பற்றி கிருஷ்ண யஜுர் வேதம், 'மலையளவு பாபம் அநேக யோஜனை விஸ்தீரணமாய் இருந்தாலும் தியான

யோகத்தால் பிளக்கப்படும். ஒரு பொழுதும் வேறு வழியால் அழிக்கப்படுவதன்று' என்று கூறுகிறது.

நெஞ்சில் எப்போதும் உதிக்கின்றவே

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் 'ஸதோதிதா' (920) என்று அழகாகச் சொல்லுகிறது. அதாவது, (ஒருபொழுதும் அஸ்தமிக்காமல்) எப்போதும் உதயமாகியிருப்பவள். நல்லவர்களின் மனதில் எப்போதும் பிரகாசிப்பவள்.

''நவை தத்ர ந நிம்லோசநோதியாய கதாசன'' (சா. உப. 3.11.2)

பொருள் : எப்போதும் உதயம் இல்லாமல் இல்லாதிருப்பவள்.

அன்னை அபிராமி கருணையே வடிவானவள். கண்கள் கருத்தின் ஜன்னல்கள். அம்பிகையின் உள்ளத்தே பொங்கும் அருள் வெள்ளத்தின் கால்வாய்கள். அன்னையின் கடைக்கண் பார்வையே 'நல்லன எல்லாம் தரும்' என்று சொன்னார் அல்லவா !

அபிராமி அந்தாதியை நிறைவு பெறச் செய்யும் இறுதிப்பாடலில் இறுதியாக 'உழையைப் பொருகண்ணும் நெஞ்சில் எப்போதும் உதிக்கின்றவே' - என்பது மிக அற்புதம் !

## நூற்பயன்

*ஆத்தாளை எங்கள் அபிராம வல்லியை அண்டம் எல்லாம்*
*பூத்தாளை மாதுளம்பூ நிறத்தாளைப் புவியடங்கக்*
*காத்தாளை அங்குச பாசம் குசுமம் கரும்பும் அங்கை*
*சேர்த்தாளை முக்கண்ணியைத் தொழுவார்க்கு ஒரு தீங்கில்லையே.*

| | |
|---|---|
| ஆத்தாளை | யாவற்றினிக்கும் அன்னையானவளை |
| எங்கள் அபிராம வல்லியை | எங்களுக்கு உரிய தெய்வமாகிய அபிராம வல்லியை |
| அண்டம் எல்லாம் | உலகங்கள் எல்லாவற்றையும் |
| பூத்தாளை | தோற்றுவித்தவளை |
| மாதுளம் பூ நிறத்தாளை | மாதுளம் பூவைப் போன்ற சிவந்த நிறம் உடையவளை |
| புவி அடங்கக் | உலகம் முழுவதும் (தன் கட்டளைக்கு அடங்கும் படி) |
| காத்தாளை | பாதுகாப்பவளை |
| அங்குச பாசம் | அங்குசம், பாசம், |
| குசுமம் கரும்பும் | மலர் அம்புகள், கரும்பு வில் |
| அங்கை சேர்த்தாளை | ஆகியவற்றை அழகிய திருக்கரங்களில் ஏந்தியவளை |
| முக்கண்ணியைத் | மூன்று கண்கள் உடையவளை |
| தொழுவார்க்கு | வழிபடுகிறவர்களுக்கு |
| ஒரு தீங்கில்லையே | ஒரு வகையான தீங்கும் இல்லை. |

சகல உலகங்களுக்கும், எல்லா உயிர்களுக்கும் தாயானவளே ! எங்கள் எல்லோருக்கும் உரிய தெய்வமாகிய அபிராம வல்லியை, உலகங்கள் எல்லாவற்றையும் படைத்தவளை, மாதுளம்பூவைப் போன்ற சிவந்த நிறம் உடையவளை, உலகங்கள் எல்லாவற்றையும் பாதுகாப்பவளை, அங்குசம், பாசம், மலரம்புகள், கரும்பு வில் ஆகியவற்றை அழகிய திருக்கரங்களில் ஏந்தியவளை, மூன்று கண்கள் உடையவளை, வழிபடுபவர்களுக்கு ஒரு வகையான தீங்கும் இல்லை.

ஒரு நூல் தொடங்கு முன், 'காப்புச் செய்யுளும், முடிவு பெற்ற பின், நூற்பயன்' பாடுவதும் ஒரு மரபு. வடமொழியில் நூற்பயனை - பலச்ருதி என்று கூறுவார்கள்.

எளியோர் முதல் பெரியோர் உள்பட எல்லோரையும் மனதிற்

கொண்டு 'ஆத்தாளை' என்று இந்தப் பாடலை ஆரம்பிக்கிறார் அபிராமிபட்டர். அபிராமி அந்தாதி முழுவதும் தன்னை ரொம்பவும் தாழ்த்திச் சொன்னவர் அல்லவா ! (சிறியேன், அறிவிலன், பேயேன், வினையேன், நாயேன்... என்றவாறு) அதைத் தொடர்ந்து, இந்த பாடலிலும் நாட்டுப்புற மக்களைப் போன்று, அவர்களுக்கும் அன்னை அருள் புரியவேண்டும் என்ற நல்ல நோக்கத்துடனும், 'ஆத்தாளை' - என்று சொல்வது சாலப்பொருந்தும். கிராமங்களில், 'மாரி ஆத்தா', 'காளி ஆத்தா' என்று அன்னையை வணங்குவது காலங் காலமாக வரும் பழக்கம்.

ஆத்தாளை - அகத்தில் இருப்பவள். எல்லா ஜீவராசிகளின் (ப்ரம்மா முதல் நுண்ணிய கிருமி வரை) உள்ளங்களில் இருப்பவள். தாயுமானவரும், "தத்தம் தெய்வம் என்று எல்லோரும் போற்றித் துதிக்கப்படுபவள்." - என்கிறார்.

"யா ப்ரஹ்மாதி பீபிலி காந்த தனுஷீ
ப்ரோதா ஜகத் சாட்சிணீ" - மனீஷா பஞ்சகம்

அதாவது, தான் தோன்றாமல், எல்லாவற்றிலும் தோன்றியவளாய், அவ்வாறு தோன்றிய எல்லாவற்றிற்கும் சாட்சியாய் இருப்பவள்.

புவி அடங்கக் காத்தாளை : அன்னையின் ஆட்சியில் எல்லாம் அவளுக்கு அடங்கி, எங்கும் சமாதானம், அமைதி நிலவும்.

முக்கண்ணி : சந்திரன், சூர்யன், அக்னி - அன்னைக்கு மூன்று கண்களாக விளங்குவது. இதனையே "ஸோமசூர்யாக்னீ" என்பர். சந்திரனும், சூரியனும் குளிர்ச்சியாலும், உஷ்ணத்தினாலும் ஜீவராசிகளின் சீதோஷ்ண நிலையை சீராக்குகின்றனர். அக்னியும் எல்லாவற்றையும் எரித்து நம்மைக் காக்கிறது. இதையெல்லாம் பிரம்மா ஒரு "நடுவர்" போல கவனித்து, புவனங்களின் ஜனத்தொகை (86,000 கோடி) கணக்கைக் காப்பாற்றுகிறார்.

819. ஸர்வாந்தர்யாமினீ : எல்லா ஜீவராசிகளிடத்தும் அந்தர்யாமியாக (உள்ளே) இருப்பவள் - "ஏஷ த ஆத்மா அந்தர்யாம்ய ம்ருத :" (ப்ரு.உப.3.7.4)

ஆத்தாளை - அன்னையை - அம்மாவை என்று அவர்

சொல்லுவது, ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தை நம் மனதில் கொண்டு வருகிறது. அதில் ஆரம்ப நாமாவாக, இருப்பது - ஸ்ரீ மாதா - அதாவது சிறப்பு மிக்க அன்னை.

அபிராமிபட்டர் ஒரு சிறந்த தேவி உபாஸகர். ஒரு சிறந்த ஸ்ரீ வித்யா உபாஸகர். அவர் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் தவறாது பாராயணம் செய்து வந்தவர்.

அன்னை அபிராமவல்லியை பலவிதமான வடிவங்களிலும் தன் அகக்கண்களில் கண்டவர். ஸ்ரீ லலிதாம்பிகையாகவும், ஸ்ரீராஜராஜேச்வரியாகவும் ஸ்ரீ மஹாத்ரிபுரஸுந்தரியாகவும், உமாதேவியாகவும் மற்ற எண்ணற்ற வடிவங்களிலும் நினைத்து, நினைத்து உருகினவர்.

இப்பாட்டின் சிறப்பு அம்சம் ஆத்தாளை, பூத்தாளை, நிறத்தாளை, காத்தாளை,சேர்த்தாளை என்ற ஐந்து சொற்களில் 'தாள்' என்ற சொல் வருகிறது. தாள் - திருவடியைக் குறிக்கும். அபிராமிபட்டர் தலைசிறந்த அடியார் என்பதற்கு இதைவிட வேறு என்ன சான்று வேண்டும். தாளின் நினைவிலேயே அவர் நிற்கிறார்.

| | | |
|---|---|---|
| ஆத்தாளை | – | ஈரேழு புவனங்களின் தாய் |
| பூத்தாளை | – | மென்மையான மலர்போன்ற தாள்களை உடையவள் |
| நிறத்தாளை | – | கருணையின் நிறமான சிவந்த தாள்களை உடையவள் |
| காத்தாளை | – | பற்றியவரைக் காக்கும் தாள்கள் உடையவள் |
| சேர்த்தாளை | – | அவ்வாறு காத்த தன் பக்தர்களை, கருணையால் தன்னுடன் ஒன்றிச் சேர்க்கும் (தாதாம்மியம்) தாள்கள் உடையவள். |

'கண்ணியது உன் புகழ், கற்பது உன் நாமம், கசிந்து பத்தி பண்ணியது உன் இரு பாதாம் புயத்தில் பகல் இரவா நண்ணியது உன்னை நயந்தோர் அவையத்து, நான் முன் செய்த புண்ணியம் ஏது ! என் அம்மே ! புவி ஏழையும் பூத்தவளே !' என்று சொன்னார் அல்லவா ! (ஒப்பம் ஸௌ.ல. 1. ''சிவ:சக்தியா..'')

முற்பிறவியில் புண்ணியம் செய்ததால், இப்பிறவியில் 'ஸத்சங்கம்' கிடைக்கப் பெற்று, அதனால் அன்னை அபிராமியின் திருவடித் தாமரைகளை பக்தியுடன் பணியும் பழக்கம் ஏற்பட்டு, அவளுடைய திருநாமங்களை தினமும் தவறாது பாராயணம் செய்து, அதன் பின்பு அவள் புகழையே எண்ணி 'சமாதி நிலை' அடைந்த, பெரும் பேறு எய்திய அநுபூதிமான் அபிராமி பட்டர் !

'கற்பது உன் நாமம்' - என்று ஒருமையில் சொன்னார். இது சிந்திக்க வேண்டிய பெரிய விஷயம். இதற்கு, ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் பலச்ருதியில் அழகான, அருமையான விளக்கம் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் எல்லாவற்றையும் விட உயர்ந்ததாக பல வைஷ்ணவப் பெரியோர்கள் கூறுவர். விஷ்ணு நாமாக்கள் ஆயிரத்தை விட 'சிவநாமம்' ஒன்று உத்தமம். ஆயிரம் சிவ நாமங்களை விட 'தேவியின் ஒரு நாமம் ஒன்றே சிறந்தது.'

காஞ்சிப் பெரியவர் சொல்வார், 'அம்மா என்ற ஒரு வார்த்தை தெரிந்தால் போதும். அதில் உள்ள மூன்று எழுத்துக்களும் மாணிக்கம் போன்றவை. 'அம்மா, அம்மா' என்று வீட்டில் ஒவ்வொரு மூலையிலும் நின்று உரக்கக் கூவுங்கள்.' எல்லா உலகத்திற்கும் அன்னையாகிய அபிராமி, தானே வலிய வந்து அருள் புரிவாள். எவ்வளவு எளிய வழி இது !

ஆத்தாளை என்று அழைத்து, எங்கள் அபிராமவல்லியை என்று சொல்லும் அழகு வெகு பிரமாதம். ஒரு சேய் தன் தாயைப் புகழ்வதில் சலிப்படையாது. சொல்லச் சொல்ல அது சந்தோஷத்தில் பூரித்துப் போகும்.

எங்கள் தாய் 'யார் தெரியுமா ?' அவள் தான் அபிராம வல்லி என்னும் 'அபரிமிதமான அழகிய அன்னை' ! அவளுடைய புகழ் உங்களுக்குத் தெரியுமா ? 'அண்டமெல்லாம் பூத்தாளை' - அதாவது, உலகமெல்லாவற்றையும் ஈன்ற தாய். சர்வலோக ஜனனி. அண்டங்களையெல்லாம் தன்னிடம் தோற்றுவித்தவள். முன்னும், 'பூத்தவளே புவனம் பதினான்கையும்' என்றார்.

எல்லாவற்றையும் பெற்ற தாயானாலும் எப்போதும் இளமையாக இருப்பவள். முதல் பாடலில் 'மாதுளம் போது' என்றார்.

இங்கு மறுபடியும் 'மாதுளம் பூ நிறத்தாளை' என்று மறவாது சொல்லுவது அவர் அன்னையின் அழகை வர்ணிப்பதில் அலுக்காதவர்.

மாதுளம் போது என்றால் பூக்கும் தறுவாயில் இருப்பது. அந்தாதி பூர்ணமாகும்போது, அது பூத்துவிட்டது முழுமையாக ! என்னே அவர் கவித்திறன் !

560. தாடிமீ குஸுமப்ரபா - மாதுளை பூவின் காந்தியைப் போன்ற காந்தி உள்ளவள். மாதுளை வகையில், பூத்து காய்க்கும் வகை ஒன்று. பூக்கும்,காய்க்காது, இன்னொரு வகை. இந்த வகை மரத்தின் பூக்கள் மிகவும் சிவப்பாய் இருக்கும்.

358. தருணீ - எப்பொழுதும் யுவதியாக இருப்பவள்.

344. க்ஷயவ்ருத்தி வினிர்முக்தா - தேய்வு, வளர்ச்சி இல்லாதவள்.

264. ஸ்ருஷ்டி கர்த்ரீ - சிருஷ்டியைச் செய்பவள். படைத்தல் என்ற தொழில் ஈசுவரனுடைய ரஜோகுண ப்ரதானமான வடிவின் செயல். பரம் பொருளிலிருந்து பிரம்மா முதலிய வடிவுகளை வேறுபடுத்திக் காட்டுவது மாயை.

265. ப்ரஹ்மரூபா - ப்ரஹ்மாவின் வடிவமாயிருப்பவள். படைக்கும் தொழிலைச் செய்யும் ப்ரஹ்மா பரம்பொருளின் வடிவான தேவியின் மாயையினால் வேறுபடுத்திக் காட்டப்பட்ட உருவம்.

தொடர்ந்து, 'புவி அடங்கக் காத்தாளை' - என்றார். முன்னும், 'பூத்தவண்ணம் காத்தவளே' என்றார் !

266. கோப்த்ரீ - காத்தல் என்ற தொழிலைச் செய்கிறவள்.

படைக்கப்பட்ட ப்ரபஞ்சத்தை தேவி தன்னுடைய ஸ்தவகுண ப்ரதானமான வடிவினால் காக்கிறாள்.

267. கோவிந்தரூபிணீ - காத்தல் தொழிலைச் செய்யும் ஸத்வகுண மூர்த்தியான விஷ்ணுவும் தேவியே தான். கோவிந்தன் - விஷ்ணுவின் வடிவானவள்.

கோ - வாக்கு. அதனால் தெரிந்து கொள்ளப்படுபவர் கோவிந்தன். வாக்குக் கெட்டாத பரம்பொருள், காப்புத் தொழிலை

ஏற்றுக் கொண்டதனால், ஜீவனின் குரல் கேட்டு ஓடிவரும் கோவிந்தன்.

இதில் அபிராமிபட்டர் ஒரு சீரிய கருத்தை அழகாகச் சொல்லியுள்ளார். அதாவது, குழந்தைகளைப் பெற்றால் மட்டும் போதாது. அக்குழந்தைகளை நன்கு காக்கவேண்டும்.

இவ்வாறு தன், எழில்மிகு அன்னையைச் சொன்னவர், எளிய பாமர மக்களும் புரியும் வகையில் அன்னையின் திருக்கோலத்தை வர்ணிக்கிறார்.

அபிராமி அந்தாதியில், இரண்டு பாடல்களில் (2, 85) முன்னும் அன்னையின் நான்கு திருக்கரங்களைப் பற்றி சொன்னவர், இங்கு 'அங்குச பாசம் குசுமம் கரும்பும் அங்கை சேர்த்தாளை' - என்கிறார்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில்

7. சாதுர்பாஹு ஸமன்விதா - நான்கு கைகளுடன் கூடியவள். இரு தோள்களிருந்தும் முன்னும், பின்னுமாக பக்கத்திற்கு இரு கைகள். (இது ஒரு தியான வடிவம்) அச்வாரூடா, ஸம்பத்கரீ, மந்த்ரிணீ, வாராஹீ என்று நான்கு படைத்தலைவிகளாக அமைந்த தேவீகளே - அம்பாளின் நான்கு திருக்கரங்கள் என்று கொள்ளலாம்.

9. க்ரோதாகாராங்கு சோஜ்வலா - வலது பின் கையில் க்ரோதத்தின் உருவமான அங்குசத்தைத் தரிப்பதால் ஒளியடன் விளங்குபவள். அங்குசம் என்னும் ஆயுதம் ஆணவத்தின் வெளிப்பாடான க்ரோதத்தை அடக்குகிறது. இதற்கு அதிஷ்டான தேவதை - ஸம்பத்கரீ.

8.ராகஸ்வரூப பாசாட்யா - ஆசை வடிவான பாசம் என்னும் ஆயுதத்துடன் கூடியவள். (பாசம் - கயிறு). தேவியின் இடது பின் கையில் உள்ளது. இதற்கு அதிஷ்டான தேவதை - அச்வாரூடா.

11. பஞ்சதன்மாத்ர ஸாயகா - ஐந்து தன் மாத்ரைகளைப் பாணங்களாக உடையவள். தன் வலது கையில் (மேல் கையில்) ஐந்து விதமான புஷ்பங்களை (தாமரை, செங்கழுநீர், செவ்வல்லி, செவ்வாம்பல், மாம்பூ) அம்புகளாக வைத்துக் கொண்டிருக்கிறாள். இந்த அம்புகளின் விளைவு - மகிழ்விப்பது, சுவையூட்டுவது,

மயக்குவது, வற்றவைப்பது, மாய்ப்பது. இந்த மலரம்புகளுக்கு அதிஷ்டான தேவதை தண்டநாதா என்கிற வாராஹீ.

10. மனோ ரூபேக்ஷு கோதண்டா - மனமாகிற கரும்பு வில்லை, தேவி, தன் இடது முன்கையில் கொண்டவள். இதற்கு அதிஷ்டான தேவதை- மந்த்ரிணீ. கரும்பு ஈரமும், இனிமையும் கொண்டது அல்லவா ! இது தேவியின் மனம் 'கருணை மயமானது' - என்பதைக் காட்டுகிறது. அவள் மனதில் ஈரமும், இனிமையும் எப்போதும் உள்ளவை அன்றோ ?

கரும்பு வில்லிற்கு அதிஷ்டான தேவதை - மந்த்ரிணீ - (புத்தி சக்தி) பாணங்களுக்கு அதிஷ்டான தேவதை - தண்டநாதா (சேனைத்தலைவி - பலம்) புத்தியுடன் பலம் இயங்கவேண்டும் என்பதைக் குறிப்பாக உணர்த்துகிறார்கள் வாக்தேவிகள்.

அபிராமி அந்தாதியின் 2-வது பாடலில், 'பனிமலர்ப் பூங்கணையும் கருப்புச் சிலையுமென் பாசாங்குசமுங் கையில் அணையும் திரிபுரசுந்தரியாவது அறிந்தனமே' - என்றார் அபிராமிபட்டர். 85-ம் பாடலில், 'பார்க்கும் திசைதொறும் பாசாங்குசமும் பனிச்சிறை வண்டு ஆர்க்கும் புதுமலர் ஐந்தும் கரும்பும்' என்றார்.

அதாவது, அம்பிகையின் வடிவத்தை அறிந்து அதையே மனதில் தியானித்ததால் அபிராமிபட்டர் எந்நேரத்திலும், எங்கு பார்த்தாலும் (அகக்கண்ணிலும், புறக்கண்ணிலும்) - அன்னை அபிராமியையே கண்டார்.

இது தானே, முதிர்ந்த பக்குவத்தின் நிலை !

100-வது பாடலில், 'உழையைப் பொரு கண்ணும்' - என்றார். இங்கும், 'முக்கண்ணியை' - என்கிறார்.

அன்னை அபிராமியின் 'கண் பார்வைக்காக' - ஏங்குகிற பக்தர் அல்லவா ! அபிராமிபட்டர் ! ('கனம் தரும் பூங்குழலாள் கடைக்கண்களே')

அன்னை அபிராமி கருணையே உருவானவள். அவள் கடைக்கண் பார்வை பட்டாலே போதும் அன்பர்கள் கடைத்தேற !

'முக்கண்ணியை' - என்று குறிப்பிட்டது மிகச்சிறப்பு. இது

ஒரு சீரிய கருத்து. சிவபெருமானுக்கு மட்டுமே மூன்று கண்கள் உண்டு. 'இமையாத முக்கண் மூவரிற் பெற்றவன்' என்று திருக்கோவையாரில் மாணிக்கவாசகர் பாடுவார். நெற்றிக்கண் - ஞானக்கண் அல்லவா !

சிவனும் சக்தியும் ஒன்றே தான். இதை ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் 999. சிவ சக்த்யைக்ய ரூபிணீ - என்று அழகாகச் சொல்லுகிறது. (சிவ-சக்தி - ஐக்ய ரூபிணீ)

சிவனும், சக்தியுமாக ஒன்றாக இருப்பவள்.

சிவன், சக்தி இவர்களின் ஸாமரஸ்யமாக இருப்பவள். ஸ்ரீ காஞ்சிப் பெரியவர், 'அத்வைதத்தையும் த்வைதத்தையுமே அத்வைதமாகச் சேர்த்து வைப்பதாக ஸ்ரீ வித்யை இருக்கிறது. இரண்டாவது தெரியாமல் சாந்தமாக இருக்கிற சிவனையும், த்வைத ப்ரபஞ்ச காரணியான சக்தியையும் பிரிவறச் சேர்ந்தவர்களாக, அது சொல்கிறது !' 1000-வது நாமாவான, 'லலிதாம்பிகா' என்று ஸ்தோத்ரத்தை முடிப்பதற்கு முந்தைய நாமா, 'சிவ சக்தியைக்ய ரூபிணீ' என்று வருவது மிக அழகு !

1000. லலிதாம்பிகா - லலிதா என்ற பெயருடைய அழகிய தாய். மனதிற்கு 'ஸந்தோஷம்' கொடுக்கும் எல்லா பாவங்களும் 'லலிதம்' என்ற சொல்லால் குறிக்கப்படும். இவள் எப்போதும் விளையாடிக் கொண்டே இருப்பதால் லலிதாம்பிகா !

இவள் ப்ரஹ்ம ஸ்வரூபிணீயானாலும் பக்தர்கள் இவளை தாயாரை அணுகுவது போல சுலபமாக அணுகமுடியும். ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தின் முதல் நாமா - 'ஸ்ரீமாதா'. இறுதியான நாமா - 'லலிதாம்பிகா ! இரண்டும் தாயைக் குறிக்கிறது'

மாதா - முதல் எழுத்து 'மா' - லக்ஷ்மியை குறிக்கிறது லலிதாம்பிகா - இறுதி எழுத்து 'கா' - ஸரஸ்வதியை குறிக்கிறது.

அபிராமி அந்தாதியின் காப்புச் செய்யுள் - 'தா' (தாரமர்) என்று ஆரம்பித்து, நூற்பயனில் 'யே' - (தீங்கில்லையே) என்று முடிகிறது. அதாவது அபிராமி அந்தாதி 'தாயே' என்ற சொல்லில் அடங்கிவிட்டது !

கடைசியில் 1000-வது நாமாவான 'லலிதாம்பிகா' -

அம்பாளின் அங்கிதமாகவும், ஸுகமாகவும், ஸந்தோஷமாகவும், ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தை பூர்த்தி செய்கிறது.

அம்பாள் வாக் தேவிகளுக்கு கட்டளையிட்டபடி, இதை படிப்போருக்கு, பாராயணம் செய்வோருக்கு எல்லையற்ற இன்பத்தையும், மகிழ்ச்சியையும் தருவதால், அன்னையும் மகிழ்ச்சி அடைகிறாள். இதுதானே அவளின் விருப்பம் !

சேய் சிரித்தால், தாயும் சிரிப்பாள் அல்லவா !

'முக்கண்ணியைத் தொழுவார்க்கு ஒரு தீங்கில்லையே'

அன்னை அபிராமியை மூன்று கண்கள் (அக்னி, சூர்யன், சந்திரன்) உடைய த்ரிபுரசுந்தரியாக மூன்று கரணங்களாலும் வணங்குபவர்களுக்கு எந்தவிதமான தீங்கும் ஏற்படாது என்று அபிராமிபட்டர் தன் அனுபவத்தினால் கண்ட உண்மையை உலகிற்கு எடுத்துச் சொல்லி, உணரவைக்கும் உன்னதமான, உயர்ந்த பாடலாக அமைந்துள்ளது இந்த நூற்பயன் செய்யுள்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில்

453. த்ரிநயனா. 477. த்ரிலோசனா. 762. த்ர்யம்பகா - என்ற நாமங்கள் அன்னையை 'முக்கண்ணி' என்று கூறுகிறது.

நெற்றிக்கண். - சிவபெருமான் நெற்றிக் கண்ணிற் தோன்றிய அக்னியே மன்மதனை எரித்தது. அக்கண்ணில் தோன்றிய பொறிகளே முருகன் அவதாரத்துக்கும் காரணமாயிற்று. ஆக நெற்றிக் கண்ணுக்கு அழித்தல் சக்தியும், ஆக்கல் சக்தியும் உண்டு. இதன் கருத்தாகவே, 'ஞான சக்ஷுஸ்' என்று வேதாகமங்கள் கூறும்.

'ஞானமே காமத்தை எரித்தது. அந்த ஞானமே முருகனாய் தோன்றியது.'

குறிப்பு :- சக்தி உடன் இல்லாத போது - அழிமானம்.
சக்தி உடன் இருக்கும் போது - ஆக்கம்.

சிவனும், சக்தியும் அபேதம். எனவே அன்னைக்கும் நெற்றிக்கண் உண்டு. அன்னை தன் நெற்றிக் கண்ணினால், அன்பர்களுக்கு ஞானத்தை தந்து, எந்த தீங்கும் அண்டாதபடி செய்து, முக்தியையும் அளிப்பாள்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம், அம்பாளின் அன்பர்களுக்கு எந்தவித தீங்கும் ஏற்படாது என்று ஆணித்தரமாகச் சொல்லுகிறது.

913. ஸர்வாபத் விநிவாரிணீ - எல்லா விதமான ஆபத்துகளையும் போக்குபவள். என் பக்தர்களுக்கும், மற்றும் எல்லோருக்கும் (எப்படிப்பட்டவர்களாயிருந்தாலும்) என் நாமத்தை ஜபிப்பவர்களுடைய மலை போன்ற ஆபத்துக்களை, ஞானம் என்ற தீபத்தால் சீக்கிரமே அழித்து விடுகிறேன்.

'சரணாகத தீனார்த பரித்ராண பராயணே' - என்று துதிக்கப்படுகிறாள். – ஸ்ரீ துர்கா ஸப்தசதீ.

ஆதிசங்கரரின் உபதேசம் :- ''ஆபதி கிம் கரணீயம் ? ஸ்மரணீயம் பாதயுகலம் அம்பாயா :'' ஆபத்தில் என்ன செய்ய வேண்டும் ? அம்பாளின் இரு சரணங்களை நினைக்க வேண்டும்.

ஏ மனிதனே ! 'பயம், பழி, பாவம், பிறவி போக பராபரையின் பாதங்களைப் பிடி' !

708. ஸர்வோபாதி வினிர்முக்தா - எல்லாவிதமான உபாதிகளிலிருந்தும் விடுபட்டவள். எனவே தன் பக்தர்களையும் அந்நிலை அடைய அருள் புரிவாள்.

561. ம்ருகாக்ஷீ - மான் விழியாள். மான்களின் கண்கள் ஓரிடத்தில் நிலைக்காமல் மருட்சியுடன் அலைந்து கொண்டே இருக்கும். அது போலவே, அன்னை லலிதாவாகிய அபிராமியின் கண்கள் தன் பக்தர்களின் இன்னலைப் போக்கி இன்பம் தர, தன் கனிவுடன், கிருபையுடன் கூடிய பார்வை எல்லா பக்தர்கள் மீதும் விழட்டும் என்பதற்காக அவள் கண்கள் அலைந்து கொண்டே இருக்கின்றன.

இது மட்டும் அல்ல ! வேறு என்ன தருவாள் தெரியுமா ! நம் அன்னை ! 698. ஸர்வார்த்ததாத்ரீ - பக்தர்களுக்கு ஸகல புருஷார்த்தங்களையும் தருபவள். 291. புருஷார்த்தப்ரதா - நான்கு புருஷார்த்தங்களையும் (அறம், பொருள், இன்பம், வீடு) அளித்து அருள் புரிவாள். நிர்குணமான ப்ரஹ்மத்தை உபாஸிப்பதும் அவ்வித உபாஸனை பலன் பெறுவதும் அம்பாளின் அருளினால்தான்.

அன்னை அபிராமியின் திருவடித்தாமரைகளை நாமும் சரணம் அடைந்து, அழியா முக்தி ஆனந்தத்தை அடைவோமாக !

அபிராமிபட்டர் 'நூற்பயனை' சொல்லி முடிக்கும் விதத்தைப் பார்ப்போம். 'தீங்கில்லையே' (ஏகாரம் - தேற்றம்) என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்கிறார். 'நன்மை உண்டு' என்று சொல்லாமல்

ஏன் தீங்கில்லையே என்று சொல்லவேண்டும் ? 69-ம் பாடலில் 'தனம் தரும்... நல்லன எல்லாம் தரும்' என்று முன்பே சொன்னார் அல்லவா !

இந்த மண்ணுலகில் பிறந்தவர்கள், எப்பொழுதும் எது செய்தாலும் ஏதாவது தீங்கு வந்துவிடுமோ என்ற பயத்தில் தங்கள் வாழ்நாட்கள் பூராவும் கழிக்கின்றனர். எல்லாம் நல்லதாக நடந்தாலும் ஏதாவது தீங்குகள் விளைந்துவிடுமோ என்ற அச்சமும், தங்கள் கண்ணோ அல்லது தீயவர் கண்கள் பட்டுவிடுமோ என்று நடுங்குகின்றனர். 'தீங்குகள் நடக்காது' என்று நம்புவதில்லை.

இதனைக் கருத்தில் கொண்டே 'தீங்கில்லையே' - என்று அன்பர்களாகிய அன்னையின் அடியார்களுக்கு (அச்சத்தையும், பயத்தையும் போக்கி) உள்ளுணர்வு ஏற்பட வேண்டும் என்ற மிகச்சிறந்த நோக்கத்துடன் அபிராமி அந்தாதியை மிக அழகாக நிறைவு பெறச் செய்கிறார் அன்னை அபிராமியின் அவதாரமாகிய அபிராமிபட்டர் !

அன்னை அபிராமியை, உமையவளாகவும், மகாதிரிபுர சுந்தரியாகவும், மனோன்மணியாகவும், துர்கா - லக்ஷ்மீ - சரஸ்வதியாகவும், ச்யாமளாவாகவும், காளியாகவும், திருமாலின் சகோதரியாகவும், மீனாட்சியாகவும், காமாட்சியாகவும், விசாலாட்சி யாகவும், அன்னபூர்ணியாகவும், அறம் வளர்த்த நாயகியாகவும், மந்த்ரிணியாகவும், மாதங்கீயாகவும், பயிரவியாகவும், வாராகி யாகவும், சூலினீயாகவும், சாம்பவியாகவும், சங்கரியாகவும், மகிஷாசுரமர்த்தினீயாகவும் சண்டிகையாகவும், சாமுண்டேஸ்வரி யாகவும், பார்வதியாகவும் இன்னும் எண்ணற்ற வடிவங்களிலும், தன் அகக்கண்களிலும், புறக்கண்களிலேயும் கண்ட மாபெரும் முனிவர் அபிராமிபட்டர்.

அன்னையின் திருநாமங்கள் கணக்கிலடங்கா. அன்னையின் புகழ் அளவிட முடியாதது.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் அம்பாளின் இருப்பிடம் 'மஹா கைலாஸம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

578. மஹா கைலாஸ நிலயா :- மஹா கைலாஸத்தில் இருப்பவள்.

இந்த்ர லோகம் முதல் விஷ்ணு லோகம் வரை இருக்கும் லோகங்களை எல்லாம் கடந்தும், பரமசிவனுடைய ஸ்தானமான, 'மஹா கைலாஸம்' என்ற பெயருடைய லோகத்தில் இருப்பவள். இங்கு செல்பவர்களுக்கு மறுபிறப்பு கிடையாது. ஸஹஸ்ராரமே கைலாஸம்.

இந்தக் கருத்தை அபிராமிபட்டர், தெள்ளத் தெளிவாக,
*'சொல்லும் பொருளும் என நடமாடும் துணைவருடன்*
*புல்லும் பரிமளப் பூங்கொடியே நின் புதுமலர்த்தாள்*
*அல்லும் பகலும் தொழும் அவர்க்கே அழியா அரசும்*
*செல்லும் தவநெறியும் சிவலோகமும் சித்திக்குமே.'* -
என்று சொன்னார். (28)

அதாவது, நிஷ்காம்யமான உபாஸனையால் இறைவியே வேண்டத் தக்கது அறிந்து அளிப்பாள்.

'அவள் அருளால் அவன் தாள் வணங்கி' என்றும் கூறலாம். சிவனை அடைய சக்தியின் அருள் இருந்தால் தான் முடியும் என்பது சாராம்சம்.

அநுபூதிமானாகிய அபிராமிபட்டர், ஸ்ரீ லலிதாவாகிய அபிராமியை எப்போதும் ஸஹஸ்ராரத்தில் ஆனந்த நடனம் புரியும் 'அர்த்த நாரீஸ்வரர்' திருக்கோலத்தில் காண்பவர்.

ஸ்ரீ லலிதா மஹா திரிபுரசுந்தரி சொரூபிணியான ஸ்ரீ அபிராமி ஸர்வமங்கள ரூபிணியாய் புண்ய பாரதத்தில் திருக்கடவூரில் எழுந்தருளி அன்பர்களின் அல்லல்களை அகற்றி, காத்து அழியா முக்தியையும், ஆனந்தத்தையும் அள்ளி அருளும் அன்னை. அவள் தாள்களை, நாம் முன் செய்த புண்ணியத்தின் பலனாக, முக்கரணங்களாலும் பற்றி, போற்றி, பணிந்து உய்வோமாக.

**அன்னை அபிராமி திருவடிகளே சரணம்.**

**வாழ்க ! அபிராமிபட்டர் !**
**வாழ்க ! அன்னை அபிராமி அருள் !**
**மங்களம்.**
**ஸதாபிராமீம் சரணம் ப்ரபத்யே !**

சுபமஸ்து

